# திரு அம்பர்ப் புராணம்





ஸ்ரீ பிரமபுரீசர் ஆலய கோபுரம்



மகாமகோபாத்யாய
டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

திருவான்மியூர்] [சென்னை- 41

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு-3

உ

திரிசிரபுரம் மகாவித்துவான்

**ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை** அவர்கள்

இயற்றிய

# திரு அம்பர்ப் புராணம்

(நூதனமாக எழுதிய

குறிப்புரை முதலியவற்றுடன்)

திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான்

**ஸ்ரீ ச. தண்டபாணி தேசிகர்** அவர்களின்

ஆராய்ச்சி முகவுரை கொண்டது.



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

திருவான்மியூர்] **1965** [சென்னை-41

உ

## திரு அம்பர்ப் புராண வெளியீட்டிற்கு உதவியோர்

இந்து சமய அறக் கட்டளை ஆட்சித் துறை ஆணையர்

**உயர்திரு மா. சே. சாரங்கபாணி முதலியார் அவர்கள்,**
**பி.ஏ., பி.எல்.**

துணை ஆணையர்

**உயர்திரு அ. மார்க்கண்டவேல்ராஜன் அவர்கள்.**

உதவி ஆணையர்

**உயர்திரு ஆர். அர்ஜுனன் அவர்கள், பி. ஏ.**

உயர்திரு.
**சி. கந்தசாமிப் பிள்ளை** அவர்கள்,
அறங்காவலர் குழுத் தலைவர்

உயர்திரு. **மு. சிதம்பரம் பிள்ளை**
அவர்கள், அறங் காவலர்.

உயர்திரு. **வே. மாசிலாமணிப் பிள்ளை**
அவர்கள், அறங் காவலர்.

உயர்திரு. **சு. தனுஷ்கோடி பிள்ளை**
அவர்கள், அறங் காவலர்.

உயர்திரு. **து. கனகசபைப் பிள்ளை**
அவர்கள், அறங் காவலர்.

உயர்திரு. **ந. ரா. லிங்கமராஜா**
அவர்கள், பி.ஏ.
நிர்வாக அதிகாரி

# பொருளடக்கம்

சிவமயம்

# பதிப்புரை

பூமேவு கற்பகநாட் டிமையவரும் அமையவரும் புகழ்சால் வேந்தும்
பாமேவு மறையானும் முறையானுந் திக்கணவற் படைத்து ளானும்
மாமேவு மற்றையரும் உற்றயரும் பணியேற்று வரங்கள் நல்கிக்
காமேவு திருவம்பர் அமர்பிரம புரேசர்பதம் கருதி வாழ்வாம்.

அம்பர் என்பது சோழ நாட்டில் உள்ளதோர் ஊர். 'காவிரியணையுந் தாழ்நீர்ப் படப்பை, நெல்விளை கழனி அம்பர்' என்று இவ்வூரைப் புறநானூற்றுச் செய்யுளொன்று கூறும். (புறநா. 385: 8-9). அப்பாடல் அவ்வூரில் விளங்கிய 'அம்பர்கிழான் அருவந்தை' என்ற வள்ளலைக் கல்லாடனார் பாடியதாக அமைந்துள்ளது. அரிசில் என்ற ஒரு நதி இவ்வூரின் அருகே ஓடுகின்றது. நற்றிணை 141-ஆம் செய்யுளில், 'ஏந்துகோட்டியானை யிசைவெங்கிள்ளி, வம்பணி யுயர் கொடி யம்பர் சூழ்ந்த, அரிசிலந் தெள்ளறல்' என்று இவ்வூரும் இவ்வாறும் பாடப் பெற்றுள்ளமையினால், சங்க காலத்திலேயே இவை மிகச் சிறப்புடன் விளங்கின என்பது புலனாகும். அன்றியும், தமிழிலே மிகப் பழமையான திவாகர நிகண்டு என்ற நூல் இந்த ஊரில் அரசனாக விளங்கிய சேந்தன் என்பவனால் ஆதரிக்கப்பெற்ற திவாகர முனிவரால் இயற்றப் பெற்றதாகும். இந்த அரசனைப் பற்றி, 'அம்பர் கிழவோன் சேந்தன்' என்றும், 'அவ்வை பாடிய அம்பர் கிழான் தேன்றூர்ச் சேந்தன்' என்றும், 'அம்பர் மன்னன் சேந்தன்' என்றும் பிற்கால நூல்கள் பகரும். மேலும், அம்பர்க் கணபுரத்தேவன் என்பவர் கனவு நூல் என்ற ஒரு நூலை இயற்றியுள்ளமையையும் அறிகிறோம். இன்னும், 'தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே, மண்ணாவதுஞ் சோழ மண்டலமே—பெண்ணாவாள், அம்பர்ச் சிலம்பி யரவிந்தத் தாளணியும், செம்பொற் சிலம்பே சிலம்பு' என்ற தனிப்பாடலிற் சொல்லப்பட்டதும் இவ்வூரே. இவற்றால் அம்பர் சங்க காலம் முதல் மன்னர்களும், வள்ளல்களும், புலவர்களும், கலைஞர்களும் வாழ்ந்து விளங்கி வந்த இடம் என்பது தெரியவருகின்றது. 'நல்லம்பர் நல்ல குடியுடைத்து' என்பதும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றது.

இத்தகைய ஊர் தலவிசேடத்தாலும் பெருமைபெற்று விளங்குவது இதன் புகழை மிகவும் மேம்படுத்துவதாகும். சோழன் செங்கணான்

என்ற சங்க காலச் சோழமன்னனால் கட்டப்பெற்ற மாடக் கோயிலை இது பெற்றிருக்கிறது. அவன் கோயில் கட்டிய வரலாறு இப் புராணத்தில் 14-ஆவது படலமாக அமைந்துள்ளது. அன்றியும், ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருத்தொண்டத்தொகையுள் 'அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்' என்று சுட்டப்பெற்றதும், சேக்கிழார் பெருமான் இயற்றியருளிய திருத்தொண்டர் புராணத்தில் சோமாசிமாற நாயனார் புராணம் என்ற பகுதியில் விளக்கப்பெற்றதுமான சோமாசிமாறனார் என்ற அடியாரின் வரலாறு பற்பல புதிய செய்திகளுடன் இப்புராணத்தின் 13-ஆது படலமாக அமைந்துள்ளது.

இவ்வூருக்கு இப்பொழுது வழங்கும் பெயர் அம்பல் என்பது. வெவ்வேறு காரணத்தால் வந்த மாகாளிபுரம், மாகாளபுரம், புன்னாகவனம், பிரமபுரி, நந்தராசபுரம்,* மாறபுரி, சண்பகாரணியம் என்ற பெயர்களும் இத்தலத்துக்கு உண்டு. அவற்றை நூலினுள்ளே அங்கங்கே காணலாம். இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவருக்குப் பிரமபுரீசர் என்றும், இறைவிக்கு வம்புவனப் பூங்குழல் நாயகி என்றும் பெயர்கள். வடமொழியில் தேவியைச் சுகந்த குந்தளாம்பிகை என்பர். தலவிநாயகர் படிக்காசு விநாயகர் எனப்படுவர். நந்தன் என்னும் அரசன் இவ்வூரில் வந்து தங்கியிருந்த காலத்தில் கொடிய பஞ்சமொன்று உண்டாக, அப்பஞ்சம் நீங்கும் வரையில் தினந்தோறும் அரசனுக்கு ஒரு படிக்காசு உதவி வந்ததனால் விநாயகர் அப்பெயர் பெற்றனர் என்று புராணம் கூறும். இத்தலத்திலுள்ள தீர்த்தங்கள் அரிசில் என்னும் நதியும், அன்னமாம் பொய்கை, இந்திரதீர்த்தம், சூலதீர்த்தம் என்ற சிறு குளங்களும் ஆம். பிரமபுரீசர் ஆலயத்தையன்றி இவ்வூரிலுள்ள பிற ஆலயங்கள், புவனேசர், சட்டைநாதர் என வழங்கும் வயிரவர் ஆகியோர் சந்நிதிகள் கொண்ட கோயிலும், திருமாலும் காளியும் எழுந்தருளியுள்ள கோயிலும், நந்தமன்னன் அமைத்த கயிலாய நாதர் கோயிலும் ஆகும். பிரமபுரீசர் ஆலயத்தினுள் மருத மரத்தினடியில் பெருமான் எழுந்தருளியுள்ள இடம் அருச்சுனவனம் எனப்படும். இங்குப் புன்னை வன நாதர் சந்நிதியொன்றும் உண்டு.

பிரமதேவன் தவத்திற்கிரங்கிச் சிவபெருமான், 'கயிலாயத்தோர் கூற்றோடும் விடையினோடும், நன்றமை யிலிங்கமாகி நாயக முதலோர் சூழப் புன்னாக வனத்திலே தோன்றி அவனுக்குக் காட்சியளித்தனர்' என்று நூல் கூறுகிறது; (செய் . 473). அப்போது பிரமன் வேண்டுகோளால் அக்கயிலைக் கூறு அவ்வாறே இத்தலத்தில் தங்கிவிட்டது. அதுவே இப்பொழுதுள்ள கோயிலாகும். பிற்காலத்தில் கோச்செங்கணான் மாடக் கோயிலாக ஆக்கியது இக் குன்றக் கோயிலையே என்று நாம் கொள்ளவேண்டும்.

---

* இதனை 'மாரபுரி' என்பதும் பொருந்தும்.

அம்பரன், அம்பன் என்ற அசுரர்களைச் சங்கரித்தற் பொருட்டுப் பரமேசுவரன் திருவருளால் திருமாலும் காளியும் ஓர் அந்தணனும் ஒரு கன்னியுமாக வேடங்கொண்டு, அம்பர் நகரிலே பிரமபுரீசுவரர் ஆலயத்தின் மேற்கே ஓரிடத்தில் தங்கியிருந்தனர் என்று புராணம் கூறுகிறது; (செய். 607). அவர்கள் அவ்வாறு தங்கிய இடமே இப்பொழுது திருமால் கோயிலாக விளங்குகிறது. அக் கோயிலிலேயே ஒரு சார் காளியும் கோயில் கொண்டு அடியார்களை அருளிக்கொண்டு விளங்குகின்றனள். இன்னும் பிரமபுரீசர் ஆலயத்தின் கிழக்கே விநாயகர் கோயிலும், ஈசான திசையில் கைலாயநாதர் ஆலயமும், அக்கினி திக்கில் புவனேசர் கோயிலும், ஒரு மருதமரத்தின் நிழலிலே மாகாளேசுரர் கோயிலும் இருப்பதாகச் செய்யுள் 632 கூறுகிறது. அக் கோயிலுக்குத் தெற்கே பூரணை புட்கலை என்ற இரு தேவியருடன் சாத்தனுர் கோயில்கொண்டிருக்கின்ருர். இங்குக் கூறப்பெற்ற கோயில்களுக்குள் புவனேசர் ஆலயம் என்பது இறைவர் கட்டளையால் வைரவர் சங்காரசீலன் என்னும் அசுரனைச் சங்கரித்த பிறகு அவ்வைரவர் எழுப்பியதாகும். அதன் அருகில் சூலதீர்த்தம் என்பதையும் அவரே உண்டாக்கினுர். இறைவன் அருளியபடியே வைரவக் கடவுளும் அத் தலத்திலேயே தங்கினுர். அதுவே இப்பொழுது சட்டைநாதர் ஆலய மாகத் திகழ்கின்றது. அம்பராலயத்திற்கு எதிரேயுள்ள இந்திரதீர்த் தம் இந்திரனுல் நிறுவப்பெற்றது. மாடக்கோயிலுக்கு வடக்கேயுள்ள ஆனைக்கா அமுதலிங்கேசரின் ஆலயத்தைக் கோச்செங்கணுர் நிறுவினுர். இவற்றோடு, அம்பரையடுத்துள்ள அம்பர் மாகாளம், அம்பரகரத்தூர் என்ற ஊர்களும் இப் புராணத்தில் இணைவுற்றுள்ளன. இத்தலத்தில், பிரமன், இந்திரன், காமன் முதலிய தேவர்களும், விமலன், சோமாசி மாறன் என்ற அந்தணர்களும், கோச்செங்கட் சோழன், நந்தன் என்ற மன்னர்களும் வழிபட்டு நற்பேறு பெற்றிருக்கின்றனர்.

இவ்வாறு பழமையும் புண்ணியச் சிறப்பும் பெற்ற இத்தலத்திற்கு வடமொழியில் இருந்த ஒரு ஸ்தலபுராணம் வழக்கழிந்து அதன் மூலமும் கிடைக்கப் பெருத நிலையில் இருந்ததை அறிந்து, ஏறக்குறைய நூருண்டுகளுக்குமுன் அவ்வூரிலிருந்த அறிஞர்களும் செல்வர்களும் பெரிதும் கவலையுற்று, அவ்வடமொழிப் புராணத்தின் பிரதியொன்றை எவ்வாறேனும் பெற்று அதனையொட்டித் தக்கார் ஒருவரால் தமிழ்ப் புராணம் ஒன்றைப் பாடுவிக்க வேண்டுமென்று கருதினர். அவர்களுள் அம்பர் வேலாயுதம்பிள்ளை யென்ற செல்வர் மிகுந்த செல்வாக்கோடு சிவபக்தி நிறைந்தவருமாயிருந்தார். அவர் அக்காலத்தில் திருவாவடு துறையில் ஆதீனகர்த்தராக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்களிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தமையால், அடிக்கடி அவ் வூருக்குச் சென்று வரும்போது, அங்கே ஆதீன வித்துவான் நிலையை அலங்கரித்துக் கொண்டிருந்த திரிசிரபுரம் மகாவித்துவான்

ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் தமிழ்ப் புலமை முதலியவற்றை அறிந்துகொள்ளும் வாய்ப்பினைப் பெற்று, அவர்களாலேயே தமது தல புராணத்தை ஆக்குவித்துக் கொள்ளவேண்டும் என்று பெரிதும் விரும்பினர். அவர் தம் கருத்தை ஸ்ரீ தேசிகர் அவர்களிடமும் ஸ்ரீ பிள்ளையவர்களிடமும் விண்ணப்பிக்க, அவர்களும் அதற்கு அன்புடன் இணங்கினர். பின்பு ஸ்ரீ மகாவித்துவான் பிள்ளையவர்கள் அம்பர்க்குரிய வடமொழிப் புராணத்தின் பிரதியொன்று தஞ்சை ஸரஸ்வதி மஹால் புத்தகசாலையில் இருப்பதை அறிந்து, அதனை நெடுநாள் முயற்சிக்குப் பின் பெற்று, தக்கவர்களைக்கொண்டு அதனைப் படிக்கச்செய்து தமிழில் வசன நடையாக எழுதுவித்துக்கொண்டு புராணம் பாடத் தொடங்கினர். இது நிகழ்ந்தது சுக்கில ஞு (1869) மார்கழி மாதத்திலாகும். இப்புராணம் பாடியதும் அரங்கேற்றப்பெற்றதுமாகிய செய்திகளை மகாமகோபாத்யாய டாக்டர் ஐயர் அவர்கள் தாம் எழுதிய ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரத்தில் மிக விரிவாக எழுதியுள்ளார்கள். அப்பகுதிகளினின்று சிலவற்றைக் கீழே தருகின்றோம் :

## அம்பர்ப் புராணம் இயற்றத் தொடங்கியது:

''சோழநாட்டில் உள்ளதும் தேவாரம் பெற்றதுமாகிய திருவம்பரென்னும் தலத்தில் இருந்த வேளாளப் பிரபுவாகிய வேலுப்பிள்ளை முதலியவர்கள் அத்தலத்திற்குரிய வடமொழிப் புராணத்தை மொழிபெயர்த்துத் தமிழிற் பாடவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். இவர் வடமொழிப் புராணப் பிரதியைப் பல இடங்களில் தேடியும் கிடைக்கவில்லை. அப்பொழுது திருமங்கலக்குடி சேஷையங்காரைத் தஞ்சைக்கனுப்பிச் சரசுவதி மகாலில் தேடிப் பார்க்கச் செய்தார். சேஷையங்கார் இந்த முயற்சியை விபவ வருஷத்திலிருந்தே மேற்கொண்டு, பார்க்க வேண்டிய உத்தியோகஸ்தர்களைப் பார்த்து மிகவும் சிரமப்பட்டு அந்தப் புராணம் அங்கே இருப்பதை அறிந்து பிரதி செய்வித்துப் பெற்றுச் சுக்கிலஞு (1869) மார்கழி மாதத்தில் அதை இவருக்கு அனுப்பினர். இவர் தக்க வடமொழி வித்வான்களுடைய உதவியால் அதைத் தமிழ் வசன நடையில் மொழிபெயர்ப்பித்து வைத்துக் கொண்டு பாட ஆரம்பித்தார்.

* * * *

''அப்பால் இவர் முன்பு தாம் வாக்களித்திருந்தபடி திருவாவடுதுறை செல்ல நிச்சயித்துப் புறப்பட்டார். அம்பர்ப் புராணத்தை எடுத்துக்கொண்டு உடன் வரும்படி சொன்னமையால் அதனையும் என் புத்தகங்களையும் எடுத்துக் கொண்டு உடன் சென்றேன். மாயூரத்தின் மேல்பாலுள்ள கூறை நாடு செல்லும் வரையில் பொதுவாகப் பாட வகைகளைப் பற்றிப் பேசிக்கொண்டே இருந்துவிட்டுப் பின்பு அம்பர்ப் புராணச் சுவடியை எடுத்துக்கொள்ளும்படி சொல்லி ஆனபாகத்தின் இறுதிப்பாடலைப் படிக்கச் செய்து கேட்டார். பின்பு மேலே தொடர்ச்சியாகச் செய்யுட்களை இயற்றிச் சொல்லிக்கொண்டே போனர். இவர் அப்போது பாடத்தொடங்கியது அப்புராணத்தில் நந்தன் வழிபடு படலத்தில் 54-ஆவது பாடலாகும். திருவாவடுதுறைத் தெற்கு வீதி செல்லும் வரையில் மேற்பாகத்தைச் சொல்லிக்கொண்டே சென்ருர் ; நான் எழுதிக்கொண்டே போனேன். அந்தப் பகுதி நந்தனென்னும் அரசன் தனது நகரிலிருந்து புறப்பட்டு இடையிலேயுள்ள சிவஸ்தலங்கள்தோறும் சென்று சென்று

தரிசனம் செய்துகொண்டு திருவம்பரை அடைந்தானென்பது. அதிலுள்ள செய்யுட்களில் தலப் பெயர்களை எதுகையில் அமைத்திருத்தலும் வழியெதுகைகளும் ஸ்தலங்களின் சரித்திரங்களும் இன்பத்தை உண்டுபண்ணின. இவர் விரைவாகச் செய்யுள் செய்யும் ஆற்றலையுடையவரென்று பலரும் புகழ்ந்து சொல்லுதலைக் கேட்டு அந்த நிலைமையை எப்பொழுதாவது பார்க்கும்படி நேருமோவென்று ஆவலோடு பல நாளாக எதிர்பார்த்திருந்த எனக்கு இவர் பாடல்களைச் சொல்ல அவற்றை எழுதும் பாக்கியம் அன்று கிடைத்ததைக் குறித்து மெத்தச் சந்தோஷம் அடைந்தேன். 'இனி யாரேனும் இவர்களைப் போலப் பாடப் போகிறார்களா!' என்ற எண்ணமும் எனக்கு அப்போது உண்டாயிற்று. சிறிதேனும் பெருமிதமின்றியும் தம்முடைய கவியைப் பாராட்டாமலும் வேறு பேச்சின்றியும் மேலே மேலே செய்யுள் செய்துகொண்டு போதலைப் பார்த்த எனக்கு விம்மிதம் உண்டாயிற்று.

''கவிஞர்களுடைய பேராற்றல் இத்தகையதென்பதைச் சரித்திரங்களின் மூலமாக அறிந்தவனேயன்றி அன்று போல நான் நேரிற் பார்த்ததில்லை. ஆதலின் ஒரு மகா கவியின் வாக்கிலிருந்து ஆற்றொழுக்கைப் போலக் கவிதாப் பிரவாகம் பெருகிக்கொண்டிருப்ப, அதனைக் காதினாற் கேட்டும், கையினாலெழுதியும், மனத்தினாலறிந்தும் இன்புற்ற எனது நிலை இங்கே எழுதற்கரியது.

❋ ❋ ❋ ❋

## அரங்கேற்றம்

''நல்ல தினம் பார்த்து அம்பர்ப் புராணம் அரங்கேற்றத் தொடங்கப் பெற்றது. அதனை அறிந்து பல வித்துவான்களும் கனவான்களும் பல ஊர்களிலிருந்து வந்து நாள்தோறும் கேட்டு வருவாராயினர். அரங்கேற்றம் நிறைவேறிய தினத்தில் புராணச் சுவடி சிறப்புடன் ஊர்வலம் செய்யப் பெற்றது. பிள்ளையவர்களுக்கு வேலாயுதம் பிள்ளை தம்முடைய குடும்பத்தாருடன் சேர்ந்து தக்க ஸம்மானம் செய்தார். அப்போது உடனிருந்த மாணாக்கர்களும் பிறரும் வேலாயுதம் பிள்ளையையும் பிள்ளையவர்களையும், நூலையும் பாராட்டிச் சிறப்புக் கவிகள் இயற்றிப் படித்தார்கள்.''

இப்புராணம் 15 படலங்களையும் 1007 செய்யுட்களையும் கொண்டுள்ளது; காப்பிய முறையில் மிக அழகாக அமைந்துள்ளது. 'தமிழ் உள்ளளவும் இவருடைய பெரும்புகழ் நின்று நிலவுமென்பது திண்ணம்' என்றும், 'புராணம் பாடும் புலவன்' என்றும், 'புராணங்களைக் காப்பிய இலக்கணப்படி அமைக்கும் முறையை மேற்கொண்ட புலவர்களுள் இவரைப் போல அளவில் பலவாகவுள்ள நூல்களைச் செய்தவர்கள் வேறெவரும் இல்லை' என்றும், 'இவ்வளவு மிகுதியான நூல்களை இயற்றியவர்கள் தமிழ்ப் புலவர்களில் வேறு எவரும் இல்லை' என்றும், புகழப் பெற்றவரும், இந்நூல் நிலையத்தின் மூலகாரணரான மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்களுக்குத் தமிழை அறிவுறுத்தி அதன்பாலுள்ள பலவகை நயங்களையும் எடுத்துக்காட்டி மகோபகாரம் செய்த ஆசிரியருமாகிய திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீ பிள்ளையவர்கள் பாடிய இப்புராணத்தைப் பதிப்பிக்கும் பேற்றினை இந் நிலையம் பெற்றது ஸ்ரீ பிரமபுரீசருடைய பேரருளின்

திருவாவடுதுறை ஆதீனம் தொன்றுதொட்டுச் சைவத்தையும் தமிழையும் ஒருங்கே வளர்த்து வருவதாகும். அவ்வாதீனத்தின் முதல் மகாவித்துவாஞக விளங்கிய பெரியார் இயற்றிய மிகச் சிறந்த பக்தி காவியமாகிய இந் நூலுக்கு ஆராய்ச்சி முறையில் முகவுரை ஒன்று அளித்து அணிபெறச் செய்ய வேண்டுமென்று அவ்வாதீனத்து இன்றைய மகாவித்துவாஞக விளங்கி வரும் பேரறிஞரும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்களுள் ஒருவரும், பற்பல சிறந்த நூல்களை ஆராய்ந்து பதிப்பித்து வருபவரும், மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்களிடம் பெருமதிப்புக் கொண்டவருமான உயர்திரு ச. தண்டபாணிதேசிகர் அவர்களை வேண்டியபோது, அவர்கள் அதனை மகிழ்வுடன் ஏற்று, இந்நூலினை நன்கு ஆராய்ந்து, தம் அரிய முகவுரையை எழுதி யளித்ததோடு, நூலில் உண்டான சில ஐயங்களை யும் தீர்த்து உதவிஞர்கள். உயர்திரு. வித்துவான். வி. மு. சுப்பிரமணிய ஐயர் M. A. அவர்களும், வாசீக கலாநிதி, உயர்திரு. கி. வா. ஜகந்நாதையர் M.A. அவர்களும் சில ஐயப்பாடுகளை நீக்கப் பேருதவி புரிந்தனர். இவரனைவர்க்கும் இந்நிலையம் மிக்க கடப்பாடுடையது. இந்நூல் மகாவித்துவான் ஸ்ரீ பிள்ளையவர்களின் காலத்திலேயோ, அன்றி அவர்களின் முக்கிய சீடரான மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்களின் காலத்திலேயோ வெளிவந்திருக்க வேண்டியது. ஸ்ரீ ஐயரவர்களுக்கு இதனைப் பதிப்பிக்கும் நோக்கம் இருந்தமையும் அவர்களுடைய சில குறிப்புக்களால் தெரிகின்றது. ஆயினும் அதற்குரிய காலம் இப்போதுதான் நேர்ந்தது போலும். ஸ்ரீ வம்புவனப்பூங்குழலம்மை (சுகந்த குந்தளாம்பிகை) ஸமேத ஸ்ரீ பிரம புரீசுவரர் பேரருளே இப்போது அதனை இந்நிலையத்தின் மூலம் கூட்டுவித்தது.

இந்நூல் வெளிவரும் நேரத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளால் இந்நிலையத்தின் தலைமைத் தொண்டராகிய பேராசிரியர் உயர்திரு R. விசுவநாதையர் M.A., B.O.L. அவர்களுக்கு "கலாநிதி விலாஸமணி" என்ற விருது அருளப்பெற்றமையும் ஸ்ரீ பிரமபுரீசரின் பேரருளென்றே மதித்துப் போற்றுகின்ரேம். அவ்வருள் என்றும் துணை நின்று இந்நிலையத்தைப் பாலிப்பதாகுக.

---

சிவமயம்

# நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கம்

---

செந்தமிழ்ப் பாண்டிய நாட்டின் தலைநகராய்ப் புகழ்பெற்ற மதுரையம் பதியிலே ஸ்ரீ சோமசுந்தரக் கடவுளின் ஆலயத்தில் முத்திரைக்கணக்கர் பணியில் பரம்பரையாக அமர்ந்திருந்த சைவ வேளாளர் குடும்பம் ஒன்றில் சிதம்பரம்பிள்ளையென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவபக்தியும், சீலமும், தமிழ் நூற்பயிற்சியும் மிக்க வராய்த் தமிழிலே கவி பாடும் ஆற்றலும் பெற்றிருந்தார். அவர், தம் மனைவியாரான அன்னத்தாச்சி யென்பவருடன் மதுரையை விட்டுச் சென்று திரிசிரபுரத்திற்கருகில் உள்ள சில ஊர்களில் கணக்காயராய் அமர்ந்து பலராலும் ஆதரிக்கப் பெற்றிருந்தார். அவ்வாறு அவர் அதவத்தூர் என்னுமிடத்தில் இருக்குங்கால் அவருடைய அருமைப் புதல்வராக நம் புலவர் பெருமானார் 6—4—1815இல் அவதரித்தார். இவர் தம் ஐந்தாம் பிராயத்திலே வித்தியாரம்பம் செய்விக்கப்பெற்று, 15-ஆம் பிராயம் வரை தந்தையாரிடத்திலேயே தமிழ்க் கல்வி பயின்று வந்தார். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கிணங்க அவ்விளமைப்பருவத்திலேயே பல நல்ல பண்புகளும், கவிகளை எளிதில் இயற்றும் ஆற்றலும் இவர்பால் நன்கு விளங்கின. இவர் தாம் படிக்கும் நூல்களைக் கூர்ந்து நோக்கி அவற்றில் காணும் அரிய கருத்துக்களைத் தம் உள்ளத்தில் இருத்திக்கொண்டு தக்க தருணத்தில் பயன்படுத்திக் கொள்வார். அவ்வப்போது தோன்றும் ஐயங்களைத் தந்தையிடம் கேட்டுத் தெளிவார். தந்தையாரும் தம் புதல்வரின் திறனைக் கண்டு மகிழ்ந்து, அவ்வப்போது கவிகளை யியற்றுவதில் இவருக்கு ஊக்க மளித்துப் பயிற்றுவித்து வந்தார். அவ்வாறிருக்கும் நாளில் சிதம்பரம் பிள்ளை அதவத்தூரை விட்டுச் சில அன்பர்களின் வேண்டுகோளின்படி சோமரசம்பேட்டை என்றவூருக்கு வந்து அங்கே பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து நடத்திவந்தார். அப்பள்ளிக்கூடத்துக்கு ஆதரவாளரும் பெருகினர். அந்நாளில் நம் புலவர் பெருமானாருக்குத் தமிழ் நூல்கள் பலவற்றையும் நன்கு பயின்று மேன்மேலும் தமிழறிவைப் பெருக்கிக் கொள்ளும் ஆர்வமும் மிகுவதாயிற்று. தம்மோடு பழகுபவர் அன்பினை எளிதில் கவர்ந்து கொள்ளும் ஆற்றலும் அவர்பால் இருந்தது. இந்

நிலையில் இவர் தந்தையார் காலமானார். அப்போது பிள்ளையவர்கள்மிகவும் வருந்திப் பல கையறுநிலைப் பாக்களைப் பாடினார். பின்பு இவர் ஒருவாறு மனந்தேறி, தம் கல்வியறிவு பெருகுதற் பொருட்டு, அயலூர்களிலே சென்று விசாரித்துத் தமிழ் நூல் ஓலைச் சுவடிகளைப் பெற்று வந்து பிரதி செய்துகொண்டு படித்து வந்ததோடு, தம்மிடம் வருபவர்களுக்குப் பாடம் சொல்லுதலையும் மேற்கொண்டுவந்தார். அன்பர்களும் இவரைப் போற்றி இவருக்குக் காவேரியாச்சி என்ற பெண்ணைத் திருமணம் செய்வித்து மேன்மேலும் ஆதரவளித்தனர். இவ்வாறு சில வருடங்கள் சென்றன.

பின்பு இவர் தம் கருத்துக்கள் நிறைவேறுதற்குத் திரிசிரபுரமே தக்கவிடம் என்று கருதி, அன்பர்களிடம் அதனைத் தெரிவித்து, அவர்கள் இசைவுடன் திரிசிரபுரம் சென்று தங்கலானார். அங்கே இவர் தமிழ்ப் புலவர் பலரிடம் பழகித் தம் கல்வியறிவையும் கவித்திறமையையும் மேன்மேலும் பெருக்கிக்கொண்டார். பல பிரபுக்களின் ஆதரவையும் பெற்றார். பரம்பரையின் விசேடத்தாலும் தந்தையாரின் பழக்கத்தாலும் பிள்ளையவர்களுக்கு அக்காலத்தில் உண்மையான சிவபக்தியும் சைவ நூல்களில் ஆர்வமும் உண்டாகிப் பெருகலாயின. அவர் எங்கே சென்றாலும் ஆங்காங்குள்ள சிவாலயங்களைத் தவறாது தரிசத்தலோடு, அவற்றைப் பற்றிய செய்திகளை அறியவும் முனைந்து வந்தார். இவ்வளவு சிறப்புக்களும் இவர்பால் இருந்தமையை அறிந்த பல ஆலய தருமகர்த்தர்களும் பிறரும், தத்தம் ஆலயங்களுக்கு இவர் வாக்கால் நூல் பாடுவிக்க விரும்பினர். இவ்வாறு காலவடைவில் இவரால் பாடப்பெற்ற பிரபந்தங்களும் தலபுராணங்களும் மிகப் பலவாகப் பெருகின.

ஸ்ரீ பிள்ளையவர்களுக்குக் கச்சியப்ப முனிவரின் நூல்களில் மிக்க ஈடுபாடு உண்டாயிற்று. இம் முனிவர் திருவாவடுதுறை யாதீனத் தொடர்புடையவராதலால், அவ்வாதீனத் தொடர்பைத் தாமும் பெற வேண்டுமென்று இவர் விரும்பினார். அதனால், இவர் ஒரு நல்ல நாளில் தம் சீடருள் ஒருவரை உடனழைத்துக்கொண்டு திரிசிரபுரத்திலிருந்து திருவாவடுதுறையை நோக்கிப் புறப்பட்டார். வழியில் பட்டீச்சுரம் என்ற ஊரில் இவர் தங்கி, அவ்வூராரின் வேண்டுகோளின்படி அவ்வூர் ஸ்ரீதேனுபுரீசர்மீது பழசைப் பதிற்றுப்பத்தந்தாதி என்ற பிரபந்தத்தைப் பாடினார். பின்பு இவர் திருவாவடுதுறையை அடைந்து, அப்போது அவ்வாதீன கர்த்தராக விளங்கிய வேளூர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரால் நன்கு வரவேற்கப் பெற்றார். தாம் படித்த நூல்கள் பலவற்றில் தமக்குண்டாகியிருந்த ஐயங்களைத் தேசிகர்பால் இவர் கேட்டுத் தெளிந்துகொண்டார். ஸ்ரீ தேசிகரவர்களும் பிள்ளையவர்களின் கல்வியாழத்தையும் நல்லியல்புகளையும் கண்டு அவரைப் பெரிதும் மதித்தனர். அப்போது பிள்ளையவர்களுக்குப் பிராயம் இருபத்தொன்று. இவர் திருவாவடுதுறையிலிருந்து

திரிசிரபுரத்திற்குத் திரும்பி வந்தபின், திருவானைக்கா அகிலாண்ட நாயகியம்மைமீது மாலையும், பிள்ளைத் தமிழும், திருவானைக்காத் திரிபந்தாதியும், திருப்பைஞ்ஞீலித் திரிபந்தாதியும் பாடினார். இவற்றால் இவர் புகழ் நாடெங்கும் பரவலாயிற்று.

அக்காலத்தில் சென்னையிலே துரைத்தனத்தாரால் கல்விச் சங்கம் ஒன்று நடத்தப்பெற்று வந்தது. அச்சங்கத்தில் பிரபல தமிழ் வித்துவான்கள் பலர் தொடர்பு கொண்டிருந்தனர். அவர்களேயன்றித் தமிழில் மிக்க ஈடுபாடுடைய வேறுபல பெரியார்களும் சென்னையில் இருந்தனர். அவர்களை யெல்லாம் நேரிற் கண்டு பழகி அளவளாவி அவர்களிடமிருந்து தாம் அறியத்தக்க பலவற்றை அறிந்துகொள்ள வேண்டுமென்ற அவா ஸ்ரீ பிள்ளையவர்களுக்கு உண்டாயிற்று. அதற்கேற்ப ஒரு வாய்ப்பும் இவருக்குக் கிடைத்தது. அதனால் இவர் சென்னைக்குச் சென்று சற்றேறக் குறைய ஓராண்டளவு அங்கே தங்க நேர்ந்தது. அக் காலத்தில் இவர் தாம் கருதியவாறே பல வித்துவான் களுடனும் பெரியோருடனும் பழகிப் பல புதிய விஷயங்களை அவர் களிடமிருந்து அறிந்துகொண்டனர். மாணவர்களுடைய ஆற்றலை யுணர்ந்து அதற்கேற்றவாறு கற்பிக்கும் முறைகளை நன்கு அறிந்ததும் அவற்றுள் ஒன்றாகும். இவரிடம் பழகிய அனைவரும் அடக்கமான இவருடைய சிறப்பியல்புகளையும் ஆற்றலையும் அறிந்து இவரைப் பாராட்டினர். பின்பு இவர் திரிசிரபுரம் திரும்பினார்.

இப்போது இவரிடம் பாடங் கேட்க வருவோர் தொகை மேலும் பெருகலாயிற்று. அவ்வாறு அப்போது பாடங் கேட்டவர்களுள்ளே சிறப்பாகக் குறிக்கத்தக்கவர், கும்பகோணம் அரசினர் கல்லூரியில் தமிழாசிரியராக விளங்கிய பூவாளூர்த் தியாகராச செட்டியார் ஆவர். 'பிள்ளையவர்களுக்கு எவ்வளவு புகழுண்டோ, அந்தப் புகழுக்கு அடுத்த படியான புகழைத் தமிழ் நாட்டிற் பெற்று விளங்கியவர் அவரே' என்று அவருடைய கல்வித் திறமையை மகாமகோபாத்யாய ஐயரவர்கள் பாராட்டியிருக்கின்றார்கள், செட்டியாரின் விருப்பத்திற்கிணங்கிப் பிள்ளையவர்கள் பூவாளூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி என்ற பிரபந்தம் ஒன்றினைப் பாடினார்கள்.

அக்காலத்தில் பங்களூரில் இருந்த பிரமுகரான தேவராஜ பிள்ளை யென்பவர் ஸ்ரீ பிள்ளையவர்களின் பெருமைகளைக் கேள்வியுற்று இவரைத் தம் ஊருக்கு அழைத்து வந்து சிலகாலம் தம்மோடு வைத்துக்கொள்ள விரும்பித் தக்கவர்கள் மூலமாகப் பிள்ளையவர்களை அழைத்துவரச் செய்தார். அவர் தமிழார்வம் மிகவுடையவர். ஆதலால் பிள்ளையவர்களை மிகச் சிறப்புடன் உபசரித்துப் போற்றி, இவர்களிடம்

சில தமிழ் நூல்களைப் பயின்றார். இவர்களுடைய கவிபாடும் ஆற்றலைக் கண்டு வியந்து மிக அருமையாகப் பாராட்டினார். அப்பொழுது தாமும் கவிகளியற்ற ஆர்வங்கொண்டு முயன்று வந்த தேவராஜ பிள்ளை கன்னட மொழியில் இருந்த குசேலோபாக்கியானத்தையும், சூத சம்ஹிதையையும் தமிழிற் கவிகளாகத் தாமே பாடவேண்டுமென்று விரும்பினார்; அது கைகூடவில்லை. அவருடைய அன்பின் திறத்தைக் கண்டு வியந்த ஸ்ரீ பிள்ளையவர்கள் மனங்கசிந்து, அவ்வன்பிற்கு நன்றியறிதலாக, அவ்விரு நூல்களையும் தாமே இயற்றி அவரிடங் கொடுத்து அவற்றை அவர் பேராலேயே அச்சிட்டு வெளிப்படுத்திக்கொள்ளும்படி செய்தார். பின்பு இவர் திரிசிரபுரம் திரும்பி வந்து முன்போலத் தங்கியிருந்தார். அப்போது இவருக்குப் பிராயம் முப்பத்தைந்து.

பிள்ளையவர்கள் இலக்கண விளக்கம் என்னும் நூலைத் தக்கார் ஒருவரிடம் முறையாகப் பாடங்கேட்க விரும்பி, அத்தகுதியுடையவர் கீழ்வேளூரில் இருந்த சுப்பிரமணிய தேசிகர் என்பதை விசாரித்து அறிந்து, மிக்க பணிவுடன் அவரிடம் சென்று தம் கருத்தை அவருக்கு விண்ணப்பித்து, அவர் இசைவு பெற்று அவரைத் திரிசிரபுரத்திற்கு அழைத்து வந்து, ஆறுமாத காலம் அவருக்கு வேண்டிய பல சௌகரியங்களைச் செய்து கொடுத்து வைத்திருந்து அவரிடம் இலக்கண விளக்கத்தையும் அதன் தொடர்புடைய வேறு சிலவற்றையும் கற்றுத் தெளிந்தார். தம்முடைய பெருமைகளைப் பாராட்டாமலும் நூலறிவைப் பெருக்கிக் கொள்ளுதற்குரிய வழியில் எவ்வளவு சிரமங்கள் இருப்பினும் அவற்றைப் பொருட்படுத்தாமலும் அடக்கத்துடன் இருந்த இவருடைய ஆற்றல் யாவரும் வியத்தற்குரியதாகும்.

இவ்வாறிருக்கையில், திருவாவடுதுறையாதீனத்துச் சின்னப் பட்டத்தில் அப்போது எழுந்தருளியிருந்த மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் பிள்ளையவர்களின் தமிழறிவாற்றலையும், இவர் மாணவர்களுக்குக் கற்பிக்கும் அரிய திறமையையும் கேள்வியுற்று இவரைத் தம் ஆதீனத்தில் அமர்த்தி, அங்குள்ள பலருக்குப் பாடம் சொல்விக்க விரும்பி, அதற்கேற்ற தருணத்தை எதிர்பார்த்திருந்தார். அச்சமயம் (1860) பல அன்பர்களின் வேண்டுகோளால் பிள்ளையவர்கள் தமதிருப்பிடத்தைத் திரிசிரபுரத்திலிருந்து மாயூரத்துக்கு மாற்றிக் கொண்டார். மாயூர வாசத்தால் பிள்ளையவர்கள் பெற்ற நன்மைகள் பலவாகும். அரசாங்க உயர் அலுவலரும் தமிழ்ப் பேரறிஞருமான ஸ்ரீவேதநாயகம் பிள்ளை யவர்களுடன் நெருங்கிப்பழக வாய்ப்பும் அங்கே இவருக்குக் கிடைத்தது. அங்கிருந்து திருவாவடுதுறை போய் வருவது எளிதானமையால், அங்கேபோய் மேலகரம் ஸ்ரீசுப்பிரமணிய தேசிகரவர்களை அடிக்கடி தரிசித்துப் பழகவும், அவர் இவருடைய கல்வியாற்றல்

முதலிய பெருமைகளை நேரிற் கண்டுணரவும் நேர்ந்தது. முன்பே தருணம் பார்த்திருந்த தேசிகரவர்கள், ஆதீனகர்த்தரிடம் தக்கவாறு பேசிப் பிள்ளையவர்களைத் தம் ஆதீன வித்துவானாக அமர்த்திக்கொண்டு, இவர் அவ்வூரிலேயே குடும்பத்துடன் தங்கியிருத்தற்குரிய எல்லா வசதிகளையும் செய்தளித்தார். இருவருடைய கருத்தும் ஒத்து நிறைவேறியதில் அனைவரும் மகிழ்ச்சி கொண்டனர். அப்போது ஆதீனகர்த்தராக இருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிகர் விஷயமாகப் பிள்ளையவர்கள் கலம்பகம் ஒன்று இயற்றி அரங்கேற்றினர். அதன் அருமை பெருமைகளையுணர்ந்த ஆதீனகர்த்தர், இவருக்கு 'மகாவித்துவான்' என்ற பட்டம் அளித்துப் பாராட்டிச் சிறப்பித்தார். பிள்ளையவர்களும் தம் இறுதிக் காலம் வரை அப்பதவியையும் பட்டத்தையும் நன்குபேணி வந்ததோடு அப்போது வேறெவரும் எக்காலத்திலும் செய்திராத வகையில் தமிழ்த்தொண்டுகளையும் செய்து வந்தார், அளவற்ற பிரபந்தங்களும் தலபுராணங்களும் அக்காலத்தில் அவரால் இயற்றப் பெற்றன. திரு அம்பர்ப் புராணமும் அவற்றுள் ஒன்றாகும். இதனைப் பற்றிய செய்திகளைப் பதிப்புரையிற் காணலாம். இவ்வாறாக, நூலாசிரியர், போதனாசிரியர் ஆகிய இருபேராற்றலும் ஒருங்கே பெற்றுச் சிறந்தோர் இவரைப்போலக் காண்டல் அரிதாகும். பாடஞ் சொல்வதில் இவருக்கிருந்த ஆர்வமும், மாணாக்கரிடத்து இவர் கொண்டிருந்த அன்பின் திறமும் இணையற்றன. இவர் தம் இறுதிக் காலத்தில் பெரும்பாலும் மாயூரத்திலேயே தமது சொந்த இல்லத்தில் வசித்திருந்தார். இவருக்குச் சிதம்பரம் பிள்ளை யென்ற புதல்வர் ஒருவர் இருந்தார்.

பிள்ளையவர்களுடைய சீடர்களுள்ளே தலை சிறந்தவராய்த் தமிழுக்குப் பரமோபகாரம் புரிந்த மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள் தம்முடைய 17-ஆம் பிராயத்தில் (1871-ஏப்ரல்) இவரிடம் மாணவராக வந்து சேர்ந்து, இவருடைய இறுதிக்காலம் வரை 'அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி, நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமோடு, எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம், அறத்தில் திரியாப் படர்ச்சி வழிபாடே' என்பதற்கு இலக்கியமாக அமைந்திருந்தார். பிள்ளையவர்களுக்கும் ஐயரவர்களிடம் இருந்த அன்பின் தன்மை அளவிடற்கரியது. இவர்களுடைய தொடர்பால் தமிழுலகம் பெற்ற நன்மைகளும் அளவிடற்கரியன. பிள்ளையவர்களுடைய சரித்திரத்தை மிக விரிவாக எழுதி வெளியிட்டும், அவர்களுடைய பிரபந்தங்கள், தலபுராணங்கள் முதலிய மிகப்பல நூல்களையும் பதிப்பித்து வெளியிட்டும் பிள்ளையவர்களின் புகழ் என்றும் குன்றாது நின்று நிலவுமாறு செய்த பெருமை ஸ்ரீஐயரவர்களையே சாரும். அவர் தம் ஆசிரியரைக் குறித்து எழுதியுள்ளதொரு சிறு பகுதியை இங்கே தருவது பொருத்தமாகும். அது வருமாறு:

## இவரால் தமிழ் நாட்டிற்கு உண்டான பயன்

" இப்புலவர் பிரானால் தமிழ்மக்கள் பெற்ற பயன் மிகப் பெரிதாகும். புதிய புதிய நூல்களை இயற்றித் தமிழ் நயங்களை அமைத்துக் காட்டிய இவருடைய செய்யுளால் பலவகைச் சுவைகளை அறியும் பயனைத் தமிழ்மக்கள் பெறுகின்றனர். புது நூல்களை இயற்றியதோடு நில்லாமல், தாம் வருந்தித் தேடிய பழைய நூல்களை விளக்கிவைத்த இவருடைய செயல் தமிழ் நாட்டாரால் என்றைக்கும் நினைக்கத்தக்க தாகும். தமிழ்ப் பாடஞ் சொல்லிச் சொல்லி மாணாக்கர் கூட்டத்தை வளர்த்து அவர்கள் மூலமாகத் தமிழறிவைத் தமிழ் மக்களுக்குப் பயன் படச்செய்த வள்ளல் இவர். எங்கெங்கே தமிழ் நூல்களை முறையாகப் படித்தறியும் உணர்வும், பழைய புராணங்கள், பிரபந்தங்கள் முதலியவற் றைப் பயின்று இன்புறும் இயல்பும் திகழ்கின்றனவோ அங்கெல்லாம் இவருடைய தொடர்பேனும் இவர்பாற் பாடங் கேட்டவர்களுடைய தொடர்பேனும் பெரும்பாலும் இருக்கும். இன்றளவும் ஓரளவில் புலவர் களுடைய நூல்களின்பால் மக்களுக்கு உள்ள மதிப்புக்கு மூலகாரணம் இவரென்றே சொல்லலாம். தமிழ்த் தெய்வத்தின் திருத் தொண்டர் களாகித் தமிழகத்தைத் தமிழன்பில் ஈடுபடுத்திய பெரியோர்களுடைய வரிசையில் இவரும் நிற்பர். தமிழ் நூற்கோவைகளில் இவருடைய நூல்களும் முத்துக்களைப்போல விளங்குகின்றன. இனியும் அவை தமிழ்மக்கள் உள்ளத்தில் இன்பத்தை உண்டாக்கிக்கொண்டே என்றும் குன்றா இளமையோடு விளங்கும். அவற்றை ஊன்றிப் படிப்பவர்கள் பிள்ளையவர்களின் புலமை உருவத்தை உணர்ந்து மகிழலாம். தமிழ் உள்ளளவும் இவருடைய பெரும்புகழ் நின்று நிலவுமென்பது திண்ணம்."

இப் புலவர்பிரான் இயற்றிய நூல்கள் பலவற்றுள் தெரியாதவை சில; தெரிந்தவற்றுள் புராணங்கள் 22; பிற காப்பியங்கள் 6; பிரபந் தங்கள் 45; அவற்றைக் கீழே காண்க:—

### 1. தலபுராணங்கள்

(1) அம்பர்ப் புராணம்
(2) ஆற்றூர்ப் புராணம்
(3) உறையூர்ப் புராணம்
(4) கண்டதேவிப் புராணம்
(5) ஸ்ரீ காசிரகசியம்
(6) குறுக்கைப் புராணம்
(7) கோயிலூர்ப் புராணம்
(8) சூரைமாநகர்ப் புராணம்
(9) தனியூர்ப் புராணம்
(10) தியாகராச லீலை
(11) திருக்குடந்தைப் புராணம்
(12) திருத்துருத்திப் புராணம்
(13 திரு நாகைக்காரோணப் புராணம்
(14) திருப்பெருந்துறைப் புராணம்
(15) திருமயிலைப் புராணம்
(16) திருவரன்குளப் புராணம்
(17) பட்டீச்சுரப் புராணம்
(18) மண்ணிப்படிக்கரைப் புராணம்
(19) மாயூரப் புராணம்
(20) வாளொளி புற்றூர்ப் புராணம்
(21) விளத்தொட்டிப் புராணம்
(22) வீரவனப் புராணம்,

## 2. சரித்திரம்

(1) ஆதி குமரகுருபரஸ்வாமிகள் சரித்திரம் (2) சிவஞான யோகிகள் சரித்திரம் (3) மயில்ராவணன் சரித்திரம்.

## 3. மான்மியம்

குருபூசை மான்மியம்

## 4. பிற காப்பியங்கள்

(1) குசேலோபாக்கியானம் (2) சூத சங்கிதை.

## 5. பதிகம்

(1) கச்சி விநாயகர் பதிகம்
(2) சுப்பிரமணியசுவாமி பதிகம்
(3) திட்டகுடிப் பதிகம்
(4) மருதவாணர் பதிகம்.

## 6. பதிற்றுப்பத்தந்தாதி

(1) தண்டபாணி பதிற்றுப்பத்தந்தாதி
(2) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிற்றுப்பத்தந்தாதி
(3) திருவூறைப் பதிற்றுப்பத்தந்தாதி
(4) பழசைப் பதிற்றுப்பத்தந்தாதி
(5) பாலைவனப் பதிற்றுப்பத்தந்தாதி
(6) பூவாளூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.

## 7. திரிபந்தாதி

(1) குடந்தைத் திரிபந்தாதி
(2) திருப்பைஞ்ஞீலித் திரிபந்தாதி
(3) திருவானைக்காத் திரிபந்தாதி
(4) திருவிடை மருதூர்த் திரிபந்தாதி.

## 8. யமக அந்தாதி

(1) திருச்சிராமலை யமக அந்தாதி (2) திருவாவடுதுறை யமக அந்தாதி (3) தில்லை யமக அந்தாதி.

## 9. வெண்பா அந்தாதி

எறும்பீச்சரம் வெண்பா அந்தாதி

## 10. மாலை

(1) அகிலாண்டநாயகி மாலை
(2) கற்குடி மாலை
(3) சிதம்பரேசர் மாலை
(4) சுப்பிரமணியதேசிகர் மாலை
(5) சச்சிதானந்ததேசிகர் மாலை
(6) சவராயலு நாயகர் மாலை
(7) சித்திரச் சத்திரப் புகழ்ச்சி மாலை.

## 11. பிள்ளைத்தமிழ்

(1) அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ்
(2) காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்
(3) சேக்கிழார் பிள்ளைத்தமிழ்
(4) திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ்
(5) திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்
(6) பாகம்பிரியாள் பிள்ளைத்தமிழ்
(7) பிரம்மவித்தியாநாயகி பிள்ளைத்தமிழ்
(8) பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ்
(9) மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்
(10) அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்.

## 12. கலம்பகம்

(1) வாட்போக்கிக் கலம்பகம் (2) அம்பலவாண தேசிகர் கலம்பகம்

## 13. கோவை

(1) சீகாழிக் கோவை (2) குளத்தூர்க் கோவை
(3) வியாசைக் கோவை.

## 14. உலா

திருவிடைமருதூருலா.

## 15. தூது

(1) சுப்பிரமணிய தேசிகர் நெஞ்சுவிடு தூது (2) தானப்பாசாரியார் தசவிடு தூது.

## 16. குறவஞ்சி

திருவிடைக்கழிக் குறவஞ்சி.

## 17. சிலேடை வெண்பா

திருவாவடுதுறைச் சிலேடை வெண்பா.

## 18. வேறுவகை

(1) கப்பற் பாட்டு
(2) குருபரம்பரை அகவல்
(3) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் ஆனந்தக் களிப்பு
(4) பொன்னூசல்
(5) மங்களம்
(6) லாலி
(7) வாழ்த்து.

இவற்றையன்றித் தனிப்பாடல்கள் அளவிறந்தன. இவர் வேறு பல நூல்களையும் இயற்றவேண்டுமென்று எண்ணியிருந்ததுண்டு. குறிஞ்சித்திணை வளங்கள் நிறைந்து விளங்கும் குற்ருலத்திற்கு ஒரு கோவை பாடவேண்டுமென்று எண்ணியிருந்தனர். அவ்வெண்ணம் என்ன காரணத்தாலோ நிறைவேறவில்லை.

அருங்குணக் குன்ருகிய இக் கவிச்சக்கரவர்த்தி சிவபதமடைந்தமை இவருக்கு மிகவும் உகப்பான திருவாவடுதுறையில் நேர்ந்தது குறிப்பிடத்தக்கதாகும். அங்கே ஸ்ரீ கோமுத்தீசுவரருடைய பிரமோற்சவத்தில் ஐந்தாந் திருநாளாகிய 1—2—1876 அன்று, ஸ்ரீ ஐயரவர்களும் வேறு சில மாணுக்கரும் குடும்பத்தாரும் உடனிருந்து போற்றிவர, ஆதீன கர்த்தரும், பெரியார் பலரும் இவரருமைகளைப் பாராட்டி வருந்த, இவர் ஸ்ரீ நடராசமூர்த்தியின் குஞ்சித சரண நினைவோடு அப்பெருமான் திருவடி நீழலை யடையும் பேறு பெற்ருர். அப்போது இவருக்குப் பிராயம் அறுபத்தொன்று.

---

# முகவுரை

புராணம் – பழமை. உபநிடதங்களிலும், சாஸ்திரங்களிலும் இச் சொல் பழமையைக் குறிக்குஞ் சொல்லாக வழங்கி வருகிறது. பழமை கட்கெல்லாம் பழமையான பரமன் புராணன்; ஆதி புராணன் என்றே அவன் அழைக்கப் பெறுகின்றான். ஆகவே பழமையான வரலாறுகளை இன்றுவரை மக்களைச் சொல்லச் செய்வன எவைகளோ அவைகள் யாவும் புராணங்களாம். புராணங்கள் மிகச் சிறந்த இலக்கியங்களாக அதர்வணவேத காலமுதலே கருதப் பெற்று வருகின்றன. புரா + நவம் என்ற இரு சொற்களின் இணைப்பே புராணம்; பொருள், பழமையாயும், என்றும் புதுமையாயும் இருப்பது என்பதாம்.

வடமொழிவாணர்கள் இலக்கியங்களை மூன்றாகப் பகுத்துள்ளனர். அவையாவன: (1) விதி முறையால், 'நன்மைகளைச் செய்; தீமைகளைச் செய்யாதே' என்று விதிப்பனவாகிய வேதாகமங்கள்; இவை பிரபு சம்ஹிதை எனப்படும். (2) உயிர்த்தோழன் ஒருவன் நம்மைத் திருத்த வேண்டி, நம்மிடம் உள்ள குற்றங்குறைகளை ஒரு கதையை அடிப்படை யாக வைத்துத் திருத்துவதுபோலப் பழைய வரலாறுகளைக்கொண்டு நீதிகளை விளக்குவது; இவ் வகையைச் சார்ந்தன புராண இதிகாசங்க ளாகிற சுஹ்ருத் சம்ஹிதைகளாம். (3) மனைவிபோல அன்பையும் இன் பையும் அடியாகக் கொண்டு நீதிகளை வற்புறுத்துவது; இப் பகுப்பைச் சார்ந்தன காவியங்களும் நாடகங்களுமாகிய காந்தா சம்ஹிதைகளாம். இவற்றால், புராணங்கள் உயிர்த் தோழன்போல உற்ற இடத்து உதவுவனவாதல் காண்க.

வேதாகமங்களுக்கு, ஆணையிடும் விதிமார்க்கங்களே சிறந்தவை. காவியங்களுக்கு, ரஸம் எனப்படும் சுவைகளே சிறந்தவை. புராணங் களுக்குக் கதைகளே சிறந்தவை. ஆகவே புராணங்கள் கதைகளை உயிர் நாடியாகக் கொண்டு புண்ணிய—பாவங்களையும், நியாய-அநியா யங்களையும் நன்கு விளக்குவன எனலாம். ஆனால் புராணங்களுக்குச் சுவைகளே வேண்டாம் என்பது கருத்தன்று. ஒன்பது சுவைகளுள், சாந்தம், கருணை என்ற இரண்டையும் அடியாகவும், வீரம், காமம், நகை முதலானவற்றை உறுப்புக்களாகவும் கொண்டு கடவுள் நம்பிக்கை ஊட்ட எழுந்தனவே புராணங்கள்.

அர்த்த சாஸ்திரத்தில் கௌடில்யர், அரசகுமாரர்கள் புராணங்களைப் படிப்பது அவசியம் என்று வற்புறுத்துகிறார். நாடு காக்கும் மன்னன் புராணங்களைப் படித்துத் தெய்வ நம்பிக்கையும் நல்லொழுக்கமும்

உடையவனுனல் நாடே திருந்தும் என்பது அவர் எண்ணம் போலும். வேத - ஆகம விளக்கங்கள் புராணவாயிலாக எளிமையிற் பெறலாம் என்பதாலேயே இறைவன் வாய்மொழியாகிய வேத – ஆகமங்களை யடுத்துப் புராணங்கள் பெருமதிப்போடு' சித்த சாந்திக்கும், செந் நெறி களைக் கடைப்பிடிப்பதற்கும் பெருந்துணையாக மக்களால் படிக்கப் பெற்று வந்தன ஆதல் வேண்டும்.

இத்தகைய புராணங்கள் மகா புராணங்கள் எனவும், உபபுராணங் கள் எனவும் இருபிரிவாகப் பகுக்கப் பெற்றுள்ளன. மகா புராணங்கள் பிரம புராணம் முதல் பிரமாண்ட புராணம் ஈருகப் பதினெட்டாம்; உபபுராணங்களும் சனற்குமார புராண முதல் மாரீச புராணம் ஈருகப் பதினெட்டாம். மகாபுராணங்களுள் பிரம வைவர்த்தம், பிரமாண்டம் என்பனவும், உபபுராணங்களைச் சார்ந்த சனற்குமார புராணமும், கந்த புராணத்தில் சங்கர சம்ஹிதையும் பல தல வரலாறுகளையும் அறிவிக்கின்றன.

இடைப்பட்ட காலத்தில் எழுந்த இலக்கியங்கள் யாவும் புராணம் என்றே வழங்கப் பெறுவவாயின. சங்க காலத்திலேயே மொழி இலக்கணங்களையுணர்த்தும் நூல்களாகிய மாபுராணமும் பூத புராண மும் புராணம் என்ற பெயரைப் பொருந்தியிருக்கவில்லையா? செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த அறுபத்து மூன்று அடியார்களின் சிவ நெறி வாழ்க் கைகளைச் சித்திரிக்க வந்த செந்தமிழ்க் காப்பியமும் திருத் தொண்டர் புராணம், பெரிய புராணம் என வழங்கவில்லையா? இவற்ருல் புராணம் என்ற வழக்குப் பொதுவாக இலக்கியங்களையே குறிப்பதாயிற்று எனலாம்-

ஆயினும் புராணம் என்ற சொல்லைக் கேட்டவுடனேயே தல புராணங்கள் தாம் நினைவுக்கு வருவன. அதற்குக் காரணம் திருக் கோயிற் சிறப்புடைய ஒவ்வொரு தலமும் புராணங்களைப் பெற்றன; புராணங்கள் மலிந்தன. தலபுராணங்கள் மக்களுக்குத் தம் ஊரைப் பற்றிய வரலாறுகளையும், பெருமைகளையும், பண்டையநிலை-இன்றைய அமைப்பு இவற்றையும் அறிவித்துத் தளராத நம்பிக்கையை வளர்த்து வருகின்றன. மனிதன் தன்னம்பிக்கை யொன்ருலேயே வாழவேண்டிய வன். அவன் வாழ்வில் தளர்ச்சி குறுக்கிடுமாளுல் வளர்ச்சி குன்றும். வளர்ச்சிக்கு உண்மையான உறுதுணை கடவுள் நம்பிக்கை யொன்றே தான். 'இடரினும் தளரினும் இறைவர் துணை செய்வார்' என்ற வரலாறுகளே மக்களுக்குப் புதுத் தெம்பை யூட்டுவன. அவற்றைக் கொடுப்பன தல புராணங்கள்.

தலபுராணங்களில், நாட்டு வருணனை, நகர வருணனை, மலை வருணனை, மழை வருணனை, புராண வரலாறு, தலத்தைப் பற்றிய

வரலாறுகள், மூர்த்தி, தீர்த்த வரலாறுகள், விழா, வேள்வி வரலாறுகள், வழிபட்டார் வரலாறுகள், அவர்கள் எய்திய பேறுகள் எல்லாம் கூறப் பெற்றுள்ளன. பலநூல்களைப் படித்து அறியவேண்டிய பல கருத்துக் களை அடக்கி நிற்கும் கருவூலம் தலபுராணங்கள். சமுதாயத்தைத் தன்னம்பிக்கையாலும் கடவுள் துணையாலும் வாழவைப்பன தல புராணங்கள். எத்தனையோ வீழ்ச்சிக்கும் தாழ்ச்சிக்கும் இலக்கான தமிழ்நாடு இப்புராணங்களாலேயே தளராத நிலைகளைப் பெற்று வந்திருக்கின்றது என்பதை நம்முடைய மன்னர்களின் வரலாறுகள் தெரிவிக்கின்றன.

அபயகுல சேகரசோழன் ஆட்சிக் காலத்தில் சிறிது குறைந்திருந்த தெய்வ நம்பிக்கையைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தைச் செய்தருளி வளர்த்தார் என்பது வரலாறன்றோ?

பல குறுநில மன்னர்களும், பெரு நிலக்கிழார்களும், பெருஞ் செல்வர்களும் தங்கள் செல்வம், செல்வாக்கு ஆட்சிகளைக் கொண்டு, புலவர் பெருமக்களால் பல புராணங்களைச் செய்வித்து மக்களிடையே நல்லொழுக்க போதத்தை வளர்த்துச் சமுதாய நலத்தைப் போற்றி வந்தனர் என்பதை இடைக்காலச் செய்திகளால் அறிகிறோம்.

பிற்காலச் சோழமன்னர்கள் புராண வரலாறுகள் மக்களிடையே பரவுவதால் விளையும் நன்மைகளை எண்ணியே, சிவதருமோத்தரம் முதலிய புராணங்களை வக்காணிப்பார்க்கும், இருந்து கேட்பார்க்குமாகப் பல நிபந்தங்களையமைத்துப் பரப்பினர் என்ற செய்தியைக் கல்வெட்டுக் கள் அறிவிக்கின்றன. திருவாரூரிலும் திருபுவனத்திலும் புராண மண்டபம் என்ற பெயராலேயே ஒரு மண்டபம் விளங்குவதை இன்றுங் காணலாம். தில்லையாகிய சிதம்பரத்தும் கோப்பெருஞ்சிங்கன் நூற்றுக்கால் மண்டபத்தில், திருமுறை பாராயணமும், புராண வக்காணிப்பும் செய்வித்து வந்தான் என்பதைத் தில்லைக் கோயிற் கல்வெட்டுக் காட்டுகின்றது.

இவ்வண்ணம் நிலைத்ததும், மன பரிபாகத்தால் விளைவதுமாகிய சமுதாயச் சீர்திருத்தத்தை வழங்கி வருகின்ற புராணங்களின் வரிசையில் ஒன்றுவது இந்த அம்பர்ப் புராணம்.

இப்புராணம், காவிய அமைப்பிற் கம்பராகவும், பத்திச் சுவை சொட்டச் சொட்டப் பாடுவதில் தெய்வச் சேக்கிழார் பெருமானாகவும், இலக்கணச் செறிவும், சைவாகமக் கருத்துக்களும் அமையப் பாடுவதில் மாதவச் சிவஞான சுவாமிகளாகவும், கச்சியப்ப முனிவராகவும், கவிதை யோட்டத்திலும் எங்கும் தெய்வ சிந்தனை குன்றயாமல் அழைத்துச்

செல்வதிலும் கச்சியப்ப சிவாசாரியராகவும் விளங்கிய திருவாவடுதுறை யாதீன மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப் பட்டது.

இவர்கள் இயற்றிய புராணங்கள் பல. அவற்றுள் இது பிள்ளையவர் களுடைய பழுத்த புலமைக் காலத்து எழுந்த ஞானக் குழந்தை யெனலாம். அழகும் தெளிவும் ஆழமும் அநுபவமும் அவயவங்கள் தோறுங் குமிழியிடுவதே இம் முடிபிற்கு ஏற்ற சான்று.

இப் புராணத்தை நயம் உணர்ந்து சுவைப்பதற்குத் துணையாகத் தொடர்புடைய கல்வெட்டு, திருமுறைக் குறிப்புக்கள் சிலவும், நூலின் நயமான பகுதிகள் பலவும் பல கோணங்களில் இருந்து ஆராய்ந்து கீழே குறிக்கப்பெறுகின்றன.

### தலம்

அம்பர் என்னும் இத்தலம் சோழ வளநாட்டில் நன்னிலம் கூற்றத்தில், பூந்தோட்டத்திற்கு நேர்கிழக்கே இரண்டு கல் தொலைவில் அரிசிலாற்றின் வடகரையில் உள்ளது. ஞான சம்பந்தப் பெருமான், [1]"அரிசிலம் பொருபுன லம்பர்" எனவும், "ஐய நன் பொருபுன லம்பர்" "அறைபுனல் நிறைவய லம்பர்" எனவும், "அங்கணி விழவமர் அம்பர்" எனவும் குறித்தருளுகின்றூர்கள். "அழல்வளர் மறையவர் அம்பர்"[2] என்னும் அருண்மொழி, நல்லம்பர் இல்லந்தொறும் மூன்றெரியோம்பும் நல்ல குடியுடைமையைத் தெரிவிக்கும் சான்றாகும். இந் நூலுள், பிள்ளையவர்களும் கவிதா சாமர்த்தியம் தோன்ற, "தழலுருப்பரனைத் தழலிடைக் காண்பார்" எனவும், கழல் வினையினராய் மறையவர் வாழும் காமரு தெருக்கள்[3] எனவும் அம்பரைச் சிறப்பிக்கின்றூர்கள்.

### மறுபெயர்கள்

இத்தலத்திற்குப் பிரமபுரம், பிரமபுரி, மகாகாளபுரம், மாகாளிபுரம், புன்னகவனம், நந்தராசபுரம், மாரபுரி, சண்பகவனம், சண்பகாரண்யம் என்னும் பெயர்கள் இந்நூலில் ஆங்காங்குக் குறிக்கப் பெறுகின்றன. இவற்றின் பெயர்க்காரணங்களை இந்நூல் 354, 355 பாடல்களால் அறியலாம்.

கல்வெட்டுக்களில், முதற்குலோத்துங்கன் காலத்து, உய்யக்கொண் டார் வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் எனவும்,[4] ராஜகேசரிவர்மனை குலோத்துங்கன் காலத்துப் பூபால குலவல்லி வளநாட்டு அம்பர் நாட்டு

---

(1) தேவாரம். 1, 2, 3, 5 பாட்டு
(2) ஷை 6 பாட்டு
(3) அம்பர்ப் புராணம் பாட்டு 239
(4) 93 of 1910

அம்பர் எனவும்[1] இது வழங்கப்பெற்றது. வளநாட்டுப் பெயர் எப்படி மாறினும் அம்பர் நாட்டுக்கு அம்பர் தலைநகராகுஞ் சிறப்பை என்றும் பெற்றிருந்தமைக்கு மாறில்லை.

## கோயில்

இங்குள்ள கோயிலை ஞானசம்பந்தப் பெருமான், 'அம்பர்ப் பெருந் திருக்கோயில்' என்று அருளிச் செய்கின்றார். பெருந்திருக்கோயில் பெருங்கோயில், வரைக்கோயில், மாடக் கோயில் என்பன ஒரே கருத்தை அடிப்படையாகக் கொண்டெழுந்தவை. சிலந்தியாய் இருந்து எச்சில் நூலாற் சிவாலயம் அமைத்துச் சிவபுண்ணிய விசேடத்தால் சிலந்திச் சோழன் என்ற சிறப்புப் பெயரோடு சோழர் குடியிற்றோன்றி முற்பிறப்பின் வாசனை மாறாமல் யானையேற முடியாத வண்ணம் பெரிய மாடக் கோயில்களை அமைத்த கோச் செங்கண்ணான் செய்த கோயில் என்பதே அவ்வடிப்படை. இதனை ஞானசம்பந்தரும், 'குரிசில் செங்கண்ணவன் கோயில்', 'செம்பியர் செய்ய கண்ணிறை செய்த கோயில்' என விளக்கியருளுவார்கள். இப்புராணம் இவ்வரலாற்றை 14-வது படலத்திற் கூறுகிறது.

## மூர்த்திகள்

தலவிநாயகர்—படிக்காசு விநாயகர்.

சுவாமி பெயர்—பிரமபுரேசர், பிரமலிங்கம், பிரமலிங்கத்தம்பிரான்,[2] அம்பராலயத்தீசன்[3] என்பன.

அம்மை பெயர்: பூங்குழல் நாயகி, (5) வம்புவனப் பூங்குழலாள் (37) என்பன.

பரிவார தேவர்கள்: நடராசர், சிவகாமியம்மை, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், தட்சிணாமூர்த்தி, வைரவர், முருகப்பெருமான், நால்வர் சமய முதலிகள், தண்டீசர், வடுகநாதர், காளி, திருமால் முதலியோர். இத்தலத்துப் பதிகத்து ஞானசம்பந்தர், "நட்டம் ஆடுவர்", "கனலெரி கனல ஆடுவர்", "சடைமுடி பெயர ஆடுவர்", "அருமறை பாடியாடுவர்", "கனல்தர வீசி யாடுவர்", "குளிர்புனல் சூடியாடுவர்", "பலி கொளப் பாடியாடுவர்" என ஏழு திருப்பாடல்களில் இறைவனது ஆடுநிலையைக் குறிப்பதால், இங்கு நடன விசேடமும் உள்ளது போலும். இந்நூலுள் பிள்ளையவர்கள் நடராசப் பெருமானை, "ஆடு மேன்மை யடிகள்" எனக் குறிப்பதும் (பாட்டு 262) இக்கருத்துப் பற்றிப் போலும். சோமாஸ்கந்தரைக் 'கூடும் நாயகர்' என்பதும் குறிப்பிடத்தக்கதொன்றும்.

---

(1) 107 of 1910 (2) பாட்டு 37, 363 (3) பாட்டு 534

மலே: கோச்செங்கணன் செய்த கட்டுமலே. இது இந்நூலுள் கயிலாய கிரி, பிரமகிரி, பிரமவரை யென வழங்கப்பெறுகின்றது.

ஸ்தல விருட்சம்: புன்னே.

ஆறு: அரிசிலாறு. (357)

தீர்த்தம்: (1) அரன் சாபத்தால் அன்ன உருக்கொண்ட பிரமன் கண்ட தீர்த்தமாதலின் அன்னமாம் பொய்கை என்னும் பெயருடையது; (252, 359). (2) இந்திர தீர்த்தம்: இந்திரன் வழி பட்டுய்ய அம்பர் வந்தபோது அவன் ஆக்கிய தீர்த்தம்; இது திருக் கோயிலின் எதிரில் ஒருபுறம் உள்ளது; (698). (3) சூலதீர்த்தம்: அம்பர்ப்பெருமான் ஆணேயின்வண்ணம், வடுகநாதன் புவனேசத்தி னருகில் சூலத்தால் அமைத்த தீர்த்தம். (693).

சுற்றியுள்ள திருக்கோயில்கள்: (632, 633)

பிரமபுரீசருக்குக் கீழ்த்திசையில் விநாயகர்கோயில்; ஈசானத்தில் கயிலாயநாதர் கோயில்; அக்கினிதிசையில் புவனேசம்; மேற்கில் மருத மரத்தடியில் மாகாளேசம்; தெற்கில் பூரணே புட்கலே சமேத ஐயனர் கோயில்.

கற்பனே

கவிஞனுடைய கவி ஒளி அனேத்தும் கற்பனேயோட்டத்திலே தனி யழகு பெறுகின்றது. இலக்கியங்களுக்கு மாற்றுயர்வதும், படிப்பவர் மனம் ஈடுபடுவதும் கற்பனேச் சிறப்பினுலேதான். இக்கவிஞர்பெருமான் கற்பனேயிற் குறைந்தவரல்லர்; தெய்வநெறிக்காப்பியமாகிய புராணத்தி லேயே நவரசங்களும் ததும்புங் கற்பனேகளே யமைத்துக் காட்டுவார். அவற்றை ஒவ்வொன்ருகச் சுவைக்க முடியாமையால் இந்நூலுள் அவை விளங்கும் எண்களே மட்டும் குறிப்பேன்:—பாட்டெண் 7, 31, 69, 91, 92, 107, 113, 235, 247, 248, 583 முதல் 601 வரையுள்ள கேசாதி பாத வர்ணனே முதலியன.

அணி வகைகள்

பொருளணிகளில், உவமை, சிலேடை, எடுத்துக்காட்டு, ஒழித்துக் காட்டு, உயர்வு நவிற்சி, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள் வைப்பு முதலான பல அணிகள் இந்நூலுள் எளிமையாகவும் இனிமையாகவும் பொருள்விளக்கஞ் செய்கின்றன.

சொல்லணிகளின் வகைகட்கென்றே கவிஞர் பெருமான் அமைத்த படலம் நைமிசாரணியப்படலம். அப்படலத்து அங்கங்கே அவை

குறிக்கப்பெற்றிருத்தலின் தனியே யீண்டு எழுதவில்லை. (பாட்டு 269 முதல் 308 முடிய). யமகமும், திரிபும் இந்நூலுட் பல இடங்களிற் பார்க்கலாம். படிக்காசு விநாயகர் துதியே திரிபில் விளைந்த பொருள் நயம் மலிந்தது.

பூங்குழல் நாயகியின் திருமுகம் பொன்விழைவார்க்குத் திருமக ளுறையுஞ் செந்தாமரையாகவும், கல்வி விரும்புகின்றவர்களுக்குக் கலைமகள் தங்கும் வெண்டாமரையாகவும், வெற்றிபெற விரும்பு வார்க்குக் கொற்றவை யிருக்கும் பசுங்கமலமாகவும் காட்சியளிக்கிறது எனக் கூறுவதன்மூலம் விரும்பித்தொழும் அடியார்கள் விருப்பம் ஈடேற அம்மை துர்க்கா லட்சுமி சரஸ்வதியாக விளங்குபவள் என்ற தத்து வத்தை விளக்குகின்றார் (6). இது போன்ற அணிநயங்கள் பல.

சொல் நயம்: ''ஆலடி வாழ் அரசடியை'', ''ஒருபசுப் புரக்கும் மாண்பில் கலகம் எண்ணில மேவல் கண்டும் அதற்கஞ்சாது பல பசுப் புரந்த ஐயன்'' என்பன முதலியன முரண்கள். இவைபோலச் சொல் நயந் தோன்ற நிற்கும் பாடல்கள் 9, 160, 181 முதலிய பல.

இலக்கண நுட்பங்களையே இலக்கியமாக எடுத்தாளுதல்:

உடலும்-உயிரும் தனித்த நிலையில் அஃறிணையாகிலும், கூடிய பொழுது பகுத்தறிவு பெற்று உயர்திணையானதுபோல இழிதகவுடை யேன் சொல்லும் பொருளும் இறையவன் சரிதத்தோடியைந்து உயர்ந் தது எனல் (35);

''இருதிணை யுயிர்முயற்சிக்கு இத்திணை தரும் இலாபத்து
ஒருதிணைக்கு இஃதாம் என்றே யொதுக்கினர் பலாலம் (119);

''மொழி சுருக்கியே யுரைப்பார்'' (237).

பிறநூற்கருத்து ஒப்புமை:

வேண்டுதல் வேண்டாமையிலான் (குறள்) — தனக்கென வொன்றுயினும் வேண்டா தவனே பெருங்கருணைச் சத்தன். (8)

தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே (தனிப்பாடல்) — நீருங்காவிரியே வேந்து நேரியர் பிரானே மண்ணும், ஒருஞ் சோணாடேயென்ன (46)

எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள் (சிவஞான சித்தி) — மனக் கினிய சத்தியும் அத்தகையளே. (8)

'இளைதாக முள் மரங் கொல்க'' (குறள்) — யானை மூங்கில் முளையை முறித்துப் பிடிக்கு ஊட்டுதல். (63)

அட்டாலும் பால்சுவையிற் குன்றாது (நல்வழி) — நறும்பால் அழல் அடுந்தொறும் நறுஞ்சுவையாம். (78)

கடல்பெரிது; மண்ணீருமாகாது. அதனருகே சிற்றூறல், உண்ணீரும் ஆகி விடும். — "பெரும்புணரியளப்பில் நீருதவும்...மணற்கேணி யான்ற சுவைநீருதவும். (127)

மந்தியும் அறியா மரம்பயி லடுக்கம் (திருமுரு.) — சோலைவெங்கதிர் செலுத்தியோராதது. (158)

காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல் (குறள்) — காட்சியின் எளியர் கடுமொழியரியர் (238)

தவலருங் தொல்கேள்வி...பதி (நாலடியார்) — இகல்சிறிதேனும்... கழகமும் பலவால் (243)

வேண்டேன் புரந்தரன் மாலயன் வாழ்வு (திருவாசகம்) — வண்டடைகிடக்கும்... ...பதமென உள்ளங்கொள்வார் (311)

கேடுமாக்கமுங் கெட்ட திருவினர் (பெரிய புரா) — அளவிலின்புற்றகாலும்...கண்டிலாதார் (313)

## சித்தாந்தக் கருத்துக்கள் :

1, 7, 8, 9, 14, 25, 53, 55, 89, 104, 105, 123, 125, 241, 242, 253, 260, 364 முதலியன.

## பிற புராண வரலாறுகள் .

கோச்செங்கட் சோழன் வரலாறு: பா. 4,22.
பிரமன் பூசித்தது - பா. 3
திருமால் ,, ,, 3
இந்திரன் ,, ,, 3
கண்ணப்பர்வரலாறு ,, 10
பிரமன் சிரங்கொய்தது 10
வைரவர் திருமால் மார்பில் நகத்தாற் குத்தியது 10
விநாயகர் கையில் மோதகம் 11
அபரசிவம் நந்திபகவான் 13
அகத்தியர் திருமால் படிவததைச் சிவலிங்கமாக்கியது 14
ஞானசம்பந்தர் அனைவர்க்கும் வீடுபேறருளியது 15
அப்பர் பதிகம்பாடிக் கீர்த்தி பெற்றது 16
திருமால் கண்ணிடந்தப்பியது 16
இராமன் சரயூநதியில் உயிர்விட்டது 17
சுந்தரர் வெள்ளானைமேல் ஏறிக் கயிலை சென்றது 17
மாணிக்கவாசகர் புத்தரை வாதில் வென்றது 18
திருமால் திரிபுராரிகளை மாற்றியது 18
இந்திரன் வலனை வென்றது 19
சண்டேசுரர் பசுமேய்த்தது 19
இந்திரன் காமதேனுவுக்காகக் கலகம் செய்தது 19
அறுபத்து மூவர் 20
சோமாசி மாறர் 21
சேக்கிழார் 23
மெய்கண்டார் முதலிய சந்தாஞ்சாரியர்கள் 27
சிவபெருமான் யட்சனாக வந்து துரும்பை நட்டுத் தேவர்கட்கு உண்மை உணர்த்தியது 30
மூர்த்தி நாயனார் வரலாறு 32

ஞானசம்பந்தர் மூன்றுமாண்டிற் பதிகம் பாடியது 33
அகத்தியர் கடல் குடித்தது 34, 208
திருமால் மண்ணுண்டது 34
மாலும் பிரமனும் அடி முடி தேடியது 36
முருகன் வள்ளியை மணந்தது 57
சிவன் மலைமகளை மணந்தது 57
சிவபெருமான் யானையை யுரித்தது 58
வேட வடிவம் எடுத்தது 59
விநாயகர் கஜமுகாசுரனைக் கொன்றது 58
தாரகாசுரனை முருகன் கொன்றது 58
முருகன் ஆதிவராகக் கொம்பை ஒடித்தது 59
திருமால் கண்வமுனிவர் சாபத்தால் பெண் மாறுனது 72
ஞானசம்பந்தர் வைகையில் ஏடு விட்டது 90
அப்பூதியடிகள் அன்பு 92
கலிக்காமர்-நம்பியாரூரர் நட்பு 93
முல்லைக்கொடி தொண்டைமானது யானையைத் தடுத்தது 110
இந்திரன் செல்வம் கடலில் மறைந்துபோம் வண்ணம் துர்வாசர் சாபம் தந்தது 112
அரியர்த்தர் 135
திருநாவுக்கரசர் 136
அதிபத்த நாயனர் வரலாறு 126
கண்ணப்பர்-காளத்தியார் வரலாறு 222
இளையான்குடிமாறனர் வரலாறு 722
கடல் சுவற வேல்விட்டது 208
திருமால் திரிவிக்கிரமாவதாரம் எடுத்தது 259
தியாகேசர் நீசவுருத் தாங்கியது 154.

இவ்வரலாறுகளும், பிறவரலாறுகளும் பயின்று வந்துள்ளன.

சிவபூசை: பிள்ளையவர்கள் இயற்றிய புராணம் அனைத்தினும் சைவ மரபுகளும், சமயாசார சீலங்களும், சிவபூசை விதியும், தோத்திரங்களும் விளங்காமலிரா. அங்ஙனமே இப் புராணத்தும் சிவபூசை ஆன்மார்த்தம் எனவும் பரார்த்தம் எனவும் இருவகைப்படும் என்றும், பூசை விதி முறைப்படிச் செய்யச் சமய விசேட நிர்வாண தீட்சைகளும் ஆசாரிய அபிடேகமும் இன்றியமையாதன என்றும், திருநகரப் படலத்தில் தெரிவிக்கிறுர்கள் (240). பூசை இரண்டனுள் ஆன்மார்த்தம் அனைவருக்கும் பொதுவாய் உரியதெனவும், பரார்த்தம் ஆதிசைவருக்கே உரியதெனவும் மரபும் விளக்கப்பெற்றுள்ளது.

செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானு மரனெனத் தொழுமே

என்னும் சித்தாந்தச் செம்பொருள் 235-ம் பாடலில் நன்கு விளக்கப் பெற்றுள்ளது.

சைவ மடங்களைப்பற்றிக் குறிக்கும்போது தாபதர்கள் பொதுவும் சிறப்புமாகிய வேத ஆகமங்களை நன்கு கற்றுப் பதி பசு பாசங்களின் பொதுவும் சிறப்புமாகிய இலக்கணங்களை நன்கு ஆராய்ந்து தெளிந்து அத்துவித பாவனையிற் பொருந்திப் பேரின்பத்தில் திளைக்கின்றார்கள் என்று கூறப்பட்டுள்ளது. மாணுக்கரின் பரிபாக விசேடங்களைக் காலத்தாலும் கனவாலும் தெளிந்து சமயம் முதலான தீட்சைகளைச் செய்து சரியையாதி நான்கு உபாயங்களிலும் பழக்கி, ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி என்னும் ஐவகைப் பாசங்களையும் அறுத்து அவர்களுக்கு வீடு பேறு அளிக்கின்றார்கள் என்னும் சைவாசாரமும் முறையே அறிவிக்கப்படுகின்றன.

பிரமபுரிப்படலத்து, பிரமன் சிவபெருமானைப் பூசித்த முறைமை 47 முதல் மூன்று பாடல்களால் அறிவிக்கப்டுகின்றது. வைரவப் படலத்து இந்திரனியற்றிய பூசையும், விமலன் முத்தியடைந்த படலத்து, தை விஷு புண்ணிய காலத்தில் விமலன் பூசித்த செயலும், காமன் அருச்சனைப் படலத்து மன்மதன் பூசித்த முறையும் அழகுற அறிவிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பூசை இறுதியிலும் அன்பு சொட்டும் அருங் கவிதைகள் தோத்திர வடிவாகத் தோற்றமளிக்கின்றன. ஸஹஸ்ர சீர்ஷ : புருஷோ ருத்ர: முதலான வேத மந்திரங்கள் 482, 483 பாடல்களால் அறிவிக்கப்படுகின்றன.

இறைவனுடைய வேண்டுவார் வேண்டுவதே ஈயும் தன்மை, ''எண்ணிய எண்ணியாங்கு முடித்தருள் இறைவ'' என்பது முதலான பகுதிகளால் விளக்கப்படுகின்றன.

'அங்கையாமலகம்' (147) 'யானைமுதல் எறும்பீறாக' (167) 'பழங்களைத் தேனில் ஊறவைத்துண்ணல்' (161) 'மறைமொழியிற் குருமொழியே சிறந்தது' (551) 'ஒன்றிடைப் பிரியம் உறின் அது சார்ந்ததுவும் பேணும்' (69) 'மொய்பகை எளியதென்று முன்னுபு விடுவார் உண்டோ' (113) 'இல்லறத் தமர்ந்தும் அரிதுயரஞ் சற்றேனும் அமையாத அறிவினர்' (123) 'விழுப்பொருளை அகத்தடக்கிப் பருப்பொருளை வெளிப்படுத்தல்' (125) 'திருப்பெரிது படைத்தவரும் தீக்குணம் உண்டேல் ஒழியார் ; திருப்பெரிதில்லாதவரும் நற்குணம் உண்டேல் சிதையார்' (127) 'கிளியைக் கூண்டில் வைத்து வளர்த்தல்' (190) 'வணிகர் மொழி சுருக்கியே யுரைத்தல்' (237) முதலான வழக்குகளும், பழமொழிகளும், நீதிகளும் பல உரைக்கப் பெறுகின்றன.

சாந்திராயணம், கிருச்சரம், தத்த கிருச்சர முதலான விரத வகைகளும், (349) வானப்பிரத்தராய் நோன்பு செய்வாரியல்பும் (350) விளக்கப் பெறுகின்றன.

யோகியர், இடகலை பிங்கலை சுழிமுனை என வழங்கும் மூவகை நாடிகளில் இடகலை பிங்கலையாகிய இரு நாடிகளையும் அடைத்து நடுநாடியாகிய சுழிமுனையைத் திறக்கப்பண்ணிப் புருவமத்தியில் குண்டலினியைக் கொண்டு சேர்ப்பர் என்ற யோகமுறை 114-ஆம் பாடலிற் கூறப்பெற்றுள்ளது.

இங்ஙனம் பலவகையானும் அரும் பெருங் கருத்துக்களை வேத சிவாகம மரபு வழுவா வண்ணம் எடுத்துக் காட்டிப் பத்திச் சுவை புகட்டும் அன்பர்களின் வரலாற்றை நடத்திச் செல்லும் அம்பர்ப் புராணம் இதுவரை ஏட்டிலே புதைந்து கிடந்தது. பிள்ளையவர்கள் புகழை உலகிற்கு உணர்த்துவதற்கென்றே தோன்றியருளிய மகாமகோபாத்யாய ஐயரவர்கள் இதுவரை வெளிவராத இப் புராண ஏட்டையும் பெற்றுப் போற்றிவைத்திருந்தார்கள்; பிள்ளையவர்கள் நூலை ஒவ்வொன்றாக நல்ல முறையில் பொது மக்கள் உணரும் வகை செய்யவேண்டும் என்ற திருவுள்ளக் குறிப்போடு அனைத்தையும் அவர்கள் தொகுத்தும் வைத்திருந்தார்கள்; வெளியிட்டும் வந்தார்கள். அவர்களுக்குப் பின், அவர்கள் அருமைத் திருக்குமாரர் ஸ்ரீ கல்யாண சுந்தர ஐயர் அவர்கள் தம் தந்தையார் தொகுத்து வைத்த ஞானக் கருவூலத்தைக் கலாக்ஷேத்திரத்தின் அதிபராகிய ஸ்ரீமதி ருக்மிணி தேவியாரிடம் ஒப்படைத்துத் தாமும் உடனிருந்து பதிப்புப் பணியை நடத்தி வந்தார்கள். அதுவே, இப்பொழுது ஸ்ரீ ஐயர் அவர்களின் பெயரைக் கொண்ட ஒரு நூல் நிலையமாக விளங்கி வருகிறது. ஐயரவர்களின் பேரராகிய ஸ்ரீ க. சுப்பிரமணிய ஐயரவர்களும் தம் தந்தையாரின் அடிச்சுவட்டைப்பற்றி நூல் நிலையத்தின் வளர்ச்சிக்கு இன்றும் மிகவும் உதவி வருதல் போற்றுதற்குரியது.

நூல்நிலையத்தின் அத்யட்சர் ஸ்ரீமதி ருக்மிணியம்மையார் அவர்கள் மகாமகோபாத்யாய ஐயரவர்களிடம் பெருமதிப்பும் அன்பும் உடையவர்கள். பரம கலா ரசிகர். நுண் கலைகளுக்கு உயிர்கொடுத்துக் காப்பாற்றும் உயர்ந்த குணம் படைத்தவர்கள். ஆதலால் அவர்கள் எத்தனையோ சிரமங்களுக்கிடையில் ஐயரவர்கள் நூல் நிலையத்தையும் பாதுகாத்து, கம்பராமாயணம், சூளாமணி, திருவாசக வியாக்கியானம் போன்ற பல அரிய நூல்களை வெளியிடுவித்து உதவி வருகின்றார்கள்.

இத்தகைய ஞானத் தொண்டுக்கு, ஸ்ரீ ஐயரவர்களுடைய அருளுக்குரியவர்களும், ஸ்ரீ கல்யாண சுந்தர ஐயர் அவர்களைக் குருபுத்திர சிகாமணி என்ற முறையில் கடவுளாகவே எண்ணிப் போற்றி வந்தவர்களும், செந்தமிழ் மொழியில் சீரிய தேர்ச்சியும் நுண்ணறிவும் ஆராய்ச்சி வன்மையும் படைத்தவர்களும், ஐயரவர்களுக்குப் பின் அவர்கள் அலங்கரித்த பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பீடத்தில் இருந்து ஓய்வு பெற்றவர்களும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதியவர்களால் அண்மையில்

கலாநிதி விலாஸமணி என்ற பட்டம் அளித்துப் பாராட்டப் பெற்றவர் களும் ஆகிய உயர்திரு R. விசுவநாத ஐயர் அவர்கள் தக்க காரியதரிசி யாக அமைந்தார்கள். இவர்கள் இருவருடைய பெருமுயற்சியாலே இந்த அருமையான புராணம் இந்நூல் நிலைய வெளியீடாக, சீரிய அழகிய முறையில், குறிப்புரை, வசனம் முதலியவற்றுடன் இன்று வெளிவருகின்றது.

பழமை போற்றும் பண்புடையவரும், ஆலய நிர்வாகம் அன்பு நெறியை வளர்க்கும் ஆகம புராண வளர்ச்சியில்தான் இருக்கிறது என்பதை எண்ணி, ஆகம பிரசாரம், புராண பிரசாரம், ஆகம வெளியீடு இவைகளைச் செய்தும் செய்வித்தும் சமயத்தைப் பாதுகாக்கின்ற அறநிலையக் காவலருமான உயர்திரு மா. சே. சாரங்கபாணி முதலியார் அவர்கள் அனுமதியுடன் திருவம்பர்ப் பிரமபுரீசர் தேவஸ்தானத்தார் அன்போடளித்த பொருளுதவியே இவ் வெளியீட்டுக்குப் பேராதரவாக அமைந்தது.

இந்தப் பேருபகாரத்தைத் தமிழுலகம் என்றும் மறக்க முடியாது. இதிற் பங்கு கொண்ட பெருமக்கள் அனைவரையும் ஸ்ரீ வம்புவனப் பூங் குழலாள் சமேத பிரமபுரேசப் பெருமான் என்றும் இன்பமளித்துக் காப்பாராக.

திருமந்திரம்,<br>மாயூரம்<br>1—12—65.

இங்ஙனம்,

ச. தண்டபாணி தேசிகர்.

௨

# தேவாரப் பதிகம்

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

பண் : காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

1. எரிதர அனல்கையில் ஏந்தி யெல்லியில்
நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே.

2. மையகண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல ஆடுவர்
ஐயநன் பொருபுனல் அம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே.

3. மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர வாடுவர்
அறைபுன னிறைவயல் அம்பர் மாநகர்
இறைபுனை எழில்வள ரிடம தென்பரே.

4. இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவர்
அரவமோ டுயர்செம்மல் அம்பர்க் கொம்பலர்
மரவமல் கெழிநகர் மருவி வாழ்வரே.

5. சங்கணி குழையினர் சாமம் பாடுவார்
வெங்கனல் கனறர வீசி யாடுவர்
அங்கணி விழவமர் அம்பர் மாநகர்ச்
செங்கண லிறைசெய்த கோயில் சேர்வரே.

6. கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்
சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவர்
அழல்வளர் மறையவர் அம்பர்ப் பைம்பொழில்
நிழல்வளர் நெடுநக ரிடம தென்பரே.

7. இகலுறு சுடரெரி யிலங்க வீசியே
பகலிடம் பலிகொளப் பாடி யாடுவர்
அகலிட மலிபுகழ் அம்பர் வம்பவிழ்
புகலிட நெடுநகர் புகுவர் போலுமே.

8. எரியன மணிமுடி யிலங்கைக் கோன்றன
கரியன தடக்கைக ளடர்த்த காலினர்
அரியவர் வளநகர் அம்பர் இன்பொடு
புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே.

9. வெறிகிளர் மலர்மிசை யவனும் வெந்தொழில்
பொறிகிளர் அரவணைப் புல்கு செல்வனும்
அறிகில வரியவர் அம்பர்ச் செம்பியர்
செறிகழ லிறைசெய்த கோயில் சேர்வரே.

10. வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுனல் அம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துள ருமையுந் தாமுமே.

11. அழகரை யடிகளை அம்பர் மேவிய
நிழல்திகழ் சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினில் ஓதுவீர் கொண்மின்
தமிழ்கெழு விரகினன் தமிழ்செய் மாலையே.

திருச்சிற்றம்பலம்.

உ

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 23 | 34 | யாகந்திலே | யாகத்திலே |
| 78 | 10 | ளங்கலத் | ளங்கலந் |
| 85 | 30 | ஊமானைத் | ஊமனைத் |
| 90 | 7 | 5 | 355 |
| 95 | 31 | பரமனிடத்து | பிரமனிடத்து |
| 100 | 11 | 899 | 399 |
| 103 | 2 | வருணனே | வருணனை |
| 142 | 14 | மரர்பிற் | மார்பிற் |
| 150 | 23 | தமர்வர் | தமர்வர |
| 158 | 27 | என்றும் | என்னும் |

19 29-30ல் 'சூரபதுமன் கொண்ட வடிவங்களுள் யானையு முண்டாதலால்' என்பதனை, 'சூரபதுமன் தம்பியான தாரகன் யானை முகமுடையவன்; அவனைக் கொன்றதனால்' என மாற்றிக் கொள்க.

109 கடைசி வரியை முன்னே 448-ஆம் பாட்டுக்குறிப்பின் இறுதியில் சேர்த்துக் கொள்க.

உ

சிவமயம்

# திரு அம்பர்ப் புராண வசனம்

---

## புராண வரலாற்றுப் படலம்

நைமிசாரணிய வாசிகளும், விபூதி ருத்திராட்சம் முதலிய சிவ சின்னங்களிலும் பஞ்சாட்சரத்திலும் மிக்க பற்றுடையவர்களும், சிவ பக்திச் செல்வம் நிறைந்தவர்களும், தவ விரத அநுட்டானங்களில் சிறிதும் தாழ்வில்லாதவர்களுமான முனிவர்கள், ஒரு சமயம், சிவதலங்களுள் மிகச் சிறந்ததான ஒரு தலத்தின் பெருமைகளைக் கேட்டறிய விரும்பித் தமக்குள் ஆலோசித்தபோது, அவர்களுள் ஒருவரான சவுனக முனிவர், மிகவும் பெருமை வாய்ந்து எல்லாமறிந்தவரான சூதமா முனிவரிடம் இதைக் கேட்கலாம என்று கூற, எல்லோரும் அதற்கிணங்கியிருக்கையில், இவர்கள் எண்ணத்தை உணர்ந்தவர் போலச் சூதமா முனிவர் அவ்விடத்திற்கு எழுந்தருளினர். அவரைக் கண்ட முனிவர்களெல்லோரும் மகிழ்ச்சி மிக்கு எழுந்து எதிர் சென்று அவரை வரவேற்று, உபசாரங்களில் ஒன்றும் குறைவின்றிச் செய்து, 'முனிவர் ஏறே ! தங்கள் வரவினால் நாங்கள் பெரும் பேறு பெற்றவர்களானோம்; எங்கள் விண்ணப்பந்தைச் சிறிது ஏற்று எங்களுக்கு அருள் செய்ய வேண்டும்' என்று வேண்டிக்கொண்டனர். அவருள், சவுனக முனிவர் எழுந்து கைகூப்பி, "பெரும ! சைவத் தொண்டுகள் பலவற்றுள்ளும், பெருமை மிக்க சிவதல புராணத்தைக் கேட்டல் சிறந்ததென்று நாங்கள் கருதி, தலங்கள் பலவற்றுள்ளும் மிக்க சிறப்புடைய தலம் எது என்பதையும் அதன் பெருமைகளையும் தங்கள் வாயிலாகக் கேட்டறிய விரும்புகின்றோம்; அரிபிரமாதியர் வழிபடுதற்கு உரியதும், பல பிறப்புக்களிலும் செய்த பாவங்களையெல்லாம் போக்க வல்லதும், தீரா வறுமையையும் போக்கி இந்திராதி போகங்களை அளிக்க வல்லதுமான தலம் எது? சாதி சமய வொழுக்கங்களில் வழுவுதலால் வரும் பாவங்களைத் தகர்க்கவல்ல தலம் எது ? நனவு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் உண்டாகிற பல பாவங்களை அழிக்க வல்ல தலம் எது ? கலிதோஷத்தைப் போக்கவல்லதும், பிரமகத்தி முதலிய கொடிய பாதகங்களையும் தீர்க்க வல்லதும், மன மொழி மெய்களால்

அடையத்தக்க நற்பயன்களையும், எல்லாவற்றிற்கும் மேலாக முத்தியையும் அளிக்கவல்லதுமான தலம் எது? நம்மை விட்டு நீங்காத பலவகைப் பாவங்களை, நெருப்பானது துரும்பை அழிப்பது போலவும், சூரியன் இருளை யழிப்பது போலும், சிங்கம் யானைகளை யழிப்பது போலும் எளிதிலும் விரைவிலும் மாய்க்கவல்லது எத்தலம்? அத்தலத்தின் பெயரைச் சொன்ன மாத்திரத்திலே மேலான புண்ணியப்பயனை அடைய வேண்டும்; அதனைச் சார்ந்தவர் யார்க்கும் எல்லாச் செல்வங்களும் எய்துதல் வேண்டும்; இத்தகைய பெருமைகளெல்லாம் ஒருங்கே யுடையதாய், தன்னைத் தரிசித்தவர்க்கு மறுமைக்குரிய சிவஞான முதலிய எல்லாப் பேறுகளையும் கொடுக்கவல்லதுமானதொரு தலத்தைத் தேர்ந்து எங்களுக்குக் கூறியருள்க' என்று கூறி முடித்து அமர்ந்தார்.

இதனைக்கேட்ட சூதமா முனிவர், மகிழ்ச்சியடைந்து, ஒரு முகூர்த்த காலம் தம் மனத்திலே நன்கு சிந்தித்து, எல்லாப் பெருமையும் அமைந்ததொரு தலத்தைத் தேர்ந்து, கைகூப்பி, இன்பக் கண்ணீர் பெருக, அம்முனிவர்களை நோக்கி, 'உத்தமர்களான நீங்களெல்லோரும் என்னை ஒரு பொருளாக மதித்துக் கேட்கலுற்றீர்கள்; அதனை மறுக்க முடியாதவனாகி, நானும் நன்கு ஆலோசித்து மிகச் சிறந்ததொரு தலத்தைத் தேர்ந்தேன்; ஆணிமுத்துப்போன்ற அத்தலத்தின் பெயர் பிரமபுரி என்று வேத சாத்திரங்களிற் கூறப்படுவதாகும்; அதன் மகிமைகளை யெல்லாம், காந்த உப புராணத்துள், அகத்திய சங்கிதை விரித்துரைக்கின்றது; அதன்படி கூறுகின்றேன்; கேட்பீர்களாக' என்று சொல்லி உரைக்கலானார்.

## தல முதலிய விசேடப் படலம்

கீழ் கடலுக்கு மேற்கே இரண்டு யோசனை தூரத்திலும், தேவர்கள் வந்து தொழும் திருவாரூருக்கு வடக்கே ஒரு யோசனையிலும், திருமால் தம்முடைய கண்மலரைச் சாத்திப் பேறு பெற்ற திருவீழி மிழலைக்குக் கிழக்கே அரை யோசனையிலும், மாயூரத்திற்குத் தெற்கே ஒருயோசனையிலும் அமைந்து விளங்குவது நாம் கூறிய அத்தலம். அது, பக்தி கொண்டு வழிபடுவோர்க்கு, இம்மை மறுமைப் பயன்களையும், வேண்டிய சித்திகளையும், முத்தியையும் தரவல்லது. அதன் பெருமைகளை முழுதும் அறிந்து கூறுதல் சிவபெருமானையன்றி மற்றவரால் ஆகாது. இம்மையில் அனைவரும் விரும்பும் பொருள், பூமி, சந்தானம் முதலியவற்றையும், ஞானத்தையும், மற்றும் வேண்டுவார் வேண்டிய யாவற்றையும் அது அளிக்கும். தருக்களுள் கற்பகத்தைப் போலவும், பசுக்களுள் காமதேனுவைப்போலவும், மணிகளுள்ளே சிந்தாமணியைப் போலவும், ஒளிகளுக்குள்ளே சூரியனைப் போலவும் அட்சரங்களுள் அகரம் போலவும் தலங்களுக்குள்ளே முதன்மை பெற்றது அத்தலம்.

'பிரமபுரி' எனப்படும் அத்தலத்தில் வசிப்பவர் பெருமையை அளவிட்டுரைத்தல் எவராலும் ஆகாது. அங்கே ஒருநாள் தங்கினும், வாணிகம் முதலிய பயன் கருதியோ, வேறெவ்வகையிலோ அத்தலத்திற் சென்று சிறிது தங்கினும், அவ்வாறு தங்குபவர் தேவர்களுங் கண்டு பொறாமை கொள்ளத்தக்க பெரும் போக மனுபவிக்கப் பெறுவர். ஆனந்தவனம் எனப்படும் காசியிலே ஆயுள் முழுதும் வசித்தவர் அடையும் பேற்றை, அப்பிரமபுரியில் ஒருநாள் தங்குதலால் அடையலாகும். காசியில் ஆயிரம் அந்தணர்க்கு அன்னமளித்தலால் வரும் பயனை, இத்தலத்தில் ஒருவர்க்கு ஒரு பிடி சோறு அளித்தலால் அடையலாம். இத்தலத்தில் ஒருவர் செய்யும் அணுவளவு தருமமும் மேருவைப் போலாகும். பிறதலங்களில் பயன் கருதிக் கடுந்தவம் செய்பவர், இத்தலத்தில் வந்து உடம்பு நோவாமல் உண்டு பிரமபுரீசரை வழிபட்டு வாழ்ந்தாற் போதும்; கருதிய பயன் கைகூடும். உயர்ந்தோர்—தாழ்ந்தோர்; அறிவுடையோர்—அறிவிலார்; மகளிர், சிறுவர், வயோதிகர் மற்றும் யாவராயினும், கழுதை நாய் முதலிய இழிபிறப் புயிர்களாயினும்,—அப்பிரமபுரியில் வசித்தலால் சிவலோக பதவியைப் பெறுதல் திண்ணம்.

அத்தலத்துக்கு, வேறு வேறு காரணங்களால்வந்த பிரமபுரி, அம்பரபுரம், மாகாளிபுரம், மாகாளபுரம், புன்னைகவனம், சண்பகாரணியம், நந்தராசபுரம், மாறபுரி முதலான பல பெயர்களுண்டு. அத்தலத்தின் தென்புறமாக, அரிசில் என்ற பெயருடைய புண்ணிய நதியொன்று ஓடுகின்றது; அதுவும் காவேரியே; காவேரி, பொதுவாகத் தன்னில் முழுகினவர்க்குப் பெரும் புண்ணியந் தரவல்லதாயினும், அது செல்லுமிடத்தின் சார்பால் மேலும் சிறப்புடையதாகிறது. எனவே, பிரமபுரியைச் சார்ந்து ஓடும் அவ்வரிசி லென்னுங் காவிரியைக் கண்டாலும், அதன் நீரை யுண்டாலும், அதில் முழுகினும், அடையும் பயன் அளவிடற்கரிது. பிரமபுரீசர் சந்நிதிக்குக் கிழக்கே அன்னமாம் பொய்கையென்ற பெயருடைய தொரு புனித தீர்த்தம் உளது. விரத, நியமங்கள் ஒன்றும் இல்லாதவரும் அத்தீர்த்தத்தில் ஒரு முறை நீராடினல் சீவன் முத்தராவரெனின், பலகாலம் அதில் நீராடுவோர் எய்தும் பயன் சொல்லுதற் கெளிதோ! பலதலங்களினின்றும் அங்கு வந்து அப்பொய்கையில் நீராடி முத்தி பெற்றோர் பெயர்கள் மொழியில் அடங்கா. எத்தகைய பாவச் சேற்றையும் எளிதிற் கழுவிப் போக்கவல்லது அத் தீர்த்த மென்பது வேதத்தின் துணிபு. மந்திரத்துடன் சங்கற்பஞ் செய்துகொண்டு முறைப்படி அத்தீர்த்தத்தில் முழுகி, விபூதி ருத்திராட்சம் தரித்து, பஞ்சாட்சர ஜபத்துடன் பிரமபுரீசர் சந்நிதியடைந்து, உள்ளன்புடன் அவரைப் பலவாறு துதிப்பவர் பெறும் பேற்றை, தேவர்களும் சொல்லி முடித்தல் அரிதாம். இனி, அத்தலத்தில் பிரமன் வந்து பூசித்ததற்குரிய காரணத்தை யெடுத்துச் சொல்வோம்:

## பிரமன் சாபம் பெற்ற படலம்

முதல் யுகத்தில் ஒருகால் தேவர்கள் கூடி, இமயமலைச் சிகரத்தி லுள்ள மணிமண்டபத்தில் எழுந்தருளியிருந்த பிரமன் சந்நிதியை அடைந்து வணங்கித் துதித்து, தங்களுக்குள்ள ஓர் ஆசங்கையைக் குறித்து அவனிடம் வினவலாயினர்.

'பெருமானே! எல்லா நூல்களுக்கும் முதல் பிரமாணமானது வேதம்; அவ்வேதம், அங்கங்கே, 'பிரமம்' என்று பலரைக் குறிக்கின்றது' அதற்குரியவர் பலர் ஆதல் பொருந்துமோ? ஆதலால் அஃது உண்மை யாகவே பிரமம் என்றது யாரை? உபசாரமாகக் கூறியது யாரை? படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலை முறையே இயற்று வோர் நீவிர் மூவர். இம்மூவருள்ளும், கண்ணுதற் பெருமானுக்கே பல பல காரணம் பற்றிப் பல பல பெயர்கள் கூறப்படுகின்றன; 'பரமேசன்' என்பது போன்ற அளவிறந்த பெயர்கள் அப்பெரு மானுக்கே உள; ஆதலால் 'பரம்பொருள் அப்பெருமானேயோ, அன்றி வேருே? இதனை எங்களுக்குத் தெளிவுபட எடுத்துரைத்தல் வேண்டும்' என்றனர்.

இதுகேட்டு, அத்தருணம் இராசத குணம் மேலிட்டிருந்த பிரமன், மனத்தெளிவின்றி, தேவர்களை நோக்கி, 'நீங்கள் கேட்ட பரம்பொருள் அராவணிந்தவனு மல்லன்; அராவணையானு மல்லன்: நானே அப்பரம் பொருள் என்பதை ஆசங்கையின்றி மனத்துட் கொள்ளுங்கள். படைத்தல் முதலிய முத்தொழிலும் இயற்றுவோன் யானே; மற்றிருவரும் எனதமிசமாக என்னாலே தோற்றுவிக்கப்பட்டவரே யாவர். 'சுயம்பு' என்னும் நாமம் எனக்கே பொருந்துவது; பிறருக்கும் உளதாயின், அது முகமனே. 'பிரபு' நானே; மற்றிருவரும் என்னை உபாசித்துப் பெருமையடைவர் என்பதை அறிந்து தெளிவீர்களாக' என்றான்.

'இவ்வாறு பிரமன் செருக்கிஞற் கூறியவற்றைக் கேட்ட தேவர்கள், இஃதுண்மைதானே' என்று ஐயமுற்று, அம்மலையிலேயே மற்றொருபால் திகழும் திருமாலை யடைந்து பணிந்தனர். திருமால் அவர்களை நோக்கி, 'நீங்கள் வந்த காரியம் என்ன?' என்று கேட்க, அவர்கள் கூறினர்:

'எம்பெருமானே! நாங்கள் முதலில் பிரமதேவரிடம் சென்று 'பிரமம் யார்' என்பதை எங்களுக்குத் தெளிவுறுத்தும்படி கேட்டோம்; அவர், 'நானே பிரமம்; மற்றெவருமிலர்' என்றார். அதைக் கேட்டுக் கொண்டு, எங்கள் ஐயம் தீராததால் இங்கு வந்தோம்; இஃதுண்மை தானே? உரைத்தருள வேண்டும்' என்றனர். அப்போது தாமதகுணம் மேலிட்ட திருமால் அது கேட்டு, 'பிரமனும் உருத்திரனும் பிரமமாவ

தெப்படி? எனது உந்தித்தாமரையில் உதித்ததனால் 'கமலயோனி' என்று பெயர்பெற்று, என்மகனாக விளங்கும் பிரமனா பிரமம்? அவனுமல்லன்; உருத்திரனுமல்லன்; யானே பிரமம்' என்றுகூறி, அப்பிரமன் இப்பொழுது இங்கு வருக என்று நினைக்க, பிரமனும் உடனே அங்குவந்து, திருமாலுக்கு வணக்கமாக ஒரு வார்த்தையும் கூறாது இறுமாப்புடன் எதிரே அமர்ந்தான். அதுகண்ட திருமால் அப்பிரமனை நோக்கி, 'நீ என் மகனாகவும், என்னை வணங்குதலுமின்றி, என்னை மதியாதவன் போல் இறுமாப்புடன் எதிரே அமர்ந்திருக்கின்றாய்; இத்தகைய அறிவை எங்கே பெற்றாய்?' எனப் பிரமன், 'நானே யாவரையும், எல்லாவற்றையும் படைப்பவன்; ஆதலால், என் படைப்புக்குட்பட்ட நீதான் என்மகன்; நீயே என்னை வணங்குதல் வேண்டும்' என்றான்.

அன்ன வாகனன் இவ்வாறு அறையக் கேட்ட பன்னகப் பாயலான், 'பரம்பொருளாகிய என்முன், என் மகனாகிய நீ இவ்வாறு கூறுவது என்ன மதியீனம்! இது வெறுக்கத்தக்கதாகும்' எனக் கடிதலும், அது பொறாது, பிரமன், 'என்னைப் பெற்ற தந்தை யென்று சொல்லிக்கொள்ளும் உன் பெருமைக்குச் சான்று, முன்னே உன்னைப் படைத்த தம்பமாகும்; அத்தம்பத்துக்குரிய பெருமைதான் உனக்கும் உண்டு என்று கூறிட, மாயவன் கடுஞ்சினங்கொண்டு, 'அடா நீசா! யாது கூறினை?' என்று கூறிக்கொண்டே எழுந்தான். மலரவனும் உடனே மாறுபட்டெழுந்து, 'உன்சினங்கண்டு நான் அஞ்சி அடங்கிவிடுவேனென்று கருதினையோ; இதோபார்!' என்று மாயோனை அணுகித் தன் வலக்கையால் அவனிடது கன்னத்தில் ஓங்கி அறைந்தான். திருமால் வியப்பெய்தி, 'இதுவரை வாய்ப்போர் செய்த இவன் சிறிதும் ஆலோசனையின்றிக் கைப்போரும் தொடங்கிவிட்டானே! மூடன்!' என்று, தானும் அவனொரு கன்னம் தகரும்படி அதிரப் புடைத்தான். உடனே மலரவன் தன் கையில் தண்டை யெடுத்துக்கொள்ள, மாயவனும் தன்கைத் தண்டோடு கனன்று நிற்க, பெருங் கலகத்துடன் இருவருக்கும் கடும்போர் மூண்டது. சிறிதும் சலிப்பின்றி இருவரும் மாறிமாறி ஒருவரை யொருவர் புடைத்துக்கொண்டும், சுழன்றும், காண்பவர் அஞ்சும் வகையில அமராற்றுதலும், மக்கள், தேவர், தானவர் முதலிய யாவரும் பேரச்சங் கொண்டனர். அவ்வாறனபோது திருமால், 'இப்படிப் போர் நீட்டித்தால், மிகப் பல நாட்களாயினும் நம்மை விலக்குவார் எவரு மிரார்; தேவர்களின் ஐயமும் தீர வகையில்லை; ஆதலால், வேதங்கள், காயத்திரி முதலிய மந்திரங்கள் ஆதியவற்றை இங்கு வருவித்துக் கேட்டால், பிரமம் யார் என்பதை அவை தெளிவுறக் கூறும். அதனால், பிரமனும் உண்மையை உணர்வான் எனக் கருதி, வேதங்கள், காயத்திரி பிரணவமந்திரம் ஆகியவை இங்கு வரக்கடவன என்று தன் திருவுள்ளத்திலே நினைத்தான்; நினைத்தலும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களும், காயத்திரிதேவதையும், பிரணவ மந்திர

தேவதையும் அங்கு வந்தெய்த, மாயோன் அவற்றை யெல்லாம் நோக்கி, இங்குக் கூடிய தேவர்கள் தெரியும் வண்ணம், மும்மூர்த்தி களுள்ளே 'பிரமம்' யார் என்பதை உண்மையாகக் கூறுங்கள் என்ருன். திருகலான இச்சொல்லைக் கேட்டு, அவற்றுள் ஒவ்வொன்றும் இதைக் குறித்து ஆலோசித்துத் தனித்தனியே பின்வருமாறு கூறலாயின :

'பூதங்களெல்லாம் எவனிடமிருந்து முதலில் தோன்றுமோ, அவ்வாறு தோன்றினவை மீண்டும் எவனிடம் ஒடுங்குமோ—அவன் 'மயேச்சுரன்' என்னும் பெயருக்குரிய பெருமான்; அவனே பிரமம் ஆவான்' என்று முதலில் இருக்குவேதம் இயம்பியது. அடுத்ததாக, யசுர்வேதம், 'எல்லா யாகங்களாலும், யோகர் ஞானியர் முதலியவர் களாலும் பூசிக்கப்படுதற்குரிய 'பிஞகபாணி' யாகிய பரமேசுவரனே பிரமமாவான்' என்றது. 'அண்டசக்கரம் எவனுடைய ஆற்றலால் எப்போதுஞ் சுழலுகின்றதோ! அணுவுக்கணுவாய் எங்கும் நிறைந்தவன் எவனே! அவன் யோகியர் உய்த்துணரும் பரமேசுவரன்; அவனையன்றிப் பிரமம் வேறில்லை என்றது சாமவேதம். 'ஐம்பொறி யடக்கும் அருந்தவத்தோர் அகக்கண்ணுல் நோக்குதற்குரியவனும், வேதத்தின் முதல்வனும், முத்தொழிலுக்கும் மூலகாரணனு மாகி, ருத்திரன், மகேசுவரன், எனப்படும் அவனே பிரமமாவான்; பிறரில்லை' என்று அதர்வணம் அறைந்தது. 'பரசிவத்தின் பல மூர்த்தங்களையும் எங்களில் ஒவ்வொருவரும் அவரவர் மூர்த்தியாகப் பாவிக்கின்ருேம்; அவையெல்லாம் பிரமமே' என்று காயத்திரிகள் பலவும் கழறின. பிரம்ம காயத்திரி என்னும் மந்திரம், 'ஐந்தொழிலுக்குங் காரணராய், ஒளிகளுக்கெல்லாம் பேரொளியாய், பரையோடு கலந்து விளங்கும் 'பர்க்கர்' என்னும் மூர்த்தியே பிரமம் என்று கூறிற்று. 'நாம, ரூப, குணங்களாலே குறிக்க முடியாதவனும், வாக்குக்கு அப்பாற்பட்டவனும், பரஞ்சோதியும், நிட்களனுமாயுள்ள முக்கட் செல்வனே பிரமம்; மற்றெவரும் ஆகார்' என்று பிரணவம் பேசிற்று.

வேதம் முதலிய எல்லாம் இவ்வண்ணம் எடுத்துரைக்கக் கேட்ட மலரவன், அகங்காரத்தினுலே, பொறுமை யிழந்து, வரம்பு கடந்து, 'மணஞ் செய்துகொண்டு மனைவியொடு கூடியுள்ளவனு பிரமமாவான்?' என்ருன். உடனே, பிரணவத்தின் அதிதெய்வம் ஓருருவங்கொண்டு அவர்கள் முன் தோன்றி, 'மழுவேந்திய பரசிவன், வேருன ஒரு பெண்ணுடன் கூடியில்லை; அவனுடைய ஆநந்தமாகிய சக்தியே அப் பெண்; இதனை யறிவீர்களாக' என்றது.

இங்ஙனம் அது கூறக்கேட்டும், முறை தவறிய அவ்விருவருக்கும் தங்கள் அகங்கார மயக்கம் அழிந்த பாடில்லை; ஆதலால் அவரவரே

'பிரமம்' என்று முன்போல மீண்டும் போர்க் கெழுந்தனர். ஈசனது மாயை வந்து மறைத்தால் அதனை விலக்குவார் யார்?

இவர்களுடைய நிலையைக் கண்ட தேவர்கள் மிகவும் கலக்கமடைந்து முறையிட்டனர். அப்போது, காளகண்டனாகிய பெருமான், அவ்விருவர் செருக்கையும் அடக்கக் கருதி, அவர்களுக்கெதிரில், முதலும் முடிவும் அளந்தறிய முடியாதவொரு சோதியா யெழுந்து தோன்றினன். பாதலத்தினின்றும் எழுந்து, பாரினை முழுதும் ஊடுருவி, அண்ட முகட்டையும் பிளந்து அப்பாற் சென்று விளங்கும் அச்சோதியைத் தேவரனைவரும் பெரு வியப்பொடுங் கண்டனர்; பூசலிடும் இருவரும் அச்சோதியை அளவற்ற காதலோடுங் கண்டதிசயித்தனர். இவ்வாறாகிய அச்சோதியின் ஒரு பக்கலில், காண்போர் கண்கள் கூசும்படியான பேரொளி கொண்டதாய், வளர்ச்சி—அழிதல் இல்லாததாய், மனங்கவரும் அழகியதொரு நிறமும் உடையதான இலிங்கமொன்று முளைத்துத் தோன்றியது.

'அதிசயத்தின்மேல் அதிசயமாகச் சோதியும் சோதி லிங்கமும் தோன்றியதைக் கண்டோம்; இன்னும் என்ன நேருமோ! காண்போம்' என்றெண்ணித் தேவர்கள் நிற்கும்போது, பிறை விளங்கும் பெருஞ் சடையும், முக்கண்ணும், மழு மான் முதலியன தாங்கிய நான்கு புயங்களும், புயங்கப் பூணும், புலித்தோலாடையும், திருநீறு பூசிய திருமேனியும், அதிலே தேவியின் பாதியுமாய்த் திகழ, அச்சோதியின் நடுவேயொரு திவ்யரூபம் தோன்றக் கண்டனர். அளவிலாத் தேசு வீசும் அந்தச் சிற்பர வடிவத்தைப் பார்த்து மனமாசகலா மாலும் அயனும் 'ஈதென்ன! சித்திரம்போல் ஏதோ தோன்றுகின்றதே! என்று நெடிது நினையும்போது, அற்புதக் கூத்தனாகிய ஐயன் குறுநகை பூத்துக் கூறுவான் :—

"'பிரமம் யான்', 'பிரமம் யான்' என்று பெருங்கலகம் விளைக்கும் பேதையீர்! இங்கு அணுகி வந்து, இச்சோதியின் அடியையும் முடியையும் கண்டறிவோர் உங்களில் யாரோ அவர் 'பிரமம்' என்பதற்கு ஐயமில்லை; இப்போதே அதனைத் தொடங்குக" என்றான்.

உடனே திருமால், 'நான் அடியைக் காண்பேன்' என்று சொல்லி, வராக வுருவங் கொண்டு, மண்ணைத் தோண்டிப் பாதலம் சென்று தெய்வ ஆண்டுகள் ஓராயிரமளவும் தேடித் திரிந்தும், பரமன் திருவடிகளிற் படிந்த சிறு துகளையும் பார்க்க வியலாமல் மனஞ் சலித்து மீண்டு வந்து, சோதியின் நடுவே திகழும் சுயம்புவைத் தொழுது, 'நீயே பரம்' என்று உற்றதுரைத்து நின்றான். அது கண்ட தேவரும் மகிழ்ந்தனர்; பிறைமுடிப் பெருமானும் திருவுள மகிழ்ந்து, மாயவன் முன் சொன்ன பிழையையும் மறந்தான்.

இது நிற்க, முடியை நான் காண்பேன் என்று முயன்றெழுந்த மலரவன் ஓர் அன்னத்தின் உருவங் கொண்டு மேல் நோக்கிப் பறந்து, முன் சொன்னஅத்தனை தேவவருடங்கள் தேடியும், அம் மூர்த்தியின் புயங்களைத் தானுங்கண்டறிய மாட்டாமல், சிறகுகள் வலியிழந்து மனங்கலங்கி மீளுகையில், 'திருமாலைப்போல் நாமும் ' காணவில்லை' யென்று உண்மை கூறின் அவமானமாகும் ; ஆதலால் ஒருபாயம் செய்வோம்' என்று கருதி, தாழம்பூவொன்றைச் சிருட்டித்து, 'நான் திருமுடியைக் கண்டதாக நீ எனக்குச் சான்று கூறு' என்று அதற்குப் போதித்துப் பெருமான் திருமுன் வந்து இறுமாப்புடன் நிற்க, தேவர்கள் நெருங்கி மொய்த்துக் கொண்டனர். அவர்களை நோக்கிப் பிரமன், 'தேவர்களே ! கேளுங்கள், இச் சோதியின் மேலே முடியை நான் கண்டேன் ; அதற்கு இத்தாழம்பூவும் சான்று பகரும் ; ஆதலால், ' பிரமம் ' நானே' எனலும், தேவர்கள் கலக்கமடைந்தனர். பிறைமுடிப் பெருமான், 'இவன் தானே பிரமம் என்றதோடன்றிப் பொய்யும் புகன்றான் ' என்று சினந்து, பிரமனை நோக்கி, ' நீ இவ்வன்ன வடிவத்தை நீக்க மாட்டாயாகுக ' எனவும், தாழம்பூவை நோக்கி, 'பொய் கூறியவனுக்காக நீயும் பொய் கூறியதனால் எனக்குச் சாத்துதற்கு ஆகாய் ' எனவும் சபித்தனன்.

## பிரமபுரிப் படலம்

சாபமொழி கேட்டலும் அயன் செருக்கொழிந்து சிந்தை கலங்கி, 'ஆகா!என்ன மதியீனம்!அகந்தை கொண்டு அடாதுபேசி, அதன் பயனையடைந்தோம். எம்பெருமான் இவ்வளவோடு விட்டது அவனருட் செயலே; அந்தோ! நம்முடைய திருநகரும், கோயிலும், நாம் வீற்றிருக்கும் பெருந்தவிசும் வறிதாக, கலைவாணியும், பரிசனங்களும், வாகனமும் மிக வருந்த, நாம் இவ்வாறு தாழ்வுற நேர்ந்ததே! இதற்கெல்லாம் காரணமாக, நம்மிடம் வந்து ஐயந் தீர்க்க வேண்டின தேவர்களை நோவதா ? அல்லது அப்போது வந்து முடிக்கொண்ட எனதறியாமையை நோவதா ? என் செய்வேன் ! என்று வருந்தி, பின்பு சற்றுத் தெளிந்து, இதற்குத தீர்வு எம்பெருமானு லன்றிப் பிறரால் ஆகாது ; எனவே அவனடி சேர்ந்து துதிப்பேன் ' என்று மனத்துட் கொண்டு, அவ்வாறே சென்று, பெருமானடியிலே விழுந்து, அகங் குழைந்து பணிந்தெழுந்து துதிக்கலுற்றான் :

'பரதத்துவ நாமா ! பராபரா ! தத்துவமசி முதலான பல வாக்கியங்களுக்கெல்லாம் வாச்சியமாக வுள்ள மூல காரணா ! சுயம் பிரகாசா ! தொழுவார் பவ நாசா ! சர்ப்பாபரணம் பூண்டு விளங்கும் சாந்த சொரூபா ! உனக்கு அஞ்சலி' என்பன போன்ற மிகப்பல தோத்திரங்கள் கூறித துதித்தும் இடையிடையே பணிந்தெழுந்தும் மனமுருகிய நான்

முகனுக்கு எம்பெருமான் இரங்கி, அவனை நோக்கி, 'பிழையை உணர்ந்து துதித்த உன் தோத்திரங்களால் மனமுவந்தோம்; நீயும் பிழையினின்றும் விடுபட்டாய்; உனக்கு வேண்டும் வரம் யாது? கூறுக; தருவோம்' என்றருளினன். அது கேட்டு, அன்ன வடிவாகிய நான்முகன் மனங்கசிந்து இறைவனைவேண்டலானான்:

'சத்தியொரு பாகத் தலைவ! அடியேன் நும் உண்மைப் பெருமையை உணராமல் செய்த பிழைகளைப் பொறுத்து, என்பால் என்றும் மாருத கருணை பாலித்தல் வேண்டும்; இப்போதடைந்தது போன்ற மதி மயக்கத்தை நான் எஞ்ஞான்றும் அடையாது கடைத்தேற அருளல் வேண்டும்' என்றிவ்வாறு வேண்டுதல் கேட்ட விமலன், 'பிரமம் நீயுமல்லை; மாயனுமல்லன்; நீ இப்போது வேண்டியவற்றைப் பெறுதற்குப் பூவுலகத்திலே சிறந்ததொரு தலத்திலே சென்று தவமியற்றுவாயாக; அத்தலத்தையும் நாம் சொல்கின்றோம்: நாம் உமையோடும் மகிழ்ந்து வீற்றிருக்கும் ஆனந்தவனம் எனப்படும் காசிக்குத் தென்பால், உமை நம்மைத் தழுவுவதால் குழைந்து, ஒற்றை மாவடியில் நாம் வீற்றிருந்தருள் செய்யும் காஞ்சி மிகச் சிறந்ததாகும்; அதற்குத் தெற்கே, சிவகாமி கண்டு களிப்பக் கனக சபையிலே நின்று நாம் ஆனந்த நடனம் செய்வதும், அறிவிலாதவரையும், தரிசித்த மாத்திரத்திலே பேரறிவினராக்கவல்லதுமான தில்லைவனம்; அதன் தென்பால், மலை மடந்தை மயூர வுருக்கொண்டு பூசித்திடவும், திருமால் முதலியோர்க்கு அருள் வழங்கியும் நாம் அமர்ந்துள்ளவிடம், துலா காவேரி முழுக்கால் புகழ் பெற்ற மாயூரமாகும். அத்தலத்தின் தென்பால் ஒரு யோசனை தூரத்தில் உள்ளது, புன்னாகவனமென்னும் புண்ணியத் தலம். அதன் பெருமைகளைச் சொல்ல நம்மாலும் ஆகாது. வழிபடுவோர் கருதியவையெல்லாம் அது கடிதின் அளித்துப் பிறவிப் பிணியையும் போக்கவல்லது. அங்கே எவர் எது குறித்துத் தவமியற்றினும் தவருது நற்பயன் பெறுவர். அது மனமாசுகளைப் போக்கி, அறம், பொருள், இன்பம், வீடாகிய நாற்பெரும் பயன்களையும் நல்கவல்லது. அத்தலத்தை நீ இப்போதே அடைந்து தவஞ் செயின், நாம் அங்கு எதிர்ப்பட்டு, உனக்கு வேண்டும் வரங்கள் யாவும் உதவுவோம்' என்றருளிச் செய்து, இறைவன் கயிலை சேர்ந்தான்.



ஸ்ரீ புன்னைவன நாதர்

அன்ன வடிவினனும் அயன், இறைவன் அருளியவாறு அப்போதே இமயத்தினின் றெழுந்து தென்றிசை நோக்கிச் சென்று, முதலில் காசித் தலத்தை யடைந்து, கங்கையில் விதிப்படி நீராடி விசாலாட்சியோடும் இனிது வீற்றிருக்கும் விசுவநாதன் திருப்பாதம் பணிந்து மகிழ்வோடும் சென்று, தென்றிசையிலுள்ள பல தலங்களையும் வழிபட்டுக் காஞ்சீபுரம் சேர்ந்து கம்பை நதியில் நீராடி, மாவடி வைகும் மாதேவன் மலரடி போற்றி, அங்கு நின்றெழுந்து, மேலும் தென்றிசையிலுள்ள தலங்களைத் தொழுதுகொண்டு தில்லையை அடைந்து, சிவகங்கையில் நீராடிச் சிவகாமி கண்களிப்பச் செந்தீவண்ணன் ஆடுந் திருநடனம் சேவித்து மேலும் தென்றிசை நோக்கிச்சென்று மாயூரத்தையடைந்து, காவிரியில் மூழ்கி அம்மையப்பனை அடிபணிந்து மகிழ்வுற்றான்.

பெருமான் குறித்த புன்னாகவனம் அண்மையிலிருப்பதையெண்ணி, ஆர்வத்தோடும் விரைந்து வான்வழியே பறந்து சென்று, சோலைகள் செறிந்து மாதவர் பலர் தங்கும் பெருமையுடைய புன்னாக வனத்தை அவன் அடைந்தான். அங்கே முதலில், கருநிறங்கொண்ட புன்னை மரமொன்றும், பொன்னிறப் பூக்களையுடைய கொன்றைமரமொன்றும் காற்றினால் அலைக்கப்பட்டு ஒன்றுங்கொன்று மோதிக்கொள்ளுங் காட்சியைக் கண்டு, திருமாலும் தானும் மாறுபட்டுப் பொருத செயலை நினைப்பூட்டுவதாக மனத்துட் கொண்டான். மேலும் இயற்கைக் காட்சிகள் பலவற்றைக் காணுந்தோறும், இவ்வாறே பொருத்திப் பார்த்துக்கொண்டு சென்றான். அப்புன்னாகவனத்தில் பலவகை விலங்குகளும் பறவைகளும் பயிலுதல் கண்டு, இவைகளும் இத்தலத்தின் பெருமைகளையறிந்து நம்மைப் போலத் தவஞ்செய்து பேறுபெறக் கருதி வந்தனபோலும் என்று எண்ணிக்கொண்டே, சிறந்த தவசிகள் பலர் வாழுமிடம் சேர்ந்து, அவ்விடத்தருகே தானும் தவஞ் செய்யக் கருதி, 'இறைவன் உமையொரு பாகத்தனாகி, இடபம், திருநந்திதேவர், கணேசர், கந்தர் முதலியோரும், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடராசர், தண்டீசர் ஆகியோரும் சூழக் கயிலையில் எழுந்தருளியுள்ள திருக் கோலத்தோடும் எதிர்வந்து காட்சிதருங் காலம் வரை இடைவிடாது தவம்புரிவேன்' என்று சங்கற்பஞ் செய்துகொண்டு தவம் புரியலானான்.

தவம் புரியுங்கால், மழை, வெயில், பனி முதலியன மிகவும் கடுமை யாகிஎவ்வளவு வருத்தினும், தன் மனத்திலே இறைவன் திருவடிகளைப் பொருத்தி, உணவு வேட்கை யொழிந்து, மலைபோலச் சிறிதும் சலிப் பின்றிக் கடுந்தவம் மேற்கொண்டான். இவ்வாறு தேவ வருடம் ஒரு பதினாயிரம் செல்ல, அத்தவக் கனல் கொழும் புகையுடன் மண்டி, அண்ட கடாக மளவும் முட்டப் பரந்து வருத்தலாயிற்று. அது கண்டு தேவர் முதலிய யாவரும் அச்சங்கொள்ள, திருமால், இந்திரன் முதலான தேவர்கள் பலரோடும் இறைவன் எழுந்தருளியுள்ள கயிலாயகிரியை

அடைந்து, திருநந்தி தேவர் மூலமாகத் தாம் வந்த காரியத்தை இறைவனுக்கு அறிவித்து, இறைவன் அனுமதி பெற்றுத் திருமுன் சென்று வணங்கி யெழுந்து நின்றான்.

இவ்வாறு தேவர்கள் எல்லோரும் வணங்கி நிற்கையில், எம்பெருமான், திருமாலை நோக்கி, 'தேவர்களுடன் நீ இப்போது இங்கு வந்த காரியம் என்ன?' என்று வினவியருள, திருமால், விண்ணப்பஞ் செய்யலுற்றான் : 'சிற்பரமாகிய பெரும! அன்ன வடிவங் கொண்ட அயன், பூமியிலே புன்னாக வனத்தலத்திலே போய் அமர்ந்து செய்யும் கடுந் தவத்தாலாகிய கனலின் புகை எங்கும் பரவி எல்லோரையும் வருத்துகின்றது. கருணாமூர்த்தியாகிய நீரே இதனைப் போக்கி எல்லோரையும் காத்தருள வேண்டும்' என்றான். இவ்வாறு திருமால் வேண்டலும், இறைவன் கருணை கூர்ந்து, மலரவன் கருத்தையும் திருவுளம் பற்றி, தான் ஓர் அற்புத லிங்கமாகி, பரிவாரத்தோர் அனைவருடனும், கயிலாயத்தின் ஒரு பகுதியுடனும், தேவர் பலரும் கணங்களும் கணநாதரும் புடைசூழ, தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் பெருங் கடலொலி போல முழங்க, அரம்பை முதலிய தெய்வ மங்கையர் நடனம் புரியக் கோலாகலமாகப் புன்னாகவனம் புகுந்தான், இதனை யுணர்ந்த பிரமன் கண்விழித் தெழுந்து, 'நம் கருத்தின்படி யருள்செய்யக் கருதிக் கருணாமூர்த்தி யெழுந்தருளினான் ; என்னே வியப்பு!' என்று ஆனந்தக் கூத்தாடித் திருமுன்னே சென்று பலமுறை வலம்வந்து, சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, 'என் குற்றங்களெல்லாம் நீங்கப்பெற்று நான் உய்ந்தேன்' என்று பேரானந்தப் பெருங்கடலுள் மூழ்கி நின்றான். பின்பு 'எம்பெருமானை முறைப்படி பூசித்தற்குரிய கை முதலிய கருவிகளை இப்போது நான் பெற்றிலேனெனினும், இயன்றவரை அதனை இயற்றுவேன்' என்று துணிந்து, பெருமான் திருமுன்னே வலப்பக்கத்திற் பொய்கை யொன்று புதிதாகப் படைத்து, கங்கை முதலாகிய புண்ணிய தீர்த்தம் அனைத்தும் கொணர்ந்து அதில் தாபித்து, அத் தீர்த்தத்திலே நீராடி, பத்திர புட்பங்களால் இலிங்கத்தையும், தேவியையும் அருச்சித்து, கணேசர் முதலாகத் தண்டீசர் ஈறாக எல்லாத் தேவருக்கும் பூசைசெய்து வணங்கி, மீண்டும் இலிங்க மூர்த்தியின் முன் வந்து பணிந்தெழுந்து, நெஞ்சம் நெக்குருக, நாத்தழுதழுப்ப நெடு நேரம் பலபல தோத்திரங்களால் இறைவனைத் துதித்து நிற்ப, இறைவன் 'உனக்கு வேண்டும் வரம் யாது? உரைத்திடுக' எனக் கட்டளையிட, பிரமன் வேண்டலுற்றான் :

'எம்பெருமானே! எளியேன் செய்த பிழைகளை யெல்லாம் மறந்திட வேண்டும் ; மீளவும், எக்காரணத்தாலும், 'நான் பிரமம்' என்ற நினைவு எனக்கு வராதிருத்தல் வேண்டும் ; நும் திருவடியில் இடை

யருத பத்தி யெந்நாளும் எனக்கு மாருதிருத்தல் வேண்டும்; தங்கள் பெருங் கருணையால் யான் இவ்வன்னவுருவம் நீங்கப் பெறல்வேண்டும்; எளியேன் செய்த இப்பொய்கை, 'அன்னமாம் பொய்கை' யென்ற பெயர் பெற, அதில் மூழ்குவது இருதிணை யுயிருள் எதுவாயினும், யம பயம் நீங்கி, இம்மை மறுமைப் பயன்களை யினிது பெற்று, பரபோகங் களும் துய்த்து, இறுதியில் சிவ லோக மடைந்து சிவானந்த மெய் திப் பெருவாழ்வு பெற வேண்டும்; தேவரீர், இப்போது எளியேனுக் குக் காட்சி யளித்தவாறே பரிவா ரங்கள் புடைசூழ இப் புன்னுகை வனத்துள் என்றும் எழுந்தருளி யிருத்தல் வேண்டும்; கயிலையங் கிரியின் ஒரு கூருகிய இதுவும், என் காரணமாகப் 'பிரமகிரி' என்று வழங்கப்பெற வேண்டும்; இத்தலமும் 'பிரமபுரி' என்ற பெயர் பெற, தேவரீரைப் 'பிரமபுரீசன்' என எல்லோரும் போற்றல் வேண்டும்; தேவரீர் பாகத்தமர்ந்த தேவி யும் 'வம்புவனப் பூங்குழலாள்' என்ற பெயர் பூண்டு இங்கே அமர்ந் திருத்தல் வேண்டும்; அன்னமாம் பொய்கையில் நீராடித் தேவரீரை அருச்சித்துக்கொண்டு இத்தலத் தில் வசிப்போர் எவராயினும், இம்மையில் நல்வாழ்வுக்குரிய பல போகங்களையும் பெற்று வாழ்ந்து, மறுமையில் பரபோகங்களைப் பெருக எய்திச் சிவலோகம் சேர்தல் வேண்டும்; இந்த நல்ல வரங்களையெல்லாம் எனக் கீந் தருளுக, என்று தலை தாழ்த்தி வணங்கினுன். இறைவனும் மகிழ்ச்சி கூர்ந்து, 'பிரம! இதைக் கேள்: நீ இவ்வன்ன வடிவம் நீங்கி உனது முன்னுருவம் பெறு வாய்; மற்றும் நீ கேட்ட நியாய மான எல்லாவற்றையும் கருதியவாறே பெறுவாய். மாசி மாதத்து மக நட்சத்திரங் கூடிய இந் நாளில் நாம் உனக்குக் காட்சி தந்துள் ளோம்; ஆதலால் ஆண்டுதோறும் இப்புண்ணிய நாளில் இங்கு வந்து அன்னமாம் பொய்கையில் நீராடி நம்மை வழிபடுவோர் யாவராயினும் அவர் தேவ பதவியைப் பெறுவர்' என்றருளி இலிங்கத் தமர்ந்தனன்.



அன்னமாம் பொய்கை



பிரமபுரீசர் மூலத்தானம்

பிரமன் அன்னவடிவம் விட்டுத் தன் 'பழைய' வடிவம் பெற்று மகிழ்ந்தான். அப்புன்னகவனத்தைச் சார, நகரம் ஒன்று அழகுற அமைத்து, நல்ல குடிகளைக் கொணர்ந்து ஏற்றினன். பின்னும் சிலகாலம் அங்குத் தங்கிப் பிரமபுரீசரைப் பூசித்து வழிபட்டுப் பின்பு சத்தியலோகத்துத் தனதிருப்பிடஞ் சேர்ந்து, கலைவாணி முதலிய எல்லோருடனும் கூடிப் பிரமபுரீசரை என்றும் மறவாது, தன் படைப்புத் தொழிலைப் பாங்குறச் செய்துவந்தான். மாயவனும் நிகழ்ந்தவற்றை யுணர்ந்து, பிரமபுரி குறுகிப் பரமனை வணங்கித் துதித்து நல்லருள் பெற்று வைகுந்தஞ் சென்றடைந்து வாழ்ந்தனன். இந்திரன் முதலிய தேவர்களும் பிரமபுரிப் பெருமானைப் பணிந்து பூசித்து நற்பேறு பெற்று அவரவர் தானஞ் சேர்ந்து மகிழ்ச்சியோடும் வாழ்ந்தனர். இங்ஙனமாகப் புன்னகவனம் பிரமபுரியாயிற்று.

## அம்பர்ப் படலம்

சிவபத்தியிற் சிறந்த துருவாச முனிவர், பிரமபுரியின் பெருமையைக் கேள்வியுற்று, ஒருகால், அத்தலஞ் சென்று வழிபடக் கருதி ஆகாய மார்க்கமாக வந்துகொண்டிருந்தார். அப்போது வழியிடையே 'மதலோலை' யென்பவள் அவரெதிர்ப்பட்டாள். அவள் அசுர குலத்தில் உதித்தவளாயினும் தேவமங்கையர்போலப் பேரெழில்வாய்ந்திருந்தாள். அவள் முனிவர் முன்னே வந்து, அவரை யஞ்சலிசெய்து வணங்கி, 'ஐயனே! நான் சிறந்த வலிமை படைத்த மக்களைப்பெறக் கருதிக் கனிந்த நெஞ்சினளாய்த் தங்களை யடைந்துள்ளேன்; இவ்வேண்டுகோளை யேற்று, எனக்கு மகப்பேறு அருளல் வேண்டும்' என்றனள். முனிவர் அதுகேட்டு, சிறிதும் நாணமின்றி இவள் இவ்வாறு கேட்கின்றாளே யென்று மனங் கொதித்து, 'பெண்ணே! சாபத்தால் அன்னப் புள்ளுருவம் பெற்ற அயன் பன்னெடுங்காலங் கடுந்தவம் புரிந்து, அப்புள்ளுருவம் நீங்கிப் பேறு பெற்ற தலமாகிய பிரமபுரி சென்று, பரமனை வழிபடக் கருதி நான் போகும்போது, நீ எதிர் வந்து இவ்வாறு தகாத வார்த்தையைச் சொன்னாயாதலால், நன்மையுடையவளல்லை; தீவினைகளையே விரும்பிச் செய்யும் இரு மைந்தரை இப்போதே பெறக்கடவாய்' என்று கூறி, அங்கு நின்றும் போய்ப் பிரமபுரி சேர்ந்தார். அங்கே, அவர் அன்னமாம் பொய்கையில் விதிப்படி நீராடி, விபூதி ருத்திராட்சங்களை விளங்க அணிந்து, திருவைந்தெழுத்தைத் திகழச் செபித்துக்கொண்டு, மலைக் கோயிலுட் பிரமபுரீசர் சந்நிதி யடைந்து, சிந்தை நெக்குருக, அட்டாங்க, பஞ்சாங்க நமஸ்காரங்கள் செய்தெழுந்து, பக்தி மேலீட்டால் மெய் சிலிர்க்க, நாத்தழுதழுக்கப் பெருமானைப் பலவாறு துதித்து, மீண்டும் பணிந்து அருள்பெற்று, பூங்குழல் நாயகியையும் பணிந்து போற்றி, மகிழ்ச்சியுடன் தமதிருப்பிடம் சென்றடைந்து வாழ்ந்திருந்தார்.

இப்பால், முனிவர் சொல் பழுதுருதபடி, 'எல்லாத் துன்பமும் நமக்கே வரப்போகின்றன' என்று தேவர்கள் அஞ்சி நடுங்குமாறு கடுந்திற லமைந்த மகனொருவனை ஆகாயத்திலேயே மதலோலை பெற்றாள். பெற்ற தாயும் கண்டு அஞ்சத்தக்க அம்மகன் அம்பரத்திலேயே பிறந்ததனால், அம்பரன் என்னும் பெயர் பெற்றான், தாய் மதலோலை, யாவரும் அதிசயிக்குமாறு மீண்டும் அங்கேயே மற்றொரு மகனைப் பெற்றாள். அக் குழந்தை பிறந்தவுடன் அழுத பேரொலி, எங்கும் பரவி யெல்லோரையும் பெருமயக்கங்கொள்ளச் செய்ததனால் அம்பன் என்ற பெயர் அவனுக்கமைந்தது. மதலோலை, அப்புதல்வர் இருவருடனும் தங்கள் குலகுருவாகிய சுக்கிரனை அடைந்து பணிந்து, 'துருவாசமுனிவ னருளால் இப்புதல்வர் இருவரைப் பெற்றேன்; இவர்களுக்கு நன்மையானவற்றை நாடி, இவர்கள் உய்யும் வகை செய்தல் வேண்டும்' என்றாள். சுக்கிரனும் தன் மனத்தே சிந்தித்து, அவ்விருவருள் மூத்தவனை நோக்கி, 'அம்பரா! உங்கள் பகைவர்களாகிய தேவர்கள் உங்களுக்குப் பல தீங்குகள் விளைத்தல் கூடும்; அது தீர, நீ உன் தம்பியோடும் சிவபரன் அருளைப் பெறுதல் வேண்டும்; அதற்கேற்ற தலம், பூமியிலே தென்னாட்டில், முன்பு தேவர்களெல்லாம் வழிபடும் புன்னாகவனம் என்ற பெயருடையதாய்ப் பின்பு பிரமன் பூசித்துப் பேறு பெற்றதனால் 'பிரமபுரி' யெனப்படும் புண்ணியத் தலமாகும். நீ அங்கே தம்பியுடன் சென்று, அங்கெழுந் தருளியுள்ள அற்புத மூர்த்தியாகிய சிவலிங்கப் பெருமானை விதிப்படி பூசித்து வழிபடுவையாயின், ஆதிரையான் திருவுளமுவந்து முன்வந்து அருள் செய்வான்; அதன்பொருட்டு இப்போதே அத்தலம் சென் றடைக' என விடை கொடுத்தனுப்பினான்.

குருவின் சொற்படியே அம்பரன் தன் தம்பியோடும் புன்னாக வனம் போய்ச் சேர்ந்து, பிரமபுரீசர் சந்நிதியை அடைந்தான். அப்போதே அவன், தலையாய அன்பும், முன்பு தனக்கில்லாததோர் இன்ப வுணர்ச்சியுந் தோன்றப் பெருமானைப் பணிந்து, பிரமன் அமைத்த அன்னமாம் பொய்கையைப் பற்றிக் கேட்டுணர்ந்து, தம்பியோடும் சென்று அதில் விதிப்படி நீராடி, பிரமலிங்கப் பெருமான் பூசனைக்குரிய உபகரணங்களையெல்லாம் தேடித் தொகுத்து, மீண்டும் வந்து நீராடிப் பூசை யுபகரணங்களையும் தூய்மைப் படுத்தி யெடுத்துக்கொண்டு பெருமான் திருமுன் சென்று, உலையாத உள்ளன்போடு பூசை செய்த பின், வம்புவனப் பூங்குழல் நாயகியையும் அவ்வாறே பூசித்து, ஆவரண தேவர்களையும் வழிபட்டு வெளிவந்து, தான் தம்பியோடும் தங்கியிருத் தற் கேற்றதோரிடமும் அமைத்துக்கொண்டு, காலங்கள் தோறும் சென்று முறையாகப் பூசை வழிபாடுகளைச் செய்துவந்தான். அவ்வா றிருக்கும் நாளில் பிரமபுரீசருக்குக் கோயிற் றிருப்பணி தொடங்கி, விமானம், கோபுரம், மண்டபங்கள், ஆவரண தேவர்களுக்குரிய விடங்

கள், சுற்றுமதில்கள் முதலிய பலவற்றையும், நந்தவனத்தையும் நன்கு அமைத்தான். நித்திய நைமித்திகங்கள் உரிய காலத்திலே தவருது நடைபெறுதற்குரிய ஏற்பாடுகளையும் செய்து, இடையரு வழிபாடாற்றி வந்த அவன், ஒருநாள் பிரமபுரீசர் சந்நிதியிலே தன்னை மறந்து நெடுநேரம் நின்று பெருமானைத் துதித்தான். அப்பொழுது ஈசன் திருவுளமுவந்து அவன்முன் தோன்றி 'உன் பூசை, வழிபாடுகளாலும் தோத்திரத்தாலும் நாம் மகிழ்ந்தோம் ; உனக்கு வேண்டுவது யாது ? கூறுக' என, அம்பரன், எம்பெருமான் திருவடிகளிலே அடியற்ற மரம்போல விழுந்து பணிந்தெழுந்து கூறுகின்ருன் :

'எம்பெருமானே! இந்நகரம் 'அம்பராலயபுரம்' எனப் பெயர் பெற்று விளங்கவேண்டும்; தங்கள் திருநாமமும் 'அம்பராலயபுரேசன்' என்ருக வேண்டும்; இங்கே தங்களைத் தரிசித்து வழிபடுவோர் செல்வமும் சிறப்பும் பெறல்வேண்டும்; இவையன்றி, என் தம்பியும் நானும், இமையவர் கண்டு அஞ்சும் பெருவலி பெற்று, அவர்களிற் பலரை வென்று மேம்பட வேண்டும் ; இப்புவன போகங்களையும் இணையிலா வகையில் நாங்கள் துய்க்கப் பெறல்வேண்டும் ; இவையே என்வேண்டுகோள் ; இவற்றையெல்லாம் குறைவின்றி யருளல்வேண்டும்' என, பரமன் பணித்தருள்வான் : 'அம்பரா ! நின் இளவலொடும் நீ மனங் கலந்து வேறுபாடின்றி வாழுநாளளவும், தேவர்கள் முதலிய யாவரும் உங்களை நலிய வல்லாரல்லர் ; மற்றும் நீ வேண்டிய யாவற்றையும் தந்தோம்' என்றருளிச்செய்து மறைந்தான். அன்று முதல், அந்நகரம், 'அம்பராலயபுரம்' என்றதொரு பெயரையும் பெற்றது ; அப்பெயர் மருவி இப்போது 'அம்பர்' என வழங்குகின்றது. பெருமானும் 'அம்பரபுரேசன்' என்ற நாமம் பூண்டனன்.

அம்பரன், தான் வசித்தவிடத்தையே சிறந்ததோர் அரண்மனையாக்கும்படி கட்டளையிட, மயன் அவ்வாறே மிக்க அழகும் வளமும் பொருந்த அரண்மனையும் அத்தாணிமண்டபமும் சுற்று மாளிகைகளும் பிறவும் வகுத்தமைத்தான், அசுரர்கள் வந்து முடிசூட்ட, அம்பரன் முடிமன்னனுகி, இணைபிரியாத தம்பியோடும் அங்கமர்ந்து, நால்வகைப் படைகளும் புடைசூழ, சூதர், மாகதர் துதிபாட, வீறு கொண்டு விளங்கினுன். அவன் பெயர் கேட்டோர் அனைவரும் அஞ்சி நடுங்கினர். இப்பூவுலகிலே யுள்ள மன்னர் பலரிடத்தும் அவன் சென்று போர் குறித்து அறைகூவ, அன்னுர் அஞ்சி வந்து பணிந்து திறையளக்க அவற்றையெல்லாம் பெற்று மீண்டு அவன் தன் நகரம் சேர்ந்தான்.

இவ்வாறு இப்பூவுலக மன்னரையெல்லாம் அடிப்படுத்தியபின், அம்பரன் தேவருலகம் சென்று, அங்கே இந்திரனுடைய வாகனமான

ஐராவதம், உச்சைச்சிரவம் என்ற யானை குதிரைகளையும், காமதேனு முதலியபலவற்றையும் நிலைகுலையச்செய்தும், கற்பகம் முதலிய தருக்களை முறித்தும் குறும்புகள் மிகச் செய்தான். இந்திரன் இவனோடெதிர்த்துப் போர் செய்தற்கு அஞ்சிப் படைகளின்றித் தனியே வந்து அம்பரனை யணுகி, 'அம்பரா! மூவரும் தேவரும் போற்றும் பிரமபுரி சேர்ந்து, ஈசனை நெடுங்காலம் பூசனை செய்து, உங்கள் குலம் ஓங்க வரம்பெற்று விளங்கும் உன்னை யெதிர்ப்பார் யார்? இதனை யெண்ணுமல் எங்களோடு பொர நினைத்து வந்தாயே!' என்று குழைந்து கூற, அம்பரன் இடி முழக்கம்போலப் பெருநகை செய்து, 'எங்கள் குல வைரி' என்று பேர் பெற்றுள்ள உனதாற்றலை அளந்தறியக் கருதி யிங்கு வந்தோம்; உன் செய்தி இவ்வாறென்பதை முன்னமே அறிந்திருந்தால் வந்திருக்க மாட்டோம்' என்று மறுமொழி கூறி, இந்திரன் தந்த செல்வங்களைத் திறையாகப்பெற்று, வானவர் வாழும் வேறிடங்களுக்கும் சென்று, எங்கும் தன்னை யெதிர்ப்பா ரில்லையென்பதை யறிந்து, அங்கங்கே திறையாகப் பெற்ற பலவற்றையும் தொகுத்துக்கொண்டு மீண்டு வந்து தன் நகரம் சேர்ந்தான்.

அவன் தன் நகரம் சேர்ந்து, முன்போலக் கொலுவீற்றிருந்து, அரசு புரியுங்கால், ஒருநாள் தங்கள் குல குருவாகிய சுக்கிரனை அங்கு வரும்படி தூதனுப்பித் தெரிவித்தான். தூது மொழி கேட்ட சுக்கிரன், மகிழ்ந்து உடனே புறப்பட்டு வந்து அம்பரனைக் கண்டான். குருவைக் கண்ட அம்பரன், இருக்கை விட்டெழுந்து குருவுக்குச் செய்யவேண்டிய எல்லா உபசாரங்களையும் குறைவறச் செய்து, சிறந்த பொன்னுதனத்தில் அவனை அமர்த்தினுன். குருவும் மனமகிழ்ந்து, 'என்னை அழைத்த காரணம் என்ன?' என்று வினவ, 'அடிகளே! தங்கள் மொழிப்படி நான் தம்பியுடன் இங்கு வந்து பிரமபுரீசனைப் பூசித்து வரங்களைப் பெற்று, இவ்வுலகத்தும் விண்ணுலகத்தும் யாவரையும் வென்று அடிப்படுத்தித் தன்னிகரில்லாத் தனியரசு செலுத்தி வருகின்றேன்; ஒரு குறையும் இல்லை. ஆயினும், எங்களுக்கு உரிய காலத்தில் திருமணம் நிகழப் பெற்று மணவாழ்க்கை மருவுதல் வேண்டுமன்றோ? அதற்குரியவற்றையும் தாங்கள் அருளல் வேண்டும்' என்று வேண்டினுன்.

அது கேட்ட சுக்கிரன், 'தன்னிகரில்லாத் தனி அரசே! அசுரர்குல மன்னர்க்கு ஒருவர் பெண் கொடுக்க, விதிப்படி மணம் நிகழவேண்டுமென்பதில்லை. மனத்துக்கியைந்த மங்கையர் எங்கே யிருப்பினும், எக்குலத்தவராயினும் அவர்களை அடைந்து இன்பந் துய்த்தலே ஏற்றதாகும்; உனக்கு அரியது யாது?' என்றனன். அம்பரன் மன மகிழ்ந்து, குருவுக்குப் பொன்னும் பிறவும் குறைவறக் கொடுத்து அனுப்பிவிட்டு, மறைமொழியினும் குருமொழியே சிறந்ததென மனங்கொண்டு, மிக்க வலிமையுடைய பலரைப் பலவிடங்களுக்கும் செலுத்தி,

நலம்மிக்க நங்கையரை வலிதிற் கவர்ந்துவரச் செய்து அவர்களைத் தன் மனப்படி அநுபவிக்கலானான். இவ்வுலக மங்கையர் இன்று: தேவ மாதர் நாளை; இயக்கர்குல மடந்தையர் மறுநாள்; கந்தருவ மகளிர் அதன் மறுநாள்; வித்தியாதர மகளிர் மற்றொருநாள்; இவ்வாறாக, இன்று அனுபவித்த பெண் மறுநாள் இன்றிப் புதிது புதிதாக அனுபவித்தான். தம்பியும் தன் பங்குக்கு இவ்வாறே செய்யலானான். இருவருமாகச் செய்துவந்த அநீதிகளுக்கு ஆற்றாராய் மகளிர் பட்ட துன்பம் பகரவொண்ணாது. தப்ப வகையின்றித் தவித்து, மனமின்றி அவர்களை மருவினோர் பலர்; இப்பாவிக்கு இணங்கிக் கற்பழிதலினும் உயிரிழத்தல் மேலென்று கருதி உயிர்விட்டார் சிலர். தம் அழகைச் சிதைத்துக் கெடுத்துக்கொண்டு தப்பினோர் சிலர். இவ்வாறு மகளிர் பட்ட அல்லல் களை யறிந்து மண்ணுலகமே கலங்கிற்று. 'இப்பாவிகள் என்று அழிவார்களோ! இவர்களுடைய அநீதி என்று ஒழியுமோ! நமக்கு நற்காலம் வருமோ!' என்று யாவரும் பரிதவித்தனர். மற்றை யுலகத்தவரும் இவ்வாறே மாழ்குவாராயினர்.

இவற்றையெல்லாம் கண்ட இந்திரன் மிகவும் வருந்தி முகவாட்ட முற்றுப் பிரமனை அடைந்து, 'அம்பரனும் அம்பனும் செய்யும் தொல்லைகளுக்கு அளவில்லையே! அவை தீரவேண்டாவோ? தாங்கள் இவ்வாறு வாளா விருத்தல் தகுமோ!' என்று முறையிட, அது கேட்ட பிரமன் இந்திரனுடன் சென்று திருமாலை அடைந்து பணிந்து, வந்த காரியத்தை வகுத்துரைத்தான். திருமாலும் வருந்தி, 'பிரமபுரீசனை யன்றி இதைத் தீர்த்தல் எவராலும் ஆகாது; நாம் அங்கேசென்று விண்ணப்பம் செய்வோம்' என்று கூறி எழுந்து அவரோடும் தேவர் பலரோடும் சென்று பிரமபுரியை அடைந்தான்.

அங்கே எல்லோருமாக, அன்னமாம் பொய்கையில் நன்னீராடி, விபூதி ருத்திராக்கங்களை யணிந்து, ஐந்தெழுத்தோதியவாறு இறைவன் திருமுன் எய்திப் பணிந்தனர். திருமால் முன்னின்று, பிரமபுரிப் பெருமானைப் பலபல தோத்திரங்களால் பரவ, நான்முகனும் இந்திரனும் மற்ற வானவரும் முறையே அவ்வாறு தனித்தனி துதித்தனர். பெருமான் கருணைகூர்ந்து அவர்கள்முன் தோன்றி, திருமாலை நோக்கி, 'இவர்களுடன் இங்குவந்த காரியம் என்ன?' என்று கேட்க, மாயன், 'தனிப்பெருஞ் சோதியே! தங்கள் வரத்தின் வலிமையால் அம்பரனும் அம்பனும் செய்யும் அநீதிகளை அறியாததுபோ லிருத்தல் ஏனோ? எங்களை யெல்லாம் பகைத்து வெருட்டுதலோடு, மகளிரை யெல்லாம் அவர்கள் படுத்தும் பாடு சொல்லுந்தரமன்று; அவர்களைக் கேட்பாரோ, தொலைப்பாரோ ஒருவரு மில்லை; எங்களாலும் ஆவதொன்றுமில்லை. அன்று கருணைகூர்ந்து ஆலகால விஷத்தை அருந்தி அமரரைக் காத்ததுபோல இன்று இக்கொடியவர் தரும் இன்னலினின்றும் எல்லோரையும் காத்தருளல் வேண்டும்' என்றான்.

சூலதரனுகிய முதல்வன், அத்துட்டருடைய கொடுமைகளைத் தொலைக்கும் பொருட்டுத் திருவுளங்கொண்டு, தனதிடப்பாகத்தமரும் இறைவியின் திருமுகம் நோக்கிச் சிறிது முறுவலித்தான். அம்முறுவலின் குறிப்புணர்ந்த அருட்சத்தியாகிய முதல்வி, தன் கூற்றினளாகிய மாகாளி இப்போதே இங்கு வருக என நினைத்தாள். நினைத்தலும், உலகமெலாம் புரிந்த தவப் பயன்போல அம் மாகாளி அங்கு வந்து, அடிபணிந்தாள். அவளை நோக்கி இறைவி, 'நீ நெடுமாலோடும் போய், அம்பரனும் அம்பனும் முடிவெய்த வகை நாடி, அவர்களை விரைவில் முடித்திடுக' எனக் கட்டளையிட்டாள்.

கட்டளைபெற்ற காளி தன் கையிலுள்ள திரிசூலத்தைச் சுழற்றிக் கொண்டு கனன்றெழுந்தாள். பிரமன் முதலிய தேவர் பலரையும் அவரவர் இருப்பிடஞ்செல்லச் செய்து, தமையனேடும் நகரின் மேல்பால் ஒரு தனியிடத்தே சென்றமர்ந்து, அக்கொடியோரை மாய்த்தற்குரிய வகையை நன்கு ஆராய்ந்தபின், தான் அழகெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டது போன்ற பார்ப்பனக் கன்னிகையானுள். முன்னொருகால் திருமால் கொண்ட மோகினி வடிவம், இம்மோகனங்கியின் வடிவத்துக்கு அடிமையே என்று சொல்லத்தக்கவாறு அவள் பேரெழில் விளங்கியது. காளி இவ்வாருகியது கண்ட கார்வண்ணன், வேத சாத்திரங்களையெல்லாம் ஓதியுணர்ந்து கரைகண்டு, அவ்வாறே ஒழுகும் ஒரு வயோதிக மறையவனுனன். அவ்விருவருமாக அக்கொடியோர் உறையும் அரண்மனையை நோக்கிப் போயினர்.

திருநீறும் கண்மணியும் அணிந்து திருமேனி தேசு கொண்டு விளங்க, நெகிழ்ந்த உடையும் உத்தரியமும் மின்ன, பூணூல் மார்பில் பொலிதர, கோலூன்றிக் கிழமறையோன் தளர்நடைகொண்டு முன்னே சென்றுன். இளங்கதிரவனெளிபோன்று மேனி ஒளி வீச, முழுமதி போல முகம் விளங்க, சிலம்பு, தண்டை, மேகலை முதலியன ஒலிக்க, அணிகளுக்கு அணி செய்யும் அழகோடு, கன்னிப்பெண் அன்ன மென்னடை கொண்டு கிழவனைப் பின்தொடர்ந்து நடந்தாள். இவர்கள் வருகையைக் கண்ட அசுரர் சிலர் ஓடித் தம் தலைவர் இருவர்க்கும் இச்செய்தியை எடுத்துக்கூற, அவர்கள் பெரிதும் மகிழ்ந்து, 'நீங்கள் குறித்தவர் புதியவராயின் இங்கே அழைத்துவருக' என, அவ்வாறே அவர்கள் சென்று அவ்விருவரையும் அணுகி, 'நீங்கள் எங்களரசர்பால் வருவீராக' என்று சொல்லி அழைத்துச்சென்று தம் தலைவர் முன் நிறுத்தினர். அழகும் ஒளியும் அளவிடற்கரியவாய்ப் பூங்கொடிபோல ஒல்கி எதிர்நின்ற கன்னியை, அவ்விருவரும் கண்கள் குளிர மோகம் தலைக்கொள்ள வைத்தகண் வாங்காது பார்த்தனர்.

காமமோகந் தலைக்கொண்ட அவ்விருவரும் தனித்தனியே தம் கருத்துக்கிசையைய அக்கன்னிகையின் அங்க சௌந்தரியங்களைக் கூர்ந்து

நோக்கி உள்ளங் களித்தனர். மன்மதனும் தருணம் பார்த்துத் தன் மலரம்புகளை அவர்கள்மேல் பொழிய, இருவரும் கருத்தழிந்து, பரவசமாகி, 'இன்று இவளை நாம் சேராவிட்டால் நம்முயிர் பிரிவது உறுதி' என்று எண்ணமிடலாயினர். முதலில் மூத்த மூர்க்கன் மறையவனை நோக்கி, 'இம்மங்கையை எனக்கீந்து, பொன்னும் பொருளும் முதலியன நீ விரும்பியவாறு நிரம்பப் பெற்றுக்கொள்க' என்றனன். உடனே தம்பியும், 'அவளை எனக்குக் கொடுத்து நீ விரும்பியவற்றையெல்லாம் அளவின்றிப் பெறுக' என்றனன்.

இவற்றைக் கேட்ட கிழமறையவன் நயமாக, 'எனக்குள்ளவள் இவள் ஒரு பெண் ; இவளை நான் இருவர்க்கும் எவ்வாறு ஈதல் கூடும் ? ஆதலால், உங்களில் உலகம் மதிக்கத்தக்க பெருந்திறலுடைய ஒருவருக்கே இவள் உரியவளாவள்' என்று பேச்சை விட்டான். அவ்விருவரும் அதைக் கேட்டு, 'அந்தணன் பேச்சு நியாயமானதே; இருவரும் போர் தொடுத்து அவரவர் திறமையைக் காட்டுவோம்; அதில் வெல்பவனே அவளை அடைதற்குரியவன்' எனக் கூறிப் போர் செய்ய முற்பட்டனர்; இறைவன் முன்னுள் அளித்த வரத்தின் தன்மையை அச்சமயம் அவர்கள் மறந்தே போயினர். அவர்கள் கருத்தை யுணர்ந்த மறையவன், அவர்களை நோக்கி, 'நீங்கள் இருவரும் நிகரற்ற வீரர்கள்; ஆயினும், வென்றவருக்கே இவள் உரியவள் என்பதனுல் உங்களில் ஒருவர் வென்றே தீரவேண்டும். அவ்வாறு ஒருவர் வெற்றியெய்தி வரும் வரையில், வீணே இங்குக் காத்திராது, நாங்கள் கோயிலுக்கு மேற்கே ஓரிடத்தில் சென்று தங்கியிருப்போம்' என்று கூறிக் கன்னிகையுடன் அங்கிருந்து போய் முன்னே தாங்கள் தங்கிய இடத்தை அடைந்து அங்கமர்ந்தான்.

மறையவன் தான் சொன்னபடி கோயிலின் மேல்பால் உள்ள குறித்த விடத்தில் கன்னியுடன் போய்த் தங்கியதறிந்த அவுணர் இருவரும், 'அந்தணன் உண்மையுள்ளவனே' என்று கூறி, அவர்கள் தங்கிய விடத்திற்கு வடபால் ஓரிடத்தில் போர் தொடுக்கலாயினர். ஒருவரை யொருவர் கையாலும் தண்டாலும் தாக்கியும், தூக்கியெறிந்தும், கால் பிடித்திழுத்து வீசியும், பலவாறு தம் முழுவலியுடன் அன்று முழுதும் பொருதும் எவரும் வெற்றி தோல்வி காணவில்லை; அதனுல் மறுநாளும் அவ்வாறே கடும் போர் நடந்தது; அன்று மாலை சூரியன் அத்தமிக்கும் தறுவாயில் அம்பரன் தன் தம்பியை அந்தகனுலகுக் கனுப்பிவிட்டான். அம்பன் மாண்டதும், 'உலகங்களுக்கிருந்த பெருந் துன்பத்திற் பாதி யொழிந்தது' என்று விண்ணவரும் மண்ணவரும் மகிழ் கூர்ந்தனர். அவுணரிருவரும் பொருதவிடத்தை 'படுகளர்' என இன்றும் வழங்குகின்றனர். மக்கள் அங்கே செல்லவும் அஞ்சுவர்; அங்கே முளைக்கும் தாவரங்களும் நன்கு பயன்தருதலில்லை

தம்பி மாண்டதும் அம்பரன், 'இனி நாம் அக்கன்னியை அடைவதற் கிடையூறொன்றுமில்லை'யென்று மகிழ்ந்து, அந்தணனோடு அவள் இருக்குமிடத்தையணுகி, ஆவலோடு அவளைத் தழுவச் சென்றான். அப்போது அம்மாயக் கன்னி, அவ்வுருவம் விட்டு, இவ்வுலகமும் வானுல கமும் கண்டு அஞ்சத்தக்க கொடும் பேருருவங் கொண்டனள். 'ஈதென்ன! முன்னொருகால் மூண்டெழுந்த ஆலாலவிடமே இப்போது இவ்வுருக்கொண்டு வந்ததோ! அல்லது வடவைத்தீயே இவ்வாறு வந்ததோ!' என்று எவ்வுலகத்துயிர்களும் அஞ்ச, கதிரவன் தன் தலைச் சூட்டென்னும்படி அவள் ஓங்கி நிமிர்ந்து நின்றாள். அவள் கண்களி னின்றெழுந்த கடுஞ் சினத் தீயால் எதிர்ப்பட்ட மரங்களெல்லாம் எரிந்து சாம்பலாயின; தேவர்களும் அஞ்சி நடுங்கலாயினர். அனை வரையும், 'அஞ்சற்க' என்று கையமர்த்தி, அவள் அம்பரனை நோக்கி ஏளனமாகச் சிரித்து, 'வலிமை மிகுதியால் முறையற்ற காமம் பூண்டு, 'மூவுலகிலுமுள்ள மங்கையரைக் கெடுக்கும் மூடா! நீ நினைத்தபடி என்னை வந்து தழுவுக' எனப் பேரிடி முழக்கம் போலக் கூறினாள். அவளுடைய சொற்களும், கோரப் பல்லும், வடவைத்தீப்போல விளங்கிய செம்மயிரும், கண்களினின்றும் வெளிப்பட்ட தீயும், கோர வடிவமும் அம்பரனையே அச்சுறுத்தின; 'நம்முயிர் கவரும் கூற்றே இவ்வாறு வந்துளது' என அவன் மனத்துட் கொண்டான். அப்போது அவள் மீண்டும், 'நீ என்னைத் தழுவவல்லையாயின் தழுவுக, தழுவுக' என்று சொல்லிக்கொண்டே அவனை நெருங்கினாள். 'நமக்கு முடிவு கிட்டி விட்டது! என் செய்வோம்!' என்று கருதி அவன் பேய்போல விரைந் தோட முயலுகையில், அவள் கோபத்தால் எழுந்த தீக்கொழுந்து அவனைப்பற்றி அவன் தலைமயிரையும மீசையையும் முதலில் எரித்து விட்டது. இனி இங்கு நின்றால் நம் உடலையும் இத்தீ சாம்பராக்கி விடும் என்றஞ்சி, அங்கு நின்றும் அவன் வடகிழக்காக விரைந் தோடினான். காளியும், 'அடா! எங்கு நீ ஓடித் தப்புவாய்?' என்று அவனை விடாமல் தொடர்ந்து ஐந்து நாழிகைதூரம் துரத்திச் சென்றாள். அவுணன் சிறிது தளர்வுற்றுப் பின்னே திரும்பிப் பார்த்தான். அப்போது காளி தன் ஒரு காலைத் தூக்கி அவன் மார்பில் உதைத்தாள். அவ்வுதை படலும், பெருமான் காலால் உதையுண்ட காலன்போல அவுணன் பதைத்து வீழ்ந்தான்; காளி அவன் வயிற்றைக் கிழித்துக் குடலை யெடுத்து மாலையாகப் பூண்டு, அவனுயிரோடு எவ்வுலகும் பட்ட துயரத்தையும் போக்கினாள். அவனிறந்ததும், அவனைச் சேர்ந்தவர்க ளாகப் பூமியிலும் மற்றெவ்விடத்தும் இருந்த அனைவரையும் அவள் மாய்த்தாள். விண்ணவரும் மண்ணவரும் பெருமகிழ்வெய்தினர். அம்பரனைக் காளி மாய்த்தவிடம் 'அம்பரகரம்' எனப் பெயர் பெற்றது. அம்பரன் முன்னே மிகத் தீவினைகள் செய்திருப்பினும், உலக மாதாவின் கூறாகிய மாகாளியின் திருவடி பட்டதால், அவன் சுவர்க்க பதவி பெற்றான்.

பிரமன், திருமால், இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் மகிழ்ந்து, மலர்மாரி பொழிந்தனர். அவர்கள் யாவரும், 'அஞ்சத் தக்க இவ்வுருவம் நீத்து, யாவரும் இன்புற்று வணங்கத் தக்க நல்லுருவங் கொள்க' என்று மாகாளியின் அடிபணிந்து வேண்ட, அவளும் அவ்வாறே இனிய உருக்கொண்டு அம்பர் மாநகரத்துள் முன்பு தான் தங்கிய விடத்துக்குச்சென்று அமர்ந்தாள். அங்கும், அம்பரகரத்தூரிலும் தேவர் முதலியோர் அவளுக்குப் பூசையாற்றி, அம்பரில் உள்ள நம் பெருமானையும் பணிந்து நல்லருள் பெற்றுச் சென்றனர். முன்பு கன்னியாகிய மாகாளியுடன் தந்தையாகித் தங்கியிருந்த திருமாலும், அவ்விடத்தே யிருந்து அனைவர்க்கும் அருள் பாலிப்பவனானான். அம் மாகாளியையும், மாயனையும், அம்பரீசனையும் நம்பித் தொழுவார், எண்ணியவற்றை யெய்தி யினிது வாழ்வார்.

பிரமபுரீசர் சந்நிதிக்குக் கிழக்கே விநாயகரும், ஈசான திக்கில் கயிலாய நாதரும், அக்கினி திசையில் புவனேசரும், மேல்பால் மருதமரத்தின் நிழலில் மாகாளேசுரரும் அமர்ந்து அனைவர்க்கும் அருள் பாலிப்பர். தென்றிசையில் பூரணை, புட்கலை யென்ற இரு தேவிமாரோடும் சாத்தனார் (ஐயனார்) அமர்ந்திருப்பர். இவர்கள் செய்தியை மேலே சொல்லுவோம்.

## வைரவப் படலம்

புலத்திய முனிவர் வமிசத்தில் தோன்றி அசுரர்களுக்கு அரசனான சங்காரசீலன் என்றொருவன் இருந்தான். அவன் தனக்கு மேன்மை கருதி, இமயமலையிற் சென்று, நூறு தேவ வருடங்கள் சிறிதும் உணவின்றிப் பிரமனைக் குறித்துப் பெருந்தவ மியற்றினான். அவனுடைய தவத்துக்கு உவந்த பிரமன், அவன் முன் தோன்றி, 'நீ வேண்டும் வரம் யாது? சொல்லுக; தருவோம்' என்றருளினான். சங்காரசீலன், பிரமனை வணங்கித் துதித்து, 'ஐயனே! நான் போர் புரிந்து மூவுலகையும் வெற்றி கொள்ளவும், இந்திரன் முதலிய தேவரும் பிறரும் என்வழி நிற்கவும் வரம் அருளல் வேண்டும்' என்றான். மலரவன், அவ்வரங்களை அவனுக்கு அளித்துத் தனதிருப்பிடம் சேர்ந்தான். சங்காரசீலனும் மிக்க களிப்படைந்தவனாய் அங்கு நின்றும் அகன்று, பெரும்படைகளுடன் போய் அமராவதியை வளைத்துக் கொண்டான். அங்கே வாயில் தோறும் காவலிருந்த வீரர்களை வலியழித்து உள்ளே புகுந்து, கற்பகம் முதலிய தருக்களை முறித்துச் சிதைத்தும், தேவமாதர் பலரைப் பற்றி வருத்தியும் பலவாறு தீங்கிழைத்தான். அவன் செயல்கள் கண்டு அஞ்சிய தேவர்கள், இந்திரனிடம் சென்று பணிந்து, சங்காரசீலன் செயல்களையெல்லாம் ஒன்றும் விடாமல் எடுத்துரைத்தனர். அதுகேட்ட தேவராசன் சினம் மிகக் கொண்டு, அக்கினி

முதலிய திக்குப்பாலகரோடும், பிற தலைவரோடும், பெரும் படையோடும், எழுந்து, வச்சிராயுதம் கைக்கொண்டு ஐராவதத்தின்மேல் அமர்ந்து போர்க்களம் சென்றடைந்தான். மிக்க வலி படைத்த சங்கார சீலனும் தன் படைகளுடன் ஆரவாரம் செய்து தேவர்களை எதிர்த்து நின்றான். இருதிறத்தாருக்கும் பெரும் போர் மூண்டது, வெற்றி தோல்வி யின்றி நெடும்போர் நிகழ்ந்த பின், அசுரர்படை சிதைந்து பின்னிட லாயிற்று. அது கண்ட சங்காரசீலன் கடுங்கோபங்கொண்டு, யமனுடைய தண்டாயுதம் போன்ற ஒன்றைக் கையில் ஏந்தித் தேவர் படையுள் புகுந்து சாடினான். அப்படையுட் சிலர் மயங்கி நின்றார்கள்; சிலர் மூர்ச்சையுற்று விழுந்து கிடந்தனர்; சிலர் திரும்பியோடலானார்கள். தேவேந்திரன் இவற்றைக் கண்டு, அக்கினியை அசுரர்மேல் ஏவினான். அக்கினி சென்று அவுணருள் மிகப் பலரை மாய்த்தான். சங்காரசீலன் அதைக்கண்டு, 'என் கோபத் தீயின்முன் இத்தீ எம்மாத்திரம்' என்று ஓடிவந்து அழற் கடவுள் தலையில் தன் தண்டால் ஓங்கிப் புடைத்தான். அக்கினி அயர்ந்து வீழ்ந்தான். தேவர்கள் அச்சங் கொண்டனர். அதையறிந்த இந்திரன், மற்றை யறுதிசைக் காவலரைக் கடுகி யேவ. வாயு முதலில் மூண்டெழுந்து அசுரர் படையில் ஐயாயிரவரை மாய்த்தான், பின்பு அவுணர் தலைவன் கைத் தண்டால் மொத்துண்டு, 'அம்மம்ம ! இதுபட எவராலாகும்! என்று சொல்லி ஓட்டங்கொண்டான். அடுத்து, யமன் விரைந்து வந்து அசுரரிற் பலரை அடித்து வீழ்த்தி, சங்காரசீலன் கைக்கொண்டு தாக்கிய இருப்புலக்கையாலடிபட்டு அஞ்சியோடினான். பின்பு வருணன் முன்வந்து அவுணர் படையை மோதிக் கலக்கி யழிக்கும் போது, அக்கொடியவன் பரிகம் என்னும் படையை வீச அதற்காற்றாது அவன் பின்னிட்டு ஓட்ட மெடுத்தான். அவன் பின் எஞ்சிய திசைப் பாலகர் கூடி அசுரர் படையைத் தம்மால் ஏன்றவரை தாக்கி யழித்தனர். அவர்களும், கொடியவன் கைக் குந்தப் போருக் காற்றாது முன்னவர்கள் நிலையை அடைந்தார்கள்- அதன்மேல், அட்ட வசுக்களும், ஆதித்தியர் பன்னிருவரும் வானவர் தலைவர் பிறரும் கூடி நெடும்போது போராடி இறுதியில் முதுகு காட்டினர்.

இவ்வாறு தன்னை யெதிர்த்தவர் அனைவரையும் தவித்தோடச் செய்த பின், சங்காரசீலன் நேரே இந்திரனை எதிர்க்கலானான். இந்திரனும் வச்சிராயுதத்துடன் வெள்ளை யானை மீதேறி அவனுடன் கடும்போர் தொடங்கினான். அவன் எதிரிகளுடைய நால்வகைப் படைகளுக்கும் பெருஞ்சேதம் விளைத்து, அவர்கள் தலைவனும் தலை பிளக்குமாறு தன்கை வச்சிராயுதத்தால் தாக்கினான். மலைமேல் இடி விழுந்தாற் போன்ற அத் தாக்குதலால், சங்காரசீலன் நிலைகுலைந்து மயங்கி, இரண்டு நாழிகை நேரம் உயிரிழந்தவன் போலத் தரையிற் கிடந்தான். தங்கள் தலைவன் நிலையுணர்ந்த தானவர், மனந்தளர்ந்து மெய் சோர்ந்து அழுதனர். தேவர்கள் மனமும் புயங்களும் பூரிப்ப வெற்றி முழக்கங் கொண்டனர்.

இந்நிலையில், மயங்கி விழுந்திருந்த சங்காரசீலன் அது தெளிந்து, மக வானது திறலை வியந்துகொண்டே எழுந்தான். எழுந்தவன் இந்திர னெதிரிற் போய், 'உன் வீரத்தை யின்று நான் அறிவேன்' என்று கூறிக்கொண்டே நொடிப் பொழுதில் வெள்ளை யானையின் மத்தகத்தின் மேல் தாவி அமர்ந்து இந்திரன் மார்பில் தன் கை முட்டியால் ஓங்கிக் குத்த, இந்திரன் தன் வாகனத்தினின்றும் கீழே விழுந்து மூர்ச்சித்தான். அதுகண்ட மாதலி (இந்திரனது தேர்ப்பாகன்) விரைந்தோடி வந்து வேந் தனை எடுத்துக்கொண்டு போய் ஓரிடத்தில் ஒளித்து வைத்தனன். சங்காரசீலன் வெற்றிச் சங்கை முழக்கினன். இவ்வாறு விண்ணவரை வெற்றிகொண்ட சங்காரசீலன், இனித் தன்னை எதிர்ப்பார் எவருமிலர் என்ற காரணத்தால் 'சர்வ விஜயன்' என்ற பெயர் பூண்டு பெருமிதத் துடன் வாழ்ந்துவந்தான்.

இந்திரன் மனம் பெரிதும் மாழ்கித் தன் சுற்றம் புடைசூழ மலரவனை யடைந்து வணங்கி, 'ஐயனே! நின் வரங்களின் வலிமையால் 'சங்காரசீலன்' என்ற அசுரன் வந்து எங்களையெல்லாம் நிலைகலக்கி, விண்ணுட்டைக் கைப்பற்றி வீறுகொண்டு வாழ்கின்றான். நான் இருக்க விடமின்றி, ஏது செய்வதென்றறியாமல் நின்னை வந்து சரணடைந்தேன். இஃதுண்மை; எனக் கிரங்கி அருள் செய்யவேண்டும்' என்றான். அது கேட்ட நான்முகன், நெடுநேரம் சிந்தித்து, இந்திரனை நோக்கி, 'நீ உன் தமரோடும் பூவுலகத்திலே அம்பர் எனப்படும் புன்னாக வனத்தலத்தை யடைந்து, அங்கே நம் பெருமானை முறைப்படி பூசித்துக் கொண்டிருப் பையாயின், சங்காரசீலன் அங்கும் உன்னைக் கெடுக்கக் கருதி வருவான்; அப்போது நம் பெருமான் வயிரவ மூர்த்தியைக்கொண்டு அவ்வவுணன் ஆவியைப் போக்குவிப்பான். அதன்பின் நீ எல்லோருடனும் மீண்டு நின்பதியடைந்து நிலையுற்று வாழ்வாய்' என்று கூறி விடுத்தனன். திசைமுகன் மொழிப்படி சதமகன் பரிவாரம் புடைசூழ அம்பரை யடைந்து, அன்னமாம் பொய்கையில் நீராடிப் பிரமலிங்கப் பெருமானையும் வம்பு வனப் பூங்குழ லம்மையையும் விதிப்படி பூசித்து வழிபட்டுக் கொண்டு அச்சம் நீங்கி அங்கமர்ந்திருந்தான்.

இஃதிவ்வாருக, மலரவன் நாரத முனிவனையழைத்து, 'அமரருலகைக் கைக்கொண்டு அரசாளும் சங்காரசீலன் என்பவன் பூமியிலே அம்பர் நகரத்தை விரைவில் சென்றடையச் செய்க' எனப் பணிக்க, நாரதனும், 'அவ்வாறே செய்வேன்' என்று அடிபணிந்து விடைபெற்றுச் சங்கார சீலன் இருப்பிடஞ் சேர்ந்து அவன் முன் சென்று இனிய ஆசிகள் புகன் ருன். சங்காரசீலனும் முனிவனுக்கு முகமன் கூறி வரவேற்று நல்லதோர் ஆதனத்தில் இருக்கச் செய்தான். முனிவன் ஆதனத்தில் அமர்ந்து அசுரன் முகம் நோக்கி முறுவலுடன், 'அரசே! நின்புகழ் அளவிடற் கரிதாய் எங்கும் பரவி விளங்குகின்றது' என்று எடுத்துக் கூற

அவுணன் மகிழ்ந்து 'வீணைச் செல்வ! ' விசேடம் ஏதேனும் உண்டேல் விளம்புக' என்றனன். முனிவன், 'வெற்றி மிக்க வேந்தே! ' விசேடம் உண்டு; ஆயின் அதை விளம்புதற்கு அச்சமும் உண்டு; என் செய்வேன்!' என்றான். அவுணன், ' முனி முதல்வ! அஞ்சாது கூறுக ' என, உபாயம் வல்ல உயர் முனிவரன், ' அண்ணலே! முன்பு உனக்குத் தோற்றுத் தன்னிடம் விட்டுச் சென்ற இந்திரன், மங்கையரும், சுற்றமும், பரிவாரங்களும் சூழ, பூமியிலே முன்பு பிரமன் நெடுங்காலந் தவமியற்றிப் பேறுபெற்ற தலமாகிய அம்பரை அடைந்து இன்பமுடன் தங்கி, உன்னையும் உன் கிளைகளையும் அழிக்கும் வரம் பெறும் பொருட்டு ஈசனைப் பூசை செய்துவருகின்றான். அந்த மன வலியால் உன்னை மிகவும் அவமதிக்கின்றான். ஆதலால், கடிது சென்று அவன் செயலைக் கடிதல் நன்று; எனக்குத் தெரிந்ததனால் இதனை இங்கு உரைக்க வந்தேன்' என்று கூறி விடை பெற்றுச் சென்றான்.

முனிவன் போனபின், சங்காரசீலன், மானமும் கோபமும் மேலிட, 'அம்பர் சென்று இந்திரனுடைய விரதத்தைக் கெடுத்தன்றி உணவு கொள்ளேன்' என்று தான் ஒரு விரதம் பூண்டு, பெரும்படையுடன் பூமிக்கு வந்து சேர்ந்தான். வந்தவன், அம்பர் நகரம் சென்று அதனைச் சூழ்ந்துகொண்டு, புறநகரிலேயே தவஞ்செய்யும் அந்தணர் குழுவைப் பற்றி அலைத்தான். இதனை யறிந்த இந்திரன், தேவர்களோடும் பரமன் கோயிலிற்போய்ப் பிரமலிங்கப் பெருமானை வணங்கிப் பலவாறு துதித்துத் தன் குறையை முறையிட்டான். முறையீடு கேட்ட முன்னவன், கருணைகொண்டு, தேவராசன் முன்காட்சியளித்து, ' நீ அஞ்சேல்; அவுணனை நொடிப் பொழுதில் மாய்விப்போம்' என்றருளி, வயிரவக்கடவுள் அங்கு வரத் திருவுளங்கொண்டான். உடனே வயிரவன் அங்கே வந்து தோன்றிப் பெருமானை வணங்கி, 'இப்போது அடியேன் செய்யவேண்டியதைப் பணித்தருளல் வேண்டும்' என்று வேண்டி நின்றான். பெருமான் அவனை நோக்கி, 'ஏ கால வைரவ! நீ இப்பொழுதே சென்று தேவர்களை வருத்தும் கொடுமை மிக்க சங்கார சீலன் என்பவனை, அவன் படைகளுடனே அழித்து, அந்தணருக்கும் இந்திரனுக்கும் அச்சம் நீக்கி, இங்கமர்ந்து இத் தலத்தைக் காவல் புரிக' என்றருளிச்செய்ய, அப்போதே வயிரவன் அழன்றெழுந்து, தனது சூலப் படையைக் கையிலேந்தி, தன்னைப் புடை சூழ்ந்த தேவர் குழாத்தோடும் சென்று, சங்கார சீலன் படைகளைத் தன் சூலத்தால் அழித்து, அவன்முன்சென்று, 'அடா இங்கே வா' என்று அறைகூவினான். அவுணன் சிறிதும் அஞ்சாமல் எதிர்வரலும், வயிரவன், தன் கைமுட்டியால் அவுணன் மார்பில் அதிரத் தாக்கினான். அவுணன், மூச்சுத் திணற, விழிகள் பிதுங்க அலறிக்கொண்டு, தரையில் விழுந்து, வாயில் குருதி சோர, எலும்புகள் முறிந்து உடம்பெல்லாம் நையத் தன் திறலெல்லாம் ஒடுங்கி மாய்ந்தான். தேவர்கள் தம் துன்ப

மெல்லாம் தீர்ந்ததென்று மகிழ்ந்து பூமாரி பொழிந்தனர்; அம்பர்ப் பெருமானடிகளில் பேரன்பு பூண்டு சிறந்தனர். வயிரவன், அவுணரைக் கொன்ற மாசு தீர அன்னமாம் பொய்கையில் மூழ்கி, அம்பரீசன் திருவடிகளை வணங்கித் துதித்து நின்றான். அவனை நோக்கிப் பிறைமுடிப் பெருமான், 'கால வைரவ! தேவர் முதலிய அனைவர் துன்பத்தையும் போக்கிய உன் செயலால் மகிழ்ந்தோம்; முன்பு நாம் கூறியபடி, நீ இத்தலத்தில் அமர்ந்து என்றும் காவல் செய்திருப் பாயாக' என்றருளினான். வயிரவன் மன மகிழ்ந்து விடைகொண்டு சென்று, தென்கீழ்த் திசையில் அழகிய கோயில் ஒன்று எழுப்பி, இலிங்கமும் தாபித்து, புவனேசன் என்று அதற்குப் பெயர் சூட்டினான். அவ்விடத்தே, தன் கைச் சூலத்தால் தரையைத் தோண்டித் திருக்குள மொன்றுண்டாக்கி, 'சூலதீர்த்தம்' என்று பெயரிட்டு, கங்கை முதலாய புண்ணிய தீர்த்தங்களெல்லாம் அதில் வரச்செய்து, அந்நீரால் இலிங்கப் பெருமானுக்கு அபிடேகம் செய்து, பூசைக்குரிய உபகரணங்க ளெல்லாங் கொண்டு நன்கு பூசை செய்து பெருமானருள்பெற்று அங்க மர்ந்து என்றும் காவல் மேற்கொண்டுள்ளான். அவ்வாறமர்ந்துள்ள வைரவன் மலரடி வணங்கி யேத்துவார், தமக்குள்ள பகை நீங்கப் பெற்று, எல்லா நன்மையும் எய்தி, இம்மையில் நல்வாழ்வுற்று, இறுதியில் வீடும் பெறுவர். சூல தீர்த்தத்தில் முழுகி, புவனேசரையும் வைரவரையும் மெய்யன்போடு வழிபடுவோர், குட்டம், தொழுநோய், காசம், குன்மம், காமாலை முதலிய கொடிய நோய்களும் தீர்ந்து நன்மை பெறுவர். வைரவக் கடவுள் வந்தவாறு இது.

சங்கார சீலனால் நேர்ந்த துன்பங்கள் தீரப்பெற்ற இந்திரன், தேவர் களுடனேகூடி, அம்பரீசன் ஆலயத்தின் எதிரே திருக்குளமொன்று சமைத்து, இந்திர தீர்த்தம் என்று அதற்குப் பெயரிட்டு, எல்லாப் புண்ணிய தீர்த்தங்களையும் வருவித்து அதில் தாபித்து, தானும் நீராடி, பெருமானுக்கும் திருமஞ்சனமாட்டி, தேவதருக்களின் பூவும் பிறவுங் கொண்டு பெருமானைப் பெரிதும் பூசித்துப் போற்றி, களங்கம் நீங்கிக் கரையேறினோம் என்று களிப்பெய்தி, வம்புவனப் பூங்குழலாளுக்கும் வண்மைமிக்க பூசையியற்றித் துதித்து வழிபட்டு, தன் பழம் பெரும் வளமெல்லாம் வரப்பெற்று விளங்கினான். தேவர்கள் பலரும் தங்கள் தலைவன் அமைத்த தீர்த்தத்தில் நீராடிப் பெருமானையும் பூங்குழலம்மையையும் முற்றன்போடும் பூசித்து வழிபட்டுப் பெருமகிழ் வுற்றனர். இங்ஙனம் பூசித்த இமையவர்க்கும் அவர்தம் வேந்தனுக்கும் எம்பெருமான் விடைமேற்கொண்டு தோன்றிக் காட்சியளித்து, 'இத்தலத்தை வந்து தரிசித்து இங்கு வாழ்வோர் யாவராயினும், எவ்வகையச்சமும் நீங்கி நல்வாழ்வு பெறுவர். அவ்வாறே நீங்களும் பகையச்சந்தீர்ந்து முன்னை வாழ்வு முழுதும் பெற்றீர்கள்; இனி நீங்கள் உங்கள் நாடடைந்து இனிது வாழ்வீர்களாக. இப்போது நீங்கள்

விரும்பியவற்றைக் கேளுங்கள்' என்றருள, இந்திரன், 'அடியேன் அமைத்த தீர்த்தத்தில் மூழ்கித் தங்களைத் தரிசிப்போர் யாவராயினும், அவர் வறுமையில்லா வாழ்வு பெற்று, விரும்பியவெல்லாம் எய்தி, முடிவில் தங்கள் கயிலை சார்ந்து பேரின்ப முறுதல் வேண்டும்; தங்கள் திருவடி நினைவு எங்களுக்கென்றும் மாறாதிருத்தல் வேண்டும்; இவ் வரங்கள் ஈந்தருள்க' என, அவ்வாறே அளித்து எம்பெருமான் மறைந் தருளினன். இந்திரனும் தன் மனைவி முதலிய சுற்றத்தோடும், சூழ்ந்த பல தேவர்களுடனும் தன்னுடடைந்து இனிது வாழ்ந்தான்.

## விமலன் முத்தியடைந்த படலம்

காசினியில் புகழ்மிக்க காசிமா நகரில் மும்மலங் கடிந்து முக்கட் பெருமானையே வழிபட்டொழுகும் விமலன் என்ற வேதியன் ஒருவன் இருந்தான். அவன் புண்ணியவதி யென்ற பெண்ணை மணந்து நல்லறம் நடத்தி வாழுங்கால், புண்ணிய தீர்த்தங்களில் நீராடும் விருப்பமுடையவனாகி, மனைவியோடும் புறப்பட்டுத் தென்றிசை நோக்கி வந்து பல புனித தீர்த்தங்களிலும் நீராடிக் காவிரியின் மருங்கு சேர்ந்தனன். காவிரியில் மூழ்கி, அடுத்தபடியாக, அம்பரைச் சார்ந் தோடும் அரிசிற் காவிரியின் பெருமையை அறிந்து சென்று அதில் நீராடி, அம்பர் நகரடைந்து, அன்னமாம் பொய்கையில் மூழ்கி, பிரம லிங்கப் பெருமானையும் பூங்குழல் நாயகியையும் வணங்கித் துதித்த பின், அத்தலத்தின் பெருமைகளை யுணர்ந்து அங்கேயே தங்கி வாழும் விருப்பமுடையவனானான். கோயிலின் வடபால் தான் இருப்பதற்கோர் இல்லம் புதிதாக அமைத்து, அதில் இருந்துகொண்டு, இடையறாத பக்தி யுடன் காலந்தோறும் ஆலயஞ் சென்று தரிசித்து வழிபட்டு வந்தான். அவ்வாறிருக்கையில் தனுர்மாதம் வந்தது. அம்மாதத்தில் நாள் தோறும் காலையில் அன்னமாம் பொய்கையில் நீராடி, அநுட்டானங்களை முடித்துக்கொண்டு, கோயில் சென்று, உருத்திர மந்திரம் ஓதியவாறே கோயிலை நூறு முறை வலம் வருவான்; பின்பு சந்நிதியை அடைந்து, பஞ்சாட்சரம் ஓதிப் பெருமானையும் பிராட்டியையும் ஆவரண தேவர் களையும் முறைப்படி தரிசித்து வணங்கித் தனதில்லம் சேர்ந்து அக்கினி காரியங்களையும் விதிப்படி நடத்துவான். தனுர்மாத முழுதும் இவ்வாறு கழிந்தது. மகரமாத முதல் நாளில் வழக்கம்போல நீராடிச் சந்நிதியை அடைந்து, பூசித்து, பெருமான் திருமுன்நின்று பலவாறுதுதிக்கலானான். 'திரிலோசன, மகாதேவ, மதனாந்தக, சங்கர, காலகால' என்பன போன்ற பல நாமங்களையும் அவன் கூறி, 'எல்லாமாகிய பிரமபுரீச, உன்னைச் சரணமடைந்தேன். என் கண்கள் உன்னையன்றிப் பிறரைக் காண மாட்டா; என் வாய் நின் புகழன்றிப் பேசாது; என் கால்கள் நின்கோயிலை யன்றிப் பிறகோயிலை வலம் வரா; நினைத்தமாத்திரத்திலே பற்றறுக்கும்

நின்பதங்களையன்றிப் பிறவற்றை யென் தலை தாழாது; என் செவிகள் நின் புகழன்றிப் பிறவற்றைக் கேளா; என் மனமும் நின்னை மறவாது நினைத்தலன்றி வேறு நினையாது' என்றிவ்வாறு மனமுருகித் துதித்து வந்தான் ஒருநாள் இறைவன் அவன்முன் தோன்றி, 'நின் துதிகளால் மகிழ்ந்தோம்; நின் நினைவு யாது? நவிலுக' என, விமலன் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து கைகூப்பி நின்று, உலகமுய்ய வரம் வேண்டினன்: 'ஐயனே! பிரமபுரி வாழும் மகாதேவா! தங்கள் தரிசன விசேடத்தால் நான் பாசங்கள் நீங்கிச் சீவன் முத்தனானேன்; பேரானந்தப் பெருவாழ்வுற்றேன்; ஆனாலும், அடியேன் விண்ணப்பம் ஒன்றுண்டு: காசியிலே வசித்துக் கங்கையில் அநுதினமும் முழுகும் பேறுபெற்ற நான், அங்கு நின்றும் இங்கு வந்துற்றபின் இத்தலத்தை விட்டு வேறெங்கும் செல்ல விரும்பவில்லை; இங்கே, அரிசில், அன்னமாம் பொய்கை முதலிய தீர்த்தங்கள் கங்கையினும் சிறப்புடையன வேனும், எனக்குப் புகழுண்டாகும் வகையில் இங்கொன்று புரிதல் வேண்டும்; அது தங்களுக்கு அரிதன்று; அதைக் கூறுவேன்: கங்கைநதி மூவுலகமும் ஊடுருவி, இவ்வன்னமாம் பொய்கையில் நிற்கும்வண்ணம் அருள்புரிதல் வேண்டும். இம் மகர மாதத்தில் அதில் நீராடுவோர்-எல்லாப் போகங்களையுந் துய்த்து, ஈற்றில் முத்தியும் பெறச் செய்தல் வேண்டும். இவையன்றி, தங்கள் திருவடிகளிலே நிலைத்த அன்புடைய வனான மகன் ஒருவனை யெனக்கருளல்வேண்டும்' என வேண்ட, பரமன் அவ்வாறே அருள்வானாகி, 'கங்காநதி, பாதாளத்தினின்று மேல் நோக்கி யெழுந்து, பெரிய வச்சிரத் தூண்போல இவ்வன்னமாம் பொய்கையின் நடுவே நிமிர்ந்து நிற்பதாக' என்றலும், அஃதவ்வண்ணமே யெழுந்து வான்முகடுற நின்றது; அனைவருங் கண்டு அதிசய முற்றனர். பெருமான் விமலனை நோக்கி, 'கங்கை யெழுந்தது; அதில் நீராடுக; நீ வேண்டிய மகப்பேறும் பிறவும் சங்கையின்றிப் பெறுக' என்றருளி மறைந்தனன். விமலன் தன் இல்லாளோடும் அதில் இனிதின் மூழ்கி மகிழ்வுற்றான். வானளாவ எழுந்த வரநதி, விமலன் முழுகிய பின்னர், அடங்கிப் பண்டுபோல அமர்ந்தது, அது கண்டோர் மேலும் அதிசயித்தனர். பெருமான் ஆணையரல் அப்பாதாள கங்கை அத் தீர்த்தத்தில் என்றும் அகலாது அமைவதாயிற்று. விமலன் தன் மனைவியோடும் மேதக வாழ்ந்து, மாதேவன் என்னும் ஒரு மகனைப் பெற்றுக் களிப்பெய்தி, பிரமவரைப் பெருமான் திருவடி சேர்ந்து பேரானந்தப் பெருவாழ்வு பெற்றனன். மாதேவனும், தன் தந்தை போலவே பிரமபுரீசன் திருவடிகளிலே இடையறாத பத்தி செய்து, வம்புவனப் பூங்குழலம்மையையும் புவனேசத்தமர்ந்த பெருமானையும் நாள்தோறும் போற்றி வழிபட்டு வாழ்ந்து, இப்புண்ணிய விசேடத்தால் இறுதியில் சிவலோகமெய்தி இனிதமர்ந்தான்.

# காமனருச்சனைப் படலம்

முன்பு அரசனுயிருந்து, பின்பு முனிவனுன விசுவாமித்திரன், வசிட்ட முனிவனிடம் கொண்ட மாருப் பகையால், அவனை வெல்லக் கருதி, வட திசை யொழிந்த மற்ற மூன்று திசைகளிலும் முறையே சென்றமர்ந்து தவமியற்றினுன். அத்திசைகளில் அவ்வப்போது அரம்பை மாதர்வந்து அவன் தவம் நிலைகுலையச் செய்தனர். அதனுல், 'நம் தவம் இவ்வாறு சிதைவுற்றதே'யென்று மனம் வெம்பிய அவன், பெருஞ்சினங்கொண்டு, இவ்வாறு நம்மை மயக்குந் தொழிலில் வல்லவன் மாரனே என மனத்தில் எண்ணி, 'அம்மாரன் தொழில் இனி எங்கும் பலித்திடா தொழிக' என்று அவனைச் சபித்து, வடதிசை சென்றமர்ந்து மாதவம் புரிந்தான். அச்சாபத்தால், தன்னுடைய தொழில் சிதைவுற்ற மன்மதன், இவ்வாருயிற்றே யென்று வருந்தி, விரைந்து சென்று பிரமன் திருமுன் சேர்ந்து 'பெருமானே! நீயே தஞ்சம்' என்று ஓலமிட்டுப் பணிந்தெழுந்து பலவாறு துதித்து, நிகழ்ந்த செய்தியைக் கூறி, 'இச்சாபத் தீமை தவிர்ந்து நான் நலம்பெற அருளல்வேண்டும்' என்று இரந்து நின்ருன். மாரன் குறையைச் செவியேற்ற மலரவன், பரிவுகொண்டு, அவன் முகம்நோக்கி, 'நீ அஞ்சேல்; நான் அன்னவுருவம் நீங்கி நலம்பெறச் செய்தது பூவுலகிலே தென்னுட்டிலுள்ள அம்பர் என்னும் பெருந்தலம்; நினைத்த மாத்திரத்திலே எத்தகைய அச்சத்தையும் நீக்கவல்லது அது; நீ அங்கே சென்று, அன்னமாம் பொய்கை யென்ற தீர்த்தத்தில் முழுகி, பிரமபுரீசப் பெருமானைப் போற்றி வழிபடின், இச்சாபத் தீமை தவிரப் பெறுவாய், என்ருன். அதுகேட்ட மன்மதன், அப்போதே சாபம் நீங்கியவன்போல மகிழ்ந்து அம்பர்த்தலத்தை நாடிச் சென்றடைந்து, பிரமன் மொழிப் படியே அன்னமாம் பொய்கையில் முழுகி, திருநீறுங் கண்மணியும் சாத்தி, திருவைந்தெழுத்தை நினைந்து, கயிலாயமாகிய பிரமவரையின் மீதேறி, பிறவிப் பிணியகற்றும் பெருமருந்தும் பெருஞ்சோதியுமான பெருமானைக் கண்களாரக் கண்டான். கண்ட வளவிலே, நெஞ்சம் நெக்குருக, கண்களில் உவகைநீர் பெருக, தண்டாகாரமாய்ச் சேவித்தெழுந்து உடல் புளகிக்க, மெய்யன்போடு மெய்யனை அருச்சித்துப் பூசிக்கலானுன் முன்னே மன்மதன் ஒரு மலரை (அம்பாக) இட்டபோது அவனைச் சினந்த அருளாளன், இப்போது அவன் பல மலர்களைத் தூவி அருச்சனை செய்யவும் அவனை முனிந்தானல்லன்; உண்மையன்பு பழுதுபடுவதுண்டோ? பெருமானைப் பூசித்த மாரன், உலக மாதாவாகிய வம்புவனப் பூங்குழலம்மை சந்நிதியிலும் சென்று அன்பு மாருது பூசனை யாற்றினுன்.

ஒருநாள் அரிசிலாற்றிலும், ஒருநாள் இந்திர தீர்த்தத்திலும், சூல தீர்த்தத்தில் ஒரு தினமும், அன்னமாம் பொய்கையில் ஒரு தினமுமாக அவன் அங்குள்ள தீர்த்தங்கள் அனைத்திலும் முழுகுவான். ஒரு தினம்

புவனேசரையும், மறுதினம் வைரவ மூர்த்தியையும், மற்ெருரு நாள் மருதவனப் பெருமானையும் சிந்தித்துச் சென்று வழிபடுவான். ஒருநாள் தலத்தின் எல்லையை வலம் வருவான். அவ்வாறு போற்றுதலைக் கைக் கொண்டாலும், பிரமவரைப் பெருமானை ஒவ்வொரு நாளுங் காலந்தோறும் பூசித்து வழிபடுதலில் தவறமாட்டான். இவ்வாருக, நாளுக்குநாள் உள்ளம் மிகக் கசிந்து, மெய்யன்புடன் நூருண்டளவும் பூசனையாற்றிய அவன், ஒருநாள் பெருமான் திருமுன் நின்று, நெடும்பொழுது பலவாறு தோத்திரஞ் செய்து, 'பிரமபுரிப் பெரும! நின்னைச் சரணடைந்த என் குறை தீர்த்தருள்புரிதல் வேண்டும்' என்று பிரார்த்திக்க, பெருமான் திருவுள முவந்து அவன்முன் தோன்றி, 'அச்சந்தரும் கௌசிகன் சாபத்தை யகற்றிவிட்டோம்; நீ சென்று முன்போல உன் தொழிலைக் கடைப்பிடிப்பாயாக' என்று புகன்றருளி, இலிங்கத்துள் எய்தினன். மன்மதனும், 'துன்பந்தீர்ந் துய்ந்தோம்' என்று உள்ளம் மகிழ்ந்து கோயிலை வலங்கொண்டு பணிந்து, தனதிடம் சென்றடைந்து தன் தொழில் ஆற்றி வாழ்ந்திருந்தனன்.

## மாறநாயனர் வழிபடு படலம்

எங்கும் சோலைகள் சூழ்ந்து தளிர்களாலும் பூக்களாலும் பொலிவு பெற்று விளங்குவதும், யாகங்கள் எப்போதும் நடைபெறுதலால் அத் தீயினின் றெழும் புகை ஆகாயத்திலே மேகங்கள் போலச் சூழ்ந்து மயில்களை ஆடச் செய்வதுமான வளம் மிக்க அம்பர் நகரிலே, வேதம் ஓதி, ஓதியவழி நின்று, முத்தீ வளர்த்து, முழுநீறு பூசி, அத்தன் அடி போற்றல் மறவாத சிறப்புடைய வேதியர் குடிகள் தழைத்திருந்தன. அத்தகைய வேதியர் ஒருவர்பால், முன்னர்க் கூறிய நன்னெறி யனைத்தும் ஓருருவங்கொண்டு உதித்தாற்போல, மாறனர் என்ற ஒருவர் அவதரித்தார். அவர், காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் கடிந்து, தம் ஒழுக்கச் சிறப்பால் மூவேந்தரும் தம்மைப் போற்றுமாறு வாழ்ந்தார். அவர், அம்பர் மேய நம்பன் அடிக்கே ஆளாகி, திருநீறும் கண்மணியும் திகழப் பூண்டு, திருவைந்தெழுத்தை இடையருது சிந்திப்பார். சிவனடியாரைச் சிவனென்றே கருதி வழிபடுவார். சிவதலங்கள் தோறும் சென்று போற்றுதலும், சிவ புராணங் கேட்டலும் அவர்க்கு மிக்க இன்பந்தருவன. நாள்தோறும் காலையில் அன்னமாம் பொய்கையில் நீராடி நீறணிந்து, ஐந்தெழுத்தைச் சிந்தித்துப் பிரமபுரீசரைத் தொழுவார். அம்மையையும், பிற ஆவரண தேவர்களையும் புவனேசத்தமர்ந்த நம்பரையும் வயிரவரையும் போற்றுவார். சிவனடியார் எவரையேனுங் கண்டால், அவர்களை அன்போடு பணிந்து, இன்மொழி புகன்று தமது மாளிகைக்கு அழைத்துச் சென்று விதிப்படி உபசரித்து அறுசுவை அமுதூட்டி மகிழ்விப்பார். இதனையே தம் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டொழுகினர்.

இவ்வாறொழுகிவரும் நாளில், அவர் சுந்தரமூர்த்தி நாயனரைத் தரிசிக்க விரும்பி, ஒரு நாள் திருவாரூர் சென்று பரவையார் திருமாளிகையை அடைந்தார். முன்னமே மாறனுரைப் பற்றிக் கேள்வியுற்றிருந்த நம்பியாரூரர், தம்மைக் காண அவர் வந்தமை யறிந்து, பெருவிருப்புடன் எதிர்கொண்டார்; இருவரும் மனங்கலந்து மருவினர். ஒருவரையொருவர் பணிந்து, திருக்கோயில் சென்று புற்றிடங்கொண்ட பெருமானையும் தியாகேசரையும் தொழுது போற்றிப் பேருவகையெய்தினர். இவ்வாறு நாள்தோறும் தரிசனஞ்செய்துகொண்டு மாறனுர் வன்றொண்டரோடு சில நாள் அங்கிருந்தபின், பிரமபுரீசர் நினைவால் தம்மூருக்கு மீண்டு வந்து, நேரே ஆலயத்திற் சென்று நெஞ்சம் நெக்குருகப் பரமனைப் பணிந்து, தம் மனை சென்றடைந்தார். சுந்தரரிடத்துப் பேரன்புகொண்டு, அடிக்கடி திருவாரூர் சென்று அவரைத் தரிசித்து மகிழ்ந்து மீளுவார். மாறனுர் இவ்வாறு அடுத்தடுத்து வரக்கண்ட நம்பியாரூரர், தாமும் அம்பர் சென்று அவரைக் காணக் கருதி ஒருநாள் அவ்வாறே வந்துற்றார். அவர் வருகையை அறிந்த மாறனுர், எதிர்கொண்டு வந்து பணிந்து தம் மாளிகைக்கு அழைத்துச் சென்று பேருவகையுடன் உபசரித்துப் பெருவிருந்து செய்வித்து மகிழ்ந்தார். சுந்தரர், இவ்வாறு சிலநாள் அங்கமர்ந்து, பின்பு திருவாரூர் செல்ல நினைந்து, மாறனுரிடம் விடைகொண்டு புறப்பட்டுச் சென்றார். மாறனுரும் தம்முடைய தொண்டுகளையெல்லாம் முன்போலச் செய்து வாழ்ந்து வந்தார்.

இவ்வாறிருக்கையில் மாறனுர், சிறந்த யாகம் ஒன்று செய்யக் கருதினர். அந்த யாகத்தில் சிவபெருமான் உமாதேவியுடன் நேரே எழுந்தருளி அவிர்ப்பாகம் கொள்ளவேண்டுமென்ற நோக்கத்துடன், திருவாரூர் சென்று சுந்தரரைத் தரிசித்து, தாம் யாகம் செய்யக் கருதியதையும், அதில் தியாகராசப்பெருமான் அம்மையோடு எழுந்தருளி வந்து நேரே அவியுணப் பெறவேண்டுமென்ற நோக்கம் தமக்கிருப்பதையும் கூறி, அது கைகூடும் வண்ணம் அப்பெருமானிடத்து ஆரூரர் விண்ணப்பஞ்செய்து கூட்டுவித்து, அவரும் யாகத்துக் கெழுந்தருளவேண்டு மென்று அவரை வேண்டிக்கொண்டு தம்மூருக்குத் திரும்பினர். பின்பு அவர் ஊருக்கு மேல்பால் தக்கதோரிடத்தில் யாகசாலையை விதிப்படி கோலி, அதனுள் வேதிகை, குண்டம், சுற்றமைப்புக்கள் முதலிய யாவும் குறையற அமைத்து, மறையவர் பலர் சூழ ஒரு நல்ல நாளில் யாகத்தைத் தொடங்கிச் செய்யலானர். அம்பரைச் சூழ்ந்த பலவிடங்களில் வாழும் அந்தணர் பலரும் வந்து கூடினர். வன்றொண்டரும், தியாகேசரிடம், மாறனுரின் வேண்டுகோட்படி அம்பர் செல்லவேண்டுவதை விண்ணப்பித்து, அருள்பெற்றுத் தாம் அம்பர் சென்று யாகசாலையை அடைந்தார். தியாகராசப் பெருமானும் அன்பர்களுடைய கருத்தை முற்றுவிக்கத் திருவுளங்கொண்டு, 'எவ்வுருக்கொண்டு சென்றாலும் அன்பர்

உண்மையை உணர்வர்' என்று கருதி, இருள்போற் கருகிய மேனியுடன், அரையிலே அழுக்கு நிறைந்த ஆடையொன்று கட்டி, ஊன்பொதிந்து முடைநாற்ற முடைய தோலொன்றைத் தோளில்தாங்கிக் கள்ளின் நாற்றமும் வீச ஒரு புலேயராகி வந்தார். பெருமான் திருவுளக் குறிப் பின்படி எம்பெருமாட்டியும் ஒரு புலேச்சியாகிப் பின்வா, அவர் சென்று மாறனுரது யாகசாலேயுள்ளே புகுந்தார். ஒரு புலேயன் உள்ளே வருதல் கண்ட மறையவர் எல்லாரும் கடுஞ்சினங் கொண்டு. ஆரவாரித்துக் கை தட்டி அவனே வெளியே செல்லுமாறு குறிப்பிக்கவும் அது பயனற்ற தாயிற்று. அதனுல் அவர்களெல்லோரும், யாகசாலேக்குள் ஒரு புலேயன் வருவதா ! ஈதென்ன அநீதி ! யாகமும் நம் தன்மையும் கெட்டொழிந் தன' என்று கூறி விரைந்தெழுந்து வெளியே சென்றனர். மாறனுரோ, தம் உள்ளத்தே உண்மையை உணர்ந்தவராய், வன்ருெண்டரை நோக்கி 'நம் பெருமானே இவ்வுருவத்தை நயந்து கொண்டு வந்துள்ளாரென்று நான் உணர்கின்றேன்; நும் கருத்து யாது ?' என, சுந்தரர் 'அம்மை யோடும் வந்துள்ளவர் அவரே; அதற்கையமில்லே' என்று கூறி, நகை செய்து, புலேயரை நோக்கி, 'ஐயரே ! வேத முதலாய அனேத்தும் உம்மை 'நாதப்பறையர்' என்று கூறுவதைப் புதிதாக்கினீரோ ! உமக்குரிய கரித் தோலே இம்முடைத்தோலாக்கிக்கொண்டீரோ ! தெய்வ மணங் கமழும் உமது செங்கழுநீர் மாலே ஊனுயிற்ருே ! புன் மதுவின் நாற்றம் புழுகு நெய் வாசமெனக் கொண்டீர் போலும்; அரையில் உடுத்த அழுக்கு நிறைந்த ஆடையும் இக்கோலமும் மிகநன்று ; முதல்வரே! இதுவும் ஓர் அழகாயிற்று ' என்று பலவற்றை உரிமையோடு கூறினுர். விநாயகர், சாத்தனுர் முதலியோர் நேரில் வந்து அத்தணரிடம், 'இங்கு வந்துள்ளவர் புலேயரல்லர் ; எம்பெருமானே இவ்வாறு வந்துள்ளார' என்று எடுத்துக் கூறினும் அவர்கள் அதனே நம்புவாரல்லர். மாறனுர், வன்ருெண்டருடன் மகிழ்ச்சி மிக்கவராய், புலேயராகிய பெருமானேப் போற்றி அவியுணவை அளிக்க, அவரும் அதனே யேற்றுக்கொண்டார். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். பின்பு தியாகேசர் மாறனுரை நோக்கி, 'நீர் வேண்டுவது யாது ' என வினவ, மாறனுர், 'என்னேயாட்கொண்டவரே ! இந்த வடிவுடனே நீர் இங்கமர்க' என்று வேண்டிக்கொண்டார். பெருமானும் அருள் கூர்ந்து அவ்வாறே அங்கமர்ந்தார். மாறனுர் இதன் பின் சோமாசி மாறர் ஆகி, இறுதியில் நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவரும் ஆனுர். அவர் ஆரூரரைத் தொழுது: 'நும்மால் அடியேன் இப்பேறு பெற்றேன்' என்று முகமன் பல கூறி வழியனுப்பியபின், அன்னமாம் பொய்கையில் நீராடித் தமதில்லஞ் சேர்ந்து. என்றும்போல எம்பெருமானே மறவாது போற்றி வாழ்ந்து. சிவபதம் எய்தினுர். நம்பெருமானே வைதிக மறையோனுகி வந்து தடுத்தாட்கொள்ளப் பெற்ற பெருமையுடைய சுந்தரர் வாக்கால் 'அடியேன்' என்று இசைக்கும் பேறுடைய மாறனுர் பெருமையை முழுதும் உணர்ந்து எடுத்துக் கூறவல்லார் யார் ?

# கோச்செங்கட் சோழ நாயனர் வழிபடு படலம்

திருக்கயிலாயத்திலே, சிவபெருமானுடைய கணநாதர் பலருள், 'மாலியவான்', 'புட்பதந்தன்' என்ற இருவர், பெருமானடித்தொண்டு பூண்டு, நாள்தோறும் பூவும், தளிரும், புனலுங் கொண்டு பெருமானைப் பூசித்து வந்தனர். நாளடைவில் அவ்விருவருக்குள்ளே போட்டியும் பொறாமையும் விஞ்ச, ஒருவரையொருவர் முந்திக்கொண்டு பூசை புரிவாராயினர். ஒருநாள் ஓரிடத்து அவ்விருவரும் நேருக்கு நேரே சந்திக்க நேர்ந்தபோது, மாலியவான், பொறாமை மிகுதியாற் பொறுமை யிழந்து, 'நீ யானையாகிப் பூமியை அடையக்கடவாய்' என்று புட்பதந்தனைச் சபித்தான். அதுகேட்ட புட்பதந்தனும் அடங்காச் சினங் கொண்டு, 'நீ தாழ் பிறப்பான சிலந்தி யாகுக' என்று மாலியவானைச் சபித்தான். பின்பு இருவரும் ஒருவாறு தம் பிழையை உணர்ந்து சென்று பெருமான் திருவடிகளிலே பணிந்தெழுந்து, நிகழ்ந்ததைக்கூற, மாதேவன் குறுநகை கொண்டு, 'நீவிர் இருவீரும் சோழ நாட்டிலே காவிரியின் வடகரையில் உள்ள ஞானக்ஷேத்திரத்தை அடைந்து, அங்கும் இப்பகைமையோடு நெடுங்காலம் நம் இலிங்க பூசையாற்றிய பின்பு இச்சாபம் நீங்கப்பெற்று மீண்டும் இங்கு வந்தடைக' என்று அருளி விடை கொடுத்தனுப்பினன்.

விடைபெற்ற யானையும் சிலந்தியும், பெருமான் குறித்த விடமாகிய ஞானக்ஷேத்திரத்தை (திருவானைக்கா) அடைந்து, அத்தலத்தின்வளம் முதலியவற்றை நோக்கி வியந்தன, பின்பு அவையிரண்டும் வேறு வேறிடங்களில் தங்கி, ஒன்றையொன்று காணாதவாறு வந்து வெண்ணாவலின் கீழமர்ந்த விமலனைப் பூசிக்கத் தொடங்கின.

முதலிற் சிலத்தி சென்று நோக்கியபோது, இலிங்கத்தின் மேல் நாவற் சருகுகள் உதிர்ந்துகிடப்பது கண்டு, அந்தோ! இறைவன் திருமுடி மீது சருகுகள் உதிர்வதா! என்றெண்ணி, தன் வாயெச்சில் நூலாலே விமானம் முதலியவற்றை யமைத்து வைத்தது. பின்பு யானை வந்து நோக்கியபோது, இறைவன் திருமுடிக்கு மேலே இச் சிலம்பி நூலிருத்தல் தகாது எண்றெண்ணி, அதனைச் சிதைத்து, நீரில் மூழ்கி பூ முதலியன கொணர்ந்து இறைவனைப் பூசித்துச் சென்றது. மறுநாள் சிலந்தி வந்து பார்த்தபொழுது, தான் அமைத்த தளி சிதைப்புண்டு பச்சிலையும் பூவும் இறைவன் திருமுடிமேல் இருத்தல் கண்டு, ஐயோ, இறைவன் திருமேனிக்குப் பாதுகாப்பாக நாம் இழைத்த கோயிலைச் சிதைத்ததுமன்றி, இலை முதலியவற்றையும் இறைவன் திருமுடிமேல் சுமத்தியிருப்பது என்ன அநீதி! என்று அவற்றையெல்லாம் விலக்கி, தன் வாய்நூல் கொண்டு முன்போல இயற்றி மகிழ்ந்து சென்றது.

இவ்வாறே மாறி மாறி இவை யிரண்டும் சிலநாள் செய்துவர, ஒருநாள் சிலந்தி தன் முறைப்படி வந்து, தான் இழைப்பதனை நாள்தோறும் சிதைப்பது யார் என்பதை யறியக்கருதி ஒருபால் ஒளித்திருந்தது. அப்போது தானியற்றிய நூற்றளியை யானை வந்து அழிப்பது கண்டு, மனம் புழுங்கி, 'நாம் செய்யும் சிவப்பணிக்கு ஊறுசெய்வதைக் கெடுப்பது நம் கடமை' என்று கருதி, யானையின் துதிக்கைத் துளையின் வழியே புகுந்து அதன் மண்டையைக் குடைந்து, சுறுக்கெனக் கடித்தது. கடித்தவுடன், யானை அதனைத் தாங்கமாட்டாது துதிக்கையை வாய்க்குள்வைத்துக் கதறி விழுந்து மாண்டது. சிலந்தி வெளிவர முயன்ற போது, அது முடியாமையின் உள்ளேயே உழன்று உயிரிழந்தது. அப்போது இறைவன் அங்குத் தோற்றமளிக்க, அவையிரண்டும் தம் முன்னுருவெய்தி இறைவனைப் பணிந்து அருள்வேண்டின. அவ்விருவரையும் நோக்கி ஐயன், 'யானையுருவினின்று நீங்கியவன் முன்போலக் கயிலையை அடைந்திருப்பானாக. சிலந்தி யுருவின் நீங்கிய நீ சோழர் குலத்திலே தோன்றி அரசு பெற்று முடிசூடி, நாடாண்டு, உறுகுறை தீரக் கோயில் திருப்பணிகள் பலவும் செய்து வருக. அவ்வாருகிய நாட்களில், இத்தலத்தினும் மேன்மையுடைய 'அம்பர்' என்னும் தலத்தே நீ சென்று திருப்பணி யாற்றுங்கால், நாம் அங்குத் தோன்றி உனக்கு நம் கணத் தலைமை உதவுவோம்' என்று அருளிச்செய்து மறைந்தனன்.

அக்காலத்தே சிதம்பரத்தில் இருந்து அரசுபுரிந்த சுபதேவன் என்ற சோழவரசன், தனக்குப் புதல்வன் இல்லாக் குறையை நீக்க இறைவனை வேண்டி வழிபட்டுவர, சிலந்தி யுருவின் நீங்கிய மாலியவான், அச்சுபதேவன் மனைவி கமலவதியின் கருவிலே சேருமாறு பரமன் அருள்பாலித்தான். அவ்வாறே கமலவதி கருவுற்று, முறைப்படி மாதங்கள் பத்தும் கழிந்தபின், பொறையுயிர்க்குங் காலம் வர, அவள் வயிறுளைந்தனள். அப்போது சோதிடர் அரசனையணுகி, 'அரசே! இன்னும் ஒரு முகூர்த்த காலம் சென்றபின் குழந்தை பிறந்தால் அது உலகெலாம் புரக்கும் ஒரு பெருந்தகுதியுடையதாகும்' என்றனர். அது கேட்ட அரசன், தன் தேவிக்கு இதனை அறிவிக்க, அவள் அத்தகைய மகப்பேறு கருதித் தன் துன்பத்தையும் தாங்கிக்கொண்டு, தாதியர்களை நோக்கி, 'என் கால்களைக் கயிற்றிற் பிணித்து மேலே தூக்கித் தலைகீழாக ஒரு முகூர்த்தகாலம் கட்டிவைத்து, நல்லோரை வந்தபின் இறக்குக' எனப் பணித்தனள். அவர்கள் அவ்வாறே செய்ய, கமலவதி நல்லோரையில், வலம்புரிச் சங்கம் ஒரு பெரு முத்தை யீன்றதுபோல நன்மகவை யீன்றனள். பிறக்குங் காலம் தாழ்த்தமையின், அம்மகவின் கண்கள் மிகச் சிவந்து விளங்கின. அது கண்ட தாய், 'செங்கண்ணனோ யிங்கு வந்துதித்தானே!' என்றுள். சுபதேவனும் மனம் மிக மகிழ்ந்து, குழந்தைக்குச் செய்யவேண்டிய

சாதகன்மம் முதலியவற்றை முறைப்படி செய்து, அந்தணர்க்கும் ஆதுலர்க்கும் பொன்னும் பிறவும் அள்ளி வீசி, இறைவன் திருவருளை வியந்திருந்தனன். சிவாலயப் பணிகள் செய்யப் பிறந்த மகனும், சேவலங் கொடியுடைய செவ்வேள்போல நாளுக்குநாள் நன்கு வளர்ந்து வந்தார். பதினாறும் ஆண்டில் அவருக்குத் தந்தை அரசை யளித்து முடிகவித்து அரியணை யேற்றினன். அவரும், அரசியற் சுற்றமும் பிறவுஞ் சூழ இனிது செங்கோல் செலுத்தலானார்.

அவ்வாறிருக்கும் நாளில், சிவபெருமா னருளால், அவர் முற்பிறப்பு நினைவுடையவராகி, தம் குறை தீர ஆனைக்காவிலே ஆலயம் அமைக்கக் கருதி அங்குச் சென்றடைந்தார். அங்கே அப்புலிங்கமாகிய பெருமானுக்கு ஆடகப்பொன்னால் திருப்பணி செய்ய நினைத்தபோது, பெருமான் அதனை மறுத்து 'வடக்கே *கெண்டகையாற்றில் கிடைக்குங் கல்லால் திருப்பணி செய்க எனப் பணிக்க, அதனையேற்று அவ்வாறே கோயில் அமைத்து நம்பனைத் தொழுது நல்லருள் பெற்றார். அக்கோயில் யானை உட்புகாத வகையில் அமைக்கப்பட்டது. பின்பு, அங்கமைத்தது போலவே, அவர் நல்லூர், வலிவலம், ஆரூர், சிக்கல், கீழ்வேளூர், ஆறை வடதளி, தலைச்சங்காடு, வலம்புரம், செம்பொன்பள்ளி, மருகல் முதலிய பல தலங்களிலே அழகுறக் கோயில்கள் அமைந்தார். அவ்வாறு செய்து வருங்கால், நம்பன் அருளால் அவர் அம்பரை யடைந்து, அங்கும் தம் கொள்கையின்படி திருப்பணி செய்யக் கருதித் தபதிகள் முதலிய பலரையும் வருவித்து, பெரும் பொருள் வாரி வழங்கிக் கருங்கல்லும் பிறவும் கொணர்வித்துத் திருப்பணியைத் தொடங்கினர். உரிய வேலைகள் பலவும் செவ்வனே நடைபெற, ஆகம விதிப்படி கருப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், நிருத்தமண்டபம், திருவிழா மண்டபம், மடைப்பள்ளி, யாகசாலை, திருச்சுற்றுமாளிகை, மதில், கோபுரம் ஆகிய பலவற்றையும, அம்மைக்கும் பிற ஆவரண தேவர் கட்கும் உரிய கோயில்களையும் உரியவாறு அமைப்பித்து முடித்தபின், அமைச்சர் முதலியோர் சூழ நேரிற் சென்று அனைத்தும் கூர்ந்து நோக்கிக் களிகூர்ந்து, நன்னாளில் கும்பாபிடேகமும் செய்வித்து, நித்திய நைமித்திகங்களும் குறைவின்றி நடைபெற வகுத்து, காலந்தோறும் சென்று அம்பரீசனையும் அம்மையையும், பிறகடவுளரையுந் தொழுது போற்றுவாரானார். இவ்வாறு பல காலம் வழிபாடு செய்திருக்க, அவருக்கு அருள் செய்யத் திருவுளம்பற்றிப் பிரமபுரீசர், முன்பு நாவலின் அடியில் தாம் நவின்றவாறே, தம் சந்நிதியின் வடக்குப் பக்கத்திலே, நாவலின் கீழமர்ந்த தம் திருக்கோலத்தைக் காட்ட, வளவர்கோமான் கண்டு மகிழ்ச்சியில் திளைத்தார். அப்போது பெருமான் அவர்முன் உமையோடும் விடைமேல் தோன்றி, 'புகழ்மிக்க அன்ப! முன்பு நாம்

* கெண்டகை - கண்டகி நதி; இதில் சாளக்கிராமம் நிறைய உண்டு என்பர். கெண்டகைக் கற்பணி செய்த வரலாற்றைத் திருவானைக்காப் புராணத்துட் காண்க.

அருளியபடியே நம் கணத் தலைமை உனக்கு அளித்தோம்; அதனைப் பெற்று இனிது வாழ்க' எனப் பணித்து மறைந்தருளினர். அண்ணலார் அருளியபடியே கோச்செங்கணுர் சிவகணத் தலைமை பெற்றுச் சிவலோக மெய்திச் சிறப்புற்றுர். திரு அம்பரைத் தரிசிக்க வந்த திருஞான சம்பந்தப் பெருமான், தம் பதிகத்திலே சோழநாயனுரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். அம்பர்த் தலத்தில் அமர்ந்துள்ள ஆனைக்கா அமுத-லிங்கேசரை அன்போடு வழிபடுபவர் தேவரும் தொழும் பெரும்பதம் பெற்றுச் சிவலோகம் அடைவர்.

## நந்தன் வழிபடு படலம்

காம்போச தேசத்தரசனுகி, மன்னுயிரைத் தன்னுயிராகக்கொண்டு மாநிலம் புரந்த நந்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் கலைகள் அனைத்தும் கரிசறப் பயின்று, சிவபத்தியிற் சிறந்தவனுகி, சைவவேடம் சிறக்கப் பூண்டு, ஐந்தெழுத்தோதி, மும்மலங்களையும் கழுவுவதற்கு முதல்வனது அருட்புனலை வேண்டி நின்றுன். நற்குணங் கள் அனைத்தும் அமைந்து, காட்சிக்கு எளியனும் கடுஞ்சொல் இல்லாத வனும், ஈகையும் இன்சொல்லும் உடையவனுமாயிருந்த அவன், அழகில் மன்மதனுக்கொப்பானவன்; பகைவருக்கு அச்சந் தருபவன்; அவன் பெருமைகள் அளவிடற்கு அரியன. எல்லாம் நிறைவுறத் தன்னுட்டை அவன் ஆண்டு வருங்கால், வேட்டையில்லாமையால் காட்டு விலங்கு களால் நாட்டுக்கு விளைந்த துன்பங்களைச் சிலர் வந்து கூறினர். அம் மொழி கேட்டலும் மன்னவன், 'நம் வீரர்கள் யாவரும் வேட்டை குறித்து விரைந்தெழுக' எனப் பணித்துத் தானும் தூய நீராடி, நீறணிந்து, நின்மலனைத் தொழுது, அறுசுவையுண்டி அமர்ந்துண்டு, தாம்பூலந்தரித்து, வேட்டைக்கோலம் விளங்கப்பூண்டு, அந்தணர் ஆசி நவில, சூதர், மாகதர் துதிபாட, மங்கல கீதங்களும் வாழ்த்துக்களும் மலியப் புறப்பட்டான். வாதுவன் பட்டத்துக் குதிரையைப் பாங்குற அலங்கரித்துக் கொணர்ந்து நிறுத்தி அடிபணிய, இந்திரனும் கண்டு நாணும்படி ஏற்றமாக அக்குதிரையின்மீதேறி அமர்ந்தான். அவன் கட்டளையின்படி வேட்டைக்குச் சித்தமாக எழுந்த வீரர் பலரும், வில், வாள், வேல் முதலியன தாங்கி, அவனைச் சூழ்ந்தனர். வேட்டைக் குரிய வலையும் வாரும் தாங்கிச் சென்றனர் சிலர்; வேட்டை *நாய்களைக் கையிற்பற்றி மேவினர் சிலர். இவ்வாருகிய குழுவின ரோடும் துடி முதலியன முழங்க, மன்னன் சென்று வனத்தை யணுகினுன். முன்னே சிலர் சென்று காட்டில் வழிசெய்து, ஒருகாதச் சுற்றளவுக்கு விலங்குகள் தப்பிச் செல்ல வகையின்றி வார் முதலிய வற்ருல் வேலி கோலிய பின் விலங்குகளைக் கலைத்து வெருட்டினர்.

* இவ்விடத்து, அந்நாய்களை ஆசிரியர் வருணிக்கும் இயற்கையழகு மிக்க இன்பந் தருவது.

பம்பை, கொம்பு, துடி முதலியவற்றின் முழக்கத்தாலும், வீரர்களின் ஆரவாரத்தாலும், பலவகை விலங்குகள் வெருண்டெழுந்தன. அவற்றையெல்லாம் வீரர்கள் எய்தும், எறிந்தும், குத்தியும், வெட்டியும், நாய்களை யேவிக் கடிப்பித்தும் பலவகையில் மாய்த்து அழித்தனர். சிங்கம், புலி, யானை முதலியவற்றை வேட்டையாடுங்கால் மன்னவனும் தன் வில்லை வளைத்து அம்பு தொடுத்துப் பலவற்றை மாய்த்தான். வனமெங்கும் விலங்குகளின் கதறல் ஒலி மிக்கெழுந்தது. ஒரு புலியைக் குறித்து மன்னன் எய்த வாளி, அப்புலியின் முகத்திற் பாய்ந்து உடலை ஊடுருவி, வாலின்புறத்துச்சென்று வாலோடிணைந்து தோன்றியபோது அப்புலிக்கு வால் இரண்டோ என்னும்படி யிருந்தது. அவனுடைய ஓர் அம்பு, சிங்கம், யானை, புலி ஆகிய மூன்றைக்கொன்று, திரிபுரம் அட்ட பரமன் கணைபோல விளங்கியது. இத்தகைய கடுந்திறல் உடையவனுனாலும் அவன் வேட்டையில், விலங்குகளின் சிறு குட்டிகளையும், சூலுற்ற பெண் விலங்குகளையும், குட்டிகளுக்குப் பால் ஊட்டும் நிலையில் உள்ளவற்றையும், வெயிலின் வெம்மையால் வேட்கையுற்று நீரருந்துமவற்றையும் மாய்க்கவில்லை; எதிர்த்துவரும் வலியுடையவற்றையே எய்து தொலைத்தான். இவ்வாறு வேட்டையாடி வருங்கால் ஆண்புலியொன்று அவனெதிர் தோன்றி, அவனேறிய குதிரையின்மேற் பாய வந்தது. அதுகண்ட அரசன் அதன்மீது அம்பொன்றை எய்ய, அஃது அவ்வம்புக்குத் தப்பியோடியது. மன்னன் குதிரையை விரைந்து செலுத்திப் புலியைத் தொடர்ந்து சென்றுன். புலி ஓரிடத்தில் புகுந்து மறைந்தது. அரசன் அவ்விடஞ்சென்று பார்த்தபோது, அங்கே, பிங்கலாக்கன் என்னும் முனிவன், தன் உடம்பு முழுவதும் புலித்தோலால் போர்த்துக் கண்மூடித் தவம் மேற்கொண்டு நிட்டையில் இருந்தான். சிறிதும் அசைவின்றி நடுதறிபோல் இருந்த அம்முனிவன் உடம்பில் மூடிய புலித்தோலால், தப்பிவந்த புலியே அதுவென்று நினைத்து, மன்னன், கடும்பகழி யொன்றைச் செலுத்தினன். அப்பகழி, வாழைப் பழத்தில் ஊசி நுழைவதுபோல முனிவனுடலிற் பாய்ந்து ஊடுருவவே, முனிவன் குலைகுலைந்து வீழ்ந்து, மலைமகள் கொழுநன் மலரடி நினைவோடு ஆவி நீத்தான். மன்னவன் தன் பிழையை உணர்ந்து, பெரும் பாவத்துக்காளானேமே யென்று மனம் பதைத்துக் குதிரையினின்றும் இறங்கி முனிவனருகே சென்று பார்த்து மூர்ச்சித்து விழுந்தான்; நினைவு வந்ததும், அவன் 'ஐயோ! இதற்கு இனி என்ன செய்வது?' என்று வருந்தி அழலானன். இந்நிலையில், உடன்வந்த அமைச்சர் முதலிய பலரும் அங்கெய்தி, மன்னன் நிலைகண்டு மிகவும் வருந்தி, 'பிழை நேர்ந்துவிட்டது; இது நாம் வேண்டுமென்று செய்ததன்று; இதற்கினி வருந்திப் பயனென்ன?' என்று பலவாறு கூறித் தேற்றவும், தேருனய்த் திகைத்துச் சித்திரம் போல யாதொன்றும் கூருதிருந்தனன் வேந்தன். அப்போது அவன் கண் காண, பேயும் அஞ்சத்தக்க கோரமான தோற்றத்தோடு பிரமகத்தி அவனெதிர்ப்பட்டது. அது, மன்னனை

நோக்கி, 'கடுங்கொலை புரிந்த கயவா! உன்னைக் கொன்றாலன்றி நான் ஒழியேன்' என்று தெழித்து மார்புதட்டி மீசையை முறுக்கிச் சிங்கம் போலச் சீறிற்று. அது தீயெரிவது போலத் தன் வாயைத் திறந்து கொண்டு, 'உன்னை விழுங்குவேன்' என்று மன்னனைக் கிட்டும்; அவன் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும் அவனை விடாது பற்றிப் பலவாறு அலைக்கும்; தன் தோள்களைக் கொட்டி ஆர்த்து, 'என்னோடு போர் செய்ய வா; உன்னை விடேன்; கரும்புபோலக் கடித்து உன்னுயிர் குடிப்பேன்' என்னும். இங்ஙனம் பலவாறு அப்பிரமகத்தியால் அலைப் புண்ட மன்னன், மிகவும் அஞ்சி, உடன் வந்த அனைவரையும் ஊருக்குச் செலுத்தி, ஒருவருமின்றித் தனியே தான்மட்டும் பல தலங்கள் சென்று தரிசிக்கக் கருதினான். அவன் சிவ பூசை செய்யும் சீலமுடையவனா தலால், அதன் பயன் வீண் போகாதன்றோ? பிரமகத்தி அவனை விடாது தொடர்ந்தபோதும், சிவதலங்களைத் தரிசிக்கும் நினைவு நீங்காமல் அவன் நடக்கலானான்.

அவ்வாறு சென்றவன், சீவன் முத்தர் பலர் சென்று இறைஞ்சும் காசியை அடைந்து, கங்கையில் முழுகிச் சுயம்புவான சம்புவைத் தொழுதான். அங்கே அப்பிரமகத்தி அகலாமை கண்டு, 'அது நீங்கும் வரை யெல்லாத் தலங்களையுஞ் சென்று தொழுவேன்' என்றுட்கொண்டு * திருப்பருப்பதம், திருக்காளத்தி, காஞ்சீபுரம், திருவாலங்காடு, திருவொற்றியூர், திருமயிலை, திருவான்மியூர், திருவெண்பாக்கம், திருமாற்பேறு, திருக்கச்சூர், திருவிடைச்சுரம், திருக்கழுக்குன்றம், திருவண்ணாமலை, அறையணி நல்லூர், விருத்தாசலம், திருவதிகை, திருப்பாதிரிப்புலியூர், சிதம்பரம், சீகாழி, புள்ளிருக்கு வேளூர், புன்கூர், திருவெண்காடு, திருக்கடவூர் ஆகிய தலங்களையெல்லாம் தரிசித்துப் போற்றியும், தீராத பிரமகத்தியுடன் மாயூரம் சென்றடைந்தான். அங்கே காவிரியின் இடப தீர்த்தத் துறையில் நீராடிக் கோயில் சென்று அப்பனையும் அம்மையையும் வழிபட்டுத் துதித்து, அங்கு நின்றும் மேற்கு நோக்கிச் செல்லலானான். செல்லுகையில், மூவலூர், திருத்துருத்தி, (இது இப்போது குற்றாலம் என வழங்குமிடமாகும்) அழுந்தூர், ** ஆவடுதுறை, திருக்கோடிகா, கஞ்சனூர், மங்கலக்குடி, குறுக்கை, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், கும்பகோணம், திருவலஞ்சுழி, பட்டீச்சுரம், திருச்சத்திமுற்றம், நல்லூர், ஆவூர், கருகாவூர், திருவையாறு, SS திருநெய்த்தானம், திருவானைக்கா ஆகிய தலங்கள் பலவும் இறைஞ்சிப் போற்றித் திரிசிராமலையிலே தாயுமான வரைத்தொழுது, அங்குநின்று கிழக்கே வந்து எறும்பியூர், திருக்காட்டுப்

* இங்கே 901—911 ஆகிய பாடல்களில் தலங்களைக் கூறும் அழகு மிகவும் அருமையானது.

** இதனை எங்கள் ஆவடுதுறை என்பர் ஆசிரியர். SS இது தில்லை ஸ்தானம் என வழங்கும்.

பள்ளி, திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருப்பாலைத்துறை ஆகியவற்றைத் தரிசித்துப்போற்றி வழுவூர்வீரட்டம் வந்துசேர்ந்தான். அங்கே தொழுதபின், திருப்பாம்புரத்தையும் திருவீழிமிழலையையும் அடைந்து தரிசித்துப் போற்றினான். அப்போதும் பிரமகத்தி அகலாதது கண்டு, 'ஐயோ! இத்தனை தலங்களைத் தரிசித்தும் இப்பழி என்னைவிட் டகன்றிலதே! என்செய்வேன்' என்று மனம் மிகவுளைந்து, பித்தனைப்போலாகி, மேலுங் கிழக்கே சென்றான். அவ்வாறு செல்பவனுக்கு முற்பிறப்பிற் செய்த புண்ணியப் பயனால் ஓர் ஆர்வமும் மனவூக்கமும் உண்டாக, மேன்மேலும் நடந்து சென்று அம்பர் மாநகரின் எல்லையை அடைந்தான். அடைதலும், அவனைப் பற்றி அலைத்து வந்த பிரமகத்தி, அஞ்சி அவனுடலை விட்டுப் பின்தங்கி, மெல்லத் தொடரலாயிற்று. அது கண்ட மன்னன், இது இத்தலத்து நம்பரது அருளே யென்றுட்கொண்டு மனத்துணிவுற்று நடந்தான். புறநகர், இடைநகர், உண்ணகரிற் சில பகுதிகளாகியவற்றைக் கடந்துபோய்ப் பிரமபுரீசர் கோயிலையும், அக்கோயிலின் முன்னே கூடி விளங்கும் முனிவர் குழுவையும் கண்டான். பசியால் வாடும் குழந்தை, தன் தாயைக் கண்டதும் மனம் தளிர்த்துத் தாயினிடம் செல்வதுபோல அவன் விரைந்து முனிவர்கள்முன் சென்று, 'என்துன்பமெல்லாம் தீர்ந்தது'என்றுகூறி அவர்களைப் பணிந்து தரையிற் கிடந்தான். அவர்கள் ஆசி கூறி, 'எழுக' என அவன் எழுந்து நிற்றலும், 'இவன் யாரோ ஓர் அரசன்' எனத் தேர்ந்து முனிவரர் அவனை நோக்கி, 'நீயார்? உன் பெயரென்ன? உன் நாடு எது? உனக்கு நேர்ந்த துன்பம் யாது? இங்கு வந்தது ஏன்? எம்மால் ஆவது ஏதேனும் உளதோ? கூறுக' என, மன்னன் மீண்டும் அவர்களைப் பணிந்தெழுந்து போற்றிப் புகலலுற்றான்: 'காம்போச நாட்டு மன்னன் யான்; நந்தன் என்று பேர் சொல்லப்படுவேன்; நான் வேட்டைமேற் சென்றபோது, புலிப்போத்து ஒன்று என் இலக்குக்குத் தப்பியோட, அதனைத் துரத்தித் தொடர்ந்தேன்; அஃது ஓரிடத்தில் புகுந்து மறைந்தது; அவ்விடத்துச் சென்று பார்த்தபோது, அங்கே, புலித்தோல் போர்த்து அசைவற்று நிட்டையில் இருந்த பிங்கலாக்கன் என்னும் முனிவனைப் புலியென்று தவறாகக் கருதி ஓரம்பெய்தேன். அதனால் அம்முனிவன் இறந்துபடவே, அப்பிரமகத்தி உடனே யென்னைப் பற்றிப் பெரிதும் அலைக்கலுற்றது. நான் செய்வதறியாது திகைத்துப் பின் ஒருவாறு மனந்தேறி, சிவதலங்களுக்குச் சென்று பெருமானைத் தரிசித்து இதனைப் போக்கலாம் என்றுணர்வுகொண்டு, அங்கிருந்து புறப்பட்டு, அளவிறந்த பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு வந்தேன்; அஃதென்னை விடாது பற்றி அலைத்தே வந்தது. இத்தலத்தினை நான் அணுகவே, அது தன் வலிமை யொடுங்கி, என்னுடலை வருத்துதல் தவிர்த்து நீங்கி, மெல்லப் பின்தொடரலாயிற்று. அதனால் இங்கேதோ விசேடமுண்மை யுணர்ந்தேன்; நீங்கள் அதனை யெனக்குணர்த்தி, என்

இடர் முழுதுந்தவிர்த்து என்குல முழுதும் உய்விக்க வேண்டும்' என்று கூறி இறைஞ்சினன். முனிவர்கள் அவனை நோக்கி, 'அரசே! இத்தலத்துக்கு இஃதொரு பெரியகாரிய மன்று; இங்கமர்ந்துள்ள பிரமபுரீசர் கருணையாலே உன் தீமை முழுதுங் கெட்டு நீ மிக்க நன்மை பெறுவாய்; இப்போதே கோயிலினுட் சென்று பெருமானைப் பூசித்து வழிபடுவாயாக' என்றனர்.

மன்னன் அவர்களை அஞ்சலி செய்து விடைபெற்றுச் சென்று பெருந்திருக்கோயிலினுள்ளே புகுந்தான். புகுந்ததும், மலர்கள் பூத்து மாண்புற விளங்கும் அன்னமாம் பொய்கையைக் கண்டு, எத்தகைய பாவங்களையும் போக்கவல்ல அதிலே விருப்புடன் நீராடி, திருநீறுங் கண்மணியும் திகழத் தரித்து, பிரமபுரீசர் சந்நிதியை, அடைந்தான். பெருமானை யெதிரே காண்டலும், மனம் நெக்குருக, அடியற்ற மரம்போல விழுந்து பணிந்தான்; பணிந்தெழுதலும் மீண்டும் விழுந்து பணிதலும், கைகள் தலைமேற் குவித்தலும், பலவாறு போற்றலும், ஆனந்தக் கூத்தாடலும், பாடலுமாகத் தன்னை மறந்து நெடும்பொழுது கழித்துப் பின் வெளியே வந்து, வம்புவனப் பூங்குழல் நாயகியையும், ஆவரண தேவர்களையும் தரிசித்து வணங்கிப் போற்றிக் கோயிலினின்றும் வெளிவந்தான். சிலகாலம் அத்தலத்திலேயே தங்கி, காலந்தோறும் ஆலயஞ் சென்று பிரமபுரீசரையும் பிற கடவுளரையும் பூசித்துப் போற்றுதலை விடாது செய்துவர, அவனைப் பற்றிய பிரமகத்தி சிறிதுந் தொடர்பின்றி விட்டு நீங்கியது. மன்னன் மனக் கிளர்ச்சியும் மகிழ்ச்சியு முடையவனாகி முனிவர்கள் பாற்சென்று அவர்களை வணங்கித் தன் நிலைமையைத் தெரிவித்தான். அவர்களும் அது கேட்டு மகிழ்ந்து, 'மன்னவ, இத்தலத்துக்கு இஃதொரு பொருளன்று; இத்தலத்துப் பெருமானை நெஞ்சுற நினைத்தவளவிலே பெரும் பாவமெல்லாம் தீயிடைப்பட்ட பஞ்சுபோலாகும்; இம்மைப் பயன்களெல்லாம் இத்தலம் குறைவின்றிக்கொடுக்கும்' என்றனர். மன்னன், மீண்டும் அவர்களைப் பணிந்து, 'இங்கே அடியேன் செய்யத்தக்க நற்பணிகளை நவின்றருள்க' எனவேண்ட, அவர்கள் விளம்பலுற்றனர்: 'பரமசிவத்துக்குச் செய்யுந் தருமம், மேலாகச் சொல்லப்படுந் தருமங்கள் எல்லாவற்றிற்கும் மேலானது. ஆதலால், இங்கே ஆலயத்தைப் புதுப்பித்து, நித்திய நைமித்திகங்கள் குறைவின்றி நடத்தற்குரியவற்றை அமைத்து, அந்தணர் முதலியோர்க்கு அன்னமளித்து, இத்தலத்திலே இன்னும் சிவலிங்கப் பிரதிட்டையும் செய்து, சிவபுராணங் கேட்டல் முதலிய நற்பணிகளையுங் கைக்கொள்க; மற்றும் உனக்குத் தோன்றும் நல்லனவற்றையும் நாடிச் செய்க' என்றனர். நந்தன் அவர்கள் சொன்னவற்றைச் சிரமேற்கொண்டு தன்னூர் சென்றடைந்தான்.

அரசன் வருகையறிந்த அமைச்சர் முதலியோர் வந்து பணிந்து, அவன் உற்ற பழி தீர்ந்த வகையை உசாவ, அவனும் நிகழ்ந்தவற்றை

யெல்லாம் எடுத்துரைத்து, அம்பர்த் தலத்தின் பெருமைகளையும் அவர்களுக்குத் தெளியக் கூறினன். பின்பு அத்தலத்திலே முனிவர்கள் தனக்குச் சொன்னவற்றையும் எடுத்துச் சொல்லி, 'நான் மீண்டும் அங்கே சென்று அவர்கள் சொன்னவாறு திருப்பணிகள் அனைத்தும் செய்யக் கருதியுள்ளேன்' என்று தன் மனக்கருத்தையும் அவர்கட்கு அறிவித்து, தன் மைந்தனாகிய உத்தமன் என்பவனுக்கு முடிசூட்டி நாடாளுகையைக் கொடுத்துவிட்டு, மிக்க பொருளோடும் பரிசனங்கள் சிலரோடும் மீண்டும் சென்று அம்பரை அடைந்தான்.

அங்கே தானும் தன் பரிசனங்களும் இருத்தற்கேற்றவாறு வளமிக்க உறையுள் அமைத்து, அதில் இருந்துகொண்டு, கோயில் திருப்பணியைத் தொடங்கி, கோபுரம், விமானம், மண்டபங்கள், சுற்றுக் கோயில்கள், மடைப்பள்ளி, யாகசாலை சுற்றுமதில்கள் முதலிய எல்லாவற்றையும் புதுப்பித்து, தீர்த்தத் துறையையுஞ் செப்பஞ்செய்து குறைவின்றி முடித்தபின், பெருமானுக்குரிய விருதுப் பொருள்கள், வாகனங்கள், வத்திரம், ஆபரணம், பூசைக்குரிய பாத்திரங்கள் ஆதிய பிறவற்றையும் நிரம்பச் செய்வித்து அமைத்தான். நாள், பக்கம், மாதம், வருடம் இவைகளில் நடைபெறும் பல விழாக்களையும், பவித்திரோற்சவம், வசந்தோற்சவம், தெப்பத்திருநாள் முதலிய சிறப்புக்களையும் நன்கு நடைபெறச் செய்தான். அன்ன சத்திரம், தண்ணீர்ப் பந்தல், நந்தனவனம், பசுச்சாலை போன்ற பிற அறங்களையும் செய்வித்து, அடியார்களுக்கெல்லாம் ஆடையும் பொருளும் பிறவும் வாரி வழங்கினன். ஒவ்வொரு தீர்த்தத்தில் ஒவ்வொரு நாளாக அத்தலத்தில் உள்ள தீர்த்தங்களில் முறையே நீராடி, பிரமபுரீசரையும் பிற கடவுளரையும் வணங்கி வழிபடும் நியமம் பூண்டான். முன்பு தவ முனிவர்கள் கூறியவாறே, அந்நகரின் ஒரு பக்கத்தில் புதிய கோயில் ஒன்று அமைத்து 'கயிலாயநாதர்' என்ற நாமத்துடன் சிவலிங்கமொன்றும் தாபித்தான். அக்கோயிலிலும், பிரமபுரீசர் பெருந்திருக் கோயிலிலும் புவனேசத்திலும், பிற கோயில்களிலும் நித்திய பூசை முதலியன நன்கு நடைபெறுதற்கேற்றவாறு வருவாய் அளிக்கும் விளை நிலங்களையும் தோப்புக்களையும் பிறவற்றையும் நிபந்தமாக அமைத்தான். நாள்தோறும் தீர்த்தங்களில் நீராடுதலும் கோயில் சென்று தரிசித்தலும், வலம் வருதலும், புராணங் கேட்டலும் போன்ற நற்கருமங்களை மேற்கொண்டு சிவபத்திச் செல்வத்தை மேன்மேலும் பெருக்கினன். நல்லன எவை உண்டோ அவையெல்லாம் நன்கமைத்து மகிழ்ச்சி மேவ அவன் அங்கே வாழ்ந்திருந்தான்.

இவ்வாறு அவன் வாழ்ந்துவருங்காலத்தில், கோள் நிலை திரிந்து மழை பெயல் மாறி நாட்டிற் பஞ்சந் தோன்றிற்று. அது முற்றி உயிர்கள் பெருந்துன்பத்துக் குள்ளாயின. நீர்நிலைக ளெல்லாம்

வறண்டன. நீரின்மையால் உழுதொழில் இல்லை; அஃதின்மையால் விளைவில்லை; விளைவின்மையால் வருவாய் சுருங்கி, யாவரும் அவரவர்க் குரிய தொழில்களை ஆற்ற வகையின்றி நாடு தேம்பலுற்றது. யாவரும் பெரும்பசிக் கோட்பட்டனர். ஆடவரும் மகளிரும் தமக்குரிய 'வேறெதிலும் நாட்டமின்றிச் சோறு கிடைப்பதெங்கே? எவ்வாறு? என ஏங்கினர். கரவும், களவும், பொய்யும், வஞ்சமும் விஞ்சின; நல்லோரும் தீயராயினர்; சில தீக்குண முடையவரும் வெளிக்கு நல்லவர் போலிருந்தனர்; கோயிற்பூசை முதலியனவுங் குன்றின. இங்ஙனம் வற்கடம் முதிர்ந்த நிலையில், நந்தன், தன் கையிலிருந்த பொருளைக் கொண்டு அங்குள்ளார் அனைவர்க்கும் உதவிப் பசிப் பிணியைச் சிலகாலம் தீர்த்துவந்தான். அப்பொருள்கள் தீர்ந்து போகவே, தன்னுடைய அணிகலன்களையெல்லாம் அழித்துப் பொருள் கொண்டு உதவி வந்தான். அவைகளும் அற்றுப்போகவே, வேறு வகை காணுதவனாகி மனந்தளர்ந்து, கோயில் சென்று பிரமபுரீசன் சந்நிதியை அடைந்து, 'எம்பெருமானே! பஞ்சத்தால் வாடிய உயிர்களுக் கெல்லாம் என் கையிற் பொருள்களும் பிறவும் உள்ள வரையில் அள்ளி வீசி உதவிவந்தேன்; இனி அதற்கு வழியொன்றுங் காண்கிலேன்; உயிர்களின் பசித்துயரும் காணப்பொறேன். எய்ப்பில் வைப்பாகிய தேவரீர் இப்போது இரங்கி யருளாவிடின், நான் வறிதே என் எலும்புக் கூட்டைச் சுமந்திருக்க விரும்பவில்லை' என்று மனமுருகி விண்ணப்பஞ் செய்து, பெருமான் அருளாவிடின் தன்னுயிரைவிடத் துணிவு கொண்டான்.

நந்தனது உட்கோள் உணர்ந்த நம்பெருமான், அவன் முன் தோன்றி, 'அன்ப! நீ வருந்தாதே; அனைவரையும் வருத்தும் இவ்வற்கடந் தீரும் வரை, இக்கோயிலில் யானை முகத்தான் சந்நிதியில் நாள்தோறும் பொற்காசொன்று வைக்கின்றேம்; அதனை நீ பெறுவை யாயின் அனைவர் பசியும் நீங்கும்; எத்தனைபேர் வரினும் எய்யாது உதவவல்லது அக்காசு; பஞ்சம் நீங்கின் அக்காசும் அங்கிராது; நீ கொள்ளும் வண்ணம் படிக்காசு கொடுத்தலால், ஐங்கரனுக்கு அப் படிக்காசு என்பது அடைமொழியாகி, பெயருடன் சேர்ந்து வழங்கும். நீ கவலை தீர்ந்து மகிழ்வோடு செல்' என்றருளி மறைந்தான். நந்தன் மனமகிழ்ந்து விநாயகர் சந்நிதியிற் சென்று கதிரவன்போல் ஒளிவிடும் காசைக் கண்டான். கண்டதும் உவகை மேலிட, கைகுவித்து விநாயகப் பெருமானை வணங்கித் துதித்து, காசைக் கையில் எடுத்துக் கொண்டு ஆடிப் பாடிக் கோயிலை வலம் வந்து, தனதிருப்பிடம் சார்ந்தனன். அப்பொற்காசு கொண்டு, அவ்வூரிலும் வெளியிடங்களிலும் பசித்து வந்தோர் துன்பத்தை அன்றொரு நாளைக்கு அகற்றினன். மறுநாளும் அவ்வாறே காசு கொண்டு, பசித்தோர் எங்கெங்குள்ளனரென்பதைக் கேட்டறிந்து, பசிமாற்றி மகிழ்வித்தனன்.

இவ்வாறே நாள்தோறும் உலவாக் கிழிபோல அக்காசு உதவ, அது கொண்டு, தன்னை நாடி வந்தோர்க் கெல்லாம் மருந்து உதவி மகிழச் செய்தான். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே யாவரன்றே? பஞ்சம் நீங்கும் வரை இத்தொண்டு கைக்கொண்டு, சலிப்பில்லாது செய்து வந்தான் நந்தன். பஞ்சமும் நீங்கலுற்றது; அக்காசும் தோன்றா தொழிந்தது. எங்கும் மழை குறைவின்றிப் பெய்தலால் நீர்நிலைகளெல்லாம் நிரம்பிக் கரை புரண்டன. பயிர்களெல்லாம் தழைத்துப் பயன் மிகத் தந்தன. பசியும் பிணியும் நீங்கி வசியும் வளனும் சுரந்தன. வீடுகளிலும் கோயில்களிலும் விழாக்கள் சிறந்தன. நந்தனும் மனம் பூரித்து மாதேவன் அருளை வியந்து அவன் மலரடி மறவாது போற்றி வாழ்ந்து அத்திருவடி நிழலை யெய்திப் பேரின்ப முற்றனன். இவனைப் போலவே அத்தலத்தில் பூசை வழிபாடுகள் செய்து பேறு பெற்றோர் எண்ணிலடங்கார்.

இவ்வாறு, நைமிசாரணிய வாசிகளனைவரும் கேட்டு மகிழ்வுறச் சூதமா முனிவர் இத்தலத்தின் பெருமைகளையெல்லாம் எடுத்-துரைத்தார். முனிவர்களும் அவரை நோக்கி, 'ஐயனே; நும் அருளால் நாங்களெல்லாம் எங்கள் கருத்து நிறைவுறும் வண்ணம் இத்தலப் பெருமைகளை யுணர்ந்தோம்' என்று அவரைப் போற்றினர். பின்பு அவர்கள் சூதமா முனிவருடனே சென்று அம்பர் மாநகரை யடைந்து, கைகூப்பிக் கோபுரத்தைத் தொழுது, அன்னமாம் பொய்கையை அடைந்து அதில் நீராடி, விபூதி ருத்திராக்கந் தரித்து, ஐந்தெழுத்தோதியவாறே இறைவன் திருமுன் எய்தினர். படிக்காசு விநாயகரை வணங்கிப் படியேறிப் போய்ப் பிரமபுரீசர் சந்நிதியில் மெய் புளகிக்கக் கண்களில் ஆநந்த நீர் பெருகத் தரிசித்துப் போற்றி, வம்புவனப் பூங்குழல் நாயகியையும், மற்றும் உள்ள கடவுளர் சந்நிதிகளையும் தரிசித்துக்கொண்டு, புவனேசம், கயிலாயநாதம் முதலியவற்றையுங் கண்கள் குளிரக் கண்டு வணங்கி முனிவர்களும் சூதமா முனிவரும் தமதிருப்பிடமாகிய நைமிசம் சென்று இன்புற்று வாழ்ந்தனர்.

## நூற்பயன்

இவ்வரிய தல புராணத்தை முழுதும் எழுதுவோர், எழுதுவிப்போர், படிப்போர், படிப்பிப்போர், பொருள் விரித்துரைப்பவர், விருப்பொடு கேட்போர், இதனை முறையாகப் பூசிப்போர் ஆகிய அனைவரும், இம்மையில் நல்லறமும் பொருளும் இன்பமும் எய்தி, மனைவி, மக்கள், கிளைகள் அனைவருடனும் புகழ்மிக வாழ்ந்து, மறுமையில் வானுலகெய்திப் பெரும்போகந் துய்த்துப் பெருவாழ்வுற்றுப் பின்னர்ச் சிவலோகமும் சேர்வர். இப் புராணத்தை யெழுதி வைத்துப் பூசித்து வரும் இல்லங்களில், வறுமையும் பிணியும் வந்தெய்தா; பேய்

முதலியன அணுகமாட்டா; பகைவர் செய்யும் ஏவல் முதலிய தீங்குகளும் ஏதஞ் செய்யா. இன்னும் இப்புராணம், நல்ல பக்தியையும் சிறந்த மதிவன்மையையும் தந்து, பாசபந்தங்களைப் போக்கி, எத்தகைய சித்திகளையும் பேரானந்த முத்தியையும் தரவல்லது.

## வாழ்த்து

*சீர்மிக்க அம்பர்நகர் வாழ்க ;*
*அங்குள்ள சைவர் திருக்குழாம்*
*செழித்து வாழ்க ;*
*வம்புவனப் பூங்குழல் நாயகி வாழ்க ;*
*பிரமபுரீசர் வாழ்க ;*
*அன்னார் மன்றுள் நடமாட எடுத்த*
*குஞ்சிதத் திருவடி இனிது வாழ்க ;*
*எல்லாம் நன்ருகுக.*

*திருச்சிற்றம்பலம்*

---



மகா வித்துவான்

ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்.

(1815—1876)

உ

கணபதி துணை

# திரு அப்பர் புராணம்

## பாயிரம்

காப்பு : விநாயகர்

1. சீர்பூத்த மணங்கவரும் பொறிதனைச்சார்ந் தொன்றியமர்
திறமு நாளும்
ஏர்பூத்த விடுதல்பிறி தொன்றனுக்கின் மையுமிதயத்
தெண்ணி யந்த
நீர்பூத்த பொறியுவப்ப வுரிவிடய மிடமணங்கூர்
நிலந்து ழாவும்
வார்பூத்த புழைத்தடக்கை யொருகோட்டு வாரணத்தை
வணங்கி வாழ்வாம்.

---

### குறிப்புரை

1. *சீர்* - நூல் தொடங்குதற்குரிய மங்கலச் சொல் பூத்தல் - தோன்றுதல் ; விளங்குதல். மணம் கவரும் பொறி - நாசி. தன்னை - துதிக்கையை. நாசியும் துதிக்கையும் ஒன்றையொன்று சார்ந்தும், வேறின்றி ஒன்ருகவும் அமைந்திருக்கும் தன்மையைக் கூறியுள்ள நயம் இன்புறற்குரியது. இடுதல் - அளித்தல் ; அளித்த லாகிய தொழில் கைக்கன்றி வேருென்றுக்கில்லாதது. அந்த நீர் பூத்த பொறி - அந்த இரு தன்மையு முடைய உறுப்பு ; துதிக்கை. உரி விடயம் இட - நாசிக்கும் கைக்கும் உரியவற்றை அளிக்க ; மண் மணம் உடையதாகலின், அதனைத் துழாவு வதன் மூலம் நாசி மணத்தை நுகர அளித்தலும், கை இடுதலைச் செய்வித்தலும் ஒருங்கே நிகழும். ஒரு கோட்டு வாரணம் - ஒற்றைக் கொம்புடைய யானை ; விநாயகன்

### படிக்காசுப் பிள்ளையார்

2. அடிக்காசு மனர்மாற்ரு ரடர்ந்தூறு செயினகல
 லன்றி யாவி
மடிக்காசு குணத்தீரென் றடியார்முன் ஞெடியாமுன்
 மருவுந் தோன்றல்
கடிக்காசு வளர்படப்பூண் முடிக்காசு மதியொடணி
 கடவு ளெங்கள்
குடிக்காசு தவிர்த்தருள்செய் படிக்காசு மழகளிற்றைக்
 குறித்து வாழ்வாம்.

### பிரமபுரேசர்

3. பூமேவு கற்பகநாட் டிமையவரு மமையவரும்
 புகழ்சால் வேந்தும்
பாமேவு மறையானு முறையானுந் திக்கணவற்
 படைத்து ளானும்
மாமேவு மற்றையரு முற்றயரும் பணியேற்று
 வரங்க ணல்கிக்
காமேவு திருவம்ப ரமர்பிரம புரேசர்பதங்
 கருதி வாழ்வாம்.

### பிரமலிங்கம்

4. கள்ளமணுத் துணையுமுருப் பேரன்பின் மிகப்பொலிசெங்
 கண்ணி ஞர்தம்
உள்ளமென வவரியற்று கோயிலெலா முவந்ததன்றி
 யுவகை மேன்மேல்

---

2. கடி காசு - சிறப்புடைய இரத்தினம். படம் பூண் - படத்தையுடைய பாம்பாகிய ஆபரணம். முடிக்கு ஆசு மதி - முடிக்கு இலக்கான சந்திரன். மழ களிறு - இளைய யானை. படிக்காசுப் பிள்ளையார் என்பது தல விநாயகர் பெயர். முன் இரண்டடிகளில், அடியார்கள் தம்மைப் பகைத்துத் தீங்கு செய்பவர்க்கும் எதிராகத் தீங்கு செய்யாமல் விலகிவிடுவராதலால், அத்தகைய தீங்குகள் அவர்களுக்கு நேராதபடி முன்னுகவே காத்தளிப்பவர் விநாயகர் என்பது கூறப்பட்டது.

3. கற்பக நாடு - தேவருலகம். வேந்து - இந்திரன். பா மேவு மறை - கீதமாகவுள்ள வேதம். மறையான் - பிரமன். உந்திக்கண் அவன் படைத்துளான் - திருமால். உற்று - அடைந்து. அயர்தல் - செய்தல். நல்குதல் - கொடுத்தல். கா - சோலை. பிரமபுர + ஈசர் = பிரமபுரேசர். இச் செய்யுளில் தேவர், இந்திரன், திருமால், பிறர் ஆகியோர் பூசித்து வரம் பெற்றமை கூறப்பெற்றது.

4. கள்ளம் - கள்ளத்தன்மை. அணு துணையும் - அணு அளவுகூட. பொலி - விளங்குகிற. செங்கண்ணினர் - கோச்செங்கட் சோழ நாயனர். இவர் சிவபிரா

நள்ளமிளிர் தரும்பிரம வரைக்கோயி லகம்புகுந்து
நவில்வார் பாசம்
தள்ளவளர் பெருங்கருணைப் பிரமலிங்கப் பெருமானைச்
சரணஞ் சார்வாம்.

பூங்குழனாயகியம்மை

5. மணங்கமழுங் கோகனக மலரெனவுட் குறித்திரவி
வருத்த நீர்ப்பான்
இணங்கவிருள் வணங்கலென வாக்கமுத வரமாத
ரெல்லா ருந்தம்
குணங்கிளருங் கருங்குழலும் திடவுவக்குஞ் சேயடிப்பூங்
கோதை யோதை
உணங்கருஞ்சீர் வம்புவனப் பூங்குழனா யகியைமனத்
துறுத்தி வாழ்வாம்.

6. கலைபொருணச் சுநர்விளர்த்த சிவந்தவர
விந்தமெனக் கருதற் கேற்ப
அலைவரும்பொன் வாணியம ரந்நிறத்தா
மரையேயா யமரா ரஞ்சும்
நிலைவிழைநர் பசுங்கமல மெனக்குறித்தற்
கேற்புறவந் நிகழ்ச்சி யேயாய்
மலைவகலப் பொலியுமுக வம்புவனப்
பூங்குழல்பொன் மலர்த்தாள் போற்றி.

---

னுக்குப் பல மாடக்கோயில்களைக் கட்டினார். தம் உள்ளமென என்றதால், அவர் எப்போதும் இறைவரைக் கருதுபவர் என்பதாயிற்று. நள்ளல் - அடைதல். வரைக்கோயில் - மாடக்கோயில். நவில்வார் - துதிப்போர். தள்ள - நீங்க.

5. கோகனக மலர் - தாமரை மலர். வாக்கு அமுத அரமாதர் எனப் பிரிக்க. அர மாதர் - தெய்வ மாதர். பூங்குழல் நாயகி - இத் தலத்து எழுந்தருளியுள்ள அம்பிகையின் திருநாமங்களுள் ஒன்று. தேவ மாதர் தங்கட்கு முகவாட்டம் உண்டாகாமலிருக்க அம்பிகையின் திருவடிகளை வணங்கினர் என்பது கருத்து. இரவுக்குக் கூந்தலும், தாமரைக்கு அரமகளிர் முகங்களும், இரவிக்குத் திருவடியும் உவமைகள்.

6. கலை நச்சுநர் விளர்த்த அரவிந்தமெனக் கருதற்கேற்ப என்றும், பொருள் நச்சுநர் சிவந்த அரவிந்தமெனக் கருதற்கேற்ப என்றும் முறையே கூட்டிப் பொருள் கொள்க. விளர்த்தல் - வெளுத்தல். அலை வரும் பொன் - இலக்குமி. பொன் அமர் சிவந்த அரவிந்தம், வாணி அமர் விளர்த்த அரவிந்தம் என எதிர் நிரனிறையாகக் கொள்க. அமரார் - பகைவர். பசுங்கமலம் - இல்பொருள்; துர்க்கையைக் குறிக்கும்.

கலை வேண்டுபவர்க்குக் கலைமகளாகவும், பொருள் வேண்டுபவர்க்குத் திருமகளாகவும், வெற்றி வேண்டுபவர்க்குப் போர் மகளாகவும் காட்சி அளிக்கின்றாள் என்று கூறப்பெற்றது.

நடேசர்

7. அலங்குமலர்க் கரமூன்று முத்தொழிலாற்
றிடும்யாமொன் றுற்றே மாகில்
இலங்குபய னென்னையென வெண்ணுபுமற்
றிரண்டுநவிற் றிருதா ளுள்ளும்
கலங்குதறீர்த் தருளொன்றைக் காட்டிடுதல்
பூண்டொருகை கவியா நிற்கத்
துலங்குமணி மயமன்று ணின்றுநடம்
புரிமுதலைத் தொழுது வாழ்வாம்.

சிவகாமியம்மை

8. தனக்கெனவொன் றுயினும்வேண் டாதவனே
பெருங்கருணைச் சத்த னுளும்
மனக்கினிய சத்தியுமத் தகையளே
யெனப்புகலும் வார்த்தைக் கேற்பச்
சினக்குமெழு பவப்பகைதீர்ந் தெவ்வுயிருஞ்
சிவானந்தத் தெண்ணீர் மூழ்க
வனக்கனக மன்றவன்செய் நடங்காணும்
பராபரையை வணங்கி வாழ்வாம்.

தட்சிணாமூர்த்தி

9. செய்தொழிலி னளவுமருட் சத்திபதி
தலினளவுஞ் சித்தாந் தத்தர்
எய்பொருளி னளவுமுத்தி யிருப்பளவு
மத்துவிதத் தியல்புந் தேறக்

---

7. இச் செய்யுளின் கருத்துப் பின்வரும் பாடலாலும் விளங்கும் :

'தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
வூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு' (உண்மை விளக்கம் 36)

நடராஜர் பஞ்ச கிருத்தியங்களையும் தம் நடனத்தால் புரிகின்றனர் என்பது இப் பாடலால் விளங்குவது காண்க.

8. சத்தன், சத்தி - இறைவனும் தேவியும். பவம் பகை - பிறப்பாகிய பகை. வனம் கனக மன்று - அழகிய பொன்னம்பலம். இறைவன் புரியும் நடனத்தைக் காண்பவர் பராபரை என்பது ஐதிகம்.

9. சின்முத்திரையின் விளக்கம் இங்குத் தரப்பெறுகின்றது. சித்தாந்தத்தர் - சைவ சித்தாந்திகள். ஆல் அடி வாழ் அரசு - கல்லால மரத்தின்கீழ் விளங்கும் தட்சிணாமூர்த்தி. ஆல் அடி வாழ் அரசு என்றது ஒரு நயம்.

கொய்மலர்நே ரொருகைவிர லொவ்வொன்று
மடக்கியிணை கூட்டி யான்றோர்
மெய்க்கெழும வினிதுணர்த்தி யாலடிவா
முரசடியை விரும்பி வாழ்வாம்.

வேறு

வைரவர்

10. சுவைமுனந் தெரிந்து பின்புதற் குதவுந்
தூத்தவ வேட்டுவர் பொருவச்
செவைமலர்க் கிழவன் றலைச்சுவை முன்னந்
தெரிந்துபின் கைக்குத வுகிரும்
நவைகொண்மா னெய்த்தோர்ச் சுவைமுனந் தெரிந்து
நயந்நுபி னத்தலைக் குதவும்
கவைபடு திறற்சூ லமுங்கரங் கொண்ட
கடவுடன் சேவடி போற்றி.

வேறு

படிக்காசு விநாயகர்

11. பாதகங்கைக் கொண்டுழலும் படிறர்தமக்
கொருஞான்றும் பாலி யாது
போதகங்கைக் கொண்டருச்சித் திடையறுப்
பேரன்பு புரித லாய
வேதகங்கைக் கொண்டவர்க்கே யுவப்புதவக்
கொண்டமரும் விதமா லென்ன
மோதகங்கைக் கொண்டமரும் படிக்காசு
மழகளிற்றை முன்னி வாழ்வாம்.

---

10. இச் செய்யுளில், வயிரவக் கடவுள் பிரமனுடைய ஐந்தாம் தலையைத் தம் நகத்தாற் கிள்ளியதும், பின்பு திருமாலின் உடலிலிருந்து சூலத்தாலே குத்திக் கவர்ந்த குருதியைப் பிரம கபாலத்தில் ஏந்தியதுமான வரலாறுகள் குறிக்கப் பட்டுள்ளன. தூ தவ வேட்டுவர் - கண்ணப்பர். செவை மலர் – செந்தாமரை. நவை - குற்றம். நெய்த்தோர் - இரத்தம். நயந்து - விரும்பி. கவைபடு - பிளவு பட்ட.

11. படிறர் - கீழ் மக்கள். பாலியாது - அருள் செய்யாமல். போது அகங்கை கொண்டு - பூக்களைக் கையில் ஏந்தி. வேதகம் - பொன். விதமால் ; ஆல் - அசை.

படிக்காசு விநாயகர் மோதகம் கையில் கொண்டுள்ளமை, அவர் அன்பர்க்குப பொன்காசு கொடுக்க வைத்திருப்பது போன்றது என்று கூறப்பட்டது.

## முருகப் பெருமான்

12. வள்ளியபங் கயக்கிழவன் முடிகொடுத்த
லொடுவணங்கி மற்றை வானோர்
தெள்ளியபொன் முடிகொடுத்த புறச்சுவட்டுப்
பொலிவினொடுஞ் சிறிய நாயேம்
கொள்ளியசூட் டலினெமது முடிகொடுத்த
வகச்சுவடுங் குலவக் கொள்ளும்
ஒள்ளியகை காலொடம ரொருமுருகப்
பெருமானை யுன்னி வாழ்வாம்.

வேறு

## திருநந்தி தேவர்

13. சிகரமே வியகை லாயஞ் சிறப்புறக் காத்த லோடும்
மகரமே வியநீர் வைப்பும் வானமு மதித்து நாளும்
பகரமே வியபே ராளன் பரசிவ னவனப் பேர்மேல்
அகரமே வியபே ருங்கொ ளண்ணலை யெண்ணு வாமே.

## அகத்தியர்

14. அறந்தரு தீக்கை பல்ல வவற்றுளும் பரிசத் தான்முத்
திறந்தரு மலக்கோட் பட்ட வுயிரெலாஞ் சிவமாச் செய்வேம்
நிறந்தரு முலகத் தென்று நிகழ்த்தல்போ னெடிய மாலைத்
திறந்தரு சிவமாச் செய்த செந்தமிழ் முனிதாள் போற்றி.

---

12. முருகப் பெருமானுடைய திருவடிகளிலே பிரமனும் மற்றைத் தேவர்களும் தங்கள் முடிபட வணங்குதலால், புறச்சுவடும், அடியாருக்குத் தம் கரங்களாலும், திருவடிகளாலும் அருள் செய்தலால் அவற்றிலே அகச்சுவடும் உண்டாயின என்பது திரண்ட பொருள். வானோர் முடிகள் புறச்சுவட்டைக் கொடுத்தன என்க. 'சிறிய நாயேம்' என்றது அடியார்களை. கொள்ளிய - செய்யிய என்னும் வாய்பாட்டெச்சம். அடியார்களுக்கு அவர்கள் முடியிலே கையையும் காலையும் சூட்டியருளுதலால் அக் கைகால்களிலே அகச்சுவடு பட்டன. அகம் - உட்புறம்.

13. மகரம் மேவிய நீர் வைப்பு - பூவுலகம். பரசிவன் அ பேர் மேல் அகரம் மேவிய பேர் - அபரசிவன்; இது நந்தி தேவருக்குரிய பெயர்களுள் ஒன்று; 'அபர சிவமெனும் நந்தி தேவனருள் குறித்து வாழ்வாம்'—(திருத்தினை நகர்ப் புராணம்)

14. பல்ல - பல. பரிசம்; ஸ்பரிசம். தீக்ஷை, நயன தீக்ஷை முதலிய எழு வகையானது. அவற்றுள், பரிச தீக்ஷை என்பது ஆசிரியன் தன் பரிசத்தால் மாணவற்குச் செய்யும் தீக்ஷை ஆம். முத்திறம் தரும் மலம் - ஆணவம், மாயை, கர்மம் என்பன. அகத்தியர் திருமாலைச் சிவமாக்கியது திருக்குற்றாலத் தலத்தில் ஆகும். செந்தமிழ் முனி - அகத்தியர்.

## திருஞான சம்பந்தர்

15\. அளிகிளர் சரியை யாதி யாற்றுந ரடையும் பேறு
தெளிகிள ரீதீ தென்று தெரிக்குநூ லிறைக்கு மாருக்
களிகிளர் திரும ணத்திற் கலந்தநாற் றிறத்தெல் லோரும்
ஒளிகிளர் சோதி சேர வுறுத்தினர்க் கடிமை செய்வாம்.

## திருநாவுக்கரசர்

16\. ஆலம்பெற் றிருண்ட கண்டத் தண்ணல்பா னேமி கொள்ளக்
காலம்பெற் றலரொன் றற்காக் கண்ணிடு மால்போ லாது
சீலம்பெற் றருமை யாமோர் செந்தமிழ்ப் பதிகம் பாடிச்
சூலம்பெற் றுயர்ந்த வையர் துணையடி முடிமேல் வைப்பாம்.

## சுந்தரர்

17\. அதிர்சினக் கூற்றுக் கண்டோ ராற்றினுண் முழுகி மேனி
பிதிர்தர வேறு தாங்கிப் பிறங்குவை குந்தஞ் சார்ந்த
கதிர்மணி வண்ண ணைக் காமர்வெண் களிற்றின் மேற்கொண்
டெதிரிறண் கயிலை சார்ந்தா ரிணையடி முடிமேல் வைப்பாம்.

---

15\. அளி - அன்பு; அருளும் ஆம். சரியை ஆதி; சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. நூலிறை - வேதம். நால் திறத்து எல்லோரும் - நால் வகை வருணத்தோரும். உறுத்தல் - செலுத்துதல். இங்குக் கூறியது திருஞான சம்பந்தர் வரலாற்றில் திருப்பெருமண நல்லூரில் நடந்த நிகழ்ச்சியைக் குறித்ததாம்.

16\. ஆலம் - விடம். இருண்ட கண்டத்து அண்ணல் - சிவபிரான்; நீல கண்ட மூர்த்தம். நேமி - சக்கரம். அலர் ஒன்றற்காக கண் இடும் மால் : திருமால் சிவபிரான்பால் சக்கராயுதம் பெறும்பொருட்டுத் தாமரை மலர்களால் அருச்சனை புரியும்போது, அம் மலர்கள் ஆயிரத்துள் ஒன்று குறைய அவர் தம் கண்ணைப் பிடுங்கி அருச்சித்து, அப் படையைப் பெற்றனர் என்பது வரலாறு. இது திருவீழிமிழலையில் நடந்தது என்பர். நாவுக்கரசர் சூலக்குறி தம்மீது பொறிக்கப்பெற்றது திருத் தூங்கானை மாடத்தில்.—(பெரிய புராணம்; திருநாவுக்கரசு நாயனார் புராணம் 152)

17\. இச் செய்யுளிற் கூறப்பெற்ற வரலாறு இராமாயணம் உத்தர காண்டத்தில் உள்ளது. இராமபிரான் பூவுலகில் தங்கவேண்டிய காலம் கடந்ததை இயமன் வந்து தெரிவிக்க, இராமபிரான் தன் சுற்றத்தாரோடும் சரயூ நதியில் முழுகி, தன் மூல உருக்கொண்டு வைகுந்தம் சார்ந்தனன் என்பது வரலாறு. ஆறு - சரயூ. கதிர் மணி வண்ணன் - இராமபிரான். எதிர் இல் தண் கயிலை என்க. சுந்தரர் கயிலை சார்ந்த வரலாற்றைப் பெரியபுராணம் வெள்ளானைச் சருக்கத்திற் காண்க.

### திருவாதவூரர்

18. புத்தனாய் நூலொன் றோதிப் புன்மையே புரிந்தோ மிந்த
அத்தனாய் தரினென் னாகு மென்றுமா லச்சங் கொள்ளச்
சுத்தனா யவனா லேற்றார் தொகையெலாஞ் செக்கி லிட்ட
முத்தனாய் மணிநேர் வார்த்தை முதல்வன்றாண் முடிமேற்
கொள்வாம்.

### சண்டேசர்

19. வலனுயிர் குடித்த தோன்ற லொருபசுப் புரக்கு மாண்பில
கலகமென் னில்ல மேவல் கண்டுமற் றதற்கஞ் சாது
நலனமை சேய்ஞ லூரி னாளுமோ ரிடையூ றின்றிப்
பலபசுப் புரந்த வையன் பாததா மரையுட் கொள்வாம்.

### அறுபத்துமூவர்

20. மாதக வுயர்நீ றுங்கண் மணியுமைந் தெழுத்தும் போற்றிப்
போதகச் சரியை யாதி நான்கினும் பொருந்தங் கொண்டு
மேதக வுலக மாதி மேவிய வறுபான் மூவர்
பாதக மலமே யெங்கள் பாதக மலஞ்சி தைக்கும்.

---

18. மால் புத்தனாய் நூலொன்றோதியது திரிபுராதிபரைச் சைவ சமயக் கொள்கையினின்றும் பிரித்தற்கு என்க; திருவதிகைப் புராணம், 'திருமால் பௌத்தரான படலம்' காண்க. அத்தன் ஆய்தரின் என் ஆகும் எனப் பிரிக்க. அவன் நூல் ஏற்றார்: பௌத்தர்கள். புத்தரைச் செக்கிலிட்ட வரலாறு திருவாதவூரர் புராணத்திலும், திருவிளையாடற் புராணத்திலும் காண்க. மணி - மாணிக்கமணி.

19. வலனுயிர் குடித்த தோன்றல்: வலாரி - இந்திரன். இந்திரன் பசுவினால் கலகமடைந்தது; 'வலாசுரனுடன் யுத்தம் செய்து ஆற்றாது அவனை என்ன வரம் வேண்டும் என்ன, வலன், உனக்கு என்ன வரம் வேண்டுமென்ன, எனக்கு நீ யாகப் பசுவாக வேண்டுமென்று வேண்டி அவ்வகை பெற்று அவனைக் கொன்றனன்'. (அபிதான சிந்தாமணி, பக்கம் 157); ஐயன் சேய்ஞலூரில் பசுக்களைப் புரந்த வரலாறு பெரிய புராணம் சண்டேசுர நாயனார் புராணத்திற் காண்க.

20. கண்மணி - உருத்திராக்கம். சரியை ஆதி நான்கு; சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. உலகம் ஆதி; சாலோகம், சாமீப்யம், சாருப்யம், சாயுச்சியம் என்பன. பாத கமலமே எங்கள் பாதக மலம் சிதைக்கும் என்க.

## வேறு

### சோமாசிமாற நாயனார்

21. வாசி மாறன் வழிச்செல லென்பது
சீசி மாறன்பர் செவ்விதென் னார்களார்
நேசி மாறன்வில் லோன்றொழு நீர்மைச்சோ
மாசி மாறன் மலர்க் கழல் போற்றுவாம்.

### கோச்செங்கணான்

22. நங்க ணான்முக னண்ண னெழுதிட
வெங்க ணன்யமன் மேவான் வருத்துற
அங்க ணனரு ளாலுயர்ந் தான்றகோச்
செங்க ணனடி சென்னியி ருத்தினே.

### சேக்கிழார்

23. ஓங்கு சைவத் துயர்பரி பாடையும்
வீங்கு பேரொளிப் பத்திசெய் மேன்மையும்
தேங்கு பேறுந் தெரித்தருள் சேக்கிழான்
பாங்கு சேர்மலர்ப் பாதம் பரசுவாம்.

### அடியார்கள்

24. அம்ப ரீசற் ககில பணிகளும்
உம்பர் போற்ற வுஞற்றுமெய் யன்பரும்
இம்பர் மற்றுள சைவத்தி யாவரும்
நம்ப ரேயென நாந்தொழ மேவுவார்.

---

21. வாசி - வேறுபாடு ; 'ஈசனிலைமைக்கு மேனை யிமையோர் நிலைக்கும் வாசியுரை' (ஏகாம். உலா ; 483). மால் + தன் = மாறன். மால் - மயக்கம் ; பாச வினைகளைக் குறித்தது. அன்பர் செவ்விது என்னார்கள் எனப் பிரிக்க. ஆர் - ஆத்திகள் - தேனும் ஆம். ஆர் நேசி - சோழன். மாறன் - பாண்டியன். வில்லோன் - சேரன். சோமாசி மாறனார் அம்பர் நகரில் வாழ்ந்த ஒரு நாயனார்.

22. நங்கள் நான்முகன் எழுதிட நண்ணான் என மாற்றுக. எழுதிட - தலையில் எழுத ; இது பிறப்பைக் குறித்தது. வெம் கண்ணான் - யமன். வருந்துற மேவான் ; இஃது இறப்பைக் குறித்தது. அம் கணன் - சிவபெருமான். ஆன்ற - மேம்பட்ட. இருத்தின் - உள்ளத்தில் பொருத்தினால். (பிரதிபேதம்) இருத்தினேன்.

23. பரிபாடை - குறியீடு. பத்தி = பக்தி - அன்பு. பரசுதல் - துதித்தல். சேக்கிழார் சைவத்தைப் போதித்து, பக்தியின் மேன்மைகளை அறிவித்து, பக்தர்கட்குக் கிடைக்கலாகும் பேறு இன்னது என்பதையும் தெரிவித்தவர் என்று கூறப்பெற்றது.

24. அகிலம் - எல்லாம். இம்பர் - இவ்வுலகம். நம்பர் - சிவபிரான் (சூடா) அடியார்களைச் சிவபிரானாகவே கருதித் தொழ வேண்டுமென்பது சுட்டப்பெற்றது.

### வேறு

நமச்சிவாய தேசிகர்

25. இறுதியில் பேரா னந்த வின்பமெய் வுயிரு மேவ
மறுவில்வண் டுறைசை நாளு மன்னிவாழ் நமச்சி வாயன்
நறுமலர் சமழ்க்கும் பாத நம்முடிக் கணியப் பெற்றேம்
பெறுமவற் றிதற்கு மேலாப் பெறுவதொன் றுண்டு கொல்லோ.

அம்பலவாண தேசிகர்

26. அருமறை பொலிகோ முத்தி யம்பல வாண தேவன்
கருமல மூலத் தோடு கருகுபு கேட்டை மேவப்
பொருவருஞ் சோதி யத்தம் பொருந்தவைத் தென்னை யாண்டு
திருவடி புக்கில் செய்தான் செய்வதொன் றிதன்மே லுண்டோ.

### வேறு

குரு பரம்பரை

27. ஆயகை லாய பரம்பரைத் திருவா
வடுதுறைச் சுப்பிர மணிய
தூயவா ரியன்போ தத்தின்மெய் கண்டான்
றெக்கசித் தியினரு ணந்தி
ஏயவொண் பிரகா சத்துமா பதியே
யென்பரைம் பதமுணர்த் துதலான்
மேயநா நமச்சி வாயனென் றெடுத்து
விளம்புதுந் தலைமைகொண் டென்றும்.

---

25. நமச்சிவாய தேசிகர் - திருவாவடுதுறை யாதீனத்தை ஸ்தாபித்த முதற் குரு. துறைசை - திருவாவடுதுறை. சமழ்த்தல் - நாணுதல்; பாதத்தைக் கண்டு மலர் சமழ்க்கும் என்க.

26. கோமுத்தி - திருஆவடுதுறை. அத்தம் - கை; பரிசதீட்சையைக் குறித்தது. திருவடியைப் புக்கிலாகச் செய்தான் என்க. ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் பதினைந்தாம் பட்டத்தில் திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக விளங்கியவர். ஸ்ரீ பிள்ளையவர்களைத் தம் ஆதீன வித்துவானாக அமைத்துக்கொண்டவரும் இவரே யாவர்.

27. போதத்தின் மெய்கண்டான் - சிவஞானபோத ஆசிரியரான மெய்கண்டார். சித்தி - சிவஞான சித்தியார்; இதன் ஆசிரியர் அருணந்தி சிவாசாரியார். ஒண் பிரகாசம் - சிவப்பிரகாசம் என்னும் நூல்; இதன் ஆசியரியர் உமாபதி சிவாசாரியர். இவர்களோடு சுப்பிரமணிய ஆரியனையும் கூட்டி ஐம்பதம் உணர்த்தினமை கூறினர். நமச்சிவாயன் - ஆதீனத்தை ஸ்தாபித்தவர். ஆசிரியர் காலத்து ஆதீனகர்த்தரான ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரைப் புகழ்ந்தது.

## வேறு

### நூல் செய்வித்தோன்

28. சொற்கொண்ட திருவம்பர் நகர்புரக்குங் கோமான்
நாயகங்கா குலன்மேழித் துவசன்மணக் குவளை
கற்கொண்ட புயத்தணிவோ னிராமலிங்க வள்ளல்
கனதவத்தில் வந்துதித்த வேளாளர் பெருமான்
விற்கொண்ட புருவவய லார்பொல்லா னென்று
விளம்புநல்லா னல்லொழுக்க முருக்கொண்டா லனையான்
நற்கொண்டல் பொருங்கரத்தான் சைவசிகா மணிநன்
றுவலர்கொண் டாடுவே லாயுதபூ பாலன்.

## வேறு

### நூல் வரலாறு

29. பெருமையிற் பொலியு மம்பர்ப் பெருந்திருக் கோயின் மேய
கருமையிற் பொலியுங் கண்டக் கடவுளார் திருப்பு ராணம்
அருமையிற் பாடு கென்ன வடமொழி யனைத்து மாராய்ந்
தொருமையிற் பாட லுற்றேன் றமிழினு லுரை மருதே.

### அவையடக்கம்

30. பிரமனார் பூசை கொண்டு பெருந்திருக் கோயின் மேய
பரமனார் புராணம் பாடும் பண்புனக் கில்லை யென்னில்
உரமனா ரணங்கி னோர்முன் னோரைவெஃ றுரும்பு போலத்
திரமனா ரருளி லேசஞ் சேர்தரி னுண்டா மன்றே.

---

28. சொல் - புகழ். மேழித் துவசன் - வேளாளன். குவளை மாலை - வேளாளர்க்கு உரியது. விற்கொண்ட புருவ அயலரர் பொல்லான் என்று விளம்பும் நல்லான்; அயலார் - தன் மனைவியல்லாத பிற மகளிர். கொண்டல் - மேகம். இந் நூல் செய்வித்தவர் பெயர் முதலியன இங்குக் கூறப்பெற்றன.

29. பொருள் விளக்கமாயுள்ளது.

30. உரம் மன் ஆர் அணங்கினோர் முன்னோரை - மார்பிலே இலக்குமியை உடைய திருமால் முதலிய தேவர்களை. வெல் துரும்பு போல - வென்ற ஒரு துரும்பைப் போல. ஒரு காலத்தில் திருமால் முதலிய தேவர்கள், தாம் தாமே பெரியவர் என்று செருக்கடைய, சிவபிரான் ஒரு யட்சனாக அவர்கள் முன் தோன்றி, ஒரு துரும்பைக் கீழே நட்டு, அதை அசைப்பவர் பெரியவர் என, அனைவரும் முயன்று தோல்வியுற்றனர் என்பது வரலாறு. வெல் துரும்பு எனப் பிரிக்க.

31. செறிகுறி லுடையைந் தோடு
குறிலிலா விரண்டுஞ் சேர்த்து
மறிவினெட் டுயிரே மென்று
மாத்திரை நோக்கிக் கொள்வார்
அறியிய லுடைய பாவோ
டியலிலா வடியேன் பாவும்
குறியிலான் சரித நோக்கிக்
குறிகொள்பா வென்றே கொள்வார்.

32. நன்சொலே கொண்டு போற்ற னன்மையா மதுமுட் டுற்ருல்
புன்சொலாய் வந்த கொண்டு போற்றலுங் கடன்மை யாகும்
கொன்சொலார் நறிய சந்தக் குறடுமுட் டுற்ற தாலே
முன்சொல்வார் மூர்த்தி யார்தம் முழங்கைதேய்த் திட்டா
[ரென்று.

33. விராட்டொடு சம்ராட் டென்னு நாமத்தும் விசேட மாகச்
சுராட்டெனு நாமம் பூண்ட சுயம்பிர காசன் மன்ற
மராட்டவன் மதியொ டும்பாம் பணிந்தமை மதிக்கி னென்ருே
டிராட்டையி னெழன்முற் பாவோ டென்னது மேற்றற்
[கன்ருே.

---

31. குறில் இலா இரண்டு - ஐயும் ஔவும். மறிவு - கேடு. குறியிலான் - சிவபிரான். குறிகொள்ளல் - மதித்தல். குற்றெழுத்துப் பெருத ஐயையும் ஔவையும் நெடில் என்று கொள்வதுபோல, என் பாவையும் உலகம் மதிக்கட்டும் என்கின்ருர்.

32. கொன் - பெருமை 'கொன்னூர் துஞ்சினு மியாந்துஞ்சலமே' (குறுந். 138) சந்தக்குறடு - சந்தனக்கட்டை. மூர்த்திநாயனுர் வரலாறு பெரிய புராணத்திற் காண்க. அவர் இறைவனுக்குப் பயன்படச் சந்தனக் கட்டை கிடைக்காமற் போக, வாளாவிராமல் தம் முழங் கையைத் தேய்த்துச் சந்தன முண்டாக்கினுர் என்பது வரலாறு.

33. விராட் - பிரபஞ்ச ரூபமான பரப்பிரமம். சம்ராட் - ஏகசக்ராதிபதி. சுராட் - ஏகாதிபத்திய முடையவன், மன்று அமர் ஆட்டவன் எனப் பிரிக்க. பெருமான் மதியோடு பாம்பையும் ஒப்ப அணிதல் சிறப்புடைய முதன்மையான பாக்களோடு என்னுடையதையும் ஏற்றல் தகுமென்பதைக் காட்டுகிறது என்றவாறு. ஒன்ருேடு இரு ஆட்டையின் - ஒன்றும் இரண்டும் கூட்டிய மூவாட்டைப் பிராயத்தில்; எழல் முன்பா - எழுந்ததாகிய முதன்மையுடைய பாட்டு. திருஞானசம்பந்தப் பெருமான் மூன்ரும் பிராயத்திலே ஞானப்பாலுண்டு பாடிய திருப்பாட்டைக் குறித்தது.

34. பெரியர்போ லியானும் பெம்மான் பேரருட் புராணங் கூறல்
தெரிதரின் மாயோன் போற்சிற் றெறும்புமண் முழுது முண்
[பான்
புரிவொடு மெழுஞ்சற் ருய போதிற்றே னுண்ண னீத்துப்
பரிவினீ முனிபோ லாழி யுண்ணவும் படரு மன்றே.

35. இழிதிணை யுயிரு மெய்யு மிலங்கறி வொடுமி யைந்தே
இழிபொழிந் துயர்புற் ருற்போ லிறையவன் சரிதத் தோடும்
இழிதக வுடையேன் சொல்லும் பொருளுமுற் றுறவி யைந்தே
இழிபொழித் துயர்வு பூணு மென்பதற் கைய மென்னே.

வேறு

ஆக்கியோன் பெயர்

36. நீண்டதிரு மால்பிரமன் காணரிய
வடிமுடியோ னிலவு மேன்மை
பூண்டதிரு வம்பர்மான் மியமுழுதுஞ்
செந்தமிழாற் புனைதல் செய்தான்
காண்டமலி சுனைவளஞ்சா றிரிசிரா
மலைவளருங் கருணை யாளன்
மாண்டகலை முழுதுணர்ந்த மீனட்சி
சுந்தரநா வலவ ரேறே.

பாயிர முற்றியது.

(திருவிருத்தம்—36)

---

34. சிற்றெறும்பும் எழும் என இயைக்க. சற்று ஆயபோதில்-சிறிது நேரத்தில். தேன் உண்ணல் நீத்து, பரிவின் ஈ எனப் பிரிக்க. ஈ-தேனீ. முனி-அகத்திய முனிவர். திருமால் மண்ணுண்டானென்று சிற்றெறும்பு தானும் மண்ணுண்ண முயன்றது போலும், அகத்தியர் கடல் குடித்தார் என்று ஈ கடல் குடிக்கத் துணிந்தது போலும், பெரியோர் புராணம் பாடினர் என்று தாமும் பாடத் தொடங்கினதாக ஆசிரியர் அவையடக்கம் கூறுகின்ரூர்.

35. உயிரும் உடலும் தனித்தனியே அஃறிணைகளாயினும், அவை கூடி ஆறறிவு படைத்த மக்களாயின் உயர்திணை ஆமாறு போல், தம் சொல்லும் பொருளும் இழிதகவுடையவேனும் அவை கொண்டு இறைவன் சரிதை கூறுதலால் அவையும் பெருமை பெறும் என்ரூர்.

36. காண்டம்-நீர். சுனை வளம் சால் திரிசிராமலை.

# 2. திரு நாட்டுப் படலம்

37. புண்ணிய வுருவத் தாய்வம் புவனப்பூங் குழலா ளோடும்
தண்ணிய பிரம லிங்கத் தம்பிரா னினிது மேவி
அண்ணிய வுயிர்கட் கின்ப மருள்செயு மம்ப ராதி
நண்ணிய வயங்கு சோழ நாட்டணி சிறிது சொல்வாம்.

38. பரன்வலக் கட்கு லத்துற் பவித்தவன் வழியு தித்து
விரவுமற் றவற்கு டுக்கை கொடுத்ததைக் கொடிமீ தேற்றி
உரவுகொ ளவன்றோட் டாரு ளொன்றுகொண் டுவப்புற் றந்த
வரனையே தொழுவோ ராளு மாண்பது சோழ நாடு.

39. ஈதியா முரைப்ப துண்மை யிரட்டுற மொழிதல் செய்தாம்
ஆதிநூ லாய வேத மாகமம் புராண மற்றும்
ஓதிய மிருதி யெல்லா முணருநீ ராய வாற்றால்
தீதிலா வண்ண முண்டு தேக்கெறி வதுசோ ணாடு.

40. ஒளிர்சிவ லோகங் கண்ட வொருவன்றென் னாடு நீங்கித்
தளிர்செறி பொழிற்றன் பாலோர் தலத்தடைந் தகலா னாகிக்
குளிர்பணி யனைத்துஞ் செய்து கொள்ளரு மின்ப மேவி
மிளிர்திற மகிழ்ச்சி மேன்மேல் விளைத்தது சென்னி நாடு.

---

37. புண்ணிய உருவம் தாய் எனப் பிரிக்க. வம்புவனப் பூங்குழலாள் - அம்பிகையின் திருநாமம். அம்பர் ஆதி நண்ணிய - அம்பர் முதலான தலங்கள் அமையுமாறு.

38. பரன் வலக்கண் குலம் - சூரிய குலம். உற்பவித்தவன்: வைவஸ்வத மனு. அவற்கு உடுக்கை கொடுத்தது - புலி. அவன் தோள் தாருள் ஒன்று - ஆத்திமாலை. சோழர் சூரிய வமிசத்தவர்; புலிக் கொடியும் ஆத்திமாலையும் கொண்டவர்; சிவனையே தொழுவோர் என்பன கூறப்பெற்றன.

39. இரட்டுற மொழிதல் - இரு பொருள்படக் கூறுதல். பொருள் 1. வேதம் முதல் ஸ்மிருதி ஈருகிய எல்லாவற்றையும் முறைப்படி அறிந்து விளங்கும் பெருமக்களை யுடையது சோழ நாடு; பொருள் 2. வேதம் முதல் ஸ்மிருதி ஈருகிய எல்லா நூல்களிலும் கூறப்படும் தன்மையுடையதாகிய காவிரியாற்றினுலே, குறைவின்றி உண்டு ஏப்பமிடுவது சோழ நாடு.

40. சென்னி நாடு - சோழ நாடு; இதில் கூறப்பெறும் வரலாறு மாணிக்கவாசகரைக் குறிக்குமோ என்பது ஆராயத் தக்கது. மாணிக்கவாசகர் தாம் பிறந்த பாண்டி நாட்டைவிட்டு, தில்லைவனத்தை அடுத்ததோரிடத்தில் தங்கித் தவம்புரிந்து

41. கனிபடு சோலை யல்ல காமரு கழனி யல்ல
நனியுயர் களங்க ளல்ல நாடுகா லோடை யல்ல
பணிகிளர் குடிஞை யல்ல பயில்வள நகர மல்ல
இனியபொற் றளிக ளாக்கொண் டிலங்கிடு வதுநீர் நாடு.

42. போகியொண் டலைமேற் றங்கால்
பொருத்தியுற் றோர்கண் மேற்கண்
போகிய வறமுண் டாக்கிப்
பொருணிறை செல்வம் வாய்ந்து
போகிகான் மிதிப்பத் தெவ்விப்
புண்ணியங் குறையுற் றுக்கீழ்ப்
போகிய விடும்வா ஞட்டை
யசிப்பது பொன்னி நாடு.

43. பொன்னியு மதிற்கிளைத்த பொருதிரை கெழுபல் யாறும்
மன்னிய கைக ளாக வான்பெரும் பழன மெல்லாம்
துன்னிய படைக ளாகக் கொண்டுசூழ் வறுமைத் தெவ்வை
உன்னிய கெடுப்ப தென்று முறுபுகழ் வளவ ஞடு.

---

திருவாசகம் இயற்றல், புத்தரை வாதில் வெல்லல், முதலிய பணிகளைப் புரிவதற்கு ஏற்ற நாடு சோழ நாடு. வேறு பொருளுளதேல் காண்க.

41. களம் - நெற் களம். குடிஞை - நதி. சோலை முதலிய பல வளங்கள் பெற்றிருந்தும் நீர் நாட்டுக்கு மிகுந்த சிறப்பளிப்பவை அங்குள்ள தளிகள் என்க. தளி - கோயில். நீர் நாடு ; சோழ நாட்டின் ஒரு பெயர்.

42. பொருள், நிறை செல்வம் வாய்ந்து, மேற்கண் போகிய அறம் உண்டாக்கி, போகி ஒண் தலைமேல் தம் கால் பொருத்தி உற்றோர்கள், புண்ணியம் குறையுற்று, போகி கால் மிதிப்ப தெவ்வி, கீழ்ப்போகிய விடும் வாஞடு என்று இயைக்க.

மேற்கண் போகிய அறம் - மேலுலகம் செல்லுதற்குக் காரணமான தருமங்கள். முதலடி, மூன்ரும் அடிகளில் உள்ள போகி - இந்திரன். தெவ்வல் - ஏற்றுக் கொள்ளல். அசிப்பது - பரிகசிப்பது. வாஞடு புண்ணியமுள்ளளவும் போகங்களை அளித்து அப் புண்ணியம் குறைந்தவுடன் கீழே தள்ளிவிடுவது போலல்லாமல், தன்னை வந்தடைந்தவர்களைக் கீழ் நிலைக்குப் போகவிடாமை சோழ நாட்டின் சிறப்பு என்பது கூறப்பட்டது.

43. உன்னிய - செய்தெனெச்சத் திரிபு. காவிரியையும் அதன் கிளைகளையும் கைகளாகவும், வயல்களைப் போர்ப்படைகளாகவும் கொண்டு வறுமைப் பகையை வளவன் நாடு கெடுக்கும் என்று கூறப்பெற்றது. வளவன் - சோழன்.

44. நீர்வள முடைமை யானு மொளிவள நிரம்ப லானும்
போர்வள வெற்றி யானும் புல்லிய சுரநா டென்றும்
ஓர்வள நிசிநா டென்றும் வெற்றிதோற் புடைநா டென்றும்
சீர்வள வானு டெள்ளிச் செழிப்பது கிள்ளி நாடு.

45. அயலமை பார மெல்லா மடுப்பினு மஞ்சா தோம்பி
இயல்புறு மிறைமன் னற்கீந் திருதநோய் வருத்தா நின்ற
மயலமை பசியு மின்றி வைப்பள வில்ல கொண்டு
புயல்வள மேன்மே லோங்கப் பொலிகுவ தபய னாடு.

46. நீருங்கா விரியே வேந்து நேரியர் பிரானே மண்ணும்
ஓருஞ்சோ ணாடே யென்ன வுயர்மொழிப் புலவ ரியாரும்
தேருஞ்சால் பழையக் கூறுந் திருப்புகழ் பெற்ற நாடு
பாரும்பா தலமும் வானும் பார்க்கினும் பிறிதொன் றின்றே.

மழைவளம்

47. பாகமா லொருத்தன் மாயப் படர்பெருஞ் சீய மூரும்
நாகநேர் நிறத்த வாகி நரலையி னடுவட் புக்கு
மேகமார் புனன்மிக் குண்டு செலுத்துமவ் விறைதன் மேனி
மோகமார் நிறமே யொப்பக் கறுத்தன முழுது மம்மா.

---

44. ஒளி - புகழ். நிசி - பொன்; பொன்வளம் ஒன்றையே உடையதென்பது இகழ்ச்சிக்குக் காரணம். சுரநாடு, நிசிநாடு என்றவை இரு பொருளுடைமை காண்க. கிள்ளி நாடு பலவகை வளமுடையது; வெற்றியே உடையது; வானுடு வெற்றியும் தோற்பும் உடையது. கிள்ளி - சோழன்.

45. அயல் அமை பாரம் - அந்நியர்களால் நிகழக்கூடிய சுமைகள். இறை: அரசர்க்குரிய வரி முதலியன. இருத - முடிவில்லாத. மயல் - மயக்கம். வைப்பு - சேம நிதி. புயல் வளம் - மழை வளம். அபயன் - சோழன்.

46. நேரியர் பிரான் - சோழ மன்னன். 'தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே மண்ணாவதும் சோழ மண்டலமே' என்பது பழைய பாடல். பார், பாதலம், வான் ஆகிய மூவுலகிலும் என்க.

47. ஒருத்தல் - யானை. மாய - இறக்க. படர் சீயம் - மேலெழும் சிங்கம். சீயம் ஊரும் நாகம் - சிங்கங்கள் சஞ்சரிக்கும் மலை. நரலை - கடல். மேகம் செலுத்தும் இறை இந்திரன்; அவன் மேனி நிறம் கருமை. நாம் நேர் நிறத்த என்பதற்கு வேறு சிறந்த பொருள் கிடைப்பின் நலமாகும்.

48. வெள்ளிய கொண்மூ வீரை விரவுபு மெய்க றுப்புக்
கொள்ளிய வறலுண் காட்சி கோமக னூர்தி தம்முள்
நள்ளிய வொன்று போற னயப்பதி னவனே போறல்
எள்ளிய தாகா தென்ன வியைதரக் கோடன் மானும்.

49. பூருவ திசையி னின்றும் புறப்படு மகவான் போலப்
பேருவர்க் கடலி னின்றும் பெயர்ந்துமை மேக மெல்லாம்
ஓருவ மான மேனு முரைப்பதற் கொல்லா வாகிப்
பாருவப் பெய்த மேன்மேற் படர்ந்தன விண்ண மெங்கும்,

50. காரியி னெழுந்த மேகங் கடுமைசெய் வேனி லென்னும்
மூரியந் தகுவர் தம்மை முதலொடு முருக்க வெண்ணிப்
பேரிய முழங்கி யாங்குப் பிறங்குரு மொலியெ ழுப்பிக்
கூரிய வயிர வாளின் வீசின குலாவு மின்னு.

51. கொடுமைசெய் முதிய வேனிற் குலமுதல் பரிதி யென்று
முடுகுபு மாய்த்த கொண்மூ மூண்டபா ரதவெம் போரில்
படுமணி வண்ண னங்கைப் பயிலுஞ்சக் கரமெ ழுந்து
வடுவமை யிருள்வி ராவ மாய்த்தது போலு மன்றே.

52. மூசிய கொண்மூ வம்பர் முன்னவன் மெய்யி னீறு
பூசிய வொருபால் போறல் போய்மற்றோர் பாலே போன்று
வீசிய சடைபோன் மின்னி வியன்றுடி யெனமு ழங்கிப்
பேசிய வருளே யென்னப் பெருமழை பெய்த மாதோ.

---

48. கொண்மூ - மேகம். வீரை - கடல்; 'திரைவீரை' (திருவிசைப். திருமாளிகைத். 3-5). கோமகன் - இந்திரன். அறல் - நீர். நள்ளிய - சிறப்புடைய. மானும் - ஒக்கும். வெண்மையான மேகம் கருமை நிறம் கொண்டமைக்குக் காரணம் இந்திரன் வாகனமான வெள்ளை யானையை ஒப்பதைவிட, கரிய நிறத்தையுடைய அவனையே ஒத்தல் சிறந்தது என்று அம் மேகம் கொண்டமை என்று கூறுகின்றார்.

49. பூருவ திசை - கிழக்குத் திசை. மகவான் - இந்திரன். உவர் கடல் - உப்புக் கடல். மை மேகம் - கரிய மேகம். விண்ணம் - ஆகாயம்.

50. காரியின் - இந்திரனைப் போல. மூரி - வலிமை. தகுவர் - அசுரர்கள். பேர் இயம் - பெரிய வாத்தியம். உரும் ஒலி - இடி ஓசை. வாளின் - வாளைப்போல.

51. சூரியனை மேகம் மறைத்த காட்சி இங்குச் சமற்காரமாய்க் கூறப்பெறுகிறது. பாரதப் போரில் ஜயத்ருதனை அருச்சுனன் கொல்லும்பொருட்டுக் கண்ணபிரான் தம் சக்கராயுதத்தால் சூரியனை மறைத்த வரலாறு இங்குச் சுட்டப்பட்டது. (வில்லி. பாரதம். பதினான்காம் போர். 164). மணிவண்ணன் - கண்ணபிரான். மேகத்துக்குச் சக்கரம் உவமை.

52. மூசுதல் - மொய்த்தல் அம்பர் முன்னவன் - அம்பரில் எழுந்தருளியுள்ள சிவபிரான். மற்றோர்பால் - உமாதேவி அமர்ந்த இடப்பாகம். துடி - நடராஜப் பெருமான் கையில் உள்ளது. மழைக்கு அருள்; 'இன்னருளே என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்' (திருவெம். 16).

53. தவமொரு நான்கி டத்துந் தனித்தனி நின்றோர்க் கொப்ப
அவமிலா னந்த முத்தி யருண்மணத் தளித்தார் போலக்
குவலய மகிழ்ச்சி கூரக் குறிஞ்சிமுற் றிணைநான் கிற்கும்
கவலற வொப்ப நன்னீர் காலத்திற் பொழிந்த மேகம்.

54. நெடுமழைத் தாரை வீழ நிலங்குழி படைத்த தோற்றம்
கொடுமுது வேனில் வெப்பங் குமைத்திட மிகக்கு டிப்பான்
வடுவற வாய்தி றத்தன் மானுமேல் வழியுங் காட்சி
விடுதிறஞ் செய்தல் போலும் வெறுத்தினி யுண்ணே மென்றே.

55. கேள்வியில் வேறு பட்டுங் கேடிலா முதல்வன் பின்னர்
வாள்விரி விமரி சத்தில் வேறுரு வண்ணம் போல
மூள்சின முதுவே னிற்கண் முழுதும்வே றுற்ற பாலை
ஆள்பெரு மழைபெய் காலத் தஃதுரு தொன்று யிற்றே.

வரை வளம்

56. அருவியுங் கான யாறு மாவிகா லோடை மற்றும்
மருவிய கழியு நன்னீர் மலிதரு மாறு பெய்த
பெருமழை வளஞ்சொல் வாரார் பிறக்கமார் குறிஞ்சி முன்று
வருதிணை யைந்த னுள்ளும் வரைவளஞ் சிறிது ரைப்பாம்.

---

53. தவம் நின்றோர்க்கு ஒப்ப மணத்து முத்தி அளித்தார் என்றியைக்க முத்தி அருண்மணத் தளித்தவர் திருஞானசம்பந்தப் பெருமான், இடம் நான்கு; சரியை முதலிய நான்கு. குறிஞ்சி முன் திணை நான்கு: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன.

54. குமைத்தல் - வருத்துதல். நிலம் வெப்பத்தால் வெதுப்புண்டு முதலில் வாய்களைத் திறந்து மழை நீரைக் குடித்தல் போலும், பிறகு குடித்த நீரைக் கக்குவது போலும் காணப்பெற்றது என்றனர்.

55. கேடிலா முதல்வன் கேள்வியில் வேறுபட்டும் - இறைவன் தத்துவத்தில் பிறர் பிறர் கூறும் கேள்வியால் பெறும் அறிவு ஒன்றோடொன்று மாறுபட்டிருந்தும். வாள் விரி விமரிசம் - ஒளி மிகுந்த ஆராய்ச்சியில்; 'கேள்வி, விமரிசம், பாவனை என்பன முதற் பொருளை உணர்தற்கு உபாயம்' (திருக்குறள் 359-உரை). கேள்வி - சிரவணம். விமரிசம் - சிந்தனை. அஃது - வேறுபாடு. வேனிற் காலத்துப் பாலையாகத் தோன்றிய நிலமும் மழைக்காலத்தில் நீர் நிலமாயிற்று.

56. ஆவி - நீர் நிலை. கால் - வாய்க்கால். சொல்வார் ஆர்; ஒருவரும் இல்லையென்றபடி. பிறக்கம் - உயர்ச்சி. குறிஞ்சி - மலை நிலம். ஐந்து திணை: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன.

வேறு

57. தந்தை புல்லிய தொருவரைக் கொடியெனத் தானும்
அந்தை தீர்நசை யால்வரைக் கொடிதழீஇ யமரும்
சிந்தை கூர்தரு தேமுமால் வரையெனத் தெரிந்து
முந்தை மால்வரைக் குலமெலாங் குடிபுகு முருகு.

58. பெற்ற தந்தையுந் தமையனு மெனப்பெருங் களிற்றுக்
கொற்ற வெம்பகை தனக்குமுண் டாயினுங் குலவ
உற்ற தெய்வதப் பிடிமணந் தமையுளத் துன்னி
அற்ற மோவவேள் வரைதொறும் பயிலுவ வத்தி.

59. முந்து பார்த்தனோ டுடற்றிய புளிஞன்பான் முளைத்து
வந்து வன்றியின் மருப்பொசி யிறவுளன் மற்றும்
நந்து நம்மகட் புணர்ப்புவந் தனனென நயந்து
சந்து சூழ்வரைச் சாரலிற் பயிலுவர் சவரர்.

60. புற்ற கழ்ந்திடு குடாவடி யவணின்று போதல்
உற்ற வெம்பணி வாலம்வாய்க் கவ்வவவ் வுரகம்
முற்ற நான்றிடக் கரேணுநோக் குபுகய முனியென்
றற்ற மோவுற வடையும்பி னுண்மைதேர்ந் தகலும்.

---

57. தந்தை புல்லிய வரைக்கொடி; பார்வதி. அந்தை தீர் நசையால்-அவ்வாறு முடித்துக் கொள்ளும் விருப்பத்தால். முருகு தழுவிய வரைக் கொடி; வள்ளியம்மை. சிந்தை கூர்தரு தேம் - மகிழ்ச்சிக்குரிய இடம். குன்றுதொருடல் முருகனுக்குரியது என்பதை இச் செய்யுள் குறிக்கிறது. முருகு தன் தந்தை தழுவியது ஒரு வரைக் கொடியை (பார்வதி) என்று தானும் ஒரு வரைக் கொடியைத் (வள்ளி) தழுவும்; வரைக் குலமெலாம் குடிபுகும் என இயைக்க.

58. தந்தையாகிய சிவபெருமானுக்கும், தமையனாகிய விநாயகருக்கும் களிறு பகையானது போலத் தனக்கும் பகையானாலும் அதை நீக்கிக் குலவும் பொருட்டுத் தெய்வ யானையை (பிடியை) முருகன் மணந்தமை கூறப்பெற்றது. அவ்வாறு மணந்த முருகன் மலைகளிலே எழுந்தருளியிருத்தலால் யானைகள் உரிமையுடன் மலைகளில் சஞ்சரிக்கின்றன என்றார். சூரபதுமன் கொண்ட வடிவங்களுள் யானையுமுண்டாதலால் முருகனுக்கும் களிறு பகையானது. அற்றம் ஒவ - இடைவிடாமல். அத்தி - யானை.

59. பார்த்தனோடு உடற்றிய புளிஞன் - சிவபிரான். புளிஞன் - வேடன். வன்றி - பன்றி. இறவுளன் - வேடன். நந்தும் - சிறப்புமிக்க. புணர்ப்பு உவந்தனன் எனப் பிரிக்க. சந்து - சந்தன மரம். சவரர் - வேடர்.

60. அகழ்தல் - தோண்டுதல். குடாவடி - கரடி. பணி - பாம்பு. வாலம் - வால். உரகம் - பாம்பு. நான்றிட - தொங்க. கரேணு - பெண் யானை. கயமுனி - யானைக் கன்று; (மலைபடு. 107). அற்றம் ஒவுற-அச்சமின்றி. அடையும்-நெருங்கும்

61. கிளர்க ரிக்குல முழங்கிட வெதிரொலி கேட்டுத்
தளர்வ றச்சிலை பாய்ந்நுதம் மருப்பிணை சாய்க்கும்
விளர்ப ளிங்கெழு கரிநிழற் பாய்ந்தரி வெள்கி
உளர்க ளிற்றின மெதிரினு மற்றென வொதுங்கும்.

62. கூண்ட மால்வரை யேந்துதேத் தடைபிறைக் கோடு
கீண்ட வாய்வழி யொழுக்குதேன் கெழுமியங் குரிமை
பூண்ட செந்தினைப் புனம்புகும் புறத்தினு நனைத்து
மீண்ட தேன்மிசை வழிதரச் சுனைவயின் வீழும்.

63. முற்று குஞ்சர மூங்கிலி னிளமுளை முறித்துப்
பற்று மென்பிடி வாய்ப்புகுத் திடும்பினர்ப் பருத்தே
எற்று வெங்கழை யாய்வருத் திடுதிற மெண்ணி
அற்று மாய்தர முன்னரே யடுவது மானும்.

64. சுரையி ரும்புகொண் டிறவுளர் கவலைக டொடுபோ
தரையி ருட்டையும் வாய்ப்பெயு மழன்மணி யெழுந்து
புரையில் சோதியம் பொங்கரிற் றங்கவப் பொங்கர்
கரைப கற்கணு மெரிவதென் னெனக்கரு துறுவார்.

65. செறிகொ டிச்சியர் பொற்றொடித் தோணலந் தெவ்வற்
கறிம கிழ்ச்சிமற் றவர்க்கினி தியற்றியாங் கடங்க
மறிதி னைக்குரல் பறத்தலிற் கவர்பசு வன்னி
முறித ரத்திரண் முத்திறைப் பனவளை மூங்கில்.

---

61. கரிக்குலம் - யானைத் தொகுதி. சிலை - மலை. மருப்பு - கொம்பு. விளர் - வெண்மை. அரி - சிங்கம். உளர் - அசைந்து வருகின்ற. அற்று - அத்தகையது.

62. தேம் + அடை = தேத்தடை - தேனிறால். பிறை கோடு - பிறைச் சந்திரனின் விளிம்பு என்றேனும், யானையின் பிறை போன்ற தந்தம் என்றேனும் கொள்க. வாய்வழி ஒழுக்கு தேன் புனம் புகும், சுனைவயின் வீழும் என்றியைக்க.

63. எற்றுதல் - அடித்தல். கழை - மூங்கில். அற்று மாய்தர - அழிந்து ஒழிய. அடுவது - கொல்வது. மானும் - போலும். 'இளைதாக முண்மரங் கொல்க ; களையுநர் கை கொல்லும் காழ்த்த விடத்து' என்ற குறளின் கருத்தோடு ஒப்பிடுக. சுரை இரும்பு - தோண்டு பாரை.

64. இறவுளர் - குறிஞ்சிநில மக்கள். கவலைகள் தொடு போது - கவலை என்னும் கிழங்குகளைத் தோண்டும்போது. பொங்கர் - சோலை. கருதுறல் - கருதுதல் - இறவுளர் கருதுறுவர் என்றியைக்க. அரையிருட்டையும் வாய்ப்பெயும் அழல் மணி - நள்ளிரவையும் விழுங்கத்தக்க ஒளியுடைய இரத்தினங்கள். கரை - சொல்லப்படுகிற.

65. கொடிச்சியர் - குறிஞ்சிநிலப் பெண்பாலர். தொடி - தோள் வளை. தெவ்வற்கு - கொள்ளுதற்கு. அடங்க - முற்றிலும். தினைக் குரல் - தினைக் கதிர். பசு -

66. காக துண்டமுஞ் சந்தமுந் தடிந்திடு கனலான்
மேக மென்றிட வுறுநறும் புகைகவர் விருப்பால்
பாக மென்றினை யிடியொடு தேன்கொளும் பயில்வால்
ஆக மொன்றிநம் மிளையவே ளாவயி னமரும்.

67. அரையி ருட்பொழு தந்நலார் தோள்புண ராசை
கரைய றப்பெரு கலிற்படர் காளையர் களவு
புரைய றத்தெரித் திடுமெனப் பொங்குசெம் மணியை
விரையொ ளித்தரு விலதைபுற் களையுளம் வெறுப்பார்.

68. உகைக்கு மண்ணலா ரிடமென வமர்ந்துந முள்ளம்
திகைக்கும் வண்ண நீங் கியதிலை யெனமயி றேம்ப
நகைக்குந் தம்வரல் கொடிச்சியர்க் குணர்த்திட ஞாலம்
முகைக்குஞ் சீர்த்தியர் முறுகிய துயிலெழுப் பிடுவார்.

69. பிரிய மொன்றிடை யுறினது சார்ந்தவும் பேணும்
அரிய வாங்கொடிச் சியர்முலைப் போகம்வேட் டரசர்
உரிய புன்றினை மூரலு மீயலு முலகம்
தெரிய வுண்டுவப் பார்திருந் தமுதமுஞ் செயிர்த்தே.

---

விலங்குகள். வன்னி - கிளி. முறிதரல் - பின் வாங்குதல். பறத்தல் – சிதறுதல். மூங்கில்கள், குறிஞ்சிநிலப் பெண்களின் தோள்களுக்குத் தாம் உவமையாக இருப்பதனுல் உண்டாகும் மகிழ்ச்சியைத் தெரிவித்தற்கு அறிகுறியாக, அம் மகளிர் காக்கும் தினைக் கதிரைத் தின்னவரும் விலங்குகளும், கிளிகளும் பயந்தோடும்படி முத்துக்களை அவற்றின்மீது வீசுகின்றன என்பது பாட்டின் திரண்ட பொருள்.

66. காகதுண்டம் - அகில். சந்தம் - சந்தனம். தடிதல் – அழித்தல். தினை இடி - தினை மா. ஆகம் - மனம். இளையவேள் - முருகன். ஆவயின் - அவ்விடத்தில்.

67 அரையிருட்பொழுது - அர்த்தராத்திரி. புரை அற - தெளிவாக. பொங்கு செம்மணி - ஒளிமிகும் மாணிக்கம். இரவில் ஒளிவிடுகின்ற மரம், கொடி, புல் ஆகியவை மலைகளில் உண்டென்பர். அவை முறையே சோதி விருட்சம், சோதி லதை, சோதிப் புல் எனப்படும். காளையர் தம் களவு வெளிப்படும் என மணி, இலதை, புல் இவற்றை வெறுப்பார்.

68. உகைக்கும் அண்ணலார் - முருகன். நம் உள்ளம் திகைக்கும் வண்ணம் - கொடிச்சியரின் சாயலுக்குத் தாம் ஈடாகவில்லையே யென்று மனம் வருந்தும் நிலை. தேம்ப - வாட. நகைக்கும் - (மயிலைப் பார்த்து) பரிகசிக்கின்ற. ஞாலம் முகைக்கும் சீர்த்தியர் - உலகறிந்த புகழுடைய தலைவர்கள். வரல் - வருகையை. துயிலெழுப்புதல், மயில்களை. இரவுக் குறி வந்த தலைவர்கள் மயில்களைத் துயிலெழுப்பும் முகத்தால் தம் வருகையைத் தலைவியர்க்கு உணர்த்துவர்.

69. ஒன்றிடை பிரியம் உறின் அது சார்ந்தவும் (உலகம்) பேணும் என்க இது பொது. வேட்டு - விரும்பி. தினை மூரல் - தினைச் சோறு. ஈயல் - ஈசல்.

70. மூத்த பிள்ளைபா னசையன்றி யடுபுர மூன்றும்
தீத்த வர்க்கிளஞ் சேயிடத் திலையெனச் செப்பாம்
பூத்த வண்சிரா மலைமுதற் பற்பல பொருப்பும்
ஆத்த நாயகத் தம்பிரா னினிதமர் தலினால்.

71. பாயும் வேங்கையும் பாய்தரா வேங்கையும் பதைத்துக்
காயும் வேடரும் காய்தரா வேடருங் கலப்புற்
றேயு மால்வரைப் பெருவள னியாதெடுத் திசைத்தாம்
தோயு முல்லைநன் னிலவளத் தினுஞ்சில சொல்வாம்.

முல்லை வளம்

72. மனையெ னுந்திரு வருகடற் கிடக்குமால் வயங்கம்
மனையெ னுந்திரு மானினம் பயிறலு மற்றம்
மனையு டன்பிறப் பானினம் பயிறலு மதித்து
மனையி தென்றுகொண் டுவப்புற விருக்குமால் வனத்தே.

---

செயிர்த்து - வெறுத்து. பின் மூன்றடிகளும் சிறப்பு. வேற்றுப் பொருள் வைப்பணி. அமுதத்தையும் வெறுத்துக் கொடிச்சியர் கொடுக்கும் மூங்கிலையும் ஈயலையும் அரசர் உண்பர் என்றதால், அரசர் கொடிச்சியர்மீது வைத்த காதலால் அவர் உண்ணும் உணவிலும் ஆர்வம் காட்டினர் என்க. வேடர்க்கு ஈசல் உணவாகும் என்பது அகநா. 394 : 2-5 ; புறநா. 119 : 3 முதலியவற்றால் அறிக.

70. மூத்த பிள்ளை - கணபதி. நசை - விருப்பம். செப்பாம் - சொல்லமாட்டோம். புரம் மூன்று - திரிபுரம். தீத்தவர் எரித்தவர். விநாயக பூசை செய்யாமல் சிவபெருமான் திரிபுர சங்காரம் செய்யத் தொடங்கியது கூறப்பட்டது. இளஞ் சேய் - முருகன். ஆத்த நாயக தம்பிரான் - சிவபெருமான். ஆத்த - ஆப்த. சிராமலை முதலிய மலைகளில் சிவபெருமான் இனிதமர்தல், அம் மலைகளுக்குரிய முருகப்பிரானிடம் அவருக்குள்ள அன்பைக் காட்டுகிறது.

71. பாயும் வேங்கை - புலி. பாயா வேங்கை - வேங்கை மரம். காயும் வேடர் - சிவபெருமான். காய்தரா வேடர் - முருகன். இதுகாறும் குறிஞ்சி வளம் கூறி, இனி முல்லை வளம் கூறத் தொடங்குகிறார்.

72. திரு வரு கடல் - இலக்குமி தோன்றிய பாற்கடல். கடல் கிடக்கும் மால், மனை இது என்று கொண்டு வனத்தே உவப்புற இருக்கும் என இயைக்க. ஆல் : அசை. வயங்கு அம்மனை எனும் திரு மான் இனம் எனப் பிரிக்க. அம்மனை - தாய். கண்ணுவ முனிவரின் சாபத்தால், திருமால் சிவமுனியாகவும், இலக்குமி ஒரு மானாகவும் பூமியிலே தோன்ற, திருமாலின் கண்ணினின்றுந் தோன்றிய சுந்தரவல்லி, முருகக் கடவுளை மணக்கக் கருதித் தவமியற்றி, அவர் கட்டளைப்படி பூமியிலே மேற்கூறிய சிவமுனிக்கும் மானுக்கும் மகளாகத் தோன்றி வள்ளியென்னும் பெயருடன் முருகனை அடைந்தாள் என்பது புராண வரலாறு. வள்ளிக்குத் தாயாகும் தன்மை பெற்ற மான், இலக்குமி அம்சமாதலால், அம்மனை எனும் திருவாகிய மானின் இனம் என்றார். முல்லைக்குரிய தெய்வம் திருமால் என்பதும் இங்கு அறியக் கிடப்பது காண்க.

73. அண்ட ராதியர் புகழ்ந்திட முத்தொழி லாற்றும்
அண்ட ராகிய மூவரு ளிடையனு யமரும்
அண்ட னுடொறுங் காவல்செய் தமரிட மென்றே
அண்ட ராகிய விடையரா வயினினி தமர்வார்.

74. முல்லை யின்புகழ் பரந்தெனப் பசுங்கொடி முல்லை
எல்லை யில்வள முசுண்டையின் கனிபடு தொண்டை
வல்லை விண்டிடு பிடாவிணர்க் களாவொடு மற்றும்
கொல்லை யெங்கணுஞ் சொரிதரும் வெண்மலர்க் குப்பை.

75. கரிய கார்குறு முயல்செறி கடிப்புதன் முல்லைக்
குரிய தென்றிய லுரைத்தலின் மேலிடத் தொருங்கு
தெரிய மூடிய தன்றிக்கீ ழிடத்தினுஞ் செறிந்தாங்
கரிய தென்றிடா துகுப்பன வமைந்தகா யாவீ.

76. ஒடிவில் பன்மலர் முருக்கின்மேல் வெண்பிறை யுறலும்
நெடிய செந்தழன் மேனியான் முடிப்பிறை நிகரும்
வடிம துக்கிழக் கிறக்கிட வன்றியின் மருப்பாம்
அடியி றக்கிட மகக்களந் தரைபட்ட தாகும்.

---

73. அண்டராதியர் - தேவர் முதலியோர். மூவருள் இடையன் ஆய் அமரும் அண்டன் - திருமால். அண்டராகிய இடையர்; அண்டர் என்பது இடையர்க்கு ஒரு பெயர். ஆவயின் - அவ்விடத்தில். இங்கும் நிலத்துக்குரிய தெய்வம் சுட்டப் பெற்றது.

74. முசுண்டை, தொண்டை, பிடா, களா இவை வெண் மலருடையவை. மலர்ப் பரப்பு முல்லையின் புகழ்ப் பரப்புக்கு ஒப்பு. இன் கனி- படு தொண்டை - இனிய பழத்தையுடைய கொவ்வை. இணர் - கொத்து. கொல்லை முல்லை நிலம்.

75. இயல் - நூல். கார் - மேகம். புதல் - புதர். காயா - ஒருவகை மரம். வீ – மலர். காயா மலர், நீல நிறமுடையது; அம் மலர்த் தொகுதி மரத்தின்மீது மேகம் போலவும், உதிர்ந்தபின் மரத்தின் அடியில் புதர் போலவும் தோன்றிற்று என்றார்.

76. ஒடிவு - குறைவு; கெடுகையும் ஆம். முருக்கம் பூக்களின்மீது தோன்றும் பிறை, அழல் மேனியனை சிவபெருமான் முடிமீது விளங்கும் பிறைக்கு உவமை பிறை, முருக்க மரத்தின் உச்சியில் தோன்றும்போது சிவபிரான் முடியிலணிந்த பிறையை ஒக்கும்; அது அம் மரத்தின் இடையில் தோன்றின, சிவபிரான் மார்பிலணிந்த பன்றிக் கொம்பை யொக்கும்; அது மரத்தின் அடியில் தோன்றின் தக்க யாகந்திலே வீரபத்திரன் காலால் தேய்ப்புண்ட சந்திரன் போல் ஆம் என்பது பாட்டின் திரண்ட பொருள்.

77. தேம்பு நுண்ணிடை யாய்ச்சியர் காய்ச்சிய தீம்பால்
ஓம்பு மட்கலத் துறைதரப் பிரையுகுத் திடுமுன்
காம்பு தீர்புளிம் பழம்விழு மனையர்தாய்க் கருவிற்
கூம்பு நாட்கலந் திருந்தமை குறித்துத வுதல்போல்.

78. தொறுவி மார்நறும் பாலழ லடுந்தொறுஞ் சுவையாம்
நிறுவு மோரதிற் படுந்தொறு நிறைசுவைத் ததியாம்
தெறுவன் மத்தினு லுடைத்தொறும் வெண்ணெயாஞ் செந்தீ
குறுகி டுந்தொறும் வாசமா முயர்ந்தவர் குணம்போல்.

79. கோலுஞ் செந்தழ லடுந்தொறு மளவினிற் குறைந்து
சாலும் பல்லுருக் கோடலி லொற்றுமை சமையும்
பாலும் பொன்னுமொன் றின்சுவை பயின்றிடு மற்றொன்
றேலு மொள்ளொளி செய்திடும் வேற்றுமை யிதுவே.

80. நாடும் வன்மையி னுயரிய குறும்பொறை நாடர்
பாடு மேற்றினைத் தழீஇயிமின் மிசைவைப்பர் பாணி
ஆடு பாம்பர வல்குலாய்ச் சியர்த்தழீஇக் கொங்கைக்
கூடு பாணிவைத் திடுதிறங் குறிப்பிப்பார் போன்றார்.

81. கான முல்லையைக் குறிஞ்சியென் றறிஞருங் கருதத்
தான மெங்கும்வான் றவழ்தரக் குவிதருஞ் சாமை
ஆன கோத்திர வம்பய ருடக முழுந்து
கூன மைந்தபல் புளிம்பழ மவரைமுற் குலவ.

---

77. உறைதர - உறைய. காம்பு தீர் புளிம்பழம் - மரத்திலிருந்து காம்பு கழன்று விழும் புளியம்பழம். அனையர் - அந்த ஆய்ச்சியர். தாய் - அவர்களின் தாய். மகளிர் மயற்கையில் புளியம்பழம் தின்னுதல் இங்குக் குறிக்கப் பெற்றது.

78. உயர்ந்தவர் குணம், 'சுடச்சுட மிளிரும்' என்பது. தொறுவிமார் - இடைச்சியர். அழல் அடுதல் - நெருப்பில் வைத்துக் காய்ச்சுதல். மோர் அதில் படுதல் - பிரையுகுத்தல். ததி - தயிர். வெண்ணெய் செந்தீ குறுகிடுதல் - நெய்யாகக் காய்ச்சுதல். வாசம் — நெய்.

79. கோலுதல் - விரிந்தெழுதல். அடுதல் - சுடுதல், காய்ச்சுதல். பாலையும் பொன்னையும் ஒப்பிட்டு இரண்டும் நெருப்பில் சுடுந்தொறும் அளவில் குறைந்து பல வடிவம் கொள்ளுமென்றும், ஒன்று சுவையிற் கூட, மற்றொன்று ஒளியில் மிகும் என்றும் கூறுகின்றார். ஏலும் - தக்க.

80. குறும்பொறை நாடர் - முல்லை நிலத் தலைவர். ஏறு - காளை. இமில் - திமில். பாணி - கை. கொங்கைக்கு ஊடு எனப் பிரிக்க.

81. தானம் - இடம். வான் - மேகம். கோத்திரவம் - வரகு. ஆடகம் - துவரை. குலவ - விளங்க.

82. குலவு கொன்றைபொன் சொரிந்தில வென்னின்வேய்ங்
[குழலும்
நிலவு மான்கழுத் தணிமணி யோசையு நீடிக்
கலவு கானிடைத் தலைவனைப் பிரிந்துமெய் கருகி
உலவு மான்மக டனித்தமர்ந் தாற்றலு முண்டோ.

83. மலலன் மாமுகி லோதியாக் கோபஞ்செவ் வாயா
வில்லு வக்கனி கொங்கையாத் தளவுவெண் ணகையாச்
சொல்ல வாய்ந்தகான் மகண்மழைக் கொழுநனைத் தோய்ந்து
பல்ல வாம்வர காதிய பன்மகப் பயக்கும்.

84. ஆன்ற ரும்பய மல்லது பயம்பிறி தடையா
தேன்ற பல்விரை யலரலா லலர்பிறி தில்லை
மான்ற பூங்கள வல்லது களவொன்று மருவா
தோன்று கோபமல் லாற்பிறர் கோபந்தோ யாதே.

85. பொருந்து மாயவ னமரிட மாயினும் பொலிந்து
குருந்து கூவிளங் கொன்றைபச் சறுகுமல் குதலான்
முருந்து வெண்ணகை பங்கினு னெடுங்கள முதலா
இருந்து பேரருள் புரிதலம் பல்லகொண் டிலங்கும்.

---

82. கொன்றை பொன் சொரிவது போலப் பூப்பது; கொன்றை பூப்பது கார் காலத்தில்; அதனைக் கண்டு, தலைவரைப் பிரிந்து நிற்கும் தலைவியர் தம் தலைவர் திரும்பி வருவதை எதிர் பார்ப்பர். குழல், நிலவு, ஆன் கழுத்து மணியோசை ஆகியவை மாலைக் காலத்தைக் குறிப்பன. ஆன் மகள் - இடையர் மகள்.

83. ஓதியா - கூந்தலாக. கோபம் - இந்திர கோபம் என்னும் பூச்சி. வில்லுவக் கனி - வில்வப் பழம். தளவு - முல்லை. நகை - பல். கான்மகள் - காடாகிய பெண். பல்ல ஆம் - பலவாகிய. வரகு ஆதிய பல் மக பயக்கும் - வரகு முதலான பல மக்களைப் பெறுவாள். கான்மகள் மழைக் கொழுநனைத் தோய்ந்து பன்மகப் பயக்கும் என்றியைக்க.

84. ஆன் தரும் பயம் - பசு கொடுக்கும் பால். பயம் - அச்சம். ஏன்ற - மிக்க. விரை - மணம். அலர் - மலர்: பிறிது அலர் - அலர்; பலரும் அறிந்து கூறும் பழிச் சொல். மான்ற - மாண்பமைந்த. களவு – களா; திருட்டு. கோபம் - இந்திர கோபம் என்னும் தம்பலப் பூச்சி; சினம்.

85. முல்லைக்குரிய தெய்வம் திருமால். குருந்து - ஒருவகைச் சிறு மரம்; குருக்கத்தியும் ஆம். கூவிளம் - வில்வம். அறுகு - அறுகம் புல். இவை யாவும் சிவபிரானுக்கு உகந்தவை. முருந்து வெண்மை நகை பங்கினன் - இறகின் அடிக் குருத்துப் போன்ற வெண்மையான பற்களையுடைய உமையைப் பாகத்தில் கொண்ட சிவபிரான்.

86. கற்பு மேம்படு மாய்ச்சியர் புரைதரக் கமழும்
கற்பு மேம்படு முல்லையின் வளஞ்சில கரைந்தாம்
பொற்பு மேம்படு மிந்திரன் புகரறக் காப்பப்
பொற்பு மேம்படு மருதத்தின் வளஞ்சில புகல்வாம்.

வேறு

மருத வளம்

87. உயர்வரைச் சைய நின்று மொண்மணி யாதி வாரிப்
பெயர்தரு மருவி யந்தப் பெயரொரீஇ வெள்ள மாகி
மயர்வறு திருக்கா வேரி மாநதி யிடைப்ப ரப்புற்
றயர்வுயிர்த் திடல்சற் றேனு மிலையெனப் பெருகு மம்மா.

88. கோடிரண் டுடைமை யானுங் குலமணி யொளியி னானும்
மாடுயர் தருக்கள் சாய்த்து மதநனி யொழுக்க லானும்
பாடமை முழக்கத் தானும் பயம்பட வியங்க லானும்
நீடுமால் யானை போலு நிகரில்கா வேரி வெள்ளம்.

89. மூலமா விலிங்க நின்று முளைத்தபன் மூர்த்தம் போலக்
கோலமார் பொன்னி நின்றுங் கொள்ளிட மண்ணி மிக்க
சீலமா ரரிசின் முள்ளி வாய்திகழ் கடுவா யாதி
ஞாலமா ரனந்த மாகக் கிளைத்தன நாடு வாழ்த்த.

90. கடல்வயி றுடையப் பாயுங் காவிரி வெள்ளத் தூடே
உடல்வலி யடைந்து சின்மீ னெழுக்கெதி ரேரு நிற்கும்
அடல்வலி யின்றிச் சின்மீ னெழுக்கினோ டமைந்து செல்லும்
மிடலமை யிருவ ரேடும் வையையாற் றியங்கன் மான.

---

86. முல்லை, கற்புக்குரியது என்பர். புரை தருதல் - பொருந்துதல். கரைதல் - சொல்லுதல். கற்பு மேம்படும் முல்லை - கற்புநெறி மேம்படுதற்குரிய முல்லைத் திணை. பொற்பு - அழகு. மருதநிலத் தெய்வம் இந்திரன். புகர் - குற்றம்.

87. சைய வரை - காவிரி உற்பத்தியாகும் மலை; சகியம் என்றும் பெயர் கூறுவர். ஒருவி - நீங்கி. அயர்வுயிர்த்தல் - இளைப்பாறுதல்.

88. கோடு - கரை, கொம்பு. மணி - இரத்தினம். மாடு - பக்கம். மதம் - தேன்; யானையின் மதம். பாடு - பெருமை. பயம் - பயன்; அச்சம். இயங்கல் - சஞ்சரித்தல். இச் செய்யுள் யானைக்கும் காவிரிக்கும் ஒற்றுமை கூறுகிறது.

89. கொள்ளிடம், மண்ணி, அரிசில், முள்ளிவாய், கடுவாய் முதலியன காவிரியின் கிளைகள். சிவபிரானின் மூலமான திருமேனி - மகாலிங்கம்; அதினின்று கிளைத்தவை இருபத்தைந்து மூர்த்தங்கள் முதலியன.

90. இருவர் ஏடும் வையை யாற்றியங்கினமை - திருஞான சம்பந்தப் பெருமானுக்கும் சமணருக்கும் மதுரையில் நடந்த புனல்வாத நிகழ்ச்சிகள் இங்கு

91. எறிதிரைப் பொன்னி நீத்த மிருகரை யலையக் குத்தி
முறிபல வுடைப்புச் செய்ய மொய்வலிக் களம ரீண்டிச்
செறிதரு மவற்றை மாற்ற மதகவாய்ச் செல்லுங் காட்சி
பொறிபல வற்றி னும்போய்ப் புகுமனம் போன்ற தன்றே.

92. திங்களூ ரவத ரித்த திருமறை யவர்த முள்ளத்
தெங்களு வரசைக் காண்டற் கெழுநசை பரந்த தென்னப்
பொங்குகா வேரி வெள்ளம் போற்றுபன் மதகூ டும்போய்த்
தங்குபல் கழனி யோடை தடமெலாம் பரந்த தம்மா.

93. ஒருகலிக் காம ருக்கு முற்றவா ரூர ருக்கும்
மருவுளம் வேறு பட்ட வண்ணம்போல் வேறு பட்ட
பெருநிலம் வேறு ரும லிடைநின்ற பெருமான் போல
வருபுனற் பொன்னி நீத்தம் வயறெறு மிடைநின் றன்றே.

94. குழைதாம் புணரத் தெண்ணீர் செறுப்புகூஉக் குலவ லோடும்
பழையர்தம் மனைப்பு குந்து படுபிழி மிதப்ப மாந்திக்
கழைசுளி களிநல் யானை போன்மெனக் களிப்பு மேவி
விழைதொழின் முயன்று செய்வான்வேட்டனர் களம
[ரெல்லாம்.

---

உவமிக்கப்பெற்றன. அடல் வலி - மிக்க வலிமை. ஒழுக்கிறேடு - நீரொழுக்கோடு. மிடல் - வலிமை. கடல் வயிறுடையப் பாய்தல் ; அழகிய பிரயோகம்.

91. மனம் ஐம்பொறிகளினும் சென்று தொழில்படுவது உவமை. நீத்தம் - வெள்ளம். முறிதல் - நிலை கெடுதல். களமர் - உழவர். மதகு - நீர் பாயும் மடைவகை. அவாய் = அவாவி - விரும்பி.

92. காவிரி வெள்ளம் பல நீர் நிலைகளிலும் சென்று பரந்தமைக்கு, அப்பூதியடிகள்பால் அப்பர் சுவாமிகளைக் காண ஆசை எழுந்து பரந்தமை உவமை. மறையவர் - அப்பூதியடிகள். நாவரசு - திருநாவுக்கரசு சுவாமிகள். மதகு ஊடும் போய். தடம் - குளம்.

93. கலிக்காமருக்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் மன வேறுபாடு உண்டானமையை ஏயர்கோன் கலிக்காம நாயனூர் புராணத்திற் காண்க. மருவு உளம் - பொருந்திய மனம். இடைநின்ற பெருமான் - ஸ்ரீ தியாகேசப் பெருமான்.

94. செறு - வயல். குழை தரம் புணர - சேருகும் தன்மை அடைய. பழையர் - கள் விற்போர். பிழி - கள். மிதப்ப மாந்தி - மிகவும் குடித்து. கழை - மூங்கிற் கோலை. சுளித்தல் - கோபித்தல். களிப்பு - கட் குடித்தலால் உண்டான மயக்கம். செய்வான் வேட்டனர் - செய்ய விரும்பினர்கள். களமர் - உழவர். களமரெல்லாம் புகுந்து, மாந்தி, மேவி, வேட்டனர் என்று இயைக்க.

95. கொடுந்தழ லினும்வெ துப்பு மிடிகுலைந் தொழியக் [கொல்வான்
அடுந்தொழி லியம னூர்தி யதுகொடு முயற னன்றென்
றெடுங்கலில் வலிசான் மள்ள ரொருங்குபல் பகடு சேர்த்து
நடுங்கலி லலந்தோ ளேந்தி நன்னிலந் தோறும் புக்கார்.

96. இணையிரு கரும்ப கட்டி னிரும்பிய னுகங்கி டத்தி
அணையுமற் றதற்கு நாப்ப ணமையவேர்க் கால்பொ ருத்திப்
பிணைதர விடக்கை மேழி பிடித்தொரு வலக்கை யெள்ளின்
துணையிரும் பொருகோல் வாங்கித் தொழித்தன குழுதல் [செய்வார்.

97. குறிதரு விளாக்கள் பல்ல கோலுபு படைச்சால் போக்கிச்
செறியமேற் றிசையி னின்றுங் கீழ்த்திசைச் செல்ல வுய்த்து
முறிவிறென் றிசையி னின்றும் வடதிசைச் செலமு யன்று
மறிவில்பா வூடை போக்கு மாக்களை நிகர்த்தார் மள்ளர்.

98. பொன்னிறம் புடவிக் கென்று புகலுவ துண்மை யேனும்
அன்னிறம் படைத்த மாயோ னகலந்தோய் தரலா லந்தத்
தொன்னிற மறமு ழுங்கித் தோய்நிறம் விராவிற் றென்ன
மென்னிறக் கழனி யெங்குங் கருநிற நொதியான் மேவும்.

---

95. மிடி கொல்வான் - வறுமையை நீக்கும் பொருட்டு. இயமன் ஊர்தி - எருமைக் கடா. மள்ளர் - மருத நிலத்தில் வாழும் உழவர். பகடு - எருது அல்லது கடா. அலம் - கலப்பை.

96. இணை இரு பகடு - ஒன்றுக்கொன்று இணையான இரண்டு எருதுகள், அல்லது கடாக்கள். கருமை - வலிமை. இரும் பியல் - பெரிய கழுத்து. நுகம் - நுகத்தடி. ஏர்க்கால் - கலப்பையின் ஒரு பகுதி. மேழி - கலப்பையின் கைப்பிடி. எள்ளின் துணை இரும்பு ஒரு கோல் - தாற்றுக்கோல். தொழித்தல் - ஒலித்தல், அதட்டுதல்.

97. விளா - உழவில் வரும் சுற்று. பல்ல - பல. கோலுதல் - வளைத்தல். படைச்சால் - உழவுசால். முறிவு இல் தென் திசை. பா ஊடை போக்கும் மாக்கள் - நெசவாளர். ஊடை - குறுக்கிழை.

98. புடவி - பூமி. அல் நிறம் - கரிய நிறம். அகலம் - மார்பு. அற - முற்றிலும். தோய் நிறம் - கலந்த நிறம். நொதி - சேறு. மாயோன் பூமியின் கணவனுதல் குறிக்கப்பெற்றது.

99. பயிரினை விருத்தி செய்யும் பைம்புனல் வேலி யெல்லாம்
உயிரினு மோம்ப னன்றென் றுற்றகங் கரிந்து வெட்டி
வயிரவன் றடந்தோண் மள்ளர் மீமிசை மலிய வேற்றிச்
செயிரற வரம்பு யர்த்தார் செல்லுநீர் சிதையா வண்ணம்.

100. உறுகருஞ் சேற்றுத் தோய்கா லூழ்த்தலுட் குறித்து மாற்றப்
பெறுமுறை தெரிந்தி யங்கும் பெற்றியிற் பரம்பு மீக்கொண்
டறுதியில் வடம்வி டாம லங்கைதொட் டூரா நிற்பர்
செறுவளத் தன்றி யாங்குஞ் செம்மாப்புச் சேரா தன்றே

101. விழைவளங் கழனி யெங்கு மிதக்குமா றருள்செய் யென்று
மழைமுகி லூருந் தேவை வணங்குபு வாழ்த்தல் செய்து
பிழைதபு செந்நெல் வெண்ணென் முளையெலாம் பிறங்க வாரித்
தழைதர வித்தி னார்கள் வயலெலாந் தடந்தோண் மள்ளர்.

102. குறுமுளைக் கூறு றுமற் கூடுமண் வேறு பாட்டின்
பெறுபுனற் றெளிப னைத்து மற்றைநாட் கவிழ்த்துப் பின்றை
உறுமழப் பசிய றிந்து பாலூட்டு மொருதாய் போலச்
செறுவுறப் பாய்த்தா நிற்பர் திண்புயக் களமர் நன்னீர்.

103. வெள்ளிய நிறங்க ழிந்து பச்செனு நிறம்வி ராய
ஒள்ளிய கொண்மூப் பெய்த வுறுபுனல் பாயுந் தோறும்
வெள்ளிய நிறங்க ழிந்து பச்செனு நிறம்வி ராவி
ஒள்ளிய முளைக ளுறென் றொருபெயர் படைத்த வன்றே.

---

99. புனல் வேலி = புனலுக்கு வேலி - வரப்பு. அகம் கரிந்து வெட்டி - உட்புறம் கடுமையாகும்படி வெட்டி. ஏற்றியது வரப்பை.

100. ஊழ்த்தல் - பக்குவமடைதல். அறுதி இல் வடம் - அறுத கயிறு. ஊரா நிற்பர் - பரம்படிப்பர். செம்மாப்பு-அகமலர்ச்சி. (பாடபேதம் - சேராதென்றே).

101. விழை வளம் - விரும்பும் வளம். மிதத்தல் - மிகுதல் முகிலூரும் தேவு இந்திரன். நெல் முளை - ஊற வைத்தலால் முளை கண்ட நெல்.

102. குழந்தையின் பசி முதலியன அறிந்து மிகாமலும் குறையாமலும் அளவறிந்து பாலூட்டும் தாய் களமர்க்கு உவமை. ஊறு - கேடு. கவிழ்த்தல் - வடிய விடுதல். மழ - குழந்தை.

103. முதல் இரண்டடிகள் மேகத்தின் தன்மையையும், பின் இரண்டடிகள் நாற்றின் தன்மையையும் குறித்தன. நாறு - நாற்று.

104. பறிசெயுந் தொறுமா தாரப் பற்றுநா மொழியே மென்று
செறியுமண் ணெடுபேர் மூலஞ் செவ்விய குணிற்கண் மோதி
முறிதர லில்லா வண்ண முடிசெய்து சுமந்து சென்று
வெறிவய லுய்ப்பார் போகம் வீசிடு மொருவன் போன்றார்.

105. நாறுதங் கியதே மாயை நன்னில மனைத்து மான்மா
மாறுகொள் ளாத நாறு வான்பெரும் போக முய்க்கும்
பேறுளா ரொருவ னூன்றும் பிணையனு ரருளே யாகத்
தேறுமா றெங்கு நட்டார் சேணில நயக்கு மாறே.

106. இருநிலம் வேறு பட்ட தெண்ணுபு சாய்ந்தாற் போலப்
பொருவற வெங்கு நட்ட முதலெலாம் பொருந்தச் சாய்ந்து
மருவுமிந் நிலத்துச் சார்பே வளமென்றேர்ந் தெழுந்தாற் [போலப்
பெருகவெவ் விடத்து மம்மா வெழுந்தன பெருநா றெல்லாம்.

107. எழுபயிர் தழையுங் காலைக் குணமெலா மியையும் போது
பழுதுசெ யுலோபந் தோன்றும் படியெனக் களைக டோன்றி
வழுவமை யூறு செய்ய மள்ளர்மற் றதுதெ ரிந்து
தழுவுமின் னுரை யேவ வவர்தளை தோறும் புக்கார்.

108. தகைமயில் வயல்சார்ந் தென்னச் சாருழத் தியர்தங் கண்டம்
பகையென முந்தி நீலோற் பலத்திர ளனைத்துங் காட்ட
வகைபெறக் கைத டிந்த அங்கையின் பகையுங் காட்டத்
தொகைபெறு கமல மெல்லாந் தொலைத்தன சொற்ற கையே.

---

104. நாற்றுக்களைப் பறிக்கும்போது அவற்றின் வேரில் பற்றியுள்ள மண்ணைக் குறுந் தடியில் அடித்துப் போக்கி, முடிகளாகக் கட்டி, நடுதற்குரிய வேறு வயலில் கொண்டு சேர்த்தல் இப் பாட்டில் கூறப்படுகின்றது. இவ்விடத்தில் பற்றுடைமையும் அதனைப் போக்குந் தன்மையும் பொருத்திக் கூறப்படும் நயம் காண்க. போகம் - இங்குப் பற்று. வெறி - வாசனை ; கலக்கமும் ஆம்.

105. இப் பாட்டின் நுண்ணிய பொருள் ஆய்வுக்குரியது.

106. நட்ட நாற்றுக்கள் முதலில் தலை சாய்ந்தும், பின்பு தலை நிமிர்ந்தும் நின்ற தன்மை நயம்பட விளக்கப்பெற்றுளது இப் பாடலில்

107. களை பிடுங்கல் இங்குக் கூறப்பெற்றது தழைதல் - வளமுறுதல். எல்லாக் குணமும் அமைந்த இடத்தில் உலோபம் தோன்றி அவை அனைத்தையும் கெடுத்தல் போல, பயிர்கள் தழைக்கத் தலைப்படும்போது அங்குக் களைகள் தோன்றி அவற்றைக் கெடுக்கத் தொடங்கின என்றார். மின்னார் - மகளிர். தளை - வயல்.

108. களைகளின் விதங்கள் கூறப்பெறுகின்றன. தகை - தகுதி. கண் தம் பகையென என்று இயைக்க. காட்ட - கண்ணிற்பட. கண்களுக்குப் பகையான

109. கடிபசுங் குவளைப் போது காதிடைச் செருகல் செய்தும்
வடிமல ராம்பன் மோப்ப நாசியின் மருங்கு சேர்த்தும்
கொடியனார் பயிலு வார்கண் குவளைவா யாம்ப லொத்த
படியறி தரவ டுத்த பாடமைத் திடுவா ரொத்தே.

110. ஒருகரி முன்ன முல்லை யொருகொடி தகைக்கப் பட்ட
தொருபிடி யிந்நாள் வள்ளைக் கொடிபல வொழித்துச் செல்லும்
பெருகவும் வியப்பே யென்னிற் குவலயம் பெயர்ப்ப தோரில்
பெருமித மாமோ பற்பல் கொடிகளைப் பேதித் தேகல்.

111. அகனமர் வினையின் மேய வாற்றுக்கா லாட்டி மார்தம்
முகமதி கண்ட போதே முண்டகஞ் சோரு மென்னில்
இகவில்கை முயற்சி யென்று மிகையியைந் ததுவுங் கூடிப்
சகம்விரா யமையு மந்தத் தாமரைக் குய்தி யுண்டோ

112. முகமுத லுறுப்பிற் கெல்லா முழுப்பகை யாய தோர்ந்தோ
இகவிறந் திணையாள் வேந்தற் கியைபெருந் திருவ மெல்லாம்
அகலிருங் கடற்க ரப்ப வமைத்ததை யுணர்ந்தோ கஞ்சம்
உகவதைத் தனர்சார் புற்ற வனைத்தையு மொழித்தா ரன்றே.

---

நீலோற் பலத்தை முதலிலும், கைக்குப் பகையான தாமரைகளைப் பின்புமாக உழத்தியர் கைகள் களைந்தன என்க.

109. குவளை மலரும் ஆம்பல் மலரும் முறையே தம் கண்ணையும் வாயையும் ஒத்துள்ள தன்மையைப் பார்ப்பவர் போல உழத்தியர் குவளையைக் காதில் செருகி ஆம்பலை நாசியின் அருகில் சேர்ப்பர்.

110. கரியை முல்லைக்கொடி தகைத்த செய்தி வடதிருமுல்லைவாயிலில் நிகழ்ந்தது. தொண்டைமான் ஏறிச் செலுத்திவந்த யானை, காட்டிலே முல்லைக் கொடியால் தடுப்புண்டு மேலே ஓரடியும் பெயர்த்துவைக்க முடியாமற் போகவே, மன்னன் கீழேயிறங்கி அவ்விடத்தைச் சோதித்துப் பார்க்க அங்கே ஒரு லிங்கம் காணப்பட்டது. இதன் விரிவை அத் தலபுராணத்துட் காண்க. பிடி : இங்கே ஆகு பெயராய் உழத்தியைக் குறிக்கும். குவலயம் - பூமி ; நெய்தற்கொடி என இரு பொருளுடையது. களை பறிக்கும்போது மண்ணைப் பெயர்த்துக்கொண்டு வருதலாலும், களையாக நெய்தலையும் பறித்தலாலும் இரு பொருள்படக் 'குவலயம் பெயர்ப்பதோரின்' என்றார்.

111. ஆற்றுக்காலாட்டிமார் - மருதநிலப் பெண்டிர். முண்டகம் - தாமரை. முகத்தைக் கண்டபோதே தாமரை சோரும் எனில் அவற்றைக் களையக் கைமுயற்சி வேண்டுவதின்று ; அதுவும் கூடினால் எங்கும் பரந்துள்ள அத் தாமரைக்கு உய்தியில்லை என்றார். சகம் விராய் அமையும் - உலகமெங்கும் பரந்துள்ள.

112. முகம் முதல் உறுப்பு : முகம், கை, கால். இகவு இல் தம் திணை - வளம் நீங்குதலில்லாத தம்முடைய மருத நிலம். அத் திணையை ஆள்வேந்தன் - இந்திரன். திருவம் - செல்வம். கடலில் கரந்தது துர்வாசர் சாபத்தால். கஞ்சம் - தாமரை. உக வதைத்தனர் - அழியத் தொலைத்தனர். சார்பு உற்ற அனைத்தையும் ஒழித்தார் - அத் தாமரையை அடுத்து வளர்ந்திருந்த எல்லாக் களைகளையும் பறித்தனர்.

113. சைவலங் குவளை யாம்ப ருமரை யனிச்சம் வள்ளை
கைவலத் திறுத்தார் புல்லுங் களைந்தனர் மூலத் தோடு
பெய்பல புல்லுந் தீரக் களைந்ததெப் பெற்றி யென்னின்
மொய்பகை யெளிய தென்று முன்னுபு விடுவா ருண்டோ.

114. அரிமதர் விழியா ரிவ்வா றடர்களை கட்ட கன்றூர்
புரிதொழிற் களமர் யோகர் புகலிரு வழிய டைத்துத்
தெரியொரு வழிதி றக்குஞ் செயலின்ஞெண் டுகள்செய் [போக்குப்
பரிதர வடைத்தா ரோர்வாய் திறந்தனர் பாய்த்தி னூர்நீர்.

115. களமர்க ளிடைய றுத முயற்சியிற் கதித்த காலை
வளவகன் கழனி தோறும் வண்பயிர் பணைத்தெ ழுந்து
பளகறக் கருப்பங் கொண்டு பசுந்தலை மடல்கி ழித்துத்
தளர்வரும் வயிர வீட்டி தாமென வெளித்தோன் றும்மே.

116. முளையென விளர்த்துத் தோன்றுங் கதிரெலா முழுநி லாவின்
விளைகருக் கொண்டு பைத்துக் கலியினை வெகுளல் காட்டத்
தளைதொறுஞ் சிவந்து தாங்குந் தன்மையு ளுணர்ந்தா [லென்ன
வளைதலைக் கொடுமண் சாய்ந்த மள்ளர்தாழ் மடைசீத் தாரால்

117. அரிதரு பருவந் தேர்ந்து கூனிரும் பங்கை யேந்தி
விரிமுத லறத்த டிந்து விரைந்தரி பல்ல சேர்த்து
வரிகயி றிடையி றுக்கி மலையெனத் தலைமேற் கொண்டு
தெரிதரக் களத்திற் சேர்ப்பார் திண்புயக் களமர் மாதோ.

---

113. சைவலம் - ஒருவகைப் பாசி. கை வலத்து - கை வன்மையால். மூலம் - வேர். மொய் பகை - நெருங்கிய பகை. 'இளைதாக முண்மரங் கொல்க களையுநர், கைகொல்லுங் காழ்த்த விடத்து' என்ற குறள் இங்கு நினைத்தற்குரியது.

114. அரி - செவ்வரி. மதர்த்தல் - செழித்தல். களை கட்டல் - களை பறிக்கை. யோகர் புகல் இரு வழியடைத்து ஒரு வழி திறக்கும் செயல் இடை பிங்கலைகளை அடைத்துச் சுழுமுனை நாடியைத் திறத்தலாகிய யோகப் பயிற்சி. ஞெண்டு - நண்டு. போக்கு - துவாரம். ஓர் வாய் - ஒரு மடை.

115. கதித்தல் - விரைதல். பணைத்து - பருத்து. பளகு - குற்றம். கதிர் வெளி வருதல் கூறப்பெற்றது.

116. விளர்த்தல் - வெளுத்தல். பைத்து - பசிய நிறமுடையதாகி. கலியினை வெகுளல் வறுமையைக் கோபித்தல். வளைதலைக் கொடு - வளைந்து. மடை சீத்தல் - வடிமடையை வெட்டிவிட்டு நீரை வடித்தல்.

117. அரிதரு பருவம் - அறுவடைக்குரிய பக்குவம். கூன் இரும்பு வளைந்த அரிவாள். முதல் - வேர். தடிதல் - அரிதல். அரி - கதிர்க் கற்றை.

118. களத்துயர்த் தியபோ ரெல்லாஞ்
சரித்தனர் கருங்க டாக்கள்
வளத்துறப் பலபி ணித்து
வளையமே னடாத்துங் காலை
உளத்துநெற் பலால நீக்க
முணர்தரக் கயவாய் கவ்விக்
கொளத்துனைந் தியங்கிக் கூற்றிற்
கூறுசெய் திட்ட மாதோ.

119. இருதிணை யுயிர்மு யற்சிக்
கித்திணை தருமி லாபத்
தொருதிணைக் கிஃதா மென்றே
யொதுக்கினர் பலால மற்றும்
வருதிணைக் கிஃதா மென்று
தூற்றிவா ரிக்கு வித்தார்
தருதிணை வளர்க்குஞ் செந்நெ
லளந்திடச் சமைந்தா ரன்றே.

120. இறையவ னறிந்து கொள்ளு
மாறிலொன் றியைய நல்கி
மறையவ ராதி யோர்க்கு
வழங்குவ வெறுப்ப வீசி
நிறைதர மற்று முள்ள
நெல்லினை யளத்தல் செய்து
குறையற மனையி னுய்க்குங்
குடிகளே மருத மெங்கும்.

---

118. கடாக்கள் பல பிணித்து வளைய மேல் நடாத்தல் - கடாவடித்தல். பலாலம் - வைக்கோல்; கயவாய் - எருமை. துனைதல் - விரைதல். கூற்றின் கூறு செய்திட்ட - (உடலினின்றும் உயிரைப் பிரிக்கும்) யமன் போல, (அரியினின்றும் நெல்லைப்) பிரியச் செய்தன.

119. இரு திணை உயிர் - மக்களும் மாடுகளும். இத் திணை - மருதத் திணை. வைக்கோல் அஃறிணைப் பொருளாகிய கடாக்களுக்கு உதவும் என்று ஒதுக்கினர். மற்றும் - மற்றொன்றாகிய நெல்லையும்.

120. இறையவன் - அரசன். ஆறிலொன்று - கடமை. வெறுப்ப - திருப்தியடைய.

121. நெல்வள மிஞ்சி மஞ்ச
ணெடுங்கழை வளமுன் ஞகப்
பல்வள மருவி யம்பர்
முதற்பல தலமுங் கொண்ட
சொல்வள மருதச் சீரென்
சொற்றனங் கண்ட லாதி
புல்வள மலியு நெய்தல்
வளஞ்சில புகல லுற்றும்.

வேறு

நெய்தல் வளம்

122. குழைபசிதீர்த் தெவ்வுலகுங் கோஞை லினிதோம்பும்
மழைமுகிறன் பசிதீர்க்க வந்துவிழும் வைப்பாகி
விழையும்வள மேன்மேலும் விருப்பின்முயல் வார்க்குதவும்
தழைவருண னினிதோம்பத் தவாதமருங் கழிநெய்தல்.

123. விரிசுடுசெந் தழல்கொளுந்த மிசைப்பயின்றும் வேவாமே
புரிசுவையுப் புறக்கலந்தும் புணர்சிறிதுந் தோயாமே
தெரிமயிலே பலபயில்வ திகழ்தரவில் லறத்தமர்ந்தும்
அரிதுயரஞ் சற்றேனு மமையாத வறிவினர்போல்.

124. கரியசெழும் புன்ஞகங் கருநிறக்கொண் மூப்பொருவும்
உரியவரும் பத்தேயு முறந்ததா ரகைமானும்
தெரியவெள்ளோ திமம்புகுதல் செல்லுமுழு மதிவிழையும்
பிரியமிகு மதுத்திவலே பெய்யுமழைத் திவலேயே.

---

121. கழை - கரும்பு. கண்டல் - தாழை; முள்ளியும் ஆம்.

122. குழை பசி - வாடச் செய்யும் பசி. வைப்பு - இடம். நெய்தல் நிலக் கடவுள் வருணன் என்ப. தவாது அமரும் - குன்றுது தங்கும்.

123. மயிலே - மீன்; கடலில் உள்ள மீன்கள் வடவைத் தீயின் சூட்டிஞல் வேவாமலும், உப்புச் சுவை தம்மிடம் பற்ருமலும் இருத்தற்கு, மெய்யறிவுடையோர் இல்லறத்திலிருந்தும் அதன் துயரம் முதலியன பற்றப்படாமல் இருப்பது உவமை. அரி துயரம் - அரிக்கும் துயரம்.

124. புன்ஞகம் - புன்னே. உறந்த - சிறிதான. ஓதிமம் புகுதல் - அன்னங்கள் புன்னேயினூடே புகுந்து செல்லுதல். விழையும் - ஒக்கும். புன்னே மேகமாகவும், அரும்புகள் தாரகைகளாகவும், ஓதிமம் மதியாகவும், மது மழையாகவும் வருணிக்கப் பெற்றன.

125. பொருள்பலவுஞ் செறிவரைமுற் பொருள்பலவு முள்ளடக்கித்
தெருள்வகையில் பற்பலவும் வெளிப்படுத்துந் திரைப்புணரி
அருள்வகைசெய் விழுப்பொருளை யகத்தடக்கிப் பருப்பொருளை
மருள்வகையி லாதுவெளிப் படுத்துவார் தமைமானும்.

126. கலமனைத்துஞ் சயந்தனமே கனமகரங் கறையடியே
வலதரங்கம் வாம்பரியே மயிலையெறி பவராளே
புலவுடன்மீ னெறிவாளே புணரியா கவப்பாரென்
றிலகுமுடி மன்னரெலா மவண்பொருதற் கிசைவுற்றார்.

127. திருப்பெரிது படைத்தவருந் தீக்குணமுண் டேலொழியார்
திருப்பெரிதில் லாதவரு நற்குணமுண் டேற்சிதையார்
அருப்புமணிப் பெரும்புணரி யளப்பிலுவர் நீருதவும்
அருப்புமணற் சிறுகேணி யான்றசுவை நீருதவும்.

128. படவியக்கி நெடுந்தூரம் படர்ந்துநெடும் வலைவீசித்
தடநெடுமீன் பலகவர்ந்து தடங்கரையின் மிசைக்குவித்துக்
கடலகம்வாழ் குநரொதுங்கக் கனவிரதங் கவர்ந்தமுகில்
விடலருமக் குவியல்பெரு வெற்பெனவே றிடுமிளைக்கும்.

---

125. வரைமுன் பொருள் - மலை முதலான பொருள்கள். தெருள்வகையில் - விளக்கமான முறையில். புணரி - கடல். விழுப்பொருள் - தத்துவம்; கடவுளும் ஆம். மானும் - ஒக்கும்.

126. சயந்தனம் - தேர். மகரம் - சுறுமீன். கறையடி - யானை. தரங்கம் - அலை. வாம்பரி - தாவும் குதிரை. பவர் ஆள் - நெருங்கிய காலாட்கள். ஆகவம் + பார் = ஆகவப்பார் - போர்க்களம். இங்குப் புணரி நால்வகைப் படைகளுடன் விளங்கும் போர்க்களமாக வருணிக்கப்பெற்றது.

127. தீய குணமுடைய சிலர், பெரும் பொருள் படைத்தவராயினும். தீய குணத்தை விடமாட்டார்கள். நற்குணமுடையவர் வறுமையிலும் குணம் கெடார் கடல் நீர் மிகுதியுடையதாயினும் உப்புத் தன்மை நீங்குவதில்லை; அதன் அருகிலுள்ள கேணி நீர் குறைந்ததாயினும் நல்ல சுவையிற் கெடுவதில்லை. 'கடல் பெரிது, மண்ணீருமாகா ததனருகே சிற்றூறல், உண்ணீருமாகிவிடும்' என்பது காண்க.

128. படவு - படகு. கடலகம் வாழ்குநர் - மீனவர். இரதம் - நன்னீர், இளைக்கும் - சோர்வடையும்.

129. விரும்புநுளைச் சியர்மகவை மென்னிழல்செய் புன்னகைத்
திரும்புகவைத் தனகருங்கோட் டியைதருதொட் டிலிற்கிடத்தி
அரும்புபல மீன்பிளப்பா ரவருவப்பத் திரைமீன்றாய்ச்
சுரும்புறுமத் தருப்பிணித்த தொட்டிலசைத் துறக்கிடுமே.

130. பட்டமீன் முழுமையுஞ்செம் பாதிபிளந் துப்புறுத்தி
வட்டவான் களம்பரப்பு நுளைச்சியர்வண் கைக்கமலம்
தொட்டவிசே டந்தெரிந்து தோற்றுகதி ரோன்கரங்கள்
இட்டமிகத் தைவரல்கண் டேற்பவருள் ளுவப்புறுவார்.

131. அணங்கனைய பரத்தியர்வா யரக்காம்பன் மலர்நாறும்
குணங்கிளரு முடக்கைதைக் கொழும்பூவைம் பானாறும்
இணங்கருஞ்செண் பகநாறு மேற்றமார் முறிமேனி
உணங்கன்மீன் றலைமிசையே நாறுமெனி லுறுவியப்பே.

132. திரையெறியு மணிமுத்தந் திண்கரையிற் செறிந்தோங்கும்
உரைசிறந்த புன்னைகத் தடியொருங்கு தோன்றுவன
கரையியங்கு பரதவரிக் காமர்மர மத்தனையும்
புரையிலரும் புதிர்த்தவித மென்னையெனப் புந்திசெய்வார்.

133. முறிதிரைமே லெடுத்தெறியு முத்தமொளிர் புன்னைகம்
செறிதருமோ திமக்குடம்பை சேர்கருவி னெடும்பொருந்த
அறிதரலி லவ்வன்ன மடைகிடந்து நெட்டுயிர்த்துக்
குறிதுயர மிகக்கூருங் குஞ்சிவெளிப் படாமையினல்.

---

129. நுளைச்சியர் - வலைச்சியர். கவையிரும்பு போலக் கிளைத்திருந்த புன்னைமரக் கிளையிலே கட்டப்பட்ட தொட்டில். அவர் - அந்நுளைச்சியர். தாய் - தாவி. சுரும்பு உறும் அ தரு பிணித்த எனப் பிரிக்க. உறக்கிடும் - உறங்கச் செய்யும்.

130. கதிரோன் கரங்கள் - சூரிய கிரணங்கள். தைவரல் - தடவுதல்; உப்புறுத்திய மீன்களின்மேல் வெயில் படுதலைக் குறிக்கும். ஏற்பவர் - மீனை விலைக்குக் கொள்வோர். உப்பிட்ட மீன் வெயிலிற் காய்தல் நன்று.

(பி - ம்.) களம் பரப்ப.

131. அணங்கு - தெய்வ மகள். பரத்தியர் - நுளைச்சியர் முடம் கைதை கொழும் பூ ஐம்பால் நாறும் - வளைந்த தாழையின் வளமான பூ, கூந்தலிலே மணக்கும். ஏற்றம் ஆர் முறிமேனி - சிறப்புமிக்க தளிர்போன்ற உடல்.

132. காமர் - அழகிய. புந்தி செய்வார் - ஆலோசிப்பார்.

133. குடம்பை - கூடு. கரு - முட்டை. அறிதரல் இல் அ அன்னம் என்று பிரிக்க. குஞ்சி - குஞ்சு.

134. விளைபுரியு முமணர்குழீஇ மிகக்குவிக்கு முப்பொருபால்
தனைநிகருங் கடற்குளிப்போர் தாங்குவிக்கும் வளையொருபால்
இனைதலறக் கலனின்று மிறக்குபல பொருளொருபால்
புனைபவளத் திரளொருபாற் பொருபுணரிக் கரையெங்கும்.

135. மறையருச்சித் தேத்தியது மாதவத்துப் புண்டரிகன்
இறையருள்பெற் றெம்பெருமா னின்மலமே னியினுடம்போ
டுறைதிறம்பெற் றதும்பிறவு முளத்தமைய வுணர்தருகால்
குறைவில்புகழ் நெய்தலினே குறிஞ்சிமுத லியதேத்தோ.

136. அறிபுகழ்நா வுக்கரசை யான்றதலை மேற்சுமந்தும்
நெறியமையு மதிபத்தர் நிதம்பயிலுந் தவம்புரிந்தும்
குறிபெறுபல் புகழ்படைத்துக் குணம்படைத்த பெருநெய்தல்
செறிவளமென் றெடுத்துரைத்தாம் பாலைவளஞ் சிலபுகல்வாம்.

வேறு

பாலை வளம்

137. கொடிய வேனிலண் பகலிடைப் பிறந்ததுங் கொதிக்கும்
நெடிய தன்சினத் தழற்கியை புடைமையு நினைந்து
கடிய மூவிலை வேலுடைக் கன்னிகை காப்பப்
படிய வெம்பரன் முரம்பினுற் பொலிவது பாலை.

138. வழுதி தோள்புணர் மாலையும் வழுதிமுன் மற்றைப்
பழுதின் மன்னவர் பகைப்புல முருக்குபு பமரத்
தொழுதி மேவரச் சூட்டிடு மாலையுந் தோற்றும்
கொழுதி வண்டிமிர் நிம்பமுஞ் சீரிடமுங் குழைத்தே.

---

134. வளை-சங்கு. இனைதல்-வருந்துதல். பொருபுணரி-அலை மோதுதங் கடல்.

135. மறை அருச்சித்து ஏத்தியது, திருமறைக்காடு என்னும் வேதாரணியத்தில். புண்டரிகன் - திருமால். நின்மல மேனியின் உடம்போடு உறை திறம் பெற்றது - அரி அர்த்த மூர்த்தமானது; இது சங்கர நாராயணன் கோயிலில் என்பர்.

136. நாவுக்கரசரைத் தலைமேற் சுமத்தல் - கல்லே தெப்பமாகக் கரை சேர்ப்பித்தமையைக் குறிக்கும். அதிபத்த நாயனுர் வரலாற்றைப் பெரிய புராணத்துட் காண்க.

137. மூவிலை வேலுடைக் கன்னிகை - துர்க்கை; துர்க்கை பாலைநிலக் கடவுள். வெம் பரல் - வெப்பமான பருக்கைக் கற்கள். முரம்பு - பருக்கைக் கல்லுள்ள மேட்டு நிலம்; 'பரன் முரம்பாகிய பயனில் கானம்' (அகநா. 5.)

138. வழுதி தோள் புணர் மாலை - பாண்டியன் மாலையாகிய வேம்பு. பமரம் = பிரமரம் - வண்டு. தொழுதி - கூட்டம். பகைவர் சூட்டிடும் மாலை - வாகை. நிம்பம் - வேம்பு. சிரீஷம் - வாகை. இந் நிலத்து மரங்கள் வேம்பும், வாகையும்.

139. கழலி லாமற வோரிலாப் பாலையைக் காண்பார்
நிழலி லாக்கொடுந் தேமென வுரைப்பதென் னினைமின்
விழலி லாச்சிறப் பீந்தமர் தலிற்கலி மேல்வந்
துழலி லாச்சுர வுலகமென் றறிஞர்நன் குரைப்ப.

140. வறிய கூவலை நிரப்புவ பாடல மதுவம்
நறிய நீர்நனி யுதவுவ நாடுமா மலகம்
குறிய வெம்பரன் மிதித்திடப் பஞ்சுகுங் கோங்கு
செறிய வின்பழங் காலுவ தேங்குகற் சூரம்.

141. அகையி லோர்முனி வரனெனக் கல்லுணு வமைந்து
தகையி லெங்கணும் பயிலுவ துணைக்கபோ தங்கள்
மிகைய லாவுடன் போக்கியல் சுரநில மேன்மை
தொகையி னோதினந் திணைமயக் கமுஞ்சில சொல்வாம்.

திணை மயக்கம்

142. வரையின் வேய்தலை வளைந்துகா னுய்வளப் பாடித்
தரையின் மேவருங் குழல்பட முயறிறஞ் சாரும்
புரையில் கானிமி லேற்றினம் வரையகம் போந்து
விரைய வேங்கையை யுரிஞ்சியோ ரற்புதம் விளைக்கும்.

---

139. கழல் இலா (அங்கு நின்றும்) வெளியேறுதல் இல்லாத. மறவோர் இல் அ பாலை - மறவர்களின் இருப்பிடமாகிய அந்தப் பாலை. ஆ பாலை - சுட்டு நீண்டது. தேம் - இடம். நினை மின் - யாவரும் நினைக்கத்தக்க மின்னற் கொடிபோலும் துர்க்கை. சிறப்பு ஈந்து அமர்தலின - சிறப்பை (அந் நிலத்துக்கு) அளித்துக் கொண்டு அங்கே அமர்ந்திருத்தலால். கலி - கலி புருடன். சுரவுலகம் - தேவருலகம். ஈந்து என்னும் மரப் பெயரும், பாலையைக் குறிக்கும் சுரம் என்னும் சொல்லும் குறிப்பாக அமைந்துள்ளன.

140. கூவல் - கிணறு; மதுவம் - தேன். ஆமலகம் - நெல்லி. கோங்கு - முள்ளிலவு. கற்சூரம் - பேரீச்சை. பாடலம், ஆமலகம், கோங்கு, கற்சூரம் என்ற பாலை நில மரங்கள் இங்குக் கூறப்பெற்றன.

141. அகை - வருத்தம். கல் உணு துணை கபோதம் - கல்லை உணவாகக் கொள்வதும், எப்போதும் இணையாக இருப்பதுமான புரு. தகை - தடுப்பு. உடன் போக்கு - அகத்திணைக் களவொழுக்கங்களுள் ஒன்று; இது பாலைக்குரியது. தொகையின் ஓதினம் - தொகுத்துக் கூறினோம்.

142. வேய் - மூங்கில். கான் - முல்லை நிலம். வள ஆய்ப்பாடி என மாறுக. குழல்பட முயல்திறம் சாரும் - வேய்ங் குழலாக அமைய முயலும் தன்மையுடையதாகும். இமில் ஏறு இனம் - கொண்டையை உடைய காளைகள். உரிஞுதல் - உராய்தல். முல்லையும் குறிஞ்சியும் மயங்கினமை இங்குக் கூறப்பெற்றது.

143. கான வானினம் பொழிந்தபால் வாவிநீர் கலப்ப
மான வோதிம நீர்பிரித் துண்டுள மகிழும்
ஆன செய்க்குலை யரம்பையங் கனிவனத் தான்பால்
தான மாங்கலத் தாயுவப் புறவுதிர் தருமால்.

144. பணைய கம்பொலி யன்னந்தன் முட்டையின் பாங்கர்
அணைய வாரிமுத் ததனையுஞ் சேர்த்தடை காக்கும்
இணையில் சூதவான் காய்க்குலை யெய்திப் பளத்தைப்
பிணைய நீவுவ பின்புசம் பந்தித்தல் பேணி.

145. குரவு பாவையீன் றிடப்பணை குளிர்புனல் வாக்கும்
பரவு மால்வரை காந்தட்கை வருடுமின் பசுப்பால்
விரவு கான்றருங் கழியமை யுற்பல விழிகள்
உரவு மேவுற விமைத்தில கண்டுகண் டுவக்கும்.

146. சந்த மேவிய குடிபல நெருங்கியுட் டழைய
வந்த நாட்டகத் தைந்திணை வளங்களு மயக்காம்
பந்த முந்தெரிந் துரைப்பர்யார் யாமெவன் பகர்ந்தாம்
முந்த மாநகர் வளத்தினுஞ் சிற்சில மொழிவாம்.

திரு நாட்டுப்படலம் முற்றியது.

திரு விருத்தம் 110

---

143. வாவி - குளம். செய் - விளை நிலம். அரம்பை - வாழை. ஆய் - ஆய் மகள். அரம்பையங் கனி உதிர்தரும் எனக் கூட்டுக; முல்லையும் மருதமும் மயங்கினமை இங்குக் கூறப்பட்டது.

144. பணை - வயல். சூதம் - மாமரம். நீவுதல் - தடவுதல். பின்பு சம்பந்தித்தல் - மாங்காய்க்கு உப்பிடுதலைக் குறிக்கும். மருதமும் நெய்தலும் மயங்குதல் இங்கே கூறப்பட்டது.

145. குரவு - குரா மரம்; குறிஞ்சிக்குரியது. பாவை - குராவின் மலர். பணை - நீர்நிலை; மருதத்துக்குரியது. வாக்குதல்,- ஊற்றுதல். வருடுதல் - தடவுதல். கழி - உப்பங்கழி. உற்பலம் - நீலோற்பலம். இதில் நால்வகைத் திணை மயக்கமும் கூறப்பட்டது.

146. சந்தம் - அழகு.

# 3. திரு நகரப் படலம்

147\. மங்கை நாயகி கண்டுள மகிழ்ச்சியிற் றிளைப்பச்
செங்கை யாடுநஞ் சிவபிரான் றிருவருள் சிவணக்
கொங்கை யார்பொழிற் குவலயத் திலதமாய்க் குறிப்பார்ங்
கங்கை யாமல கம்பொரப் பொலிகுவ தம்பர்.

148\. சிறந்த மாகவிப் புலமைய ரளப்பிலர் செறிந்து
நிறந்த வாப்புகழ் படைத்தது நிதியா சிறைஞ்ச
உறந்த மாத்திரு வாளரு மொழிவற வுறைவுற்
றறந்த வாச்சிறப் பாற்பொலிந் தோங்குவ தம்பர்.

149\. விசிக்கும் வார்முர சோதையான் மாளிகை விளர்ப்பால்
வசிக்குந் தேமென மாயவ னமர்தலாற் புலவர்
பசிக்கு நல்லமு துதவலாற் பாற்கடல் கடுக்கும்
அசிக்குந் தன்மையில் பெரும்புக ழாற்பொலி யம்பர்.

150\. உம்ப ராதிய ரொருங்குவந் துமையவ ளொருபால்
நம்பர் தாள்பணிந் தந்நகர் வளமெலா நயந்தீ
திம்ப ராயினு மம்பரே யென்றிசைத் திடலால்
அம்ப ரென்றொரு பெயர்புனைந் ததுதிரு வம்பர்.

---

147\. செங்கை ஆடும் - செவ்விய கைகளை வீசி ஆடுகின்ற. செங்கை திருவாதிரை நக்ஷத்திரம் எனலும் ஆம். கொங்கை ஆர் பொழில்; கொங்கு - வாசனை. ஐ - அழகு. சிவணுதல் - பொருந்துதல். திலதம் - பொட்டு. அங்கை ஆமலகம் - உள்ளங்கை நெல்லிக்கனி. அம்பர் - தலத்தின் பெயர்.

148\. நிறம் தவா புகழ் - ஒளி குறையாத புகழ். நிதி அரசு - குபேரன். உறந்த - செறிந்த. திரு ஆளர் - செல்வர். கல்வி, செல்வம், அறம் இம் மூன்றும் செறிந்த நகரம் என்றார்.

149\. விசித்தல் - கட்டுதல். ஓதை - ஓசை. விளர்ப்பு - வெண்மை. மாயவன் - திருமால். அவ்வூரில் திருமால் கோயில் உள்ளமை குறிக்கப்பெற்றது. கடுக்கும் - ஒக்கும். அம்பர் பாற்கடல் கடுக்கும் என்பதற்குக் காரணங்கள் கூறப்பெற்றன அசிக்கும் தன்மை இல் - அவமதிக்கும் தன்மை இல்லாத.

150\. உம்பர் - தேவர். 'ஈது இம்பர் ஆயினும் அம்பரே' என்றவர் உம்பர். அம்பர் - மேலுலகத்தைச் சார்ந்தது.

151. அம்ப ராவணி சடையினர் திரிபுர மடுமால்
அம்ப ராவளர் கொடியின ராரரு ளமைநே
யம்ப ராவம லாவெனி லமைநிரா லம்பர்
அம்ப ராவவீற் றிருப்பது பெருந்திரு வம்பர்.

152. போக்க வல்லது பிணியினை மிடியெனும் புலேயைத்
தாக்க வல்லது கற்பத்துந் தளர்ச்சியைத் தபுத்துக்
காக்க வல்லது கடையுரு வானந்தக் களிப்பை
ஆக்க வல்லது சார்ந்தவர்க் கமலர்வா ழம்பர்.

153. கொடுக்கு மிச்சைய ராகம வழிமலக் குறும்பு
கெடுக்கு மிச்சையர் மறங்கெடக் கிளரறப் படைகை
எடுக்கு மிச்சைய ரினையவர் முதலிய ரென்றும்
அடுக்கு மிச்சைய ரெனச்சொலப் பொலிகுவ தம்பர்.

154. எடுத்த நேமியான் மார்பமும் வானகத் திருப்பும்
விடுத்த வாரருட் டியாகரா சப்பெயர் விமலர்
உடுத்த வாவியா ரூரக நின்றும்வேற் றுருக்கொண்
டடுத்த வாவின்வீற் றிருக்குமா தவஞ்செய்த தம்பர்.

---

151. அம்பு அரா அணி சடையினர் - நீரையும் பாம்பையும் சடையில் அணிந்த சிவபிரான். திரிபுரம் அடு மால் அம்பர் - திரிபுரத்தை அழிப்பதற்குத் திருமாலே அம்பாகக் கொண்டவர். ஆ வளர் கொடியினர் - ஏற்றுக் கொடியை யுடையவர், ஆர் அருள் அமை நேயம் பராவு, அமலா எனில் அமை நிராலம்பர் – 'மிக்க அருளுடன் அமைந்த அன்பினைப் பரப்பும் அமலா!' என்று அழைத்தால், அதற்கு உட்படும் கடவுள். நிராலம்பர் - பற்றுக் கோடற்றவர்.

152. சார்ந்தவர்க்கு-அந்நகரை அடைந்தவர்க்கு. அமலர்-சிவபிரான். பிணி - நோய். மிடி என்னும் புலே - வறுமை என்னும் இழிவு. கற்பம் - ஊழி. தபுத்து - நீக்கி. கடை உரு - முடிவில்லாத.

153. மலம் குறும்பு - மும்மலங்களின் வலிமையை. இனையவர் - இப்படிப் பட்டவர்.

154. நேமியான் மார்பமும் வானகதது இருப்பும் விடுத்த தியாகராசர்: தியா கேசா முன்பு திருமால் மார்பகத்தே வைத்துப் பூசிக்கப் பெற்றவர் என்பதும், பிறகு இந்திரனல் சுவர்க்கத்தில் வைத்துப் பூசிக்கப் பெற்றவர் என்பதும் புராண வரலாறுகள்: ''அயிரா வணமேரு தானே றேறி அமரர்நா டாளாதே ஆரு ராண்ட, அயிராவணமே'' என்பது தேவாரம். ஆர் அருள் தியாகராசப் பெயர் விமலர். ஆவி - நீர் நிலே. வேற்றுருக் கொண்டது சோமாசிமாற நாயனர் பொருட்டு; அப் படலத்துட் காண்க. அவா - ஆசை. அம்பரில் தியாகராசர் வேற்றுருக்கொண்டு வீற்றிருக்கின்றுர் என்றது அவர் கோயில் கொண்ட திருவம்பர் மாகாளத்தைக் குறித்ததாகலாம்.

155. குவல யத்திரு நிறத்துமால் குலிசவேற் றடக்கை
இவர்மு கிற்றிறல் வேந்தனே ரேந்தன்மற் றிவரின்
கவல றத்தவம் புரிந்தவோர் மறையவர் கருதி
அவத ரித்திடப் பெருந்தவம் புரிந்ததா லம்பர்.

156. இம்பர் மாதவ மெண்ணிலு ளியற்றின ரென்னில்
அம்பர் மாநகர் வளஞ்சிறி தறைந்திடற் கமைவார்
உம்ப ராயினு மஃதின்றி யுரைத்திடப் புக்கார்
வம்ப ராகுவர் மற்றெவ ராகுவர் மாதோ.

157. தளர்வில் காப்பின்மா ருரணி யனையதா ரணியுள்
வளவ நாடவன் மார்பக மனையமார் பகத்துள்
கிளர்நி லாமணி யம்பரக் கிளர்மணி சூழ்ந்த
துளவ மாலிகை யம்பர்மா நகர்சுலாஞ் சோலை.

158. சோலை வெங்கதிர் செலுத்தியோ ராததுந் துணர்த்த
மேலை வண்கிளை யிவர்ந்தறி யாதநு மென்பூ
மாலை வார்தன்முற் றுண்டறி யாதது மந்தி
காலை முற்பொழு தாவயி னரிதரோ காண்டல்.

---

155. குவலயம் திரு நிறத்து - கருநெய்தல் போன்ற அழகிய நிறத்தையுடைய. குலிசம் - வச்சிராயுதம்; இந்திரனின் படை. முகில் இவர் திறல் வேந்தன் - மேக வாகனனுன இந்திரன். ஓர் ஏந்தல், என்றது நந்தனை. இவரின் - இவர்களைப் போல. கவல் - கவலை. மறையவர் - சோமாசிமாறர்.

156. இம்பர் - இவ்வுலகில். எண் இல் நாள். அஃது இன்றி - அம் மாதவம் இல்லாமல்.

157. தாரணி-பூமி. வளவ நாடு-சோழ நாடு. கிளர் நிலா மணி - விளங்குகின்ற ஒளியை வீசும் கௌத்துவம். சுலவுதல் - சூழ்தல். பூமியே திருமாலாகவும், சோழ நாடு திருமாலின் மார்பாகவும், அம்பர் அம்மார்பிலணிந்த கௌத்துவ மணியாகவும், அம்பரைச் சூழ்ந்துள்ள சோலைகள் அம் மணியைச் சூழ்ந்த துளசி மாலையாகவும் உருவகித்துக் கூறுகின்றார்.

158. சோலையில் கதிரவன் ஒளி புகுந்ததில்லை. துணர்த்தல் - கொத்துடைய தாதல். இவர்தல் - ஏறுதல்.

159. சோலை மேற்கிளை யனைத்தும்விண் டுளைத்திவர்ந் தேறும்
மாலை யோர்ந்தவர் பாதலப் பொழிலுமண் டுளைத்திவ்
வேலை யாவியி னெழுமென்ப ராவயின் மென்பூப்
பாலை யார்பொழிற் சாயலீ தென்றுளம் படரார்.

160. வாவி யாவும்வா ரிதிபொரூஉ மரையிலை வயக்கம்
மேவி யாவயின் வீழ்ந்தற லுண்டமால் விழையும்
தாவி மற்றத னூட்புகுங் கொக்கரை தகைதல்
ஓவி யம்முகி லூட்புகு வெண்பிறை யொக்கும்.

161. மீது போம்பிறைக் கோடுறக் கிழித்தலான் விடுபட்
டோது தேத்தடை யொழுக்குதேன் வாவியு ளொதுங்கும்
மோது காற்றின்வீழ் கனியெலா மதனக முழுகல்
தீது தீர்செல்வர் கனிமதுக் கலத்திடல் சிவணும்.

162. மன்ன மேலெழு கதலிவார் குருத்தெலாஞ் சாலி
அன்ன மேந்துபு பொலிதரு மதுவியப் பன்றே
சொன்ன கும்பமேற் சூதமே லிலாங்கலி தோன்றல்
நன்னர் மேவுவ மற்றது நாடுறி னியல்பே.

---

159. மாலை-இயல்பு; வரிசையும் ஆம். வானத்தைத் துளைத்துச் செல்லும் மரங்களின் இயல்பை உணர்ந்தவர் அம் மரங்களின் சாயை நீர்நிலைகளில் விழ அவற்றை அவ்வாறு உணராமல், பாதல மரங்கள் இவ்வாறு புறப்பட்டுள்ளன என்பர். பூ பால் ஐ ஆர் தொழில். பால் - பகுதி. ஐ - அழகு. ஆர் - நிறைத்த.

160. குளங்கள் கடல் போலும். அவற்றிலுள்ள தாமரையிலைத் தொகுதி மேகக் கூட்டம் நீர் பருக இறங்கின போலும்; இலைகளினூடே பாயும் சங்குகள் மேகத்தினூடே செல்லும் பிறைச் சந்திரன் போலும் விளங்கின என்க. வயக்கம் - விளங்குதல். அறல் - நீர். மால் - மேகம். விழையும் - ஒக்கும். கொக்கரை - சங்கு.

161. தேம் + அடை = தேத்தடை; அத்து - சாரியை. சிவணும் - ஒக்கும். கனி தேனில் முழுகல், செல்வர்கள் கனிகளைத் தேன் நிறைந்த பாத்திரத்தில் இட்டு வைத்தல் போலும்.

162. கதலி - வாழை. வார் - நீட்சி. சாலி அன்னம் - உயர்ந்த நெல்லரிசிச் சோறு. சொன்ன கும்பம் ஏல் சூதம் மேல் - தங்கக் கலசங்கள் போன்ற பழங்களைத் தாங்கிய மாமரத்தின்மேல். இலாங்கலி - தேங்காய். நீர்க் கலசத்தின்மேல் மாவிலைக் கொத்தை வைத்து அதன்மேல் தேங்காய் வைக்கும் வைதிகச் செயலும் குறிக்கப்படுகிறது. இப் பகுதிக்கு வேறு பொருள் கிடைப்பின் நலம்.

163. பாய சாலியும் வேழமு மரம்பையும் பலாவும்
ஆய சூதமுங் கந்தியுந் தென்னையு மழகாய்
மேய வொன்றினொன் றுயர்ந்துசூ ழுவநெடு விண்ணம்
தோய மாநக ரேறுசோ பானமே துணையும்.

164. கரும்பு பற்பல தலையிருந் கனத்திறற் கோடும்
சுரும்பு கீழிழி மதுக்கொளத் துவன்றிநேர் கூடும்
அரும்பு முற்பலங் காற்றலை யுண்டவ ணாடும்
விரும்பு மைந்தர்கண் காண்டொறுப வெம்பய நீடும்.

165. வாச நந்தன வனமெலா மொலிக்கரு வண்டர்
மூச வொன்றுவ விலேகர்வா ழிடமென முன்னி
மாச மைந்ததா னவர்பல ரார்த்தனர் வந்து
நேச மின்றிமிக் கலைப்பமற் றவர்பட னிகரும்.

166. நாட்ட மூன்றுடை யானுமை யொடுநனி நயப்ப
வாட்ட மொன்றிலா வம்பர்மா நகர்வள மலிபூந்
தோட்ட மீதென விடங்குறித் தின்னமுஞ் சொலின்யாம்
வேட்ட வாபொது வடங்குமோ புறநகர் விள்வாம்.

புறநகர்
யானைகள்

167. பிறவி யெண்ணிடல் குறித்தவ ரெமைமுதற் பேசி
உறவி யோனியை யீற்றில்வைத் தோதுவ ரதனுல்
அறிமி னள்ளுள வெமக்குப்பின் னுகுமென் றறைந்தாங்
கெறிமி னோடைமால் யானைகள் சிலைப்பன வெங்கும்.

---

163. பாய - பரந்த. வேழம் - கரும்பு. அரம்பை - வாழை. கந்தி - கமுகு. சோபானம் - படி. துணையும் - ஒக்கும்.

164. கோடும் - வளையும். துவன்றி - நெருங்கி. அரும்பும் உற்பலம் - அரும்பாயிருக்கும் நீலோற்பலம். கண் பயம் நீடும் - கண்ணிலே இன்பக் கண்ணீர் பெருகும்.

165. வண்டர் - வண்டு. மூச ஒன்றுவ - நெருக்கமாகச் சேர்வன. இலேகர் - தேவர். முன்னுதல் - நினைத்தல். தானவர் - அசுரர். அலைத்தல் - வருத்துதல். படல் - அழிதல். நிகரும் - ஒக்கும். வண்டுகள் நந்தவனங்களில் கூடுதல் தானவர் தேவருலகத்தை நெருக்கித் தாக்குவது போன்றது என்றனர்.

166. பூந்தோட்டம் - நந்தவனம். பூந்தோட்டம் என்னும் பெயருடைய ஊர் ஒன்று அம்பர்க்கு அருகில் உள்ளதும் கருதத்தக்கது. விள்ளுதல் - சொல்லுதல். பொது - நகரின் பொது வருணனை.

167. உலகத்தில் ஜீவராசிகளைக் குறிப்பவர்கள் யானை முதல் எறும்பு ஈருக என்பர்; அதனுல், எல்லாப் பிறவி உயிர்களும் எமக்குப் பின்னேயாகும் எனத் தம் பெருமையை யானைகள் கூறிக்கொள்வது போல முழங்கும். உறவி யோனி - எறும்புப் பிறப்பு. நள் உள - நடுவில் உள்ளவை. அறைந்தாங்கு - சொல்வது போல. ஓடை - நெற்றிப் பட்டம். சிலைத்தல் - முழங்குதல். யானை முழக்கத்துக்குக் காரணம் கற்பிக்கப்பெற்றது.

168. எம்மை முன்புரைத் திடுதலி னெந்தலை யேற்ற
செம்மை வள்ளலை முன்புபூ சிப்பது தெளியும்
மும்மை யாமுல கங்களு மெனமொழி தலுமாம்
கொம்மை மத்தகக் குஞ்சரக் குழாத்தெழுஞ் சும்மை.

169. இலக டத்துகு மணியொடு மிலகுபொற் றரையில்
பலப தச்சுவ டுறுநடுக் கருங்கடாம் படர
நிலம டக்கொடி புனைதர நேர்கருஞ் சரட்டில்
குலவு பொன்மணி மதாணிகள் கோத்திட்ட தொக்கும்.

170. ஆய யோனியின் முதன்மையான் முதற்குலத் தமைந்த
நேய மாமறை யவரென நீரிடைப் புகுந்தத்
தூய நீர்தலை யிறைத்துமேற் றூவிப்பின் பருகும்
பாய மும்மதத் திருமுறச் செவியொர்கைப் பறம்பு.

171. வாவி வாய்நிழல் கண்டுநீர் துதிக்கையுள் வாங்கும்
மேவி யெங்கொளித் தஃதென நேடுபு வெகுளும்
தாவி மாற்றலர் மணிமுடி தாளிட்டுத் தகர்க்கும்
கோவி யானைகள் யாத்தவா ரிகள்பல குலவும்.

குதிரைகள்

172. வாசி யென்னுமோர் பெயரெதற் குள்ளது வயங்க
மூசி மேலெழு நெருப்புமோர் நாளுமுற் பட்ட
ஏசி லாதவெம் முகந்தலை போறலி னென்னைப்
பேசி யார்ப்பன போற்கனைத் திடும்பரிப் பெருக்கம்.

---

168. எம் தலை யேற்ற வள்ளல் - விநாயகக் கடவுள். கொம்மை - திரட்சி. இங்கு, யானையின் உயர்வுக்கு மற்றொரு காரணம் காட்டப்பெறுகிறது.

169. இலகடம் - அம்பாரி. பதச் சுவடு - யானையின் காலடிச் சுவடு. கடாம் - மத நீர். மதாணி - கழுத்தணியின் தொங்கல்.

170. யானைகள் நீரில் இறங்கி, மறையவரைப் போல, நீரைத் தலையிலும் உடலிலும் தெளித்துக்கொண்டு, பின்பு பருகும். கைப்பறம்பு = கை மலை - யானை.

171. நீரினுள் தன் நிழலைக் கண்டு பகை யானையெனக் கருதி, அந்நீரைத் துதிக்கையால் உறிஞ்சி, பின் யானையைக் காணுமல் கோபித்து விரைந்து சென்று பகைவரைத் தாக்கி அவர்கள் முடிகளைக் காலால் தகர்க்கும் சிறப்புடைய யானைகள் கட்டப்பட்ட பந்திகள் பல அந் நகரில் விளங்கும். ஒளித்தஃது - ஒளித்தது; விரித்தல் விகாரம். நேடுபு - தேடி. தாள் இட்டு - காலால். கோ - பெருமை; அரசயானைகள் என்றும் ஆம். யாத்த - கட்டிய. வாரி - பந்தி.

172. மூசுதல் - நெருங்குதல். வடவா முகாக்கினி என்ற நெருப்பும், அசுவினி நட்சத்திரமும் முறையே எங்கள் முகமும் தலையும் போல இருத்தலால் எங்களுக்கு வாசியென்ற பெயருள்ளது எனக் கூறுவது போல் குதிரைகள் கனைத்தன. வாசி - குதிரை: பெருமை. வாசி - ஒரு நக்ஷத்திரம்; குதிரை. வடவை - நெருப்பு; பெண் குதிரை. ஆகவே குதிரைப் பெயர் இம் மூன்றுக்கும் உள்ளமை காண்க.

173. வெருவ லோவிய குதிரையென் பெயர்விரா வெழுத்துள்
மருவ லார்துவை படமுத லிடைகொடு வாவும்
பொருவ நீர்வரு கையிலிடை கடையெனப் பொலியும்
ஒருவ லாமுதல் கடைகொடு முகிறப வோங்கும்.

174. திருத்த மாரனிந் நகர்ப்பரி சிந்தித்தும் பெருத
வருத்த மேவலான் மற்றதற் குறுபெயர்ச் சார்பாம்
பொருத்த மோர்ந்தொரு கிள்ளையை யூருதல் புரிவான்
அருத்த வேதமு மதனுருக் கொளினெவ னறைவாம்.

175. பிரிய மேவுமிந் நகர்ப்பரி யுருக்கொளல் பெட்ட
விரிது ழாயணி மார்பின னதன்வியன் பெயருள்
அரியெ னும்பெய ரடைந்தன னப்பெயர் வியந்து
தெரிய வையக மேத்திடு மெனிலதன் சிறப்பென்.

176. உற்ற மந்திரத் தடங்குவ வாயினு மொன்னர்
செற்ற மேவுறிற் செயிர்த்தெழு கடலையுந் தாவும்
சொற்ற வான்கதிக் காலவாய்த் தங்கள்கா ரொடரப்
பெற்ற வாம்பரிப் பேரிலா யம்பல பிறங்கும்.

---

173. குதிரை என்ற சொல்லில் உள்ள எழுத்துக்களைக்கொண்டு, குதி, திரை, குரை என்னும் மூன்று சொற்களை யுண்டாக்கி அவற்றின் பொருள் விளங்கக் கூறுகின்றார். வெருவல் ஓவிய - அச்சம் நீங்கிய. மருவலார் - பகைவர். பொருவல் தீர் வருகையில் எனப் பிரிக்க. ஒருவல் - நீங்குதல். தபுதல் - நிலைகெடல். குரை - ஒலித்தல்; இங்கே கனைத்தலைக் குறிக்கும்.

174. மாரன் - மன்மதன். மன்மதன் அம்பர் நகரிலிருந்து குதிரையைப் பெற நினைத்தான்; அது கைகூடாததனால், கிள்ளை என்ற பெயர்ப் பொருத்தத்தைக் கொண்டு, கிளியைத் தனக்கு வாகனமாகக் கொண்டான் என்கிறார். கிள்ளை - கிளி, குதிரை. வேதமும் அதனுருக்கொளின்: திரிபுர சங்காரத்தில் வேதங்கள் குதிரைகளானமையையும், நரி பரியாக்கிய திருவிளையாடலில் சிவபெருமான் வேதக் குதிரை ஏறி வந்தமையையும் குறிக்கும். எவன் அறைவாம் - என்ன சொல்லுவோம்!

175. அரி என்னும் சொல்லுக்குரிய பல பொருள்களுள் இங்கே திருமால், குதிரை என்ற இரண்டும் பொருந்தும். இப் பொருள்களைக் கொண்டு, திருவம்பர்ப் பரிகளின் உருவைத் தான் கொள்ளமாட்டாமல் திருமால் தன்னை அரி என்று சொல்லிக்கொண்டு மகிழ்ந்தான் என்பது இங்குக் கூறப்பெற்றது. பெட்ட - விரும்பிய. துழாய் - துளசி.

176. மந்திரம் - குதிரைச்சாலை. ஒன்னார் - பகைவர். செற்றம் ஏவுறின் - கோபமூட்டினால். வான்கதி - மிக்க வேகம். கால் அவாய் தங்கள் கால் தொடரா - காற்று விரும்பித் தங்கள் கால்நடையைப் பின்பற்ற. இலாயம் - குதிரைகள் கட்டுமிடம்.

தேர்கள்

177. அடிகி ழிப்பது மண்ணை மற் றலங்கரித் தமைத்த
முடிகி ழிப்பது விண்ணை மொய்த் துப்புறஞ் சூழ்ந்த
கொடிகி ழிப்பது திசையையென் றுலொப்புக் கூறும்
படிகி ழிப்பது தனித்தனி பற்பல தேரும்.

178. மடந்த வாவுமை பாகனு ரிவர்ந்துழும் மதிலும்
கடந்த தேரினைக் கடப்பதொன் றில்லையே கருமால்
இடந்த தேமுமோ ரிடமஃ தெற்றைக்குங் கீழால்
கிடந்த தாக்கிமேற் றிரியுமிக் கிளர்மணித் திண்டேர்.

179. ஒற்றைக் காலுள தெழுபரி மறையவ ருதகப்
பற்றைக் காமுறும் பாகிரு காலுமி லாதான்
கற்றைச் செஞ்சுடர் நகையொடு கண்ணுமி லாதான்
மற்றைத் தேர்மிசைப் பயிலினு மிவைக்குமா னுதால்.

180. உருவ மாட்சியா லோங்குபொன் வரையென வுரைப்பாம்
திருவ மிக்கமற் றஃதென நிற்றலிற் றீர்ந்து
பருவ மைந்தரோ டெங்குஞ்சஞ் சரித்தலிற் பகராம்
வெருவ மாற்றலர் முழக்கெழீஇத் தோற்றிடும் வியன்றேர்.

177. பற்பல தேரும், ஒப்பு கூறும் படி தனித்தனி கிழிப்பது - ஒவ்வொரு தேரும் தனக்கு உவமை கூற வேறொன்றில்லாமல் செய்துகொள்வது; தனக்குத் தானே உவமை என்பது கூறப்பெற்றது. படி - உவமை.

178. உமை பாகனுர் தேர் பூமி ; கருமால் இடந்த தேம் - பூமி ; இச் செய்யுளில் சிவபெருமான் ஏறியதும், திருமால் இடந்ததுமான பூமி, என்றும் கீழ் இருப்பதே. ஆனுல் இந் நகர்த் தேர்கள் மேலே திரியும் இயல்புடையன என்று இவற்றிற்கு ஏற்றம் கூறினுர். மால் தேம் இடந்தது அடி முடி தேடிய வரலாற்றுல் தெரியவரும்.

179. சூரியன் தேரினும் இந் நகர்த் தேர்கள் சிறந்தவை என்பது இங்குக் கூறப்பெற்றது. கால் – சக்கரம். எழு பரி - ஏழு குதிரைகள். உதகம் பற்றை அர்க்கியத்தைப் பெறுதலை. பாகு - பாகன் ; அருணன். கற்றை செஞ்சுடர் - சூரியன் நகை - பல். பல்லையும் கண்ணையும் இழந்தமை தக்ஷ யாகத்தில். மற்றை தேர் அந்தச் சூரியன் தேர். மிசை பயிலினும் - வானத்தில் செல்வதாயினும். மானுது ஒவ்வாது.

180. தேரை மேருவினுடன் ஒப்பிடல் பொருந்தாது என்றமை. பொன்வரை மேரு. திருவம் - செல்வம். பருவ மைந்தர் - காளைப் பருவம் அமைந்த வீரர்.

181. சென்ற தேமெலாஞ் சயந்தன மெனக்கொளுந் திறத்தால்
ஒன்ற மேலவர் சயந்தன மெனும்பெய ருரைத்தார்
வென்ற வாம்பரி பூண்டதேர் நிலையெலாம் விண்ணோர்
துன்ற வாக்கிய தேர்நிலை கீழ்ப்படத் தோன்றும்.

போர் வீரர்

182 எரிந்து வேன்முகத் தெதிரினும் விழித்தகண் ணிமையார்
புரிந்து கொள்ளுமெய் வடுவன்றி வேறுபூண் பூணார்
வரிந்து பொற்கழல் மாற்றலர் மடியப்பல் வருடம்
தெரிந்த மர்த்துங்கண் டூதிசற் றுயினுந் தீரார்.

183. நம்பர் மேயவிந் நகருறை வீரரெல் லாரும்
அம்ப ராதலி னம்பரென் றொருபெய ரறைந்தார்
இம்ப ரந்நகர்க் கறிவினு லுயர்ந்தவ ரென்னில்
வம்ப ராகுவர் மற்றவர்க் கொப்புள மதிப்பார்.

184. மல்லெ டுத்தவிந் நகர்வய வீரரை மதித்தே
வில்லெ டுப்பர்மற் றயனகர் வீரர்க ளென்னில்
சொல்லெ டுத்தமற் றிவர்திறஞ் சொல்லுந ரெவரே
கொல்லெ டுத்தவெங் கூற்றமுள் ளஞ்சுமே குறுக.

185. இனைய வீரர்வா ழிடங்களு மிவர்தொழி லியற்றும்
அனைய மாந்தர்வா ழிருக்கையும் யானையா திகட்குப்
புனைய வாம்பல வமைப்பவ ரிருக்கையும் பொலிந்து
நினைய லாம்படி விளங்கிடு நிகர்ப்பரி தாயே.

---

181. சயந்தனம் - தேர்; இச் சொல் சயம், தனம் எனப் பிரிந்து, வெற்றியும் செல்வமும் என்றும், சயமாகிய தனம் என்றும் பொருள் பெறலால் தேருக்குச் சயந்தனம் என்ற பெயர் உண்டாயிற்று என்றனர். இந் நகர்த் தேர்நிலை விண்ணவர் தேர் நிலைக்கும் மேலே செல்லும் என்று கூறப்பெற்றது. வாம் பரி - தாவும் குதிரை. துன்ற - நெருங்க.

182. இச் செய்யுள், 'விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்றோ வன்க ணவர்க்கு' என்ற குறளை (775) அடியொற்றி எழுந்தது. அமர்த்தும் - போர் செய்தும். கண்டூதி - தினவு.

183. அறிவினல் உயர்ந்தவர் இம்பர், அந் நகர்க்கு அம்பர் என்று ஒரு பெயர் அறைந்தார் என்னில், அவர்க்கு ஒப்பு உளம் மதிப்பார் வம்பராகுவர் என்று இயைக்க; அம்பர் ஆதலின் - மேலிடத்தவராதலால்.

184. மல் - வலிமை. வலம் - வெற்றி. சொல் - புகழ்.

185. நிகர்ப்பு அரிதாய் விளங்குவது புறநகர்.

186. அறங்கு லாவிய வம்பர்மா நகரினைச் சூழ்ந்த
மறங்கு லாவிய புறநகர் வளனெவன் வகுத்தாம்
திறங்கு லாவிய விடைநகர் வளத்தினுஞ் சில்ல
நிறங்கு லாவிய வாசையி னிகழ்த்துத லுற்றும்.

வேறு

இடைநகர்

187. ஓங்குபொன் மாட நேரு முதீசியம் பொருப்பை யென்று
தேங்குபல் புலவர் சொல்வார் யாமது செப்ப மாட்டேம்
வீங்குபே ரரணம் வேவ வெகுண்டது தழுவி மேவும்
பாங்குசே ரிவற்றை யொப்ப தெங்ஙனம் பகரு வீரே.

188. முழுவலி மடங்க லன்ன மொய்ம்பினுர் முகிழ்மென் கொங்கை
ஒழுகொளி மணிப்பூ ணல்லா ரொடுமினி தமரா நின்ற
எழுநிலை யடுக்கு மாட முயர்ந்தமை யெண்ணி யன்ரோ
பொழுதிரு வழிக்கொண் டென்றும் போதன்மேற் கொண்ட
[தம்மா.

189. விளக்கொளி மழுங்க மின்னு மின்னனுர் விளக்கத் தானும்
வளக்கதிர் மணிகால் யாத்த மாளிகைச் சோதி யானும்
துளக்கமி னகர மேலாஞ் சுவர்க்கமே யைய மில்லை
களக்கமின் றுறையு மாக்கள் கண்ணிமைத் திடலோர் குற்றம்.

190. குஞ்சர மனைய மைந்த ரறிவினைக் கூட்டுண் டேகும்
வெஞ்சர மனைய கண்ணர் மேயசா ளரநாற் பாலும்
மஞ்சரங் காது கொண்ட மாளிகை நடுவட் டோன்றல்
பஞ்சரத் தூடு தோன்றும் பைங்கிளிக் காட்சி போலும்.

---

187. உதீசி அம் பொருப்பு - வடக்கிலுள்ள மேருமலை. வீங்கு பேர் அரணம்: இங்குத் திரிபுரங்களைக் குறிக்கும். தழுவி மேவும் தன்மையுள்ள அம்பர் நகர் மாடம், வேவ வெகுளும் தன்மையுள்ள மேருவை ஒவ்வாது என்பது கூறப்பெற்றது. இறைவன் செயல், வில்லாகிய மேருவின்மேல் ஏற்றப்பட்டது.

188. அந் நகரத்து எழுநிலை மாடங்களின் உயர்ச்சியைக் கண்டு அஞ்சி, பகலவன் உத்தராயணம் தக்ஷிணாயனம் என்ற கதிகளை மேற்கொண்டானென்கிறது இச் செய்யுள்.

189. விளக்கம் - மேனி ஒளி. யாத்தல் - கட்டுதல். துளக்கம் - நடுக்கம். களக்கம்: வலித்தல் விகாரம்.

190. அரங்குதல் - வருந்துதல். பஞ்சரம் - கூடு. (பி - ம்,) வெஞ்சரமன்ன.

191. முத்தவெண் சுண்ணங் கொண்டு முழுமையுந் தீற்று மாடச்
சுத்தவெள் ளொளிவா னேக்கித் தூமணி பசுமால் யானை
வித்தகப் பரியொவ் வொன்றே தருவைந்தே மேவி னுயீங்
குத்தம வவையெண் ணில்லென் றசித்திட லொக்கு மன்றே.

192. எழுநிலை மாட மேலா லெழுவெனப் பொலியுந் தோளார்
முழுமதி யிணைக்கை வாங்கி முயங்குவார் வதன மாய
செழுமதி யொடுசேர்த் தொப்புப் பார்க்குங்காற் சேற்கண்
[மையைக்
கழுவில தஃதிவ் வையங் களங்கமென் றின்னுங் கூறும்.

193. ஒளிகிள ரிந்து காந்த முற்றமொண் மதியங் கண்டு
தெளிபுனல் பெருக்க நாப்பட் டெரிவைதன் முகங்கண் கண்ட
அளிமதி கமலங் கூம்பா துற்பல மடக்கிற் றென்று
களிகெழு மூக்க மின்றிக் கவலையா லுடம்பு தேயும்.

194. நிலையுயர் வளஞ்சா லம்பர் நீணகர் வாழு மாதர்
சிலைநுதல் பொருவா மென்று குளிர்மதி சிறுத்துப் பார்க்கும்
தொலைவரும் வனப்பு வாய்ந்த சுடர்முகம் பொருவா மென்று
தலைமையிற் பெருத்துப் பார்க்குஞ் சரிவரா மையின்வி
[ளர்க்கும்.

---

191. முத்தம் வெண் சுண்ணம் - முத்தினால் ஆன வெண் சுண்ணம், தீற்றுதல் பூசுதல். மாடத்தில் அமைக்கப்பட்ட யானைகள், பரிகள், மரங்கள் ஆகியவை வானத்தில் பிரதிபிம்பம் உண்டாக்க அங்குள்ளவர்கள் மயங்கிக் கூறியவை இங்குச் சொல்லப்பட்டன. யானை - ஐராவதம். பரி - உச்சைச்ரவஸ். ஐந்து தரு - சந்தானம், தேவதாரு, கற்பகம், மந்தாரம், பாரிசாதம்; இவை இந்திரனுக்கு உரியவை. அசித்திடல் - சிரித்தல்.

192. எழு என பொலியும் தோளார் - கணையமரம் போல விளங்கும் தோள்களை உடைய ஆடவர். கை வாங்கி - கையினால் பிடித்து. முயங்குவார் வதனம் ஆய செழு மதியொடு சேர்த்து ஒப்புப் பார்க்கும்கால் - தம் காதலியர் முகங்களோடு அம் முழு மதியைப் பொருத்தி ஒப்பிடும்போது. முயங்குதல் - தழுவுதல். சேல் கண் மை - சேல் மீன் போன்ற கண்ணில் பூசப்பெற்ற மை. வையம் முழுமதிக்குக் களங்கம் என்று கூறுவது கண்மையே ஆகும் என்றது கூறப்பட்டது.

193. இந்து காந்த முற்றம் - சந்திரகாந்தக் கல்லால் அமைந்த நிலா முற்றம். நாப்பண் - நடுவே. முகம் கண்; உம்மைத் தொகை. அளி - இரங்கத்தக்க. கமலம்; இங்கு முகத்துக்கு. உற்பலம் - கருங்குவளை; இங்குக் கண்களுக்கு. மதி, 'கமலம் கூம்பாமையோடு, உற்பலத்தையும் அடக்கிக்கொண்டதே' என்று ஏங்கித் தேய்ந்தது என்க.

194. மதியின் தேய்வுக்கும் வளர்ச்சிக்கும் காரணம் தற்குறிப்பேற்றமாகக் கூறப் படுகின்றது. பொருவாம் - ஒப்பாக மாட்டோம். விளர்க்கும் - வெளுக்கும்.

195. ஆடலை யவாவுந் தோளா ரணங்கனார் தமக்குண் டாய
ஊடலை யுணர்த்துந் தோறு மெழுவவொண் சிலம்பி னோதை
நீடலை யடையா வண்ண நீத்திருங் களிப்புத் துள்ளக்
கூடலை யடையுந் தோறு மெழுவமே கலைகொள் ளோதை.

196. முற்றவெண் சுண்ணந் தீற்ற முழுநிலா வெறிக்கு மாடம்
உற்றபாற் கடலின் பொம்ம லொக்குமற் றதற்கு மேலால்
செற்றநல் வனப்பு வாய்ந்த மின்னனார் சேருங் காட்சி
அற்றமில் பவள வல்லி யநேகமேற் றோன்றல் போலும்.

197. விரியுயர் மாட மேலால் வெண்ணிலா முற்ற மேவி
அரிமதர் மழைக்க ணல்லார் கந்துக மாடுங் காலைப்
புரிவட முத்தஞ் சிந்திச் சாயைமேற் போய வுண்மை
தெரிதர லின்றி யின்னு முடுவெனச் செப்பா நிற்பர்.

198. விண்டுதேம் பிழியொ ழுக்குந் தாமரை யொருங்கு விட்டு
வண்டுசே தாம்பன் மூச வானகத் துதயஞ் செய்யும்
ஞெண்டுசேர் மதியஞ் சேந்த நிறந்தப விளர்த்துத் தேய்தல்
பண்டுகூ ரவ்வூர் மாதர் முகமொவ்வாப் பரிசா லன்றே.

199. குனிசிலை நுதலா ரோடு கூடுபு மைந்தர் வைகத்
தனியமை சுவர்க்க மெள்ளுஞ் சந்திர காந்தக் குன்றம்
பனிமதி யுதயங் கண்டு படர்புன லொழுக்குங் காட்சி
நனியுயர் குன்ற நின்று மருவிவீழ் நலமே மானும்.

---

195. நீடல் - ஊடலின் நீடல்.

196. தீற்ற - பூசியதனால். பொம்மல் - பொலிவு. செற்றம் - ஊடலில் வந்த சினம்.

197. அரி மதர் மழை கண் நல்லார் - செவ்வரி பரந்து மதர்த்து ஈரங்கொண்ட கண்களையுடைய மகளிர். கந்துகம் - பந்து. உடு - நட்சத்திரம். முத்துக்களின் சாயையே உடுவெனத் தோன்றும் என்றார்.

198. வண்டுகள் தாமரையை விட்டு ஆம்பலைச் சேர்தல் அத்தமன காலத்தைக் குறித்தது. ஞெண்டு சேர் மதியம் - கடக ராசியை அடைந்த பூர்ண சந்திரன், சேந்த நிறம் தப - சிவந்த நிறம் கெட; சந்திரன் உதய காலத்தில் சிவந்து தோன்றும். பண்டு கூர் - பழமையாக மிகுந்துள்ள.

199. எள்ளுதல் - இகழ்தல்.

200. அன்னநீ ரோடும் வீதி யருவளப் பொன்னி மானும்
மின்னகு மிருபான் மாட மிளிரிரு கோடும் போலும்
பொன்னவிர் புதவு வாய்தல் புகன்றவோ மதகு நேரும்
சொன்னமுற் குன்றஞ் சைய வரையெனச் சொல்ல லாமால்.

201. அரிபளிங் குறப்ப டுத்தி யந்தருப் பணமே போல
விரியெழி லமைத்த வீதி யாயினு மூடு மின்னார்
தெரிதரச் சிந்து முத்த மாணிக்கம் பவளஞ் செற்றிப்
பரிவற வியங்கு வார்தம் பாதத்திற் கூறு செய்யும்.

202. தினமறு கிடைய ரித்தல் செய்பவர் மாட்டு வந்து
கனமிகு பிறநா டாளுங் காவலர் கடன்கொள் வாரால்
இனமழை பெய்த காலை யெடுத்தெடுத் தொருங்கு சேர்க்கும்
தனமுடை யவரு தீசித் தடந்திசைக் கிறைவ ராவார்.

203. வானக மறைக்கும் பந்தர் வயக்கிமே லிடங்க ளெல்லாம்
தேனக மாலை நாற்றிச் செவ்விய கால்க டோறும்
பூநகத் தாற்று வாழை பொழிகரும் பாதி யாத்த
தூநகர் நியம வீதி சுவர்க்கத்தை நரகஞ் செய்யும்.

204. பணவர வல்கு லாரைப் பருப்பத நாணுந் தோளார்
குணமுற விருப்பின் வேட்டுக் கோலமார் பவனி போதும்
மணவணி முழக்க மோர்பால் வருவிழாச் சிறப்பு மோர்பால்
அணவிய வீதி வாளா கிடப்பதின் றொருநா ளானும்.

---

200. பொன்னி – காவேரி. மானும் - ஒக்கும். கோடு - கரை. புதவு வாய்தல் - கதவையுடைய வாசல். ஓ மதகு - நீர் தாங்கும் பலகையை உடைய மதகு சைய வரை - காவேரி உற்பத்தியாகும் மலை.

201. அரி பளிங்கு - அரிந்த பளிங்கு. தருப்பணம் - கண்ணாடி. ஊடும் மின்னார் - ஊடலைக் கொண்ட மகளிர். செற்றி – செறிந்து. பரிவு அற - இரக்கமின்றி. ஊறு - துன்பம்.

202. மறுகு - கடை வீதி. அரித்தல் செய்பவர் - மண்ணைக் கொழித்தெடுப்பவர். கடன் கொள்ளுதல், அவ்வரித்தல் செய்பவர்க்குக் கிடைக்கும் செல்வத்தின் மிகுதியைச் சுட்டிற்று. உதீசித் திசைக்கிறைவர் - குபேரர்.

203. நியமம் - கடைத்தெரு. வயக்குதல் - விளங்கச் செய்தல். நகுதல் - விளங்குதல். பூவுடன் கூடிய குலைகளுடைய வாழைகளைக் கட்டி என்க.

204 வீதிகளின் விளக்கம் கூறப்பெற்றது. பவனி போதல் - உலா வருதல். அணவுதல் - நெருங்குதல்.

205. கரியிவர் சிறப்பும் வேகக் காற்றெனக் கடுகிச் செல்லும்
பரியிவர் சிறப்பும் வாசி படர்ந்துவல் லீர்க்கு மாழிக்
கிரியிவர் சிறப்பு மல்கிக் கிளர்மணி வீதி நோக்கி
அரியிவர் தலந்துன் புற்று நிசியுல காயிற் றம்மா.

206. அடைகெழு கற்ப மாலை யணிபுயத் தமரர் யாரும்
மிடைபெரு நகர ருத்த நகரென விளம்ப மேய
இடைமுழு நகரென் சொற்று மிஞ்சிசூழ்ந் தடைந்தோர்க் [கின்பம்
கொடை செயுண் ணகரின் மேன்மை வளஞ்சில கூற லுற்றும்.

## உள் நகர்

### அகழிச் சிறப்பு

207. பாதலத் தளவு போய பாம்புரி நறிய நீரால்
மீதலம் புகழுஞ் சுத்த நீர்க்கடல் விரியுங் கஞ்சப்
போதலர் வழியுந் தேனுன் மதுக்கடல் புக்க மேதி
காதலிற் பொழியும் பாலாற் பாற்கடல் கடுக்கு மன்றே.

208. ஒருமுனி பருகல் கூடு மொருவன்வேல் சுவற்றல் கூடும்
பெருவிறல் பலவாற் றுனு மிழப்பதே பெற்றே மென்று
கருநிறப் புணரி சூழ்ந்து கலந்ததன் னுவர்ப்பும் போக்கிப்
பொருவலி யமைந்து வைகுந் திறம்பொருஉம் புனற்கி டங்கு.

---

205. ஆழி கிரி - உருளைகளையுடைய மலைபோன்ற தேர் மல்கி - மிகுந்து. அரி இவர் தலம் - பொன் மிகுந்த உலகம் = சுவர்க்கம். நிசியுலகு – இருண்ட உலகம். அம்பர் நகர வீதியின் ஒளியை நோக்க, பொன்னுலகமும் இருண்டதென்று சொல்லும்படியாயிற்று என்பதாம். நிசி - பொன், இருள்; சிலேடை நயம்.

206. அடை - இலை. மிடைதல் - நெருங்குதல். அருதத நகரம் - அரைப பட்டணம் ; அம்பரை நோக்கும்போது அமராவதி அரை நகரம் ஆயிற்று என்றனர். அம்பர் இடை நகர் முழு நகராக, முழு நகராகிய அமராவதி அரை நகராயிற்று என்பது ஒரு நயம். இஞ்சி - மதில். இன்பம் கொடை செய் - இன்பத்தைக் கொடுக்கின்ற.

207. சுத்த நீர்க்கடல், மதுக்கடல், பாற்கடல் என்ற மூன்று கடல்கள் இச் செய்யுளுள் வந்துள்ளன. பாம்புரி - அகழி. மீ தலம் - மேலுலகம். கஞ்சப் போது அலர் - புதிய தாமரை மலர். மேதி - எருமை.

208. புனல் கிடங்கு, எழுவாய் ; கிடங்கு - அகழி. பொருவும் - ஒவ்வும். புணரி - கடல். புணரி பருகிய முனி - அகத்தியன். கடல் சுவற வேல் விட்டவன் - உக்கிர பாண்டியன் : திருவிளையாடற் புராணம் காண்க. விறல் - வெற்றி. சூழ்ந்து - எண்ணி.

209. விண்டசெங் கமல மாம்பன் மேலிடம் பொலியக் கொண்டு
தண்டலில் கொடுங்க ராமுள் ளிடங்கொண்ட தனிக்கி டங்கு
கொண்டபன் னயம்பு றத்துங் கொடுமைவஞ் சனைய கத்தும்
மண்டமிக் கமைத்து வாழு மாந்தரை மானு மன்றே.

210. அரவிறை நாட்டி னுள்ளா ரகன்புவி வாரா நிற்பர்
பரவுபற் பலது வார வழியெனப் பகர்வார் பொய்யே
புரவுசெ யம்பர் சூழும் பூம்புனற் கிடங்கி னூறே
விரவுற வருதன் மெய்ம்மை வேறினிப் புகல்வ தென்னே.

211 திரையெறி கடனீர் முற்றுஞ்
செங்கைநல் லுழுந்திற் [கொண்டோன்
குரைபுன லளவை நோக்கிக்
கும்பிடு மகழி மேன்மை
உரைசெயற் கடங்குங் கொல்லோ
வொருபெருங் கடலாற் சூழும்
வரையெனப் பொலியுஞ் சீர்த்தி
மதிற்சிறப் பெடுத்துச் சொல்வாம்.

மதிலின் சிறப்பு

212. பொறிபல வமைத்து வல்ல யவனராற் புரிந்த வன்மை
செறிமதி லோக்க மண்மேற் சிலரெனப் பொய்ம்மை கூறும்
குறிகொளு மயன்மே லண்டத் தெல்லைபோய்க் கூடிற் றப்பால்
முறிதரச் சென்ற தில்லை யுயர்ந்ததென் மொழியுங் காலே.

213. அறிவினர் படைத்த செல்வ மடைந்தவர் செல்வ மாமென்
றெறிவினை யாளர் கூறு மேற்றஞ்சால் வார்த்தை மெய்யே
நெறியுய ரம்பர் சூழு நெடுமதின் மேலா லுள்ள
குறிகொளு நகர்கட் கெல்லாங் கோணைமா மதிலா யிற்றே.

---

209. கிடங்கில் மேலே மலர்களும் உள்ளே முதலைகளும் இருப்பனவற்றைக் கொண்டு கவி நயம்பட ஒரு நீதி யமைத்தல் காண்க. தண்டல் - தடுத்தல். கராம் - முதலை. மானும் - ஒக்கும். புறத்தே நயமும் அகத்தே வஞ்சமும் கொள்ளும் மாந்தர் உவமை.

210. அரவு இறை நாடு - நாக உலகம். புரவு - பாதுகாப்பு. ஆறு - வழி.

211. கடல்நீர் முற்றும் உழுந்திற் கொண்டோன்: அகத்தியன். கடலை உண்டவன் இவ்வகழியைக் கண்டு கும்பிடுவான் என்றார்.

212. பொறி - இயந்திரங்கள். ஓக்கம் - உயர்வு. அயன் மேலண்டம் - பிரமாண்டம். முறிதர - இடங்கள் முறியும்படி.

213. கோணை - அழிவின்மை; வலிமையும் ஆம். மேலால் உள்ள நகர் - மேல் உலக நகர்கள். அம்பர் நகர் மதில்கள் மேலுலகங்களுக்கும் மதில்கள் ஆயின.

214. இம்பரா தரங்கு லாவப் புண்ணிய மினிது செய்தார்
உம்பர்வா னகர மேறி யுறைவது சரத மன்றே
நம்பர்பே ரருள்செய் தாலு ஞாலத்திற் கணியா யுள்ள
அம்பர்சூழ் மதிலின் றென்னி லேறுவ தரிது மாதோ.

215. திண்ணிய மதிலி னேக்கஞ் சேணுல களத்த லாலே
கண்ணிய கதிர்மார்த் தாண்டன் கைரவ மலர்த்துஞ் செல்வன்
எண்ணிய மற்றை யோர்தஞ் செலவிற்கூ றுண்டோ [வென்னின்
பண்ணிய புதவ வாயிற் படர்தலிற் றடையொன் றின்றே.

216. மதியமுண் ணகர மென்று மற்றது சூழ்ந்த நொச்சி
துதியமை யூர்கோ ளென்றுந் துணிந்தெடுத் தோதுஞ் சீர்த்தி
நிதியவம் மதிலின் மேன்மை நிகழ்த்துதற் கெளிதாங் [கொல்லோ
பதியமை யாதா ராய பரத்தையர் மறுகு சொல்வாம்.

பரத்தையர் தெரு

217. மறைமுத லனைத்துந் தேர்ந்த வியாதனு மயக்கம் பூண்டான்
குறைவிலவ் வளவு தேராக் கொள்கைய ரேனு மெங்கும்
நிறைபரஞ் சிவமே யென்றோர் முத்திரை நிகழ்த்தா நிற்கும்
முறையுடைக் கணிகை மாதர் முழுத்தவ முடைய ரன்றே.

---

214. ஆதரம் - அன்பு. சரதம் - உண்மை. அம்பர், ஞாலத்துக்கு அணி; மதில் வான் நகரம் ஏற வழியாயிற்று என்றபடி.

215. சேண் உலகு - தேவருலகு முதலியன. மார்த்தாண்டன் - சூரியன். கைரவம் - அல்லி. கைரவம் அலர்த்தும் செல்வன் - சந்திரன். செலவு - போக்கு புதவம் கதவு - கதவினை உடைய வாயில் வழியே வானத்திலுள்ள கிரகங்கள் செல்லக் கூடுமாதலால் அவற்றின் செலவுக்குத் தடையில்லை என்பது கூறப்பெற்றது.

216. நொச்சி - மதில். ஊர்கோள் - பரிவேடம். பதி அமையாதார்=பதியிலார்-பரத்தையர். மறுகு - வீதி.

217. குறைவில் மறை என்று கூட்டுக. வியாதன் சிவமே பரம்பொருள் என்பதில் மயக்கம் பூண்டான். கணிகை மாதர் தாம் காட்டும் முத்திரையினால் பரம் பொருள் சிவமே என்று காட்டுவர். வியாதன் மறை முதலியவற்றில் தேர்ந்தவனே யாயினும் முழுத் தவம் உடைய இம் மாதர்க்குள்ள உறுதியறிவு பெறாதவனென்பது கூறப்பெற்றது.

218. தங்கண்மெய் யுறுப்பு ணர்ந்துந் தாங்குபூ ணுடை நோக்கி
யுங்களுண் டவர்போன் மைந்த ருறமயக் குறுகா லத்தும்
திங்களங் கண்ணி யோனே வந்தனை செய்யத் தக்க
மங்கள னெனக்கை கூப்பு மாதரிற் குரவ ரியாரே.

219. பாடலி னயத்தி னானும் பரதநூல் வழுவா தாடும்
ஆடலி னயத்தி னானு மரம்பைய ரவாவும் யாணர்
வீடலி னயத்தி னானும் விலையிலா தவரை யந்தோ
வாடலி னயத்தி னாரும் விலைமட மாத ரென்பார்.

220. வந்தனை யேற்கத் தக்கோன் மாதேவ னேயென் றோர்ந்தும்
கந்தனை யனையார்க் கெல்லாங் கைகுவிப் பார்மா தேவற்
சிந்தனை செய்வா ரன்ன திறத்தவர் நல்கு மின்பப்
பந்தனை துய்ப்பா ரென்னிற் பைம்பொன்கொள் ளுதலோர்
குற்றம்.

221. தெறுவலிக் குமர ரியாருஞ் சித்திர முகத்தா லின்பம்
பெறுநகக் குறியி னோடு பற்குறி பெட்ட ணைத்தல்
மறுவற வமுதந் துய்த்தன் முதலிய வுணர வைக்கும்
உறுகணி கைய ருணர்த்தா துணர்த்திடு வாரு மானார்.

222. சுண்ணப்பச் சிலையும் பாகுந் துவருற மென்று னந்தம்
நண்ணப்ப∴ றரம வாவி நல்குபு களிப்புச் செய்யும்
வண்ணப்பன் மணியும் பொன்னும் வயங்கப்பூண் பரத்தை
[மாதர்
கண்ணப்பர் நிகர்த்தார் மைந்தர் காளத்தி யாரை யொத்தார்.

---

218. நோக்கியும் என்று இயைக்க. மைந்தர் - ஆடவர். திங்கள் அம் கண்ணியோன் - சிவபெருமான் ; கண்ணி-தலை மாலை. கணிகை மாதர் கைகூப்புதலிலே சிவபிரானை வந்தனை செய்யத் தக்கவர் என்று அறிவிப்பர். தம்மைக் கண்டு விரும்பு வார்க்குக் கடவுளைக் காண்பிப்பதால் குரவராயினர். குரவர் - குரு.

219. நயம் - இனிமை, அழகு. யாணர் - அழகு. யாணர் வீடல் இல் நயம் - அழகு குறையாத நன்மை. விலையிலா தவரை விலைமாதர் என்பது ஏனோ என்கின்றார். வாடல் இல் நயத்தினார் - கெடுதல் இல்லாத புலமையோர் ; கவிஞரைக் குறித்தது.

220. கந்தன் - முருகன். கந்தனை அனையார் - அழகிய ஆடவர். கைகுவித்தல், இன்பப் பந்தனை துய்த்தல் ஆகியவை, மாதேவனைச் சிந்தனை செய்தலால் குற்றமாவ தில்லை ; ஆனால் பொன் கொள்ளுதல் மட்டும் ஓர் குற்றமே என்று கூறி, முன் செய்யுளில் 'விலை மாதர்' என்று கூறப்பெறுதற்கு ஒரு சிறிய காரணங் காட்டுகின்றார்.

221. பெட்டு - விரும்பி. அமுதம் துய்த்தல் - அதர பானம். சித்திர முகத்தால் உணர வைக்குங் கணிகையர் உணர்த்தாது உணர்த்திடுவார் ஆனார் என்றியைக்க.

222. சுண்ணம் பச்சிலை - சுண்ணம்போடு கூடிய வெற்றிலை. பாகு - பாக்கு. அவாவி நல்குபு - விரும்பிக் கொடுத்து. கண்ணப்பர் வாயில் இட்ட நீரை உமிழ்ந்தார்; அதனைக் காளத்தியார் ஏற்றருளினார்.

223. தீயெச்சி லவியு மெங்குந் தேடியோ ரிடத்தி னுய்க்கும்
ஈயெச்சின் மதுவு மாழி நின்றெழு மெழிலி தம்வாய்
தோயெச்சின் மழையு மெள்ளத் துணிந்தவர் பொதுமின்
[னார்தம்
வாயெச்சி லமுது மெள்ளும் வலியின ராவ ரம்மா.

224. முலைவிலை மாதர் மேவு முழுமனை யாக சாலை
கலைபுண ரல்குல் குண்டங் கனிவாய்பொற் கலம்பா கெச்சில்
மலைவரு நறவங் கூடி மகிழ்ச்சியின் மாந்து மாந்தர்
இலைமுகப் பைம்பூண் மார்பத் திமையவ ரெனின்மற் றென்னே.

225. பரவுசெவ் வணியி னாரும் வெள்ளணி பரித்து ளாரும்
விரவுபொன் மறுகு நாளும் விலைமட மாதர் மேய
புரவுசெய் யழகு கல்விக் குடையிரு பூமின் னாரைக்
கரவுசெய் யாதி யக்கிக் காட்டிடு காட்சி மானும்.

226. விரைகெழு புனலிற் சேருய் மிதிபத மிழுக்கல் செய்ய
வரைவில்பன் மாலை வீழ்ந்து மற்றதை மாற்றல் செய்து
புரையற வியக்கா நிற்கும் பொதுமின்னார் தெருவென்
[சொற்றும்
உரைபுகழ் வேளாண் மாந்தர் தெருவள முரைப்பா மன்றே.

---

223. அவி - வேள்வித் தீயில் தேவர்க்குக் கொடுக்கும் உணவு. ஈ எங்கும் தேடி ஓர் இடத்தில் உய்க்கும் மது. எழிலி - மேகம். எள்ளுதல் - இகழ்தல். அவி, மது, மழை மூன்றும் எச்சில்களே ; இவற்றை எவரும் இகழமுடியாது. அதைப் போல் பொதுமின்னார் தம் வாயெச்சிலையும் எள்ள முடியாது என்பது திரண்ட பொருள்.

224. சுரர் என்னும் தேவர்க்குரிய ஒரு பெயரின் பொருளை நயம்பட உரைப்பது இச் செய்யுள்.

225. செவ்வணி - தலைமகற்குத் தலைவியின் பூப்புணர்த்துதற் குறியாகத் தோழி அணிந்துகொள்ளுஞ் செங்கோலம். வெள்ளணி - தலைவிக்கு மகன் பிறந்த செய்தியைத் தலைமகன் அறிந்துகொள்ளும்பொருட்டுத் தோழி அணிந்துகொள்ளும் வெண்மை நிறமுள்ள ஆடை முதலியன. பரித்தல் - தாங்குதல். அழகு, கல்விக்கு உடை இரு பூ மின்னார் - அழகுக்குரிய தெய்வமும், கல்விக்குரிய தெய்வமுமான செந்தாமரை வெண்டாமரைகளில் வீற்றிருக்கும் திருமகளும் கலைமகளும். கரவு செய்யாது - ஒளிக்காமல்.

226. விரை - மணம் பதம் – பாதம். வரைவு - அளவு. அதை - சேற்றை.

வேறு

வேளாளர் வீதி

227. அருமைசெய் தடைந்தவர்க் கன்ன மூட்டல்சீர்
மருவிளை யான்குடி மாறர் பாலிவர்
ஒருவற நன்குகற் றுளார்கொ லோவவர்
திருவிவர் பாற்கற் றுளார்கொ றேர்கிலேம்.

228. மொய்த்தவே ளாளர்பொன் முகப்பு மாளிகை
உய்த்தமா மடைவயி னுற்று ளாரிடு
குய்ப்புகை காவதங் கோடி நாறுமேல்
மெய்ப்படு மவர்திரு வீக்க மென்சொல்கேன்.

229. உறுப்பொரு மூன்றையு முற்றுத் தாங்குமோர்
உறுப்பினுண் டாகிய வுண்மைக் கேற்பவவ்
உறுப்பெழு மூவரை யும்பு ரப்பரால்
உறுப்புமு தொழிலென வுவக்கு மாந்தரே.

230. நிலவொரு மூவர்க்கும் புனித நேர்வது
குலவுமந் தாகினி குறிக்கு மற்றதின்
உலவுசீ ரொடும்பிறந் தோங்கு மாந்தர்பால்
சுலவுவண் புனிதம்யார் கட்டு ரைப்பவர்.

231. நல்லநீர் கங்கையென் றுரைப்பர் நன்னயம்
புல்லநீர் தோய்ந்தவர் வயிற்றுப் பொங்கழற்
கொல்லவன் பமைந்ததக் குலத்திற் கன்றியே
சொல்லமற் றெருகுலஞ் சுமப்ப துண்டுகொல்.

---

227. இளையான்குடி மாற நாயனர் வரலாற்றினைப் பெரிய புராணத்திற் காண்க. ஒருவு அற - நீக்கமற. இவர், அம்பர் நகர வேளாளரையும், அவர், இளையான் குடி மாற நாயனரையும் குறிக்கும்.

228. மடை - சமையல் வேலை. குய் - தாளிப்பு, கோடி காவதம் என்றியைக்க. திரு வீக்கம் - செல்வப் பெருக்கு.

229. உறுப்பு ஒரு மூன்று - தலை, உடல், கால் என்றவை. 'தாங்கும் ஓர் உறுப்பு - பாதம். அவ்வுறுப்பு - மேற்சொல்லிய மூன்று உறுப்புக்கள். உறுப்பு : தொழிற் பெயர் ; நன்மையாதல் என்பது பொருள்.

230. நிலவு ஒரு மூவர் : மூவுலகத்தவர். மந்தாகினி - கங்கை ; வேளாளர் கங்கைக் குலத்தவர் எனப்படுவர்.

231. நல் நயம் புல்ல - நல்ல பயனை அடைய. வயிறு பொங்கு அழல் - பசி.

232. கலைபல கற்றலிற் கற்ற யாரையும்
மலைவறப் புரத்தலில் வருவி ருந்தினை
உலைவற வோம்பலி னுவக்கு நீரரே
அலைபுன லம்பர்வே ளாள ரென்பவே.

233. ஓதலும் பகைப்புல மொதுங்கித் தேம்புற
மோதலு நிதிக்குவை முகந்து கொள்ளுவா
போதலு முழுதொழில் புரித ேநாக்கியேல்
ஆதலும் பிறிதுமற் றவரி னாகுமே.

234. வல்லவே ளாளர்தம் மருதப் போர்க்களம்
சொல்லவுங் கேட்கவுந் தொடர்பிற் சாரவும்
நல்லவா யமைந்தன நயந்து கேட்கவும்
புல்லவுங் கூடுமோ நெய்தற் போர்க்களம்.

235. பரசிவ னடியரைப் பரம னேயெனப்
பரவுவர் சிவாலயப் பணிசெய் வார்திகம்
பரனடி யருச்சனை பண்ணி யுண்பரம்
பரமர்வே ளாளரெப் பண்பிற் ருழ்ந்துளார்.

236. பொருவரு மினையவே ளாளர் பொற்பின்வாழ்
தெருவள மெம்மனோர் செப்பற் பாலதோ
மருவிய மற்றுள வருணத் தாரமர்
தருதெரு வளமினிச் சாற்ற நின்றவே.

---

232. அம்பர் வேளாளர் கலை கற்றலிலும், கற்றவரைப் புரத்தலிலும், விருந்தோம்பலிலும் உவப்படைபவர் என்பது கூறப்பெற்றது.

233. ஒதுங்குதல் - பின்னிடுதல். தேம்புற - மெலிவடைய. ஓதல், அந்தணர்க்குரியது. பகைப்புலம்......மோதல்; அரசர்க்குரியது; நிதிக்குவை......போதல் - வணிகர்க்குரியது. நோக்கியேல் - நோக்கியே அமையுமானால். ஆதலும் பிறிதும் - ஆக்கமும் அழிவும். 'சுழன்றும் ஏர்ப் பின்ன துலகம்' என்ற குறளின் கருத்தைக் கொள்க.

234. மருதப் போர்க்களம், நெல்லும் வைக்கோலும் மிகுதியாகக் குவிக்கப்பட்ட இடம். நெய்தற் போர்க்களம், மீன் குவியலை உடையது.

235. திகம்பரன் - திக்குகளே ஆடையாகவுடைய சிவபெருமான். உண்பர் அம்பர் அமர் வேளாளர் எனப் பிரிக்க.

236. பொற்பு - அழகு.

வேறு

வணிகர் தெரு

237. வீங்குதம் பொருளி னிம்மியி னளவும்
விடார் மொழி சுருக்கியே யுரைப்பார்
தேங்குபஃ றிறத்தும் பொருள்வரு வாயே
சிந்திப்பார் சிறுபழி யுறற்கும்
ஓங்குதம் வினையி னிடங்கொடார் பரம
னுயர்பணி தலைக்கொள்வா ரெவையும்
வாங்குநாள் வாங்கி விடுக்குநாள் விடுக்கும்
வணிகர்தந் தெருக்களும் பலவால்.

மன்னர் வீதி

238. காட்சியி னெளியர் கடுமொழி யரியர்
காசினி யகத்துயி ரெலாந்தம்
பூட்சியி னமைந்த வுயிரென மதிப்பார்
பொறையுருக் கொண்டமர்ந் தனையார்
ஆட்சியி னமைந்தார் மாற்றல ருயிரே
யவாவிய வேலினு ரளவா
மாட்சியி னெருகோ னடவுவெண் கவிகை
மன்னர்வாழ் தெருக்களும் பலவால்.

மறையவர் தெரு

239. உழல்பவந் தபுக்கு மறைமுதற் கலைக
ளுணர்ந்தவ ரும்பரார்க் கரிய
தழலுருப் பரனைத் தழலிடைக் காண்பார்
சாந்தமே யுருவுகொண் டன்னார்
குழன்மொழி மனையா ரதிதியர் வயிற்றுக்
கொடுந்தழன் மாற்றிட வுவப்பார்
கழல்வினை யினராய் மறையவர் வாழுங்
காமரு தெருக்களும் பலவால்.

---

237. வீங்கு - மிக்க. பஃறிறம் = பலதிறம்.

238. காட்சியின் எளியர் - காண்பதற்கு எளியவர். காசினி - உலகம். பூட்சி - உடல். மாற்றலர் - பகைவர். கோல் நடவு - செங்கோல் செலுத்துகின்ற.

239. பவம் தபுக்கும் - பிறப்பை நீக்குகின்ற. தழல் உரு பரன் - சிவபெருமான். கழல் வினையினர் - வினைகள் நீங்கப்பெற்றவர்.

### ஆதிசைவர் தெரு

240. பரவுமான் மார்த்தம் பரார்த்தமென் றிரண்டும்
பண்புறப் பூசனை புரிவார்
விரவுமூ வகைத்தீக் கையுமபி டேக
மேன்மையு மடைந்தவர் நறிய
குரவுவார் குழலாள் பாகர்மெய் தீண்டுங்
கொள்கையர் கோதிலாக் குணத்தர்
கரவுதீ ராதி சைவவே தியருட்
களித்துவாழ் தெருக்களும் பலவால்.

### சைவ மடங்கள்

241. புண்ணியம் பயக்கு மாகமம் புகலும்
பொதுச்சிறப் பென்னுமீ ரியல்பின்
கண்ணிய வொருமுப் பொருளுநன் குணர்ந்து
கரிசறத் தெளிந்தவ ரொன்றும்
எண்ணிய விரண்டு மில்லையாங் கலப்பி
னியைந்துபே ரின்பத்துட் டுளையும்
தண்ணிய சுத்த சைவசித் தாந்தத்
தாபதர் மடங்களும் பலவால்.

242. புக்கமா ணுக்கர் காலத்தாற் கனவாற்
பொருந்திய தராதர முணர்ந்து
தக்கதாஞ் சமய முதலிய வாற்றிச்
சரியைமுன் னான்கினும் பயிற்றி
மிக்கவைம் பாசத் தளையொருங் ககற்றி
வீடுபெற் றின்புற வுய்த்து
நக்கவா சிரிய ரினிதுவீற் றிருக்கு
நலம்பொலி மடங்களும் பலவால்.

---

240. ஆன்மார்த்தம் - தம் பொருட்டுச் செய்வது; பரார்த்தம் – பிறர் பொருட்டுச் செய்வது. மூவகைத் தீக்கை : நயன தீக்கை, பரிச தீக்கை, மானச தீக்கை ; விசேட தீக்கை, சமய தீக்கை, நிர்வாண தீக்கை எனினும் ஆம் ; வேறு விதமாகவும் கூறப்படும். கரவு - வஞ்சனை. அபிடேகம் - சிவ பூசைக்கு உரியவராகச் செய்யப்படும் ஸம்ஸ்காரம்.

241. கண்ணிய முப்பொருள் - பதி, பசு, பாசம் என்பன. ஒன்றும் இரண்டும் இல்லையாம் கலப்பின் இயைந்து - சுத்தாத்துவைத சித்தாந்தத்தில் இயைந்து தாபதர் - முனிவர்.

242. காலத்தால் கனவால் பொருந்திய தாரதரம்; இதனுடன், ‘ கால முங்கனுக் காட்சியு நிமித்தமுங் கடிந்தார், சீல மாணவர் செவ்விதேர் தேசிக னென்ன ’ என்ற

### கழகங்கள்

243. இகல்சிறி தேனு மில்லதெஃ குடையா
ரீரிரு புலமையர் குழுமி
அகல்பல துறைநூ லியற்றுதல் விளங்க
வகலிடத் தவர்க்கெடுத் துரைத்தல்
நகல்வனப் பொருங்கு தழீஇவழுக் களைந்து
நாடுறு மியன்முழு துணர்த்தல்
புகலிலக் கியங்கள் பயிற்றன்மற் றிவற்றுற்
பொலிதரு கழகமும் பலவால்.

### தண்ணீர்ப் பந்தர்

244. கதிருதித் திடுமுன் னறும்புன றெவ்விக்
காமரு நிறையெலா நிறைத்துப்
பிதிர்துடி யாதி பெய்துமோர் கலந்தும்
பேரிலி குசக்கனி பிழிந்தும்
முதிர்தரந் தெரிந்து கவர்ந்தவர் மல்க
மூரிய மாவ டுவமைத்தும்
முதிர்கொடு வேனிற் பதிவழி யருகு
முயங்கிய பந்தரும் பலவால்.

---

திருவிளையாடற் புராணச் (வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம் 41) செய்யுளை ஒப்பிடுக. தராதரம் - ஏற்றத் தாழ்வு. சமய முதலிய ஆற்றி - சமய தீக்கை விசேட தீக்கை நிர்வாண தீக்கை முதலியன செய்து. சரியை முன் நான்கு - சரியை, கிரியை,:யோகம், ஞானம். ஐம் பாசம் - ஆணவம், திரோதானம், மாயை, கன்மம், மாயேயம் என்னும் மலங்கள். நகுதல் - விளங்குதல்.

243. இகல் - பகை. எஃகு - ஆராய்ச்சிக் கூர்மை. ‘தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார், இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ’ என்ற நாலடிச் செய்யுள் இங்கு நினைத்தற்குரியது. ஈரிரு புலமையர் - நால்வகைக் கவிகள் பாடும் புலமை யுடையவர். அன்றி, ‘நாற் பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத் தேக்கிய சித்தையன்’ (பெருந்தொகை. 1552) என்றவாறு கூறலும் ஆம். பல துறை நூல் - பலவகைப் பொருள்கள் பற்றிய நூல்கள். வனப்பு - பல உறுப்பும் திரண்ட வழிப் பெறுவதோர் செய்யுளழகு (தொல். பொ. 548). சுருங்கச் சொல்லல் முதலிய நூலுக்குரிய பத்து அழகுகள் எனினும் ஆம். வழு - குற்றம்; குன்றக் கூறல் முதலிய பத்துக் குற்றங்களாம்.

244. தெவ்வுதல் - கொள்ளுதல். நிறை - நீர்ச்சால். பிதிர் துடி - ஏலப் பொடி. இலிகுசக் கனி - எலுமிச்சம் பழம். அவா மல்க - ஆசை மிக. மூரிய - பழமையுடைய. பதி - ஊர். முயங்குதல் - பொருந்துதல்,

### சத்திரங்கள்

245. தளவரும் பென்ன முரவையொட் டொழித்த
தண்டுலத் தமைத்தநன் மடையும்
பிளவரும் பருப்புங் கருனையும் வறையற்
பெருக்கமுஞ் சிற்றுணு வகையும்
உளவரும் விரும்பு நறுமண நெய்யு
முறுசுவைக் கனிகளும் பிறவும்
களவரு மன்பி னுபசரித் தூட்டுங்
காமர்சத் திரங்களும் பலவால்.

### கோயில்

246. பொருவரும் வளஞ்சா லம்பர்மா நகரம்
பொலங்கொடு செய்பெருந் தகடாம்
ஒருவரு நகரோர் மூன்றுளு மாட
மொளிமிகப் பதித்தபன் மணியாம்
வெருவரு நாப்பண் ணுயக மணியாய்
விளங்கிய தென்பர்கற் றுணர்ந்தோர்
திருவரும் பரிதி குலவிளக் காய
செம்பியர் பிரான்புரி கோயில்.

### வேறு

247. ஓங்கு மால்வரை மேலொளிர் காட்சியால்
தேங்கு வானவர் சேவித்துச் சூழ்தலால்
வீங்கு மாபுகழ் மேவிய பண்பினால்
வாங்கு நாளழி யாமை வயங்கலால்.

---

245. தளவு அரும்பு - முல்லை அரும்பு. முரவை ஒட்டு ஒழித்த தண்டுலம் - வரி முழுமையும் நீக்கிய அரிசி; நன்கு தீட்டிய அரிசி. மடை - சோறு. கருனை - பொரிக் கறி. வறையல் பெருக்கம் - பிறிதொரு வகைப் பொறிக்கறியின் மிகுதி. சிற்றுணு வகை - சித்திரான்னம் முதலியன. உளவர் - செல்வம் உள்ளவர். களவு அரும் அன்பு - கள்ளமில்லாத அன்பு.

246. பொருவு - உவமை. அம்பர் நகரம், பொன் தகடு; நகரின் மூன்று பகுதி களிலுமுள்ள மாடங்கள், மணிகள்; நகரின் நடுவிலுள்ள கோயில் நாயகமணி. இங்கு அம்பர் ஒரு பதக்கமாக வருணிக்கப்பெற்றது. பொலம் கொடு செய் தகடு - பொன்னா லாகிய தகடு. ஒருவுதல் - நீங்குதல். நாப்பண் - நடு. திரு - செல்வம். பரிதி குலம் - சூரிய குலம். செம்பியர் பிரான் - கோச்செங்கட் சோழன்.

247 - 48. இவ்விரு செய்யுட்களும் ஒரு தொடர். கிள்ளி ஆற்றிய கோயில் கைலாயக் கோயிலே என்று இயைக்க. அம்பர்க் கோயில் ஒரு மாடக் கோயிலாதலின் அதனை வரைமேல் ஒளிர் காட்சி உடையது என்றனர். மால் வரை - பெரிய மலை,

248. தேவி யோடுஞ் சிவபெரு மானருள்
மேவி நாளும் விடாம லமர்தலால்
வாவி சூழ்கயி லாயவண் கோயிலே
ஆவி நேர்கிள்ளி யாற்றிய கோயிலே.

### கோயில் மதில்

249. மாறு தாங்கி வடிவு குலையத்தீ
ஏறு தாங்கி யிழிந்தவை யெள்ளியே
பேறு தாங்கிப் பிரானையுட் கொண்டுவெள்
ஏறு தாங்கி யுயர்ந்தன விஞ்சியே.

### கோபுரம்

250. உட்ட வாதவன் போங்குற வுட்புகூஉ
அட்ட மூர்த்தி யடிதொழு மன்பினர்
சட்ட மார்சிவ லோகத்தைச் சார்வதற்
கிட்ட வேணியென் பாமுயர் கோபுரம்.

251. பிரிய வானதி யும்பிறை யும்முடிக்
குரிய வாமெனத் தாங்கி யொளிர்தலால்
கரிய மாறும்பித் தோலிற் கலத்தலால்
அரிய நாயகன் போலுமக் கோபுரம்.

---

வாங்கும் நாள் - எவற்றையும் அழிக்கும் ஊழிக் காலம். வாவி - நீர்நிலை. கிள்ளி - சோழன்.

249. இஞ்சி - மதில். வடிவு குலைய மாறு தாங்கி என்றியைக்க. மாறு - பிற மதில்களினின்று மாறுபட்ட தன்மை. பேறு - செல்வம். பேறு தாங்கிப் பிரான் என்றும் இணைக்கலாம். வெள் ஏறு - வெள்ளை நிறங்கொண்ட இடபம்.

250. உள் தவாத அன்பு ஓங்குற - மனத்திலே குற்றமற்ற அன்பு மேலிட்டோங்க. உள் புகூஉ - உள்ளே நுழைந்து. அட்ட மூர்த்தி ; பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம். சூரியன், சந்திரன், இயமானன் என்ற எட்டு மூர்த்தங்களான சிவபெருமான். சட்டம் - செப்பம் ; நேர்மை. கோபுரத்தை நிலவுலகிலிருந்து சிவலோகத்திற்கு ஏற வைக்கப்பட்டுள்ள ஏணியாகக் கூறினர்.

251. கோபுரத்தின் உயர்வு வானத்தை எட்டியது என்பது இங்குக் கூறப் பட்டது. வான் நதி - கங்கை. மால் - மேகம். தும்பித் தோலின் - யானைத் தோலைப் போல கோபுரம் சிவபெருமானுக்கு ஒப்பு எனச் சிலேடை வகையால் கூறுகின்றது.

அன்னமாம் பொய்கை

252. என்ன தீர்த்தமு மெய்திவந் தாடுறும்
முன்ன மெண்ணிய யாவு முடிப்பதாய்
மன்னி மேன்மை மருவி விளங்குறும்
அன்ன மாம்பொய்கை யற்புதத் தீர்த்தமே.

253. தூல காரணஞ் சூக்கும மேயென
ஞால மோதுத னன்றுதெ ளிந்தனம்
சீல மார்பெருந் தீர்த்தங்கள் யாவைக்கும்
மூல மாய்ச்சிறி தாயது முந்தலால்.

254. நெடிய மாதவர் யாவரு நேர்ந்துகீழ்ப்
படிய மேவுங் குறுமுனி பண்பென
நெடிய தீர்த்தங்கள் யாவையு நேர்ந்துகீழ்ப்
படிய மேவுங் குறியவப் பைம்புனல்.

255. சிறிய தாய வுருவஞ் சிவணினும்
முறிய வல்லிருள் யாவு முருக்கலும்
குறிய யாவு மெனவிலை கோடலும்
செறிய வாமணி போலுமத் தீம்புனல்.

256. அண்ட வாண ரவாவன்ன மாம்பொய்கை
பண்ட வாதசோ பான வனப்பினுல்
விண்ட தாமரை யாதிய வீயினுல்
கண்ட பார்வை கவர்வதெஞ் ஞான்றுமே.

---

252. என்ன தீர்த்தமும் எய்தி-எல்லாப் புண்ணிய தீர்த்தங்களையும் தன்னிடத்தே பெற்று. அன்னமாம் பொய்கை ; தலத்துத் தீர்த்தத்தின் பெயர்.

253. அன்னமாம் பொய்கை சிறு வடிவினதாயினும், பிற தீர்த்தங்களுக்கெல்லாம் மூலமாய் உள்ள தன்மை, பருப்பொருளுக்கெல்லாம் மூலகாரணம் நுண்பொருளே என்ற உண்மையை விளக்குகின்றது எனக் கூறுகின்றது இக் கவி.

255. அன்னமாம் பொய்கைக்கு உயர்ந்த இரத்தினம் உவமை. சிவணுதல் - பொருந்துதல். முருக்குதல் - அழித்தல். யாவும் குறிய என மாற்றிப் பொருள் கொள்க.

256. அண்ட வாணர் அவாவு அன்னமாம் பொய்கை. பண் தவாத - வேலைப் பாட்டில் குறைவில்லாத. சோபானம் - படிக்கட்டு. வீ - மலர்,

## அம்பிகையின் திருக்கோயில்

257. புவன வேணிப் புராணர்மெய் யென்றியம்
புவன வாயினர் சூழப் பொலிதரும்
புவன மீன்று புரக்குங் கருணைவம்
புவனப் பூங்குழன் மேயபொற் கோயிலே.

258. போற்ற வாம்வனப் பூங்குழன் மானமிக்
கேற்ற மாங்கதி ரென்றும் விளங்கலால்
தோற்ற மீறு தொலைப்பரி தாங்கதி
சாற்ற நின்றது தான்மிகை யாமன்றே.

## இறைவர் கோயில்

259. அருமை மைந்தனங் காற்றிய கோயிலென்
றொருமை யாள ருரைத்திட வோங்கலால்
பெருமை செய்யப் பிதாநின்ற தொக்குமால்
கருமை சேர்மணி கண்டர்வி மானமே.

260. போற்று வார்கட் புறவிருள் போக்கிடும்
ஏற்று வார்கொடி யேற்றவி மானமுள்
சாற்று வார்மல மாசு தகர்த்திடும்
ஆற்று வார்சடை யாங்கமர் சோதியே.

---

257. புவனம் - நீர். புராணர் - சிவபெருமான். மெய் - உண்மைப் பொருள். மெய் என்று இயம்பு வன வாயினர் எனப் பிரிக்க. வன வாயினர் - அழகிய வாயை உடையவர்; இயம்புவன வாயினர் என்றும் கொள்ளலாம். வம்பு வனப் பூங்குழல் (நாயகி) - தலத்து அம்பிகையின் பெயர்.

258. போற்று அவாம் - போற்றுதலைக் கொண்ட. மானம் - விமானம். கதிர் - சூரியன். தோற்றம் ஈறு தொலைப்பு அரிது ஆம் கதி சாற்ற நின்றது; சூரியன். பிறப்பும் இறப்பும் மாற்றுதல் அரிது என்னும் உண்மையைத் தன் உதயத்தாலும் அஸ்தமனத்தாலும் காட்டுவது என்பதாம். 'வரம்பில தோற்ற மாக்கள், இறக்குமா றிதுவென் பான்போல் முன்னைநா ளிறந்தான் பின்னாள், பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா வெய்யோன்' என்ற கம்ப. அயோத். 675ஆம் செய்யுளைக் காண்க. ஒப்பு: 'தேய்த லுண்மையும் பெருக லுண்மையும், மாய்தலுண்மையும், பிறத்தலுண்மையும், அறியா தோரையும் அறியக் காட்டித், திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து' (புறம். 27).

259 அருமை மைந்தன் - பிரமன். ஒருமையாளர் - பெரியோர். ஓங்கலால் பெருமை செய்ய - உயரத்தினால் பெருமை பெற. பிதா - திருமால். திரிவிக்கிரம மூர்த்தி; விமானம் நிமிர்ந்து ஓங்கி நிற்கும் தோற்றத்துக்குத் திரிவிக்கிரம மூர்த்தி நின்ற நிலை உவமை.

260. விமானம், பக்தர்களுடைய கண்ணுக்குப் புறவிருளைப் போக்குவது; உள்ளேயுள்ள மூர்த்தி அகவிருளைப் போக்குவார் என்பது கூறப்படுகின்றது. ஏற்று

கொடி மரம்

261. கூறு தன்னிலே பூக்கொள லின்றியே
வேறு கொண்டு விராவிய பேர்ந்கெலாம்
மாறு தீர்பல மெல்லாம் வழங்குமால்
ஏறு தாங்கி யெதிர்நிற்கு மோர்தரு.

பிற சந்நிதிகள்

262. ஆடு மேன்மை யடிகட மன்றமும்
கூடு நாயகர் மேவிய கோயிலும்
தேடு சந்திர சேகரர் மானமும்
பாடு வாரிப் படிமிசை யாரரோ.

ஒலிகளின் சிறப்பு

263. மேய நாரதர் வீணை முழக்கமும்
பாய நான்மறைப் பாட லமலையும்
ஆய நால்வர் துதியி னரவமும்
ஆய மன்றுறங் காமை மருவுமே.

264. வளையி னோதையும் வாரழ லாற்சுட்ட
முளையி னோதையு மூடுஞ் சருமவார்த்
தளையி னோதையுஞ் சாற்றுபல் வங்கியத்
துளையி னோதையுஞ் சூழ்முகி லோதையே.

---

வார் கொடி - இடபத்துவசம். மல மாசு - ஆணவம், மாயை, கருமம் என்பன. ஆறு வார் சடை - கங்கையாற்றை யடக்கிய நீண்ட சடை.

261. இச் செய்யுள், சந்நிதியின் முன்னேயுள்ள கொடி மரத்தின் பெருமையைக் கூறுவது. 'கொடி மரம்' என வழங்குதலால் 'தரு' என்றார். கூறு.........வேறு கொண்டு - தரு என்றதற்கேற்ப இலை, பூ முதலியன இல்லாமல், மற்ற மரங்களினின்று வேறுபட்டு. ஏறு தாங்கி - இடபத்தைக் கொண்டு; ஏற்றங்கொண்டு எனவுமாம்.

262. ஆடும் மேன்மை அடிகள் - ஸ்ரீ நடராஜர். மன்று - சபை. கூடும் நாயகர் - அம்பிகை, முருகன் இவர்களுடன் கூடிய ஸ்ரீ சோமாஸ்கந்தர். மானம் - விமானம். பாடுவார் இ படி மிசை யார் எனப் பிரிக்க. படி மிசை - பூமியில். அரோ: அசை.

263. பாய - பரவிய. அமலை - ஒலி. நால்வர் - தேவார திருவாசக ஆசிரியர். அரவமும் ஆய் அமன்று எனப் பிரித்து இயைக்க. அமன்று - நெருங்கி. அரவமும் ஆய் அ மன்று எனலும் ஆம்; இப் பொருளுக்கு, மன்று என்றது முன்னுள்ள மகா மண்டபம் ஆம்.

264. வளை - சங்கு. அழலால் சுட்ட முளை : புல்லாங்குழல். மூடும் சரும வார்தளை - தோலால் மூடி, வாரால் கட்டப்பட்ட வாத்தியங்கள். வங்கியம் - துளைக் கருவிகளுள் ஒன்று.

265. அம்மை முன்சென் றடியுறை வைப்பதும்
கொம்மை வெள்விடைக் கூத்தர்முன் வைப்பதும்
இம்மை யாவ ரளவிட் டியம்புவார்
செம்மை யார்பொற் சிலம்பென லாமரோ.

266. இன்ன தாய வெழின்மணிக் கோயிலில்
அன்ன மென்னடை யம்பிகை யாளொடும்
நன்னர் மேவி நயந்தரு ணல்கிடும்
பின்ன மில்லாப் பிரமபு ரேசனே.

267. நம்பர் மேவிய நல்ல நகரெனும்
அம்பர் மாநகர்ச் சீரென் னறைந்தனம்
இம்பர் ஞால மினிதெடுத் தேத்துபூங்
கொம்பர் மல்கிய நைமிசங் கூறுவாம்.

நகரப் படலம் முற்றியது.

(இப் படலத்துத் திருவிருத்தம் 121)

---

265. அடியுறை - பாத காணிக்கை. கொம்மை - திமில் (கொண்டை). விடைக் கூத்தர் - சிவபெருமான்; பிரதோஷ காலத்தில் சிவபெருமான் இடபத்தின் கொம்புகளுக்கிடையே நின்று கூத்தாடுவரென்பது ஐதிகம். காணிக்கைப் பொருள்கள் மேருமலை போலக் குவிந்தன என்பது ஈற்றடியின் கருத்து.

266 - 67. பொருள் வெளிப்படை.

# 4. நைமிசாரணியப் படலம்

## நைமிசத்தின் பெருமை

268. கால வேற்றுமை யின்மையிற் கண்கவர்
கோல மேவலி னின்பங் குலாவலின்
சீல மாருஞ் சிவபுர மேயென
ஞால மேத்தப் பொலிவது நைமிசம்.

269. வாவித் தாமரை வண்டு பெடையொடும்
கூவித் தாமரை யெண்கொளப் பாடுபண்
மேவித் தாமரை யாதி விலங்குறு
ஓவித் தாமரை சோடுற் றுவக்குமால்.

270. கான வாரண மார்த்துக் களித்துப்பெய்
தான வாரண மாவிர தங்கொளும்
மான வாரண மாதவர் தோய்புனல்
பேன வாரண மாறெனப் பேருமே.

(இவையிரண்டுந் திரிபு)

---

268. நைமிசாரணியத்தின் பெருமை. பொருள் - வெளிப்படை.

269. (இச் செய்யுள் முதல், இப் படலத்துப் பாடல்களுக்கு ஆசிரியரே வகுத்த உரை தரப்பெறுகிறது.)

வாவித் தாமரை வண்டு பெடையொடும் - தடாகங்களினுள்ள தாமரைப் பூக்களிடத்து வண்டுகளானவை தங்கள் பெண் வண்டுகளோடும், கூவித் தாமரை யெண்கொளப் பாடு பண் - இரைந்து, தாமரையென்னும் அளவு கொள்ளப் பாடுகின்ற இராகங்களை, மேவித் தா மரை யாதி விலங்குறு - விரும்பித் தாவுகின்ற மரை முதலாகிய மிருகங்கள் தங்களுணவையும், ஓவித் தா மரைசோடுற் றுவக்கும் - நீக்கித் தங்களுக்கரசாகிய சிங்கத்தோடும் அத் தடாகங்களின் கரையில் வந்து மகிழ்ச்சியடையும். தாம், ஆல் : அசைநிலை.

270. கான வாரணம் ஆர்த்து களித்து பெய் - காட்டு யானைகளானவை சத்தித்து, மகிழ்ச்சியடைந்து சொரியாநின்ற, தான வாரண மா விரதம் கொளும் - மதநீர் வர, மகா விரதங்களைக் கொண்ட, மான வாரண மா தவர் தோய் புனற் பேன வாரணம் - பெருமை பொருந்திய வேதங்களை நன்றாய்த் தெரிந்த விருடிகளனைஞ் செய்யாநின்ற நுரையையுடைய புனலிலுண்டாகிய சங்கங்கள், ஆறெனப் பேருமே - அந்த மதநீரை நதியென்று நினைத்துப் பெயர்ந்து செல்லும்.

271. போத கத்தினை யாவளி போற்றுகைப்
போத கத்தினை நோக்கரிப் போத்தினம்
போத கத்தினை யார்புனத் தென்னுநூல்
போத கத்தினை யாயுமப் பொங்கரில்.

272. தந்த வாரணம் போர்த்திய சாமிவி
தந்த வாரணம் போற்றுமத் தானத்தி
தந்த வாரணம் போடுசெய் சந்திநீர்
தந்த வாரணம் போமுகுந் தன்கைக்கே.

(இவையிரண்டும் யமகம்)

273. அம்ப டர்ந்தக லாதவி ருஞ்சடை
அம்ப டர்ந்தக லாதவி ருஞ்சடை
நம்ப னங்கம லப்பத நாறுவ
நம்ப னங்கம லப்பத நாறுவ.

(இது பாதமடக்கு)

வேறு

274. தித்தித்ததேதூத், தொத்துத்துதைதேத்
துத்தத்து தேத்தீ துத்தத்த தோத.

(இது தகரவருக்கமொன்றனல் வந்த செய்யுள்)

---

271. போதகத்தினையா வளி போற்று கைப் போதகத்தினை - புட்பங்களினிடத்துத் (தேனை யுண்டு) வருந்தாத வண்டுகள் விரும்புகின்ற கையினையுடைய யானையை, நோக்கரிப்போத்தினம் - பார்க்கின்ற வாண் சிங்கத்தின் கூட்டங்கள், போ தகத் தினை யார் புனத் தென்னும் - போகக்கடவாய் தகுதியாகத் தினைப்புனத் தென்று சொல்லும்; நூல்போதகத்தினை யாயு மப் பொங்கரில் - சிவஞான போத மென்னு நூலை (முனிவர்கள்) ஆராய்ச்சி செய்கின்ற வந்த நைமிச வனத்தில்.

272. தந்த வாரணம் போர்த்திய சாமி விதந்த வாரணம் போற்றுமத்தானத்து தந்தங்களையுடைய யானைத் தோலைப் போர்த்திக்கொண்ட சிவபெருமானெடுத்துச் சொல்லிய வேதங்களுந் துதிக்கா நின்ற வவ்விடத்து, இதந் தவா ரணம்போடு செய் சந்தி நீர் தந்த வாரணம் - நன்மை கெடாதவர்கள் பொருந்திய விருப்பத்தோடாற்றுகின்ற திரிகாலக் கருமப் புனலி லுண்டாகிய சங்கம், போமுகுந்தன் கைக்கே - விட்டுணுவின் கையினிடத்தடையும்.

273. அம் படர்ந்த கலா தவிருஞ் சடை, யம்படர்ந் தகலா தவிருஞ்சடை - நம்பனங் கமலப் பதம் - அழகு பரவிய ஒரு கலைச் சந்திரன் றங்கிப் பிழைத்தலையடைந்த, கங்கை நெருங்கி நீங்காது விளங்குஞ் சடையினையுடைய சிவபெருமானதழகிய செந்தாமரை போன்ற திருப் பாதங்கள், நாறு வநம் பனங்கு - மணக்கும் வனமென்று சொல்லு மவ்விடத்து, அமலப் பத நாறுவ - மல நீங்கிய பதவிகள் விளங்குகின்றன.

274 தூத் தொத்துத் துதை தேத்துத் தத்து தேத்தீ - பரிசுத்தமுடைய பூங்கொத்துகள் நெருங்கிய விடத்துத் தாவுகின்ற தேனீக்கள், துத்தத்தோத - ஏழிசையி லொன்றைப் பாட, தித்தித்ததே - இனிப்பாயிருந்தது.

வேறு

275. சந்தமுடுவ, சந்தமுடுவ, சந்தமுடுவ, சந்தமுடுவ.

(இஃதேக பாதம்)

276. ஆய வாழை குராவத வாருவ, நேய மாழை மரா நித மோருவ
பாயகாஞ்சி பலவு நிரம்புவ, தூய தாஞ்சுப மேவுப ரம்புவ.

(இது கோமூத்திரி)

277. சந்து வம்பு தழுவு மகிழினும்
நந்து வண்கிளை கொண்டொளிர் நாகத்தும்
முந்து வஞ்ச முகிழ்த்தவி ருலினும்
வந்து வந்து வளைந்து விழுமளி.

(இது கூட சதுக்கம்)

வேறு

278. சார்ந்த தாம்ப ருமரை, நேர்ந்த தாம்ப ருமரை,
சார்ந்த தாம்ப ருமரை, நேர்ந்த தாம்ப ருமரை.

(இது முரச பந்தம்)

---

275. சந்தமுடுவ சந்தமுடுவ சந்தமுடுவ - சந்தன மரங்களிற் பொருந்திய கொடிகளினிடையே தென்றற் காற்றுனவை பிணங்குவன; சந்தமுடுவ - அழகு முடியிருப்பன.

276. ஆய வாழை குராவத வாருவ - உண்டாகிய வாழை மரம், குரா மரம், அத்தி மரம் பொருந்துவன; நேய மாழை மரா நித மோருவ - விருப்பம் பொருந்திய மாமரமும், கடப்பமரமு மெப்போது மியாவராலு மாராயப்படுவன; பய காஞ்சி பலவு நிரம்புவ - பரவிய காஞ்சி மரமும் பலாமரமு நிரம்பி யிருப்பன; தூயதாஞ் சுப மேவு பரம்புவ - பரிசுத்தமான சுகங்கண் மேவுதல் பரவியிருப்பன அந்த நைமிசவனத்தில்.

277. சந்து வம்புதழுவு மகிழினும், நந்து வண்கிளை கொண் டொளிர் நாகத்தும், முந்து வஞ்ச முகிழ்த்த விருலினும் - சந்தன மரத்தினும், வாசனை பொருந்திய மகிழ மரத்தினும், மிகுதியாகிய கொம்புகளைக் கொண்டு விளங்கும் புன்னை மரத்தினும், உயர்ந்த மூங்கின் மரத்துக் கட்டியிருக்கின்ற தேனடையினும், வந்து வந்து வளைந்து விழு மளி - வண்டுகளானவை வந்து வந்து சூழ்ந்து விழும்.

278. சார்ந்த தாம்ப ருமரை, நேர்ந்த தாம்ப ருமரை - எண்ணிக்கையிற் பொருந்தியதாகிய ஆம்பலெண்ணையுந் தாமரையெண்ணையு முடைய யானைகளையுந் தாவுகின்ற மரையென்னு மோர்வித மிருகங்களையும் பொருந்தியிருக்கின்றது;

279. ஓரு மோருயி ராற்பசு வோதலுற்
ருரு மற்ரெேன்ற ஞலுயி ராக்குபு
சேரு மற்ரெேன்றி னெத்தருச் செப்பலாம்
வாரு மற்றஃ தெங்கு மலருமே.

(இஃது அக்கர வருத்தனே)

280. சாத மந்தவ னந்தழை வித்தலு
மேத மேதுமின் ருகவி ரித்தலுங்
காதல் பூப்ப விடந்தொறுங் காட்டலும்
போத கந்தகங் கம்மெனப் போற்றுமே.

(இஃது அக்கரச் சுதகம்)

வேறு

281. தவமகலார் சேர, வருதிரமா வார்சே,
மதியிவருமேவார், கரவர் கரு மாலா.

(இது சுழி குளம்)

282. மாவாயாவீ வீயாவாமா
வாயாவோவா வாவோ யாவா
யாவோவாமா மாவா வோயா
வீவாமாமே மேமா வாவீ.

(இது சருப்பதோபத்திரம்)

---

சார்ந்த தாம்ப ருமரை - செங்கழுநீரையுந் தாமரையையுங் கலந்திருக்கின்றது; நேர்ந்த தாம்பருமரை - ஒளியை யுடையவர்களாகிய முனிவர்கள் பலரை யுடைத்தா யிருக்கின்ற தவ்வனம்.

279. ஆவென்றும், ஆவியென்றும், ஆவிரையென்றும் பொருள் கொள்க.

280. சாத மந்தவ னந்தழை வித்தலு மேத மேதுமின்ருக விரித்தலுங் காதல் பூப்ப விடந்தொறுங் காட்டலும் - போதகந் தகங் கம் மெனப் போற்றுமே: போதகம் - ஞானம்; தகம் - வெப்பம்; கம் - சலம்.

281. தவமகலார் சேர வரு திர மா வார்சே மதி யிவரும் - தவத்தினின்று நீங்காதவர்கள் சேர வருகின்ற நிலைமையயுடைய மாமரம், ஆத்திமரம், செம்மரங்களிற் சந்திர னேறும்; மேவார் கரவர் - கள்ளமுடையவர்கள் பொருந்தார்கள்; கரு மாலா - சனனங்கள் கலப்பனவல்ல, அவ்வனத்தில்.

282. மா வா யா வீ வீயா - மாமரம், ஆச்சாமரம், யாமர மிவைகளின் பூக்கள் கெடுவனவல்ல; வா மா ஆயா - தாவா நின்ற மான் கெடுவனவல்ல; ஓவா ஆவோ - பசுக்களோ நீங்காதன; யா வாயா - எவை கிடையாதன? ஓ - அசை. ஆமா மா வாவு ஓயா - காட்டுப் பசுக்கள் மற்றை மிருகங்கள் தாண்டுத லோய்வனவல்ல; வீவு ஆம் ஆம் ஏ மே மா வா வீ - நீக்க மாகு மா நீர் இன்பமே பெரியதடாகங்களெல்லாமவ்வனத்தில்.

283. தேயாவாமா யாவாடாதே, தேனுராவே தாமோவாதே,
தேவாமோதா வேராறுதே, தேடாவாயா மாவாயாதே.

(இது மாலை மாற்று)

284. போது மேயம ராகவி போருந்த
மீது பாயவு மாடுவ வேருந்தி
மோது மோத நருநகு மூருங்க
மேது வாரவை நீடவ ணேருந்து.

(இது காதை கரப்பு)

வேறு

285. துருவ நீரது, கருகுருதது, திருவமாயது, தருவிராயது.

(இஃதிதிற் கரந்த செய்யுள்)

வேறு

286. அருமா தவத்தர் புரிமேதத் தாலமர் நன்னிழலாற்
பெருநா னில'மும்பர் தாங்கூடு மாறளி பெற்றிடலால்
ஒருவா மயற்பண் புரம்போம் வரம்பற் றுரந்தரலால்
வெருவா வனமதி மேன்மையுற் றென்றும் விளங்கிடுமே.

(இது கரந்துறை செய்யுள்)

---

283. தேயா ஆமா - காட்டுப் பசுக்கள் தேய்வனவல்ல; யா வாடாதே - யாவென்னு மரம் வாடாது; தேன் ஆர் ஆவே தாம் ஓவாதே - தேன் பொருந்திய ஆச்சாமரந் தான் நீங்காது; தேவாம் ஓதா ஏர் ஆனுதே - தெய்வத் தன்மையாகிய சொல்லமுடியாத அழகு நீங்காது; தேடா ஆயா மா ஆயாதே - தேட முடியாத ஆயக் கூடாத வண்டுகள் கெடாது.

284. போது மேய மராகவி போருந்த மீது பாயவு மாடுவ வேர் - பூக்கள் பொருந்திய கடப்ப மரங்கள் குரங்குகள் போரைச் செய்யவும் மேலே தாண்டவும் வேரோடும் ஆடுவன; உந்தி மோது மோத நரு நகும் - கடலைப்போல அலைமோதும் வெள்ளமாகிய தேன்கள் விளங்கும்; ஊரும் கம் ஏதுவாரவை நீடவண் ஏர் உந்து - மேகங்கள் காரணம் பொருந்திய சபைகள் மிகுந்த வவ்விடத்து அழகைச் செய்து ஊருகின்றன.

285. துருவநீரது - தேடாநின்ற வழகிய குணத்தை யுடையது; கருகுருதது - வாடாதது; திருவமாயது - உலகிற்கெல்லாம் செல்வமாகியது; தரு விராய'து - மரங்களைக் கலந்திருப்ப தவ்வனம்.

286. அரு மாதவத்தர் புகழ் மேதத்தால் - அரிய மகா தவத்தினை யுடையவர்கள் புகழாநின்ற யாகத்தாலும், அமர் நன்னிழலால் - யாவர்களும் விரும்புகின்ற நல்ல நிழலாலும், பெரு நானில மும்பர்தாங் கூடுமா றளி பெற்றிடலால் - பெரிய பூலோகத்தாரும் தேவலோகத்தாரும் சேரும் விதம் கிருபையை யுடைத்தா விருத்த

வேறு

287. அம்பரம ரும்ப ரருளிடத்தா ரற்புதமார்
நம்பரமர் தாண்மனமே நாடு.

(இஃதிதிற் கரந்த செய்யுள்)

288. ஏக மாத்திரை யேறு மடைத்தலே
ஏக மாத்திரை யேறும்வெற் பாற்றிடும்
ஏக மாத்திரை யேறுசங் கங்குலாய்
ஏக மாத்திரை யேறுபொன் கீளுமே.

(இது மாத்திரைப் பெருக்கம்)

289. ஒன்றின் மாத்திரை யுற்றக ழுக்கடை
ஒன்றின் மேற்றிசைக் காற்றி னுயருவ
ஒன்றின் மேக வளமை யுரைத்திடில்
ஒன்றில் கார்க்கவி யெண்ணில்கண் ணுற்றவே.

(இது மாத்திரைச் சுருக்கம்)

---

லாலும், ஒருவா மயற்பண் புரம் போம் வரம் பற்றுரந் தரலால் - நீங்காத மையற் குணத்தின் வலி போகும் வரத்தைப் பற்றுதற்கு ஞானத்தைக் கொடுத்தலாலும், வெருவா வன மதி மேன்மையுற் றென்றும் விளங்கிடுமே - ஒரு நாளு மழிவில்லாதவந் நைமிசாரணிய மதிக மேன்மையைப் பொருந்தி யெக்காலமும் விளங்கும்.

287. அம்பரம ரும்ப ரருளிடத்தா ரற்புதமார், நம்பரமர் தாண் மனமே நாடு - அம்பரென்னுந் தலத்தில் வீற்றிருக்கின்ற மகாதேவர், அம்மையை யிடப் பாகத்தி லுடையவர், ஞான மயமான நமது பரமேசுரர் பாதங்களை நெஞ்சே நீ தேடு.

288. ஏக மாத்திரை யேறு மடைத்தலே: அடை - தழை - தாழை ; தென்னை மரங்களின்றலைகள், ஏக மாத்திரை யேறு வெற்பாற்றிடும்: வெற்பு - நகம் - நாகம் - தேவலோகத்தைச் சுமக்கும்; ஏக மாத்திரை யேறு சங்கங் குலாய்: சங்கம் கம்பு, காம்பு-மூங்கின் மரங்கள் வளர்ந்து, ஏக மாத்திரை யேறு பொன் கீளுமே: பொன் தனம், தானம் - தேவலோகத்தைக் கிழிக்கும்.

289. ஒன்றில் மாத்திரை யுற்ற கழுக்கடை : ஆயுதம் - ஈட்டி - இட்டியாக மானவை, ஒன்றில் மேற்றிசைக்காற்றி னுயருவ - மேல்காற்று : கோடை - கொடை. - கொடுத்தலாலுயருவன; ஒன்றில் மேக வளமை யுரைத்திடில்: மேகம் - வானம் - வனம்- நைமிச வனத்தின் வளமையைச் சொன்னால், ஒன்றில் கார்க்கவி யெண்ணில் கண்ணுற்றவே: கருங்குரங்கு-யூகம் - யுகம் - அநேக யுகங்களைக் கண்டிருக்கின்றதாம்.

290. பரவ சோகுதண் பாடல ராசியும்
விரவி யுங்கு மிடைகர வீரமுங்
குரவ மாமல கங்குளி ரத்தியு
முரம னைபட வோங்கு குணத்தவே.

291. புனைவண் டாடு மருத மரவம்பூ
நனைவம் பேய்தொடை பொங்கரா ணுடியே
நினைகண் ணுகண்டா னீதம தாகுவ
தனைவ ராத தரமொய்க ருதவே.

(இவையிரண்டு மிரட்டை நாகபந்தம்)

292. சூத மேயவந் தீந்தழை துன்றுவ
சீத மாமலர் சீர்துற்ற மாண்பின
ஏத மென்றதொன் றின்றுண்டு தீவிய
போத நாறலின் மாறடும் பொங்கரே.

(இஃது அட்டநாக பந்தம்)

வேறு

293. ஒருவரு மாவின் கனிவானத் தாருண வேதமுரு
முருகலர் பூங்கொம்பர் தாமுத வேது முதலுணர்த்தார்
திருவள வாத வவரென வேவந்து சேருமண்மீ
தருண்மெய்யை யாய்ந்தொழி யாவழி யாத வளத்ததுவே.

(இஃது இரதபந்தம்)

---

290. பரவசோகு.......... ..... ........ குளிரத்தியும்—பரவிய அசோகு மரமும், குளிர்ச்சி பொருந்திய பாதிரி மரக் கூட்டமும், கலந்தவ்விடத்து நெருங்கும் அலரியும், குராமரமும், நெல்லி மரமும், குளிர்ச்சியாகிய அத்தி மரமும், உர மனை படவோங்கு குணத்தவே - அவ்வனத்தில் வலி நிலை பெற்று அழகுண்டாக வளருங் குணத்தினை யுடையது.

291. புனைவண்டாடு.. ....................னீதமதாகுவ—அலங்காரமாகிய வண்டுகளாடு மருத மரத்தையும், குங்கும மரத்தையும், பூக்களையும், அரும்புகளையும், வாசனை பொருந்திய பூங்கொத்துகளையுங் கொண்டு, கருதி நினைத்துக் கண்ணுற் கண்டால் நீதியே யுண்டாகின்றன; தனை வராத தர மொய் கருதவே - அளவிடக் கூடாத தரத்தால் வலி குறையாதன வவ்வனம்.

292. சூத மேயவந் தீந்தழை துன்றுவ - மாமரங்கள் பொருந்திய வழகிய வினிப்பாகிய தளிர்களா னிறைவன; சீதமாமலர் சீர்துற்ற மாண்பின - குளிர்ச்சி யுடைய அழகிய பூக்கள் சிறப்படைந்த பெருமையை யுடையன, ஏதமென்ற தொன்றின்று - குற்ற மென்று சொல்லிய தொன்றில்லை; உண்டு தீவிய - தித்திப்பானவைக ளிருக்கின்றன; போத நாறலின் மாறடும் பொங்கரே-ஞானம் விளங்கலால் பகையை வெல்லு மவ்வனத்தில்.

293. ஒருவரு மாவின் கனி - நீங்குதலரிய மாம்பழங்கள், வானத்தாருண - தேவர்களுண்ண, ஏதமுரு முருகலர் பூங்கொம்பர் தாமுத வேது முதலுணர்ந்தார் -

வேறு

294. மாதவாத தாதரூத சூதமோத கீதவேத
வேதமோவு சூழலாய வாழைசே பலாமுனைய
போதமேய தீயவாய சாரொணாத தானமாய
தோதவாய மேன்மைசால்வ தோகைகூர்வ தாயதே.

(இது கமல பந்தம்)

வேறு

295. தேய மாதர மேயதே, தேய மேதக வேயதே,
தேய வேமிக வாயதே, தேய வாவின மாயதே.

(இது நான்காரைச் சக்கரம்)

வேறு

296. பொற்பமர் வானுயர் கொம்பரெ லாம்பசும் பூச்சொரிவ
பற்பல வாய வருக்கை பழம்பல கவியுதிர்ப்ப
அற்பமர் புன்னை யரும்பரெ லாமகன் மண்மறைப்ப
பொற்றுணி பற்றிய வண்கணி வண்டப்பப் பூப்பற்றுமே.

(இஃது ஆருரைச் சக்கரம்)

---

குற்றமடையாத வாசனையை வீசுகின்ற பூக்களையுடைய கொம்புகள் கொடுத்தலின் காரணத்தின் முதலைச் சொல்லமாட்டார்கள்; திருவளவாத............வளத்ததுவே - அளவில்லாத செல்வர்களைப் போலவே வந்து சேருகின்ற பூமியின்மேல் அருளாகிய வுண்மையை யறிந்து முடியாத அழியாத வளத்தினையுடைய தவ்வனம்.

294. மாதவாத.... .. .. .. .. ......சாரொணாத தானமாயது—வண்டுகள் கெடாத மகரந்த நீங்காத மாமரத்தையும் பெருக்கமாகிய கீதங்களையுடைய வேதத்தினையும் குற்ற நீங்கிய சோலையாகிய வாழையினையும் செம்மரத்தினையும் பலாமரம் முதலிய வற்றையுமுடைய ஞானம் பொருந்திய கொடுமையானவைகள் பொருந்தக்கூடாத இடமாகியது; ஓதவாய மேன்மை சால்வது - யாவராலும் சொல்லுதற்காகிய மேன்பாட்டின் மிகுந்தது; ஓகை கூர்வதாயதே - மகிழ்ச்சியின் மிகுதலாகிய வந்நைமிசாரணியம்.

295. தேய மாதர மேயதே - பூலோகத்தாராற் கொள்ளப்படு மாசையை யுடையது; தேய மேதக வேயதே - பிரகாசத்தையே தகுதியாகப் பொருந்தியிருக்கின்றது; தேயவே மிக வாயதே - தெய்வத் தன்மையுடைய வின்பமானது மிகவும் வாய்த்தலை யுடையது; தேயவாவின மாயதே - தேய்ந்த ஆசையினையுடைய முனிவர் கூட்டங்களையுடைய தவ்வனம்.

296. பொற்பமர்.. .. ...பசும்பூச் சொரிவ - அழகு பொருந்திய ஆகாயமளவும் வளர்ந்த மரக்கொம்புகளெல்லாம் பசிய பூக்களைச் சொரிகின்றன; பற்பல......... கவியுதிர்ப்ப - பலபலவாகிய பலாப்பழங்களை அனேகங் குரங்குக ளுதிர்க்கின்றன; அற்பமர் புன்னை ... .... மண் மறைப்ப - ஆசை பொருந்திய புன்னை யரும்புக

வேறு

297. துறுமலர் பூப்பன துணர்விரி புன்னை
திகழ்கருங் காரன சிரத்தி லாங்கலி
வளர்சந் தான மான்வழை தளிர்ப்பன
விரிபண் பயில்வன மேவிய வண்டினம்
வியன்சினை நறுவிலி மிடைவன வேபழம்
வழிமது விழித்திருன் மௌவ நருமே.

(இஃதெட்டாரைச் சக்கரம்)

298. அரியுங் கரியு மடுபுலி மாவும்
விரியுங் கலையு மிகவும் பிரிய
பிரிய முனிவர் பிரிகலர் மொய்ப்பர்
கனிகொண் டினிய கஞலு மாங்கே.

(இது பிறிது படு பாட்டு)

வேறு

299. இனிய பலாநிறை வாமலர் மாவியல் வாழையெலா
முனிவரி தாமிறை தீரளி தோய்மயன் மூசுறுமா
நனிசுவை கூர்கறை யோவமிர் தாவியல் கானயமார்
கனியொழி யாநறை மாமழை யாம்வயல் கால்படுமே.

(இது திரிபங்கி)

---

ளெல்லா மலர்ந்து அகன்ற பூமியை மறைக்கின்றன; பொற்றுணி..... பூப்பற்றுமே - பொன்றுண்டம் போலும் பூவின்றுதுகளைப் பொருந்திய வளப்பமுடைய வேங்கை மரங்கள் வண்டுகள் மொய்க்கப் புட்பிக்கும் அவ்வனத்தில்.

297 துறுமலர்....... .... ....புன்னை - கொத்துகண் மிகுந்த புன்னை மரங்கள் நெருங்கிப் பூக்களைப் புட்பிக்கின்றன ; திகழ் கருங்........லாங்கலி - தென்னைகள் உச்சியில் விளங்காநின்ற கரிய மேகங்களையுடையன ; வளர் சந்தான........... தளிர்ப்பன - வளர்ந்த சந்தன மாமும் பெரிய சுரபுன்னை மாமுந் தளிர்க்கின்றன ; விரிபண்...............வண்டினம் - அவ்விடத்திற் பொருந்திய வண்டுக் கூட்டங்கள் மிகுந்த விராகங்களைப் பாடுகின்றன; வியன்சினை... .. .....மிடைவனவே பழம் - மேலாகிய கிளைகளையுடைய நறுவிலி மரங்கள், பழங்கள் நெருங்கியிருக்கின்றன ; வழிமது........ மௌவ றருமே - தேன் கூடுகள் வழியாநின்ற தேனையொழுகவிட்டு மல்லிகைச் செடிகளை வளர்க்கும்.

298. இது வெளி.

299. இதிலடங்கிய செய்யுள் மூன்றுவன :—

## வேறு

இதிலடங்கிய செய்யுண் மூன்றுவன :—

300. இனிய பலா, முனிவரிதா, நனிசுவைகூர்; கனியொழியா. (1)

301. நிறைவா மலர்மா, மிறைதீ ரளிதோய்,
கறையோ வமிர்தா, நறைமா மழையாம். (2)

302. வியல்வா ழையெலா, மயன்மூ சுறுமா,
வியல்கா னயமார், வயல்கால் படுமே. (3)

## வேறு

303. அளியி னங்கலத் தாடிடத் தேனிழி
தளிர டர்ந்தசெந் தாதக லாக்கணி
களிகி ளர்ந்த தழைசெறி காட்சியா
னளிய டைந்த தழலிட்டி நண்ணியே.

(இது நிரோட்டகம்)

304. குரவு பாதிரி கொக்கு வழைகழை
பரவு வாழை பலவு பலாசுசே
உரவு சாலொடு வாருயிர் பூக்கடு
விரவு தாழை வியப்புற வுள்ளவால்.

(இஃது அநாசிகம்)

## வேறு

305. அதவ மரவ மரச, வகல மடல வனச,
மலர வறல பனச, மரந லதக மவண.

(இஃது அகரவுயிரால் வந்த செய்யுள்)

---

300. இனியபலா ........கனியொழியா.
301. நிறைவா ........மாமழையாம்.
302. வியல் வாழை........கால் படுமே.—இவைகளும் வெளி.

303. இது வெளி.

304. இது வெளி.

305. அதவ............மவண - அத்தி மரம், குங்கும மரம், அரச மரம், விசால மான வழகிய விதழ்களையுடைய தாமரைப் பூக்களையுடைய தடாகங்களையுமுடையன ; பலாமரம், நல்ல சஞ்சீவி மருந்து மவ்வனத்தி லிருக்கின்றன.

### வேறு

306. தாமா வாமா, வாயா காயா, யாவா யாமா, வாயா மாயா.

(இஃது ஆகார வுயிரால் வந்த செய்யுள்)

307. விதிதி கிரியி, நிதியி விரிதி, கிரியி சிகியி, மிதிதி கிரியி.

(இஃது இகர வுயிரால் வந்த செய்யுள்)

308. மந்த மாருதம் வந்து தவழ்தரச்
சந்த நாறுமத் தானத் தியல்வளம்
நந்த வென்மொழிந் தாநற் புராணத்தின்
முந்த வாம்வர லாறு மொழிகுவாம்.

நைமிசாரணியப் படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம் 41)

---

306. தாமா வாமா வாயா - தாவுகின்ற மிருகங்களுங் காட்டுப் பசுக்களுங் கெடுவனவல்ல; காயா யா - காயா மரமும், யாவென்னு மரமும், வாயா மா - எவ்விடத்துங் கிடையாத மாமரங்களும், ஆ யா மாயா - ஆச்சா மரங்களும் இன்னுமெவைகளும் ஒழிவனவல்ல வந்நைமிசாரணியத்தில்.

307. பிரமனால் விடப்பட்ட தருப்பைச் சக்கரத்தை யுடையது; செல்வத்தினை யுடையது; விரிந்த மூங்கில்களை யுடையது; மயில்களை யுடையது; மிதிக்காதின்ற சூரியன்றேருருளையை யுடைய தந்த நைமிசாரணியம்.

308. இது வெளி,

# 5. புராண வரலாற்றுப் படலம்

## நைமிசாரணிய முனிவர்களின் இயற்கை

309. சாற்றிய வனத்து வாழ்வார் சாந்தமே யுருக்கொண் டன்னார்
போற்றிய நீற்றி னோடு கண்மணிப் பொலம்பூண் மேனி
ஏற்றிய சிறப்பார் வேத நடுப்பொலி யெழுத்தோ ரைந்தும்
மாற்றிய வினைய னைத்தும் வழுத்திடு நியம முற்றார்.

310. எறிகட லேழு மொன்றா யெழப்பறம் பனைத்துங் காற்று
முறிதரப் பேர்த்துப் பேர்த்து முகந்துமேல் வீச யாரும்
அறிதரும் பூத மைந்து மடுக்கழி தருகா லத்தும்
குறிகுணங் கடந்த பெம்மான் குறித்தியா னத்தி னீங்கார்.

311. வண்டடை கிடக்குங் கற்ப மாலிகை செறியுந் தோளா
கண்டலன் வாழ்வுஞ் செய்ய கமலமே லிருப்பான் வாழ்வும்
விண்டலர் துளபத் தண்டார் மேலவன் வாழ்வு நாளும்
உண்டவ னொருவன் கான்ற பதமென வுள்ளங் கொள்வார்.

312. கொழுமுர ணியமன் வந்து கூடுக வமருக் கென்று
செழுமடல் விடுக்குங் கண்ணார் செய்யபொன் றகர்த்துக் [கொட்டின்
எழுமொளி சமழ்க்குந் தேம லிளமுலை னெமுங்க வந்து
தழுவினுந் தம்மை யீன்ற தாயென மதிக்கு நீரார்.

---

309. சாற்றிய வனம் - நைமிசாரணியம். நீறு - விபூதி. கண்மணி - உருத்திராக்கம். எழுத்து ஓர் ஐந்து - பஞ்சாட்சரம். வினை அனைத்தும் மாற்றிய என்றியைக்க. மாற்றிய, செய்யிய என்னும் வாய்பாடு.

310. பறம்பு - மலை. அடுக்கு அழிதரு காலம் - முறை மாறும் காலம்; மகாப் பிரளயத்தைக் குறித்தது. குறி - இலிங்கம். இறைவர் என்றும் இருப்பவர் என்று இங்குக் கூறப்பெற்றது.

311. ஆகண்டலன் - இந்திரன். மாலிகை - மாலை. செய்ய கமலமேல் இருப்பான் - நான்முகன். துளபத் தண்தார் - குளிர்ந்த துளசி மாலை. ஒருவன் - சிவபிரான். கான்ற பதம் - தோற்றுவித்த பதவிகள். 'பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப பரிதி' (பெரும்பாண். 2.) முனிவர்கள், இந்திரன், நான்முகன், திருமால் ஆகியோரின் வாழ்வெல்லாம் சிவபெருமான் அளித்தனவே என்றெண்ணுவார் என்க.

312. மடல் விடுக்கும் கண்ணார் - தம் கண் பார்வையாலே ஓலைவிட்டழைப்பவர். தகர்த்துக் கொட்டின்-பொடித்துக் கொட்டினால். சமழ்த்தல் - தாழ்தல், னெமுங்குதல் - அழுந்துதல்,

313. அளவிலின் புற்ற காலு மளவிறுன் புற்ற காலும்
உளனமை தரமுன் செய்த வினையென வுணர்ந்து வப்பும்
தளர்வுமில் லவர்செம் பொன்னுந் தரைபடு மோட்டிற்
[காண்பார்
களவுவஞ் சனைபொய் யாதி கனவினுங் கண்டி லாதார்.

314. சிவபரன் குறியே யுள்ளல் சிவபரன் பெயரே கூறல்
சிவபரன் பணியே யாற்றல் சிவபரன் புகழே கேட்டல்
சிவபரன் றலமே நோக்கல் சிவபரன் வாக்கே யாய்தல்
சிவபர னருளே யேற்ற லன்றிமற் றென்றுஞ் செய்யார்.

315. அத்திரி கருக்கன் காத்தி யாயனன் பிருகு மாவ
கத்தியன் சுகன்ற தீசி கண்ணுவ னுபத் தம்பன்
உத்தமப் பரத்து வாச னுபமன்னி யன்ச னந்தன்
வித்தகந் திரண தூமாக் கினிவிபண் டகன்சு தன்மன்.

316. இலகிதன் சுதீக்க ணன்சீ ரிரைப்பியன் பகவன் சாதன்
புலகன்மார்க் கண்டன் கர்க்கி புருசுண்டி திரண விந்து
நலமலி வசுமா தேவ னாரதன் றாம பானன்
வலசதா னந்தன் சம்பு மாதேசன் சுனன்வ சிட்டன்.

317. சரபங்கன் புசுண்டன் வச்சன் சனகன்ச னுதன் சங்கன்
அரபத்தன் வாம தேவ னணிமாண் டவியன் விந்து
பிரசண்டன் சிலாதன் றுலப் பியன்சனற் குமாரன் சத்தி
பரவுபார்க் கவன்சு மந்து பராசரன் கூசு மாண்டன்.

318. கிரிசர னுரோம சன்சீர் கிளர்சுனப் புச்சன் காணன்
விரிபுகழ்ச் சுனக னுசு விலாயனன் கலைச்சி ருங்கன்
தெரிசருச் சரன்சா பாலி தேவலன் காசி பன்றேம்
அரிதுரு வாசன் சாதா தபனரி தகன்பி ருங்கி.

319. திருதன்குச் சகன்சாண் டில்லி யன்சுனச் சேபன் மேலாம்
திருதன்சந் திரகு டன்பப் புருவகன் மருட ணன்கேழ்
தருதத்தாத் திரேயன் சீர்க்கௌ தமன்போதா யனன்சி
[றப்பின்
ஒருவின்முற் கலன்ற வஞ்சா லுக்கிர வீரி யன்னே.

---

313. உவப்பும் தளர்வும் இல்லவர். ஓட்டின்; இன், ஒப்புப் பொருள். இச் செய்யுளுடன், 'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர், ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்' என்ற பெரியபுராண அடிகளை ஒப்பிடுக.

314. குறி - இலிங்கம்.

315. இது முதல் ஏழு பாடல்களில் முனிவர்களின் பெயர்கள் கூறப்படுகின்றன.

320. பதுமன்கா லவன்ப ருப்ப தன்கவுண் டின்னி யன்றோம்
அதுகடி பயில வன்பா ணினியங்கி ரசுபார் போற்றும்
முதுபுகழ்க் குசுரு விச்சு வாமித்தி ரன்மு வாத
பொதுநலத் தசிதன் வல்ல புலத்தியன் றவுமி யன்னே.

321. வருசவு பரியே யட்ட வக்கிரன் கபிலன் மன்னும்
ஒருசம தக்கி னிப்பே ருத்தம னுற்றார்க் கின்பம்
தருசவு னகன்முன் னமா தவத்தரெண் ணில்லார் கூடிப்
பொருவிலி மகிழு மியாக மாங்கொன்று புரிய லுற்றார்.

முனிவரரின் ஆராய்ச்சி

322. அம்மகங் காண வேண்டி யடுத்தவா ரணியத் துள்ள
செம்மன முனிவர் யாருஞ் சிறந்தமா ணுக்க ரோடும்
பொம்மலுற் றுங்கு மொய்த்தார் பொலிந்தபன் முனிவருள்ளும்
தம்மன மெழுமா சங்கை சாற்றிட லுற்றார் சில்லோர்.

323. அடுபவக் காடு மாய்த்தற் காகிய கணிச்சி தேரின்
கடுமிடற் றடக்கி மாலா தியரிற வாமற் காத்த
விடுசுடர் மேனி யண்ணல் விரைமலர்ப் பாத மென்றே
தடுவருந் துணிபிற் றேர்ந்தேஞ் சாற்றலு மொன்றுண் டம்மா.

324. துருவுபு மாலுங் காணாச் சுயம்பிர காச மூர்த்தி
அருமலர்ப் பாத நல்கு மறமெது வென்று தேர்ந்து
பொருவருந் துறவு தானம் புணர்தவ மகமுன் னய
திருவநல் கெவற்றி னுள்ளுஞ் சிறந்ததொன் றெனவுந் தேர்ந்தேம்.

325. அன்னது சிவபி ரானன் கமர்தல விசேடங் கேட்டல்
மன்னவங் கடைந்து போற்றன் மருவுறச் சிந்தை செய்தல்
இன்னவை யாய வொன்று மென்னினுந் தலம னேகம்
நன்னர்மற் றெதுசி றந்த தென்பது நாடி னேமால்.

---

322. மகம் - யாகம். பொம்மலுற்று – மகிழ்ச்சியடைந்து ; பொம்மல், கூட்டமும் ஆம். ஆசங்கை - சந்தேகம்.

323. இவை முனிவர் கூற்று. அடுபவம் காடு - வருந்துகின்ற பிறப்பென்னும் காடு. கணிச்சி - கோடரி. கணிச்சி, அண்ணல் பாதமென்றே தேர்ந்தேம் என்றியைக்க. தேரின் - ஆராய்ந்தால். கடு - விஷம். மிடறு - கழுத்து. மால் ஆதியர் - திருமால் முதலியோர். திருப்பாற்கடலில் எழுந்த விஷத்தை இறைவர் தாம் உண்டு தேவர்களைக் காத்தமை கூறப்பெற்றது. தேர்ந்தேம் - துணிந்தோம்.

324. துருவுபு - தேடி. பொருவு அரும் - இணையற்ற. சிறந்ததொன்று தேர்ந்தேம் என்றதில் சுட்டிய ஒன்று, மேல் வரும் செய்யுட்களால் விளங்கும்.

325. சிந்தை செய்தல் - தியானித்தல். நன்னர் - நன்கு.

326. இதுசிறப் புற்ற தான மெனச்சொலல் வேண்டு மென்னக்
கதுமென வெழுந்து சௌன கன்கரங் குவித்து நின்று
முதுதவப் பெரியீர் சூத முனிவரிற் றெளிவா மென்றான்
அதுமனங் கொண்டி ருந்தா ரனைவரு மன்ன காலை.

சூத முனிவர் வருகை

327. வெள்ளிய நீறு பூசி விளங்குகண் மணிகள் பூண்டு
தெள்ளிய வெழுத்தைந் தெண்ணிச் சிறந்தமா ணாக்க ரோடும்
ஒள்ளிய புராண நூலோ ருருக்கொடு நடந்தா லென்ன
வள்ளிய கொடைசால் சூத மாதவ னாங்கு வந்தான்.

328. வந்தமா தவனை நோக்கி யிருந்தமா தவரெல் லாரும்
முந்தநேர் சென்று தாழ்ந்து முகமனோ டழைத்து வந்து
சந்தவா தனத்தி ருத்தித் தகுகடன் பலவு மாற்றி
அந்தமி றவத்தீர் யாரு மிருக்கென வருகி ருந்தார்.

முனிவர்கள் சூதரை உபசரித்தல்

329. ஐயநின் றரிச னத்தா லரியமா தவரே யாமும்
செய்யவித் தினமு நல்ல தினமேசெய் வேள்வி யுங்கார்
மையணி களத்தா னுள்ள மகிழ்ச்சிசெய் வேள்வி யேயோர்
பொய்யற வுரைத்தே மென்று புகன்றனர் மகிழ்ந்தா ரன்றே.

330. உயர்ந்தவர் செய்கை யாதோ ருயர்விலார் தமையுந் தம்மின்
உயர்ந்தவ ரென்று கொள்கை யும்பர்நா யகன்றாட் கன்பின்
உயர்ந்தமா தவத்தீர் நும்மை யுறுவிசே டத்தால் யானும்
உயர்ந்தவ னானே னீவி ருரைத்தசொன் மறுத்தற் காமோ.

---

326. சௌனகன் - ஒரு முனிவர். சூத முனிவர் - புராணங்களை நைமிசாரணிய முனிவர்க்குக் கூறியவர்.

327. இச் செய்யுளில் சூத முனிவரின் தோற்றம் கூறப்பெற்றது. கொடை : இங்கு, அறிவுக் கொடை.

328. சந்தம் - அழகு.

329. செய்ய இ தினம் - செம்மையான இந்த நாள். கார் மை அணி களத்தான் - நீலகண்டன்.

330. இச் செய்யுள் சூத முனிவர் கூற்று. செய்கை கொள்கை என்றியைக்க. உறுதல் - அடைதல்.

## சவுனகரின் வினு

331. என்றிருஞ் சூதன் சொல்லச் சவுனக முனியெ ழுந்து
நன்றிரு கரங்கு வித்து நயக்குநீ வருதன் முன்னம்
ஒன்றிவ ணிகழ்ந்த தைய வுறுபவங் களைத லாகும்
குன்றியல் சிலையான் பாதங் கூடுறி னெனறெ ளிந்தேம்.

332. அதுபெறற் குபாய மிட்டி யாதிய பலவுண் டேனும்
முதுதலப் புராணங் கேட்டன் முதன்மையா மெனவுந் [தேர்ந்தேம்
விதுமுடிப் பரமன் வாழு மேதகு தலமெண் ணில்ல
இதுசிறப் புற்ற தென்றியா முணர்ந்தில மியம்பல் வேண்டும்.

333. எத்தலம் பிரமன் மாயோ ளுதிய ரிறைஞ்சு தானம்
எத்தல மனேக சன்ம பாதக மிரிக்க வல்ல
தெத்தல மென்றுந் தீரா வறுமையை யிடிக்க வல்ல
தெத்தல மிந்தி ராதி போகமு மெளிதி னல்கும்.

334. சாதியின் வழுவு பாவந் தகர்ப்பது மனைய தோடம்
ஆதிய வுடையார்ச் சார்வா லாயதோட் டுவது நாளும்
ஓதிய நனவே யாதி மூன்றுமுண் டாக்கும் பாவம்
மோதிய வன்மை யுற்ற தலமெது மொழியுங் காலே.

335. எதுகலி தோடம் போக்கு மிருபிறப் பாள ரத்தி
எதுபவ வயுத மேனு மிரித்திடு மெவர்க்கு முத்தி
எதுபிர மாதி தேவ ரழுக்காறெய் திடவ ளிக்கும்
எதுமன முதன்மூன் றுனு நினைத்தவை யெய்துந் தானம்.

---

331. கூடுறின் களைதல் ஆகும் எனல் தெளிந்தேம் என்றியைக்க. குன்று இயல் சிலையான் - மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான்.

332. அது : சிவபிரான் திருவடிகளைக் கூடுதல். இட்டி - யாகம். விது - சந்திரன்.

333. இரித்தல் - தோற்றோடச் செய்தல்.

334. அனைய - அத்தகைய. தோடம் உடையார் சார்வால் ஆயது - அக் குற்றங்களை உடையவரோடு இணங்குவதால் உண்டான குற்றம். நனவே ஆதி மூன்று - ஜாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி என்ற மூன்று நிலைகள். மோதிய, செய்யிய என்னும் வாய்பாடு.

335. இரு பிறப்பாளர் அத்தி - பிரமகத்தி. பவ அயுதம் - எண்ணற்ற பிறவி. இரித்தல் - அழித்தல். அழுக்காறு - பொருமை. பிரமாதி தேவர் அழுக்காறு எய்திட ஏவர்க்கும் எது முத்தி அளிக்கும் எனக் கூட்டுக.

336. அழறுரும் பழித்தல் போலு மலரிய லொழித்தல் போலும்
எழன்முத லெவையுந் தீர வூமனை யிரித்தல் போலும்
தழல்சின மடங்கல் யானை யனைத்தையுஞ் சாடல் போலும்
கழறராப் பாவ மெல்லா மெத்தலங் கடிதின் மாய்க்கும்.

337. சொற்றமாத் திரத்தே மேலாம் புண்ணியந் தோன்ற வேண்டும்
பற்றவே யார்க்கு மெல்லாச் சம்பத்தும் பலிக்க வேண்டும்
அற்றமில் ஞான மாதி யனைத்தையுங் கொடுக்க வல்ல
கொற்றமார் தலமு ணர்ந்து கூறுகென் றிருந்தான் மன்னே.

338. உழுவலன் புடைய யோகி தனக்குமுன் னின்று ரைத்த
முழுவதுந் தெரிந்த சூத முனிவனோர் முகுர்த்த காலம்
பழுதற வுள்ளத் துள்ளிப் பரவுமோர் தலந்தெரிந்து
தொழுதகை யினனுய்க் கண்ணீர் துளும்பிட வுரைக்க லுற்றான்.

சூதன் உரை

339. உத்தம ராய நீவி ரொருபொரு ளாக வைத்து
வித்தக மில்லா வென்னை வினவினீர் யானு முங்கள்
சித்தமிக் குவப்ப தாய தொருதலந் தெரிந்தே ஞாணி
முத்தமற் றனைய தான நாமமு மொழியக் கேண்மின்.

வேறு

340. பிரமபுரி யென்றுரைக்கும் வேதவே தாந்தமெலாம் பெயரும் பல்ல
பரமன்மகி ழுதன்மகிமை காந்தோப புராணத்திற் பார்கொண் டாடும்
வரமளவா வகத்தியசங் கிதையுரைக்குங் கேண்மினென வகுக்க லுற்றான்
திரமருவு புராணவர லாறுரைத்தாம் விசேடமினிச் செப்பு வாமே.

புராண வரலாற்றுப் படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம் 32)

---

336. அழல் துரும்பு அழித்தல் போலும், அலரி அல் ஒழித்தல் போலும் எனப் பிரிக்க. அலரி - சூரியன். அல் - இருள், எழல் - எழால் என்பதன் குறுக்கல்; எழால் - கழுகு வகையைச் சேர்ந்த ஒரு பறவை. இவ்வகைப் பறவைகள் கோட்டானை அழித்து விடுதல் போலும் என்பது இரண்டாமடியின் பொருள். ஊமன்-கோட்டான். ஊமனைத் தீர இரித்தல் என மாற்றிக் கூட்டுக. சாடல் - அழித்தல், கழல்தரா - விலகாத.

337. சொற்ற மாத்திரத்தே - சொன்னவுடனே. அற்றம் - குறைவு.

338. உழுவலன்பு - எழுமையும் தொடர்ந்த அன்பு. முகுர்த்தம்; முகூர்த்தம் - மூன்றேமுக்கால் நாழிகை கொண்ட காலப் பகுதி.

339. வித்தகம் - ஞானம். ஆணி முத்தம் - உயர்தரமான முத்து. மற்று - அசை. தானம் - இடம்.

340. பெயரும் பல்ல - வேறு பல பெயர்களும் உள. வரம் - மேன்மை. விசேடம் - தலப் பெருமை முதலியன.

# 6. தல முதலிய விசேடப் படலம்

### தலத்தின் எல்லைகள்

341. குணகடன்மேற் றிசையிரண்டு யோசனையில்
வானவர்கள் கும்பிட் டேத்தும்
மணமலிதென் றிருவாரூர் வடக்கொருயோ
சனையிலரி மலர்க்கண் சாத்திப்
புணர்பயங்கொண் மிழலைக்குக் குணக்கரையோ
சனையிலென்றும் பொலிமா யூரத்
தணவியதென் றிசைவயினோர் யோசனையில்
விளங்கிடுநா மறைந்த தானம்.

### தலப் பெருமை

342. பத்திசெயி னிகபரமும் பாலிக்கு
மேலாகப் பகரா நின்ற
முத்தியுநன் கினிதுதவு மெவ்வுயிர்க்கு
மெஞ்ஞான்று முன்னி னும்
சித்தியடை வதற்கோரா சங்கையிலை
யதன்பெருமை செப்ப வல்லான்
அத்தியுரி போர்த்தவனே யல்லதைமற்
றெவராலு மறைய லாமோ.

343. பொருளுதவு மனையுதவும் புத்திரப்பே
றுதவுமற்றைப் போகத் தோடு
தெருளுதவு ஞானகலைச் சிறப்புதவு
முத்தியுநற் சிறப்பின் மேவும்
அருளுதவு மெண்ணரியவை யெண்ணியாங்
கேயுதவு மனைத்து முய்ய
இருளுதவுங் கண்டத்தா ரினிதமரும்
பிரமபுரி யென்னுந் தானம்.

---

341. குண கடல் - கீழ் கடல். அரி - திருமால். புணர் பயம் - உரிய பயன்; இழந்த சக்கரத்தை மீண்டும் பெறல். அணவிய - அடுத்த.

342. இக பரமும் பாலிக்கும் - இம்மைப் பயன்களையும் மறுமைப் பயன்களையும் அளிக்கும். முன்னுதல் - நினைத்தல. ஆசங்கை - ஐயம். அத்தி உரி - யானைத் தோல். அல்லதை : ஐ, சாரியை.

343. தெருள் - அறிவின் தெளிவு. இருள் உதவும் கண்டத்தார் - நீலகண்டர்.

344. கலைகளுண்மெய்ஞ் ஞானகலை போற்பலவா
கியதருவுட் கற்ப கம்போல்
மலைவில்பசுக் களுட்காம தேனுவைப்போ
லவயவத்துள் வயங்குங் கண்போல்
விலைவரம்பின் மணிகளுட்சிந் தாமணிபோற்
பல்லொளியில் வெய்யோ னேபோல்
அலைவரிய வக்கரத்து ளகரம்போன்
முதன்மையுறு மனைய தானம்.

345. வரமலியும் பிரமபுரி யென்றுரைக்கு
மத்தலத்தில் வசிப்போர் மேன்மை
உரனமையத் தெரிந்துரைப்பான் மலரவனோ
மற்றெவரா லுண்டு கண்டீர்
கரவுதப முத்தலமு மத்தலமே
யெடுத்துரைக்குங் கனிவு பூண்டு
பரசிவனுக் கொப்புளதே லதற்குமுள
தாகுமெனப் பகர லாமால்.

346. பிறந்தவர்க்கு மிடையரு வழிபாடு
செய்தவர்க்கும் பெட்பிற் காணச்
சிறந்தவர்க்கு மெஞ்ஞான்று நினைத்தவர்க்கும்
புறத்தெல்லை சேர்த ராமல்
இறந்தவர்க்கு முத்திதரு மொவ்வொர்தல
மித்தலமவ் வெவர்க்கு நல்கும்
அறந்தவர்க்கு வயப்படல்போ லத்தலஞ்சார்ந்
தவர்க்குவய மமரர் யாரும்.

---

344. முதன்மைப் பொருள்கள் பல இங்குக் கூறப்படுகின்றன. விலை வரம்பு இல் மணிகள்.

345. வரம் - மேன்மை, உரன்-வலிமை. மலரவனோ : ஓகாரம் ஐயப் பொருளது. கரவுதப - மறைவில்லாமல். முத்தலமும் அத்தலமே கனிவு பூண்டு எடுத்துரைக்கும் - சுவர்க்கம், பூமி, பாதாளம் ஆகிய மூன்றுலகங்களும் அத் தலத்தையே மனங் கனிந்து உயர்த்துக் கூறும்.

346. பிறந்தவர்க்கு முத்தியளிப்பது திருவாரூர்; தரிசித்தவர்க்கு முத்தியளிப்பது தில்லை. நினைத்தவர்க்களிப்பது திருவண்ணாமலை. இறந்தவர்க்களிப்பது காசி. இங்கு, "தில்லையைக் காணக் காசியி லிறக்கச் சிறக்குமா ரூர்தனிற் பிறக்க, எல்லையில் பெருமை யருணையை நினைக்க எய்தலா முத்தி" என்ற அருணாசல புராணச் செய்யுட் பகுதி (திருநகரப். 45) நினைவுகூரத் தக்கது.

347\. மன்னியவத் தலத்தொருநாள் வசித்தாலு
மத்தலத்து வழிச்சென் ருலும்
பன்னியவா ணிகமாதி யெந்நிமித்தங்
குறித்தங்குப் படர்ந்துற் ருலும்
மின்னியபூட் கணிகையர்தம் விழைவினடைந்
தமர்ந்தாலும் விரிஞ்ச ஞதி
துன்னியவா னவர்பலரு நறுமுறுப்பப்
பரபோகந் துய்ப்பா ரன்றே.

348\. அலையெறிமந் தாகினிசூ ழானந்த
வனத்தலத்தி ஞயுள் காறும்
நிலைமையுற வசித்தடைபே ரொருநாளத்
தலம் வசிக்கி னேரே மேவும்
மலைவருமக் காசியிலா யிரமறையோர்
தமக்கூட்ட வருமி லாபம்
தொலைவருமத் தலத்தொருவர்க் கொருபிடிசோ
றளித்தலினுற் ரேன்றுந் தோன்றும்.

349\. வேறுதலத் திடைச்சாந்தி ராயணமே
கிரிச்சரமே விதந்து மேலோர்
கூறுதத்த கிரிச்சரமே முதலாய
விரதமெலாங் கொண்டு நோற்கும்
பேறுசமழ்ப் புறுமனைய தலத்துமுப்போ
துண்டமர்ந்தான் பெரும்பேற் றிற்கு
நாறுமணுத் துணையறமு மேருவா
மத்தலத்தி னடாத்தின் மாதோ.

---

347\. விரிஞ்சன் - பிரமன். நறுமுறுத்தல் - பொருமை கொள்ளுதல்.

348\. மந்தாகினி சூழ் ஆனந்தவனத் தலம் - கங்கை சூழும் காசி. அத்தலம் என்றது அம்பரை. ஊட்டுதல் - அன்னமிடுதல்.

349\. சாந்திராயணம் - பூர்ணிமை தொடங்கி அமாவாசைவரை ஒவ்வொரு பிடி அன்னம் குறைத்தும் அமாவாசை தொடங்கிப் பூர்ணிமை வரை ஒவ்வொரு பிடி கூட்டியும் புசித்து அநுட்டித்துவரும் பிராயச்சித்த விரதம். கிரிச்சரம் – பிராயச் சித்தமாக அனுஷ்டிக்கப்படும் விரதம். தத்த கிருச்சரம் - நீர் வார்த்துக் கொடுக்கும் கிருச்சரம். சமழ்ப்புறுதல் - தாழ்வடைதல். அம்பர் நகர வாசத்தின் பெருமை கூறப் பெற்றது. அம்பரில் தங்குபவன் முப்போது உண்பவனுனலும், வெளியிடங்களி லிருந்து விரதம் புரிந்தவனினும் சிரேட்டனுவான் என்று கூறினர். நாறுதல் - தோன்றுதல். அணு : மிகச் சிறிய அளவினது. மேரு : மிகப் பெரிய அளவினது. நடாத்தின் - நடத்திஞல்.

350. கனியுண்டு காயுண்டு கந்தமுண்டு
சருகருந்திக் கதிக்குங் காற்றைத்
தனியுண்டு பிறதலத்தி னேற்பவரத்
தலத்தடைந்து தருவா ரிற்கண்
நனியுண்டு பிரமபுரீ சனைத்தொழுது
வைகுவரேன் ஞாலத் தெந்தத்
துனியுண்டு துயருண்டு மேலிடத்து
மில்லையெனச் சொல்ல லாமே.

351. வம்புவனப் பூங்குழலா ளொருபாகர்
பிரமபுரி வயங்கு மீசர்
அம்புவளர் சடைப்பரமர் தரிசனமொன்
றேநினைத்த வனைத்து நல்கும்
வெம்புபவக் கடல்சுவற்றற் கொருவடவை
யவர்நாம மெய்யே யந்த
நம்புதிருப் பெயர்புகலார் தம்பிறப்பு
மெப்பிறப்போ நவிலுங் காலே.

352. மறையவனு யினுமகுட மன்னவனு
யினுமொழுக்க வணிக னேனும்
முறைதிறம்பாச் சூத்திரனே யாயினுஞ்சாங்
கரனேனு மொழிய லாகாக்
கறைகெழுமு நீசனு யினுமிழிந்த
பாடண்டக் கலதி யேனும்
அறைமகளி ராயினுநூ லறிந்தவரா
யினுமொன்று மறியா ரேனும்.

353. அறமியற்று வாரெனினு மறமியற்று வாரெனினு மான்ற [கேள்வித்
திறமதிக்கு மவரெனினு மஃதுமதி யாரெனினுஞ் சிறுவ ரேனும்
உறவிருத்த ரேயெனினுங் கரஞுமலி முதலாய வுயிர்க ளேனும்
மறமிரிக்கும் பிரமபுரி வைகுதலாற் சிவலோக மருவ லுண்மை.

---

350. கதிக்கும் காற்று - விரைந்தெழும் காற்று. தருவார் இல் கண் - உணவளிப் பவரின் வீட்டில். துனி – துன்பம்- மேலிடம் - சுவர்க்கம் போன்ற மேலேயுள்ள இடங்கள்.

351. அம்பு - நீர். பவக்கடல் - பிறப்பென்னும் கடல். சுவற்றல் - வற்றச் செய் தல். வடவை - வடவைக் கனல். அவர் நாமம் - அச் சிவபிரானின் பெயர்.

352. சரங்கரன் - சங்கரஜாதியான். கறை - குற்றம். பாடண்டக் கலதி - மதத் துக்குப் புறம்பான மூதேவி. அறை - சொல்லப்படுகிற. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

353. கரம் - கழுதை. ஞமலி - நாய். மறம் இரிக்கும் - பாவத்தைப் போக்கும்.

### தலத்திற்குரிய வேறு பெயர்கள்

354. பிரமனருச் சனைசெயலாற் பிரமபுரி யம்பரப்பேர் பெற்ற
[தோன்றல்
திரமுறமே வலினம்பர் மாநகர மாகாளி சேர்ந்த மாண்பால்
உரனமைமா காளிபுர மாகாளன் பூசனைநன் குளுற்று மாற்ருல்
கரவரிய மாகாள புரம்புன்னை யாற்புன்னு கவன மாதோ.

5. நந்தனளித் தலினந்த ராசபுரம்
யாவோரு நயக்கு மாறன்
வந்ததிரு வருட்பேற்ருன் மாறபுரி
சண்பகமா வனஞ்சேர் மாண்பால்
கந்தமலி சண்பகா ரணியமிவை
முதற்பலவாங் கரையு நாமம்
அந்தமிலத் தலப்பெருமை யாவரறிந்
துரைக்கவலா ரளக்கொ ணுதே.

356. மன்னுபெரும் பிரமபுரி மாதேவ
னருளடையான் வயங்கு முத்தி
துன்னுமென் பவன்கொடிய விடம்புசித்துப்
பசிவருத்தந் தொலைப்போ னுவன்
இன்னுமவன் றனைநினையா னெத்தனையோ
பிறவியெடுத் திறப்பா னேனும்
முன்னுகொடும் பந்தமரு னெனவேத
வேதாந்த மொழியு மாதோ.

### அரிசிலாறு

357. ஆயபெரும் பிரமபுரித் தக்கணத்தோர்
நதியொழுகு மரிசி லென்று
மேயபெரும் பெயர்படைத்த காவிரியைக்
கண்ணுற்ருர் வெய்ய கூற்றின்

---

354. தலத்துக்குரிய பிரமபுரி, அம்பர், மாகாளிபுரம், மாகாளபுரம், புன்னுகவனம் என்னும் பெயர்கள் இங்குக் கூறப்பெற்றன.

355. நந்தராசபுரம், மாறபுரி, சண்பகாரணியம் என்னும் பெயர்கள் இங்குக் கூறப்பெற்றன. கரைதல் - சொல்லுதல்.

356. பந்தம் - மல பந்தம்.

தீயதெனும் வைதரணி கண்ணுரு
றறமுதலாந் திறநான் கென்னப்
பாயபெரும் பயன்முழுது மொருங்கடைவர்
மற்றினியாம் பகர்வ தென்னே.

358. பொன்னிநதி மூழ்கினர்க்கு மேன்மேலும்
புண்ணியமே புரிவ தேனும்
மன்னியொரு தலஞ்சார்ந்த மற்றையது
விசேடமெல்லா வளத்த லத்தும்
மின்னியொளிர் பிரமபுரிச் சார்புடைமற்
றஃததிவி சேட மாகும்
பன்னியதைக் கண்டாலு முண்டாலும்
படிந்தாலும் பயன்மேன் மேலும்.

அன்னமாம் பொய்கை

359. தெளிபிரம புரீசருக்குக் குணதிசையிற்
பொலியுமொரு தீர்த்த நாளும்
அளிகிளர்மற் றதனும மன்னமாம்
பொய்கையென வறைவ ரான்றோர்
ஒளிதிகழு மதன்பெருமை வடமொழியி
லன்னமெனற் குரையா நிற்கும்
களிகெழுவா சகத்தினுக்கு வாச்சியமே
யுணர்ந்துசொலக் கடவ தன்றே.

360. அந்தநறும் பொய்கையினோர் கான்முழுகிற்
செபம்வேத மறமுன் னுய
விந்தவிர தங்களிலொன் றில்லானு
மாவன்முத்த னியல்பு வாய்ப்பச்

357. தக்கணம் - தெற்கு. அரிசில் - ஓர் ஆற்றின் பெயர். காவிரி - பொதுவாக ஆற்றைக் குறிப்பது. வைதரணி - எமனுலகுக்குச் செல்லுமுன் கடக்கவேண்டிய நெருப்புமயமான ஆறு. அறம் முதலாம் .........பெரும் பயன் - அறம், பொருள், இன்பம் வீடு என்னும் பேறுகள். பாய - பரவிய.

358. பொன்னி - காவேரி. காவேரி பொதுவாகப் புண்ணியம் தருவதே யாயினும், ஒரு தலத்தை அது சார்ந்திருப்பின் அதன் விசேடம் அதிகமாகும். எல்லாத் தலங்களுள்ளும் சிறந்ததான அம்பரை அடுத்ததற்கு மேலும் விசேடம் அதிகம். படிதல் - முழுகுதல்.

359. குண திசை - கிழக்கு. அளி - அன்பு காரணத்தால் தோன்றும் அருள். வடமொழியில் அன்னமெனற்குரையா நிற்பது - அம்சம். அம்சமந்திரம் வாசகம்; அதன் வாச்சியம் ஈசுவரன். அன்னமாம் பொய்கையின் பெருமை இறைவனாலேயே சொல்லத்தக்கதென்பது கூறப்பெற்றது. தலப் பெருமை கூறியவிடத்தும் இவ்வாறே கூறியுள்ளமை காண்க.

சந்ததமு முழுகுறுவோன் றனக்கரிதோ
முத்தியெந்தத் தலத்து ளோரும்
முந்தவதின் வந்துவந்து முழுகிமுழு
கித்திகழு முத்த ராஞர்.

361. காயமொழி மனமூன்ரு லாயபா
தகச்சேறுங் கதிக்குந் தூல
மாயவுடன் முதன்மூன்ரு லாயபா
தகச்சேறு மனேக சன்மம்
மேயகொடி தாயபா தகச்சேறு
மத்தீர்த்தம் விரைந்து மண்ணும்
தூயவது போலுலக மூன்றினும்வே
றிலேமறையின் றுணிபு மீதே.

362. அன்னமாம் பொய்கைநறுந் தீர்த்தத்திற்
சங்கற்ப மறைந்து கொண்டு
தன்னமே வாவன்பிற் படிந்தாடி
வெண்ணீறு தழுவப் பூசி
என்னமா மணியுமொவ்வாக் கண்மணிபூண்
டைந்தெழுத்து மிதயத் தெண்ணி
முன்னமா தவமுடையே மெனப்பிரம
புரீசர்திரு முன்பு சார்ந்து.

பிரமபுரீசர் துதி

363. மலரவனுக் கருள்புரிந்தாய் போற்றியுயர்
பிரமபுரி வாச போற்றி
அலர்பிரம கிரியீச போற்றியயன்
மான்முதலோர்க் கரியாய் போற்றி
பலர்புகழ்முச் சுடரினுமிக் கொளிதிகழுந்
திருமேனிப் பரம போற்றி
உலர்தலிலே காதசரா முருத்திரருக்
கதிபதியா யொளிர்வாய் போற்றி.

---

360 ஓர்கால் - ஒருமுறை. ஒன்றில்லானும் முத்தன் ஆவன். சந்ததம் - எப்பொழுதும்.

361. காயம், மொழி, மனம் - முக் கரணங்கள். தூல, சூக்கும, காரண உடல்கள். சேறு - அழுக்கு. மண்ணுதல் - கழுவுதல்.

362. தன்னம் - சிறுமை. தன்னம் மேவா அன்பு - நிறைந்த அன்பு. என்ன - எத்தகைய. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

363. ஏகாதசராம் உருத்திரர் - பதினோருருத்திரர்.

364. அருவுருவங் குணங்குறிகள் கட்டுவீ
டனைத்துமிலா வனாதி போற்றி
மருவுமுயி ரவத்தையடை யவுந்தனக்கொன்
றேனுமிலா வரத போற்றி
பொருவுதவிர் சிற்பரவற் புதசச்சி
தானந்த புனித போற்றி
வெருவுதப வுலகளிக்கும் வம்புவனப்
பூங்குழல்சேர் விமல போற்றி.

365. பொதுநடனம் புரிபாத போற்றியெனத்
துதிபுரிவோர் பூணும் பேற்றை
முதுபுலவ ரானுமொழி தரமுடியா
தியாமேயோ மொழிய வல்லேம்
மதுமலர்நீர்ப் பிரமபுரித் தலமுதன்மான்
மியஞ்சிறிது வகுத்தாம் பூமேற்
சதுமுகன்வந் தருச்சித்தற் காயகா
ரணமெடுத்துச் சாற்று வாமால்.

தல முதலிய விசேடப் படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம் 25)

---

364. கட்டு - பந்தம். பொருவு - உவமை. சிற்பரன் - அறிவிற்கு எட்டாத கடவுள். வெருவு - அச்சம். தப - நீங்க.

365. பேறு - பாக்கியம். சதுமுகன் - பிரமன்.

# 7. பிரமன் சாபம் பெற்ற படலம்

366. வரியளி முரலுங் கற்ப மாலிகைத் தடந்தோள் வானோர்
பரிவொடு முதலு கத்திற் பனிவரைச் சிகர மேய
விரிமலர்த் தவிசோன் பாங்கர் மேயினர் பணிந்து போற்றி
இரிதரா வோரா சங்கை யிரிதர வினுதல் செய்தார்.

தேவர்கள் பிரமனை வினவுதல்

367. மறைபிர மாண மாகு மற்றுள நூல்கட் கெல்லாம்
அறையுமம் மறைதா னுங்காங் கனேகரைப் பிரம மென்றே
முறைமையி னுரைத்த தியாரை முகமனு வுரைத்த தியாரைக்
குறையற வுணர்த்தல் வேண்டு மத்துணை கூறு யேனும்.

368. படைத்தலை நீயே செய்வாய் பார்முத லனைத்துஞ் செந்தேன்
அடைத்தலை யுகுக்குங் குல்லை யாளியவ் வனைத்துங் காக்கும்
துடைத்தலை யியற்றும் வெய்ய சூற்படை சுமந்த பெம்மான்
கடைத்தலை யிவரு ணெற்றிக் கண்ணுடைப் பெருமா னுக்கே.

369. அடங்கலுந் தன்பாற் றேற்ற மாதலாற் பவனென் மாக்கள்
மடங்கரும் பிறப்பி றப்பா மயந்தவிர்த் திடுத லாற்றேம்
உடங்குகொ லுருத்தி ரன்யா வோரையுஞ் சுகப்ப டுத்தி
இடங்கொள வைத்த லாலே மிருடனென் றியம்பா நிற்பர்.

370. ஒருதனக் குயர்ந்தோ ரில்லா வுண்மையி னுலீ சானன்
மருவசை வற்றிருக்கு மாண்புமே வுறலாற் றாணு
பொருவரு முத்தி யின்பம் புணர்த்திடு மதனாற் சம்பு
வெருவுறத் துட்ட ரைக்கொல் விதத்தினாற் சருவ னென்பார்.

---

366. வரி அளி - இரேகைகளையுடைய வண்டுகள். மாலிகை - மாலை. முதல் உகம் - கிருதயுகம். மலர் தவிசோன் - பிரமன். இரிதரா ஓர் ஆசங்கை - நீங்காத ஓர் ஐயம்.

367. அறையும் - சொல்லும். முகமனு - உபசாரமாக.

368. அடை தலை - இலையினிடத்தே. குல்லை - துளசி. குல்லையாளி - திருமால்.

369. இது முதல் ஐந்து பாடல்களால், சிவபெருமானுக்குரிய பல பெயர்களைக் காரணத்துடன் கூறுகின்றார். இப் பாடலில், பவன், உருத்திரன், மிருடன் என்ற மூன்று பெயர்கள் உள்ளன. பிறப்பு+இறப்பு+ஆமயம் எனப் பிரிக்க. ஆமயம் - நோய். தோம் உடங்கு கொல் உருத்திரன் : தோம் - குற்றம்; உடங்கு - ஒருங்கே.

370. இப்பாட்டில் ஈசானன், தாணு, சம்பு, சருவன் என்ற நான்கு பெயர்களுக் குரிய காரணங்கள் கூறப்பெறுகின்றன.

371. ஒண்கதிர் முதற்கோள் யாவு முதித்தலத் தமித்த லொன்றில்
எண்கடல் கரைமேற் ருவா தடங்குத லிறத்தல் பூமுன்
விண்கடை யாய பூதம் வெளிப்பட லொடுங்க லாதி
எண்கொளத் தகநடத்தும் வலியினுக் கிரனே யென்பார்.

372. ஒளிகிள ருருவா லென்றூ முடுபதி யழற்கு நாளும்
ஒளிகொடுத் திடலாற் காயத் திரிமுத லுளம னுக்கள்
ஒளிகெழ வுபாசித் தேத்து முண்மையா லுயிர்கட் கெல்லாம்
ஒளியுற வவித்தை முற்று மொழித்தலாற் பர்க்க னென்பார்.

373. அளவரு மொளியோ னாகி யமர்தலி னன்மா தேவன்
தளர்வற வினையைந் தாற்றுந் தன்மையாற் பரமே சன்சீர்
உளபல நாம மின்னு முள்ளன சிவனுக் கேயப்
பளகிலா தவனே வேறே பரமெடுத் துரைத்தி யென்றார்.

பிரமன் தானே பிரமம் என்றல்

374. தராதல மதிக்குந் தேவர் சாற்றிய மாற்றங் கேளா
இராசத குணத்துண் மூழ்கு மிண்டையோன் மதிமயங்கி
அராவணி பவனு மல்ல னராவணை யானு மல்லன்
புராதன முதல்வன்யானே புந்தியிற் றெளிமி னின்னும்.

375. சராசர புவன மெல்லாந் தோற்றிடுந் தகையேன் யானே
கராசல வுரிபோர்த் தானுங் கராமடு திகிரி யானும்
பராவுமென் கூற்றிற் றோற்றும் பண்ணவர் படைத்த லாதி
விராவுமுத் தொழிலுஞ் செய்வா னெனையன்றி வேறு முண்டோ.

---

371. இப்பாட்டில் உக்கிரன் என்ற ஒரு பெயர் உள்ளது. பூமுன் விண்கடையாய பூதம் - பூமி முதல் ஆகாயம் இறுதியாகவுள்ள ஐம்பூதங்கள். வலியின் - வலிமையிகுல்.

372. இப்பாட்டில் பர்க்கன் என்ற ஒரு பெயர்; பர்க்கன் - பிரகிருதியை அஷ்ட மூர்த்தியாய்த் தாங்கி நிற்கும் சிவமூர்த்தம், என்றூழ் சூரியன். உடுபதி - சந்திரன். மனுக்கள் - மந்திரங்கள். கெழ - மிக. அவித்தை - அஞ்ஞானம்.

373. இப்பாட்டில் மாதேவன், பரமேசன் என்ற இரண்டு பெயர்கள். அமர்தலினல் மாதேவன் எனப் பிரிக்க, வினை ஐந்து - பஞ்ச கிருத்தியங்கள்: சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகம் என்பன. பளகு - குற்றம் 367 முதல் இதுகாறும் தேவர்கள் பரமனிடத்து ஐயம் வினவுதல்.

374. இண்டையோன் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமன், அரா அணிபவன் - சிவபெருமான். அரா அணையான் - திருமால். இப்பாட்டும் அடுத்ததும் ஒரு தொடர்.

375. கராசல உரி - யானைத்தோல். கராம் அடு திகிரியான் - முதலையைக் கொன்ற சக்கராயுதத்தையுடையவன், திருமால். கூறு - பகுதி. பண்ணவர் - தேவர்.

376. ஒருபரம் பிரமம் யானே சுயம்புவென் றுரைக்கு நாமம்
மருவிய தெனக்கு மற்றோர்க் குளதெனின் முகமன் மாறுத்
திருவினன் யானே யானே பிரபுவென் றெவருந் தேர்மின்
இருவரு மெனையு பாசித் திடுவரென் றுரைத்தா னன்றே.

தேவர் திருமாலை அணுகி வினுதல்

377. மலரவன் செருக்கிற் சொற்ற வார்த்தைவா னுட்டுளார்கேட்
டுலர்தலி லினையன் வார்த்தை யுண்மையே போலு மென்று
பலர்சொலவ் வரையி லோர்பாற் பருமணிச் சிகர மேய
அலர்துழா யலங்க லானை யடைந்தனர் பணிந்தா ரன்றே.

378. கடவுளீர் நீவீர் வந்த காரிய மென்னை யென்று
மடலவிழ் துளபத் தண்டார் மாயவன் விருப்பிற் கேட்கப்
படவர வணையாய் முந்திப் பதுமமே லவன்பா லுற்றோம்
இடர்தபு மூவ ருள்ளும் பிரமம்யா ரிசைத்தி யென்றேம்.

379 அரியல னரனு மல்ல னயனெனுந் தானே யாரும்
தெரிதரு பிரமமென்று செப்பினன் கேட்டு வந்தோம்
விரிதுழா யலங்கன் மார்பா மெய்மையோ பொய்மை யோதோம்
இரிதர வுரைத்தி யென்றார் முறுவலித் திசையா நிற்பன்.

திருமால் இறுத்த விடை

380, இழிந்ததா மதத்தின் மூழ்கு மிணர்த்துழா யலங்கன் மார்பன்
வழிந்ததேங் கமல மேலால் வதிபவன் பிரமங் கொல்லோ
ஒழிந்தசூற் படைக்கை யானே யொருவரு மல்லர் யானே
மொழிந்தவான் பிரம மின்னு மொழிவதொன் றுண்டு
[கேண்மின்.

---

376. மருவியது எனக்கு - பொருந்தியது எனக்கே. முகமன் - உபசாரம். பிரபு - அதிகாரி. இருவரும் : திருமாலும் சிவனும்.

377. உலர்தல் - வாடுதல். பலர் சொல்அ வரை - பலரும் புகழும் அந்த மேரு மலை. துழாயலங்கலான் - திருமால்

378. படவரவணையாய் - திருமாலே! பதும மேலவன் - பிரமன். இசைந்தி - சொல்வாயாக.

379. தோம் இரிதர - குற்றம் நீங்க.

380. சூல்படை - சூலாயுதம்.

381. முன்னமெ னுந்தி யாய முண்டகத் துதித்த லாலே
இன்னமுங் கமல யோனி யெனும்பெயர் பலருஞ் சொல்வார்
அன்னவன் றனென் மைந்த னவன்பர மாதல் பொய்மை
உன்னரும் பிரமம் யானென் றுரைப்பது மெய்மை யாமால்.

நான்முகன் கூறல்

382. என்றுரைத் தயனென் பானீங் கெய்துகவென நி னைத்தான்
அன்றுரைத் திறுமாப் புற்ற வயனுமவ் வாறே வந்து
கன்றுரைத் தகுவர்ச் சாடுங் கரியாயோர் வணக்க மென்று
நன்றுரைத் திட லு மின்றி நயந்தெதி ரிருந்தா னன்றே.

இருவரும் தாம் தாமே பிரமம் என்றது

383. எதிரிருந் தானை நோக்கி யென்மக னல்லை யோநீ
முதிருமன் பூற்றெ டுப்ப முறைப்படி வணக்கஞ் செய்யாய்
பிதிர்தலி லிறுமாப் புற்றுப் பேணலன் போலி ருந்தாய்
அதிர்கட லுலக மெள்ளு மறிவெங்குப் படைத்தா யென்றான்.

384. யானெலா மியற்ற லாலே யென்மக னல்லை யோநீ
வானெலாம் புகழு மென்னை மதித்துநீ தொழலா காதோ
சானெலாம் பைங்கூழ் கண்டு தாழுத லுணர்த ராதென்
மீனெலாம் பொலியும் வாரி மீமிசைக் கிடப்போ யென்றான்.

385. அன்னவா கனத்தோ னிவ்வா றறைதலும் பிரமம் யானென்
முன்னநீ யிவ்வா றோதன் முனிதக்க முறைமை யாமே
என்னமூ டத்து வத்தை யெய்தினாய் மகனே யென்றான்
சொன்னகீர் செவியெ துப்பத் துடிதுடித் துரைப்பன் வேதன்.

---

381. முண்டகம் - தாமரை. கமல யோனி - தாமரையிற் பிறந்தவன்.

382. அன்று உரைத்து - (உண்மைக்கு) மாறாகக் கூறி. கன்று உரை தகுவர் - கடுஞ் சொற்களையுடைய அசுரர்களை.

383. பிதிர்தல் இல் இறுமாப்பு - முழுமையான செருக்கு

384. சால் நெல் ஆம் - மிக்க நெல்லையுடைய. பைங்கூழ் கண்டு - பசும் பயிரைப் பார்த்து. தாழுதல் உணராது - நிறைந்த பெரியோர் வணங்கும் தன்மையை அறியாமல்; " கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே " (சீவக. 20) என்பதனை ஒப்பு நோக்குக. வேறுவகையில் பொருள் கொள்ளலாமாயினும் கொள்க. வாரி - கடல்.

385. 'பிரமம் யான்' என்பது முதல் திருமாலின் கூற்று. முனிதக்கமுறைமை - கோபிக்கத்தக்க வகை. மூடத்துவம் - அறிவில்லாமை. சொன்ன கீர் - சொன்ன சொல். வேதன் - பிரமன்.

386. நேமியம் படையாய் மூடத் துவமெனக் கோநினக்கோ
சாமியு நீயோ வென்னைத் தந்தநின் பெருமை தேரின்
பூமியச் சுறமு னின்னைப் பொறையுயிர்த் திட்ட தம்பம்
ஆமிதை யறியார் யாரே யதற்குள துனக்கு முண்டால்.

இருவரும் போரிடல்

387. எனவசி வாயிற் ருேற்றி யிண்டைமா மலரோன் கூறக்
கனநிகர் வடிவ மாயோன் கண்சிவந் துடன்றெ ழுந்து
மனஞெடு முகன்று டிப்ப வாய்வெரீஇ யடவென் சொன்னுய்
முனகவென் றுருத்து நின்ரு னெழுந்தனன் முளரி யோனும்

388. அடமறு மார்ப வேதுக் கெழுந்தனை யதுகண் டச்சம்
படவடங் கிடுவ துண்டோ வென்றுசெம் பதும மேலோன்
கடவுளர் பலருங் காணக் கண்சிவந் தொருகை யோச்சி
மடலவிழ் துளபத் தாரான் வண்கவு ளுறப்பு டைத்தான்.

389. இதுவரை மொழிப்போ ராற்றி யிருந்தவ னெண்ண மின்றிக்
கதுமெனக் கைப்போர் செய்தான் காரியம் வியப்பிற் றென்று
மதுமலர் துளபத் தண்டார் வானவ ஞெருகை யோச்சிச்
சதுமுக ஞெருக போலந் தகர்தரப் புடைத்தா னன்றே.

390. மாயவன் புடைத்த லோடு மாறறைந் தனனென் ஞெண்பூ
ஆயவன் மிகக்கொ திப்புற் றங்கையிற் றண்டங் கொண்டான்
பாயவன் சிறைப்புள் ளூரும் படலையந் துளவோ னுந்தன்
நேயவன் றண்டங் கொண்டா னிகழ்ந்தது பெருங்க லாமே.

---

386. நேமி அம் படையான் - திருமால். சாமி - பிரபு. தம்பம் திருமாலைப் பெரறையுயிர்த்தது, நரசிங்காவதாரத்தில். பொறையுயிர்த்தல் - பிரசவித்தல். அதற்கு உளது உனக்கும் உண்டு : உன்னைப் பெற்ற தம்பத்துக்குள்ள பெருமையே என்னைப் பெற்ற உனக்கும் உண்டு என்று நான்முகன் கூறினன் என்க.

387. அசி - இகழ்ச்சி. இண்டை மாமலர் - தாமரைமலர். கனம் - மேகம். உடன்று - பகைத்து. முகன் - முகம் ; போலி. வாய் வெருவுதல் - வாய் பிதற்றல். அட - பிரமனை நோக்கி விளித்தது. முனக - நீச உருத்து - கோபித்து.

388 மறு மார்பன் - ஸ்ரீவத்ஸத்தையுடைய திருமால். கவுள் - கன்னம்.

389. கபோலம் - கன்னம்.

390. பூ ஆயவன் - பூவில் இருப்பவன் : பிரமன். பாயவன் சிறை புள் - பரந்த வலிய சிறகுகளையுடைய கருடன். படலை - தழை.

391. இருவருந் தண்டங் கைக்கொண் டோச்சின ரெறியா நிற்பர்
மருவரு மிலக்கிற் றப்பா வணஞ்சினந் துறப்பு டைப்பர்
பொருவரும் வீரந் தோற்றி வஞ்சினம் புகலா நிற்பர்
ஒருவரு மெதிரு ரும லுற்கையிற் சுழலா நிற்பர்.

392. விண்ணிடைத் திரிவர் மேரு வெற்பிடைத் திரிவர் வாரி
மண்ணிடைத் திரிவர் திக்கின் வரம்பிடைத் திரிவர் தாம்வாழ்
கண்ணிடைத் திரிவ ரெல்லாக் கடலினுந் திரிவர் பூவில்
பெண்ணிடைக் கலந்து போகம் பெரிதுகொண் டுவக்கு நீரார்.

393. வானவ ரச்சங் கொண்டார் வாள்வலி படைத்த வென்றித்
தானவ ரச்சங் கொண்டார் தடங்கட லுடுத்த பாரில்
மானவ ரச்சங் கொண்டா ரென்பதென் வகுப்பார் காப்பார்
ஆனவ ரிந்த வண்ணங் கலாய்த்தம ராற்றுங் காலை

394. முதன்மொழிப் போரும் பின்னர் முயன்றகைப் போரு நீத்து
மதனுடைத் தண்டப் போரின் மடங்கிலார் மண்ணின் மீதோர்
பதனுடைத் தானஞ் சேர்ந்து பலபடை தொடுப்பா னெஞ்சுள்
நுதலினு ரனைய காலை நோன்மைமா லிதனை யெண்ணும்.

திருமால் வேதங்கள் முதலியவற்றை அழைத்துக் கேட்டல்

395. படைபல தொடுத்து ஞாட்புப் பண்ணினுள் பலநீட் டிக்கும்
இடைவிலக் குநரு மில்லை யிமையவர் பிரமம் யாரென்
றடைதரத் தெரிவார் வேத மாதியை யழைத்துக் கேட்டால்
புடையற வுண்மை கூறும் போதனு முணர்வா னென்று

396. தன்னுடை யிதயத் தெண்ணிச் சலசமண் டபத்து மேய
பொன்னுடை மார்பத் தண்ணல் புந்தியி னினைத்தல்
[செய்தான்
மின்னுடை வேத நான்குங் காயத்தி ரியுமே லாய
மன்னுடைப் பிரண வப்பேர் மனுவுமிங் கடைக வென்றே.

---

391. உற்கை - கடைக் கொள்ளி. வாரி மண் - கடல் சூழ்ந்த பூமி

392. கண் - இடம். பூவில் பெண் - இலக்குமியும், கலைமகளும்.

393. தானவர் - அசுரர். மானவர் - மனிதர். வகுத்தல் - படைத்தல்.

394. மதன் - வலிமை. பதனுடைத் தானம் - தகுதியான இடம். நுதலுதல் - கருதுதல். நோன்மை - வலிமை.

395. ஞாட்பு – போர். பண்ணின் நாள் பல நீட்டிக்கும். புடை அற - ஒரு சார் பின்றி. போதன் - பிரமன். இதுவும் அடுத்த பாடலும் ஒரு தொடர்.

396. சலச மண்டபம் - தாமரை வடிவான மண்டபம் பொன் - இலக்குமி. மன் - பெருமை. மனு - மந்திரம்.

397. புனை துழாய் மௌலி யண்ணல் புந்தியி னிந்த வாறு
நினைதலு மிருபத் தோர்சா கையினிக ழிருக்கு வேதம்
இனைதலி னூற்றோர் சாகை யியசுரு வாயி ரஞ்சால்
அனையநற் சாம மொன்பா னதர்வணம் விரைந்து வந்த.

398. வருகாயத் திரியும் வாய்த்த பிரணவ மனுவும் வந்த
அருகாமற் றவற்றை நோக்கி யமரர்கள் பலருந் தேரக்
கருகாமும் மூர்த்தி கட்குட் பிரமம்யார் கழறு கென்னத்
திருகாமச் சுதன்சொ லோர்ந்து தனித்தனி செப்பா நிற்கும்.

வேதங்கள் முதலியன சிவபெருமானே பிரமம் எனல்

399. எவனிடத் திருந்து பூத மியாவையுந் தோன்று நிற்கும்
எவனிடத் தனைய பூத மெழுந்தவா றொடுங்கா நிற்கும்
அவன்மயேச் சுரனெ னும்பே ரண்ணலே பிரம மாவான்
அவனலா தில்லை யேயென் றறைந்ததா லிருக்கு வேதம்.

400. எவனெல்லா மகங்க ளானும் பூசிக்கப் படுவோ னென்றும்
எவன்யோகர் முதலி யோரால் பூசிக்கப் படுவோ னென்றும்
அவனொரு பினாக பாணி பரமேசன் பிரம மாவான்
அவனல்லா தில்லை யென்ன வியசுரு வறைந்த தன்றே.

401. எவன்வலி தாங்கி யண்ட சக்கரஞ் சுழலு மென்றும்
எவனனு வெளிநி றைந்தா னெவன்பெரி யவனெ வைக்கும்
அவன்யோக ருணரா நிற்கு மீச்சுரன் பிரம மாவான்
அவனலா தில்லை யென்று வறைந்தது சாம வேதம்.

402. எவன்பொறி முழுத டக்கு மியல்பினர் நோக்கப் பட்டோன்
எவனிக மாதி மூன்றற் கென்றுங்கா ரணமா யுள்ளான்
அவனுருத் திரன்ம கேச னரன்பரம் பிரம மாவான்
அவனலா தில்லை யென்ன வதர்வண மறைந்த தன்றே.

---

397. சாகை - கிளை. ஒவ்வொரு வேதத்துக்கும் உரிய சாகைகளின் அளவு குறிக்கப் பெற்றது.

398. அருகு ஆம் என்று பிரித்தும் அருகாஎன ஒரு சொல்லாகவும் கொள்ளலாம். அருகா - குறையாத. திருகு ஆம் சொல் எனக் கூட்டுக.

400. மகங்கள் – யாகங்கள், பினாகம் - சிவபெருமானுடைய வில்லின் பெயர். இயசுரு - யஜுஸ்.

402. நிகம ஆதி - வேத முதல்வன். மூன்றற்கு - முத்தொழிலுக்கு.

403. மொழிபரம் பிரம மான பரசிவ மூர்த்தி யெல்லாம்
பழிதப வெங்க ளெங்கண் மூர்த்தியாப் பாவிக் கின்றேம்
அழிவிலம் மூர்த்தி யெல்லாம் பிரமமே யறிக வென்று
கழியரி லெல்லாக் காயத் திரிகளுங் கரைந்த வன்றே.

404. கரைதரு தொழிலைந் தற்குங் காரண ரனேக மாய
புரைதபு மொளிகட் கெல்லாம் பொங்குபே ரொளிய ரென்றும்
பரையொடு கலந்தி ருக்கும் பர்க்கரே பிரம மாமென்
றுரைகெழு பிரம காயத் திரிமனு வுரைத்த தன்றே.

405. குறிதரு நாம ரூப குணங்களாற் குறிக்க வொண்ணுன்
செறிதரு வசனு தீதன் றிகழ்பரஞ் சோதி யென்றும்
முறிவினிட் களமா யுள்ள முக்கணன் பிரம மல்லார்
அறிதரி னுகா ரென்னுப் பிரணவ மறைந்த தன்றே.

பிரமனின் வினு

406. மறைமுத லனைத்து மிந்த வாறெடுத் துரைப்பக் கேட்டுப்
பொறைதபு மகங்கா ரத்தாற் பூவினுன் கோபங் கொண்டு
முறையுற வதுவை செய்நு மனையொடு முயங்கு வானே
நிறைபரம் பிரம மாவா னெனநெடி திகந்து சொன்னுன்.

பிரணவத்தின் விடை

407. அறிதராப் பிரம னிவ்வா றறைதலும் பிரண வத்தின்
குறியதி தெய்வந் தானே ருருக்கொடு குலவ நேர்வந்
தெறிமழுப் பரன்வே றுய பெண்ணெடு மிசைந்தா னல்லன்
செறிதரு மவனு நந்தந் தெரிதிரென் றுரைத்த தன்றே.

---

403. பரசிவத்தின் மூர்த்தி பேதம் எல்லாம் தத்தமக்குரிய மூர்த்தியாக எல்லா மந்திரங்களும் பாவிக்கின்றன என்பதும் அம் மூர்த்திகள் எல்லாம் பிரமமே என்பதும் மந்திரங்கள் சொன்னவை. கழி அரில் - நீங்கிய குற்றம் : குற்றமில்லாத கரைந்த - சொல்லின.

404. பரையொடு கலந்திருக்கும் பர்க்கர் - சக்தியொடு கூடியுள்ள சிவபெருமான். பர்க்கர் என்னும் பெயர்க் காரணம் 372 - ஆம் பாடலில் காண்க.

405. வசன அதீதன் - சொல்லுக் கெட்டாதவன். நிட்களம் - நிஷ்களம் : உருவமின்மை.

406. தபும் - கெடுக்கும். வதுவை - திருமணம். இகந்து - கடந்து.

407. எறி மழு பரன் - சிவபெருமான்.

### இருவரும் மீண்டும் போர் தொடங்கல்

408. அறைதரு பிரண வத்தி னதிதெய்வ மிதுபு கன்றும்
முறைதபு மிருவ ருக்கு முன்மயக் கொழிந்த தில்லை
மிறைதபு மீசன் மாயை மூடினுல் விலக்கு வார்யார்
குறைதப முன்போற் பூசல் குறித்தன ரெழுந்தா ரன்றே.

### சிவபெருமான் சோதியாய்த் தோன்றுதல்

409. கடவுள ரதுதெ ரிந்து கலங்கினர் முறையிட் டார்வெவ்
விடமிடற் றடக்கும் பெம்மா னிவர்செருக் கடங்க வீப்பான்
படர்திரு வுள்ளங் கொண்டு பகையிரு வருக்கு முன்னம்
தொடர்புற வளக்க லாவோர் சோதியா யெழுந்தா னன்றே.

410. பாதல நின்றெ ழுந்து பார்முழு வதுங்கி ழித்து
மீதல முகடுங் கீண்டு விளங்குமோர் சோதி தன்னை
ஆதலங் கமையத் தேவ ரனைவருங் கண்டார் மிக்க
காதலங் களப்பின் றாக விருவருங் கண்டா ரன்றே.

### இலிங்கத்தின் எழுச்சி

411. இருவருஞ் செருக்கு மாற வெழுந்ததோர் சோதிக் கோர்பாற்
பொருவருஞ் சுவாலா மாலை பொங்கநோக் கிடுகண் கூச,
வெருவரும் படித்தாய் நாச விருத்தியில் லதுவாய் மாழ்கும்
குருவரு மோரி லிங்கங் குலவுற வெழுந்த தன்றே.

### சிவசொரூபம் தோன்றல்

412. அதிசய மதன்மேன் மற்றோ ரதிசயந் தோற்றிற் றென்ன
மதிசெயுஞ் சோதி லிங்க முளைத்தது மற்று முண்டாம்
பொதிவள முணர்வா மென்று நிற்கின்ற போது கண்டார்
கதியருள் சோதி நாப்பட் கவினுமோர் தெய்வ ரூபம்.

---

408. மிறை தபும் - குற்றமற்ற. குறித்தனர் : முற்றெச்சம்.

409. கடவுளர் - தேவர்கள். அடங்க வீப்பான் - முற்றிலும் கெடுக்கும்பொருட்டு.

410 ஆதல் அங்கு அமைய ; அங்கு : அசை. ஆதல் - பரம் பொருளாதல். அளப்பு இன்று ஆக - அளவில்லாமல்.

411. சுவாலா மாலை - ஒளி வரிசை. வெருவரும் படித்தாய் - அஞ்சத் தக்கதாய். நாச விருத்தி இல்லதுவாய் - அழிவு, வளர்ச்சி இல்லாததாய். மாழ்கும் குரு வரும் - கண்டோர் மயங்கும் ஒளியுடைய.

### இறைவன் சொரூபவருணனை

413. மதிதவழ் சடையு மூன்று நயனமு மழுவு மானும்
பொதிவலி யொருநாற் றோளும் புயங்கபூ டணமும் வெய்ய
கொதிசினத் தரக்கின் றோலே கொளுந்திரு வரையு மெய்யில்
பதிதிரு நீறுந் தேவி பண்புபூத் திருக்கும் பங்கும்.

### சிவபெருமான் கூறுதல்

414. தேசுவிட் டெறிக்கு மந்தச் சிற்பர வுருவ நோக்கி
மாசுவிட் டகலாச் சிந்தை யிருவரு மற்றீ தென்னோ
பேசுசித் திரத்திற் றென்று மெனப்பெரி தெண்ணுங் காலே
மூசுமற் புதக்கூத் தையன் முகிழ்நகை புரிந்தீ தோதும்.

415. பிரமம்யாம் பிரமம் யாமென் றேபெருங் கலாம்வி ளைக்கும்
தரமரூஉ மயனே மாலே சார்தர வீங்கு வம்மின்
திரமுறு மினைய சோதி யடிமுடி தெரியக் காண்போர்
பரமெனற் கைய மில்லை காணுறப் படரு மென்றான்.

### திருமால் செயல்

416. என்றலும் வராக மாகி யிணர்த்துழாய்ப் படலை மார்பன்
அன்றலி லடிகாண் பேனென் றுயிரந் தெய்வ வாண்டு
சென்றமை பாத லத்துத் திரிந்தனன் சற்றுங் காணான்
கன்றலின் மீண்டு நீயே பரமென்று கைகு வித்தான்.

417. மாயவன் பன்னாட் டேடி வருத்தமுற் றமலன் பாதம்
மேயவோர் துகளுங் காணான் மீண்டுமெய் மொழிந்தா னென்று
தூயவா னவரு வந்தார் தூண்டருஞ் சோதி நாப்பண்
நாயனு முளம கிழ்ந்தா னவின்றமுற் பிழையு மெண்ணான்.

---

413. புயங்கம் - நாகம், தரக்கு - புலி.

414. சிற்பரம் - அறிவுக்கு எட்டாதது. சித்திரம் - அதிசயம், மூசும் - பொருந்திய.

415. தரம் மருவும் - தன்மை பொருந்திய. படரும் - செல்லுங்கள்.

416. அன்றல் - மாறுபடுதல்.

417. நாயன் - நாயகன்.

### பிரமன் செயல்

418. முடியறி குவன்யா னென்று முயன்றெழுந் தயனே ரன்ன
வடிவுட னண்ட மேலாற் பறந்துமுன் வருடந் தேர்ந்தும்
பொடியணி மேனி யோன்றன் புயமுங்கண் டறியா னாகிக்
கடிதிரு சிறைமொய் யோய்ந்து கலங்குபு மீளுங் காலை

419. அரியெனக் காணே னென்னி லாமவ மான நீங்கத்
தெரிதரக் கைதை யொன்று சிருட்டித்துக் கண்டா னென்றே
புரிவொடு சொற்றி யென்று போதித்துத் திருமுன் வந்தே
பரிதரு மிறுமாப் போடு நின்றனன் பலரு மொய்த்தார்.

420. அண்டர்காள் பலருங் கேண்மி னுயவிச் சோதி மேலால்
கொண்டதோர் முடியைக் கண்டேன் கூறுமித் தாழம் பூவும்
எண்டகு மதனால் யானே பரமென விசைத்து நின்றான்
திண்டிறல் படைத்த வானோர் தெருமந்து மயங்கா நின்றார்.

### சிவபெருமான் சபித்தல்

421. இறையென நவின்ற தன்றிப் பொய்மையு மிசைத்தா னென்று
பிறைமுடிப் பரன்கோ பித்திப் புள்ளுருப் பெயர்க்க வல்லாக்
குறைபெறு கென்று வைது குலமல ரவற்காப் பொய்மை
அறைதரு கைதாய் நீயென் னருச்சனைக் காகா யென்றான்.

### கவிக் கூற்று

422. கடிமல ராளி சாபம் பெற்றது கரைந்தா மன்னான்
வடிமழு வுடையோன் பாதந் தொழுதருண் மதித்தெழுந்தே
ஒடிவரும் வளப்புன் னைக வனம்புகுந் துவப்பு மேவப்
படியருந் தவம்பு ரிந்த வண்ணமும் பகர்வா மன்றே.

பிரமன் சாபம் பெற்ற படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம் 57)

---

418. முன் வருடம் - முன்னே கூறிய ஆயிரம் தேவ வருடம். மொய் - வலிமை. இதுவும் அடுத்த பாடலும் குளகம்.

419. கைதை - தாழை. சொற்றி - சொல்வாயாக. பரிதரும் - மிகுந்த.

421. இறை - பிரமம். வைது - சபித்து. கைதாய், விளி.

422. கரைதல் - சொல்லுதல். ஒடிவு - கெடுதல். படி அரு - உவமையற்ற.

# 8. பிரமபுரிப் படலம்

## பிரமன் வருந்தியது

423. எந்தை புவன மனைத்தினுக்கு மீசன் சினந்து சபித்திடலும்
நிந்தை யடைந்தோ திமவடிவி னீங்கா தமரு மலர்க் கிழவன்
சிந்தை தெளிய மறையாதி தெளித்த மொழியும் வறிதிகந்தே
அந்தை யடைந்தா மதன்பயனு மடைந்தா மென்று கவலுவான்

424. தம்மை யறிந்து பரநாமே யென்று பிதற்றுஞ் சமயரென
மும்மை யுலகு நனியிழிப்ப மோகந் தலைமேற் கொளச்சிறிதும்
செம்மை தவிர்ந்து பரநாமென் றுரைத்தானு செருக்குற் றென்செய்தாம்
அம்மை யொருபா லுடையானிவ் வளவில் விடுத்த தருளன்றே.

425. மேய வுலகம் புல்லெனவவ் வுலகத் துள்ளும் வீற்றிருக்கை
ஆய நகரம் புல்லெனவந் நகரத் துள்ளு மலங்காரம்
மேய தளியும் புல்லெனவத் தளியி னுள்ளு மிக்கொளிரும்
தூய தவிசும் புல்லெனவென் வந்த தென்று துயரமுறும்.

426. காத லமைந்த கலைமடந்தை வருந்த விரதங் கடைப்பிடித்துப்
போத லமைந்த மைந்தரெலாம் வருந்த வென்றும் புறங்காப்புற்
றோத லமைந்த பரிசனமும் வருந்த வொளிரூர் தியும்வருந்தச்
சாத லமைந்த பெருந்துயரஞ் சார்ந்த தாவா வெனக்கலுழ்வான்.

427. செறியா வந்து பரம்யாரே தெளிய வுரைக்க வேண்டுமென
நெறியா வினைய வானரைநோ வேனோ வறிவி னிறைந்தெழுந்த
அறியா மையைநோ வேனோமற் றுரை நோவே னென்றுளத்துக்
குறியா வெழுந்து முதல்வனடி பாடித் துதிப்பே னெனல் குறித்தான்.

---

423. ஓதிம வடிவு - அன்ன உருவம். வறிது வீணாக. இகத்தல் - கடத்தல். அந்தை - அகந்தை : இடைக்குறை.

424. மோகம் - மயக்கம்.

425. புல்லென - வெறிச்சிட. பிரமன் தன் நாடு, நகரம், மனை, ஆசனம் இவையெல்லாம் தானில்லாமையால் வெறிச்சிட நேர்ந்ததே என்று அங்கலாய்த்தான் என்க. தளி - கோயில். தவிசு - ஆசனம்.

426. பரிசனம் - பரிவாரத்தார். ஆவா - அவலக் குறிப்புணர்த்துவது.

427. செறியா வந்து - கூட்டமாக வந்து; செறியா, செய்யாவென்னும் வாய்பாடு.

428. எழுந்து பரையோர் பாற்பொலிய விலங்கும் பெரிய முதல்வேதக்
கொழுந்து கருணாநிதியாய கோமா னடித்தா மரைமலர்க்கீழ்
விழுந்து குழைவுற் றுடனெழுந்து நேரே நின்று விடுபாடற்
றழுந்து துயர முழுதொழிப்பா னன்னப் படிவ விதிதுதிப்பான்.

### பிரமன் துதி

429. பரதத் துவநா மாபரா பராதத் துவம சிவாக்கியமுன்
கரவற் றொளிர்பல் வாக்கியங்கட் கிலக்கா யுள்ள காரணா
பரவப் படுநற் சுயம்பிரகா சாகை குவிப்பார் பவநாசா
அரவத் தொடைபூண் டொளிர்சாந்த ரூபா நினையஞ் சலிக்கின்றேன்.

430. ஆவா வெவன்சொ ரூபநா னறியா மையிற்கட் டுற்றுழன்றேன்
மேவா வெவன்சொ ரூபநான் கண்டு கட்டு வீடுற்றேன்
தாவா வவன்யா ரெனின்முக்கட் சம்பு வாய நீயுனக்கே
ஓவா திரவும் பகலும்யா னுறுவந் தனைகள் புரிகின்றேன்.

431. மூசா நின்ற தத்துவக்கூட் டங்க ளெவன்பான் முழுவதுமில்
பேசா நின்ற வைம்பூதங் களுக்கும் பெருங்கா ரணன்யாவன்
தேசார் சாம்ப மூர்த்தியெவ னீயே சிறிது நினைத்தெரிந்தேன்
ஈசா சுயமாம் பிரகாசத் திறைவா நின்னைத் தொழுகின்றேன்.

432. எந்த வடிவங் குறித்தவுட னிரியா வினையோ ரிரண்டுமறும்
முந்த வெவைக்குங் காரணமாய் முளைத்த வடிவ மெவ்வடிவம்
அந்த வடிவ நின்வடிவ மாமென் றுணர்ந்தே னையமிலை
சந்த முலையோர் பான்மணந்த சங்க ராநிற் றுதிக்கின்றேன்.

433. நலமார் சச்சி தாநந்த நம்பா பாவ னாதீதா
சலமார் கால சங்காரா காம தகனா விசுவேசா
புலமார் யோக ருள்ளொளியாய்ப் பொலியற் புதாசிற் பராபரமா
வலமார் பினாக மிடங்கொண்ட வரதா நின்னைத் துதிக்கின்றேன்.

---

428. இலங்கும் - விளங்குகிற. விடுபாடு அற்று - விடுதலை இல்லாமல். விதி - பிரமன்.

429. கரவு அற்று ஒளிர் - ஒளிவில்லாமல் விளங்குகிற. பவம் - பிறப்பு.

430. சொரூபம் நான் என்று பிரிக்க. கட்டுற்று - கட்டப்பட்டு. தாவா அவன் - கெடுதலற்ற அவன். ஓவாது - ஒழியாமல்.

431. மூசுதல் - மொய்த்தல், நெருங்குதல். இல் - இல்லையோ.

432. இரியா வினை ஓர் இரண்டு - நீங்காத நல்வினை தீவினை என்பன. சந்த முலை : அன்மொழி.

433. பாவனா அதீதன் - எண்ணுதற்கு அடங்காதவன். சலம் - கோபம். மா வலம் ஆர் பினாகம் என்க.

434. அத்தா போற்றி யடியார்த மல்லற் பிறவி முழுதொழிக்கும்
நித்தா போற்றி பெருங்கருணை நிமலா போற்றி யனுதியே
முத்தா போற்றி யெஞ்ஞான்று மூவா முதல்வா போற்றியருள்
உத்தா பனமின் றேங்கிவள ரொருவா போற்றி போற்றியே.

435. பதியே போற்றி யைம்பூதப் பரப்போ ருருளைத் தேரிரவி
மதியே யுயிரென் றேரெட்டும் வதிவாய் போற்றி யடியார்தம்
நிதியே போற்றி குறைவில்லா நிறைவே போற்றி யெவ்வுயிர்க்கும்
கதியே போற்றி விரும்புகளை கண்ணே போற்றி போற்றியே.

436. கோனே போற்றி நினைத்தாலுங் கூறி னாலு மிக்கினிக்கும்
தேனே போற்றி சுவையமுதத் தெளிவே போற்றி யருள்பொழியும்
வானே போற்றி மாமேரு வளைத்தாய் போற்றி கேதனமேல்
ஆனே யுயர்த்த பெருங்கருணை யானே போற்றி போற்றியே.

சிவபிரான் அருள்புரிதல்

437. என்று துதித்துப் பணிந்துபணிந் தெழுநான் முகனுக் கிரங்கியே
குன்று சிலையாக் குனித்தருளெங் கோமான் மலர்மே லாய்நினக்கு
நன்று வேண்டும் வரம்யாது நவிறி தருதும் புரிதுதியால்
ஒன்று பிழைதீர்ந் தனையென்று னுவந்தோ திமநான் முகனுரைப்பான்.

பிரமன் வேண்டுகோள்

438. ஏழை யடியே னின்னுண்மை யெய்யா தியற்று பிழையனைத்தும்
மாழை விழியோர் பாலுடையாய் பொறுத்தல் வேண்டு மதிமயக்காம்
பாழை யொழிந்துய்ந் திடல்வேண்டும் பரவுங் கருணை யெஞ்ஞான்றும்
கூழை யுறுமெ லென்மாட்டுக் கொளுத்தி யருளல் வேண்டுமென்றான்.

---

434. உத்தாபனம் - வெளிப்படுதல்.

435. இரவி - சூரியன். இறைவனின் அட்ட மூர்த்தங்கள் கூறப்பெற்றன. வதிதல் - தங்குதல். நிதி - செல்வம். களைகண் - பற்றுக்கோடு.

436. கேதனம் - கொடி. கொடிமேல் இடபத்தை உயர்த்தவன்.

437. ஒன்று பிழை - கூடிய பிழை.

438. எய்யாது - அறியாமல். மாழை - மாவடுவின் பிளப்பு. மாழை விழி உவமத்தொகை யன்மொழி. பாழ் - குற்றம். கூழையுறுதல் - குறைவுறுதல் கருணை கொளுத்தி யருளல் வேண்டும் என்றியைக்க.

### சிவபிரான் அருளல்

439. அன்ன வடிவத் தினனிவ்வா றறையக் கேட்ட மாதேவன்
பன்ன முடியாப் பிரமநீ யல்லே பகர்மா யனுமல்லன்
சொன்ன பலவும் பெறுவதற்குத் தூய தலமொன் றடைந்துதவம்
துன்ன முயறி யத்தலமுஞ் சொல்வா மென்று சொலும்பெருமான்.

### பல புண்ணிய தலங்கள்

440. செங்கை மழுமா னேந்தியநாந் திரா மகிழ்ச்சி யுறமேனிப்
பங்கை யுடையா ளொடுமமரப் பட்ட தாய மாதானம்
சங்கை தவிரா நந்தவன மென்று பலருஞ் சாற்றிடுவார்
கங்கை நதிசூழ் தரக்கிடந்த காசி யாமற் றதன்றென்பால்

441. கொம்மை முலையா ளுறத்தழுவக் குழைந்து நாமோர் மாவடியின்
மும்மை யுலகும் போற்றெடுப்ப முகிழ்க்கு மருளி னமர்தானம்
இம்மை மறுமை முதலாய வெவையுங் கொடுத்துப் பவப்பகையாம்
வெம்மை தவிர்க்கும் புனற்கம்பை மேய காஞ்சி யதன்றென்பால்

442. எல்லா வுலகுங் குதுகலிப்ப விமய மடந்தை விழிநோக்க
நல்லா தரவிற் பொற்பொதுவி னடநா மியற்று மொருதானம்
கல்லா முருட ருற்ருலுங் கற்ரு ரினுமேம் படவுயர்த்தும்
செல்லார் மதில்சூழ்ந் துறப்பொலியுந் தில்லை வனமற் றதன்றென்பால்

443. மலையான் புதல்வி மயூரவுரு மருவி யருச்சித் திடச்சுவணக்
கலையான் முதலோர்க் கருள்வழங்கிக் கவின நாம்வை கிடுந்தானம்
துலையா னதில்வா ளிரவிசெலு மதியி னுலகு தொக்காடும்
அலையான் மலிகா விரிசூழ்மா யூர மன்ன தலத்தென்பால்

---

439. சொன்ன பலவும்; முன் செய்யுளில் பிரமன் வேண்டிக் கொண்ட பலவற்றையும். முயறி - முயலுதி. அடுத்த செய்யுள் முதல் இறைவர் அம்பர்த் தலத்தின் இடத்தைக் குறிக்கும் வகை கூறப்படும்.

440. மாதானம் - பேரிடம். சங்கை - ஐயம். வார் கங்கை நதி என்க. சாற்றிடு காசி, கங்கை நதி சூழ்தரக் கிடந்த காசி எனத் தனித்தனியே இயைக்க. ஆனந்தவனம் - காசிக்குரிய தொரு பெயர்.

441. இங்குக் காஞ்சியின் சிறப்பினைக் கூறினர். கம்பை, காஞ்சியிலுள்ள நதி.

442. இச் செய்யுளில் சிதம்பரத்தின் பெருமை கூறப்பெறுகிறது. முருடர் - மூடர். செல் - மேகம். தில்லைவனம் - சிதம்பரம்.

443. மயூரம் - மயில். மாயூர வரலாறு கூறப்படுகிறது. சுவணக்கலை - பீதாம்பரம். கவின - அழகுண்டாக. துலையானதில் - துலா ராசியில்; இரவி செலும் மதியின் - சூரியன் புகும் ஐப்பசி மாதத்தில். உலகு தொக்கு ஆடும் - உலகத்திலுள்ளார் வந்து கூடி நீராடுதற்குரிய. மாயூரத்தில் நடைபெறும் துலா காவேரி முழுக்குச் சிறப்பிக்கப் பெற்றது.

## புன்னுகவனப் பெருமை

444. என்று முளதோர் யோசனேயி லிரும்புன் ணுக வனமெனுமோர்
நன்று கெழுமு மொருதான நாமு மதன்சீர் புகலரிதால்
கன்று பிறவிப் பிணியாதி யனேத்துங் களேயுங் கருதியவை
ஒன்றுந் தவரு தினிதுதவு மொழியா வளத்த தெஞ்ஞான்றும்.

445. எந்தத் தவமாங் கியற்றிடினு மினிய வாய பலங்கொடுக்கும்
அந்தத் தலமே சித்தியெலா மமையக் கொடுக்கு மயக்கமெலாம்
முந்தக் கெடுக்கு மறமாதி முகிழ்க்கு நான்கு மெளிதுதவும்
பந்தத் தொடர்தீர்த் தெவ்வுயிர்க்கு மின்பம் பயக்கு மாலதுவே.

446. அன்ன தலத்தை நீயின்னே யடைந்து தவஞ்செய் திடுவாயேல்
என்ன வரமு மாவயின்யா மெய்தி யினிது தந்தருள்வோம்
பொன்னந் திதலே முலேவாணி கொழுந போதி யென்றுரைத்துப்
பின்ன மில்லா வொருமுதல்வன் பிறங்கு கயிலே வரையுற்ருன்.

## பிரமன் புன்னுகவனஞ் செல்லுதல்

447. கற்றைச் சடையான் செந்திருவாய் மலர்ந்த மொழியே கடைப்பிடியா
இற்றைத் தினமுய்ந் தனமாலென் றெண்ணி யொருபுன் ணுகவனப்
பற்றைப் பெரிதுற் றவணுகிப் படர்வான் பரந்து மலர்ச்சோலேச்
சுற்றைப் புனேயுந் திருக்காசித் தலநதை யடைந்தான் றுயரறுவான்.

448. பொங்கு மணிமுத் தலேயெறியும் புனித மந்தா கினிதீர்த்தம்
முங்கு விதியின் முழுகியெழூஉ முதல்வி விசாலக் கண்ணியொடும்
தங்கு மகில நாயகன்ருள் சார்ந்து பணிந்து களிப்புற்றே
எங்கு நிகழ்சீ ரவாசியிடத் துள்ள தலமெ லாம்பணிந்து.

449. தேயம் பரவுந் திருக்காஞ்சித் தலத்தை யடைந்து திகழ்கம்பைத்
தோயந் தகவிற் படிந்தாடித் தூய காமக் கண்ணியொடு
நேயம் பரவ மாவடிவாழ் நிமலப் பெருமான் பதம்போற்றி
மாயங் கழிய வவணின்று மற்றுந் தொழுது செல்கின்ருன்.

---

444. புன்னுகம் - புன்னே. புன்னுகவனம், செய்யுள் 354 பார்க்க. நாமும் அதன் சீர் புகலரிதால் : செய்யுள் 342 பார்க்க.

445. அறமாதி முகிழ்க்கும் நான்கும் : அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும்.

446. ஆவயின் - அங்கு. திதலே - தேமல். வாணி - கலேமகள்.

447. பற்று - ஆசை. மலர்ச் சோலேச் சுற்றைப் புனேயும் காசி - பூஞ்சோலே சூழ்ந்த காசி.

448. மணியையும் முத்தையும் என்க. மந்தாகினி - கங்கை. முங்குதல் - முழுகுதல். விசாலக் கண்ணி - விசாலாக்ஷி. அகில நாயகன் - விசுவநாதர்,

449. தோயம் - தீர்த்தம். காமக்கண்ணி - காமாக்ஷி. நிமலம் - நின்மலம். சீர்அவாசியிடத்து - சிறப்புடைய தெனுட்டிலுள்ள; அவாசி - தெற்கு.

450. முந்து தில்லை வனம்புகுந்து முகின்மேற் பிறைபோன் மரையிலைமேல்
நந்து மருவுஞ் சிவகங்கை நலமார் தீர்த்தம் படிந்தெழுந்து
சந்து முலையாள் சிவகாமித் தாய்கண் களிக்கப் பரம்பரனு
வந்து புரியு நடம்போற்றி மற்றுந் தென்பா லியங்குவான்.

451. கோலம் பொலியு மாயூரங் குலவப் புகுந்து காவிரியில்
சீலம் பொலியும் புனலாடித் தேவர் முனிவர் தொழுதேத்த
ஏலம் பொலியுங் குழலஞ்ச லம்மை யிடங்கொண் டினிதிருந்த
ஆலம் பொலியுங் களத்தான்பொன் னடிகள் போற்றிப் பணிந்தெழுந்தான்.

452. குறித்த தான மணித்தாகக் குறுகிற் றென்று கொண்டதுயர்
பறித்த துணிபின் விரைந்தெழுந்து பறந்து பெருவான் வழிச்சென்றே
எறித்த கதிரோன் றேர்நுழைதற் கிடங்கொ டாத செறிவுடைத்தாய்ச்
செறித்த பொறிமா தவர்செறியுஞ் செழும்புன் னாக வனமடைந்தான்.

## வேறு

453. பகைதவிர் கரும்புன் னாகம் பொன்னிறம் பயிலா நிற்கும்
முகைமலர்க் கடுக்கை யின்ன வாதத்தான் மோதுந் தோற்றம்
தகைகிளர் நெடிய மாலுந் தானுமோர் வாதங் கொண்டு
மிகையுற மோதி நின்ற விதம்பொரூஉ மென்று கண்டான்.

454. இசையிரு தருவி னுக்கு மெதிரிணர் மாத விப்பாற்
பசைநற வுண்ட வண்ட ரினிதுபண் பாடுந் தோற்றம்
வசைதவிர் வேத மாதி மாயனுந் தானுங் கேட்ப
நசைகெட வுண்மை சொற்ற நலம்பொரூஉ மென்று ணர்ந்தான்.

455. சொற்றவத் தருக்கட் கோர்பாற் றுணர்பல வெடுத்து மேன்மேல்
பொற்றபொன் மலர்கள் பூத்து முருக்கொன்று பொலியுந் தோற்றம்
செற்றமா லொடுத னக்குஞ் செறிசெருக் கொருங்கொ ழிப்பான்
முற்றநே ரெழுந்த சோதி பொருமென முன்னி னனே.

---

450. நந்து - சங்கு. சந்து - சந்தனம். பரம்பரன் உவந்து என்க.

451. ஏலம் - மயிர்ச் சாந்து. அஞ்சலம்மை - அபயாம்பாள். ஆலம் - விடம். களத்தான் - கழுத்தையுடைய சிவபிரான்.

452. தானம் - இடம். செறித்த பொறி - அடக்கிய ஐம்பொறிகள். செறியும் - நெருங்கிய.

453. முகை மலர் : உம்மைத் தொகை. கடுக்கை - கொன்றை. வாதம் - காற்று, விவாதம். இது முதல் நான்கு கவிகள் கதை நிகழ்ச்சிகளையே உவமையாகக் காட்டும் சிறப்புப் பெற்றன.

454. இசை - ஒன்றையொன்று சார்ந்துள்ள. இரு தரு - புன்னையும் கொன்றையும். இணர் – பூங்கொத்துக்களையுடைய. மாதவி - குருக்கத்தி. நறவு - தேன்.

455. துணர் - கொத்து. முருக்கு - முண்முருங்கை. பொரும் - பொருவும்; ஒக்கும். முன்னுதல் - கருதுதல். (வி - ம்.) துணர் பல விடுத்து.

456. மலர்பல செறிமு ருக்கு வானளாய் நிற்ப நாப்பண்
அலர்செறி பிடவொன் றம்ம வடியினின் றெழுந்து தோற்றல்
பலர்புகழ் சோதி நாப்பட் பதுமமெய் நிறையக் கொண்ட
உலர்தலில் பெருமான் மேவ லொத்ததென் றுள்ளங் கொண்டான்.

457. அம்மலர் முருக்கின் கீழாற் குடாவடி யடைந்து மேவச்
செம்மலர் முடிக்கு மேலோர் கழுகொன் று சிவணுங் காட்சி
மும்மல ரணுகாச் சோதி யடியொடு முடியுந் தேரும்
நம்மலர் விலங்கும் புள்ளு மாமென நயந்தா னன்றே.

458. ஒருவிட பத்தின் கீழாற் றேத்தடை யொன்று மேவ
மருமலர் தளிரா னன்ன விடபமேல் வயங்குந் தோற்றம்
கருகிருள் பருகுஞ் செய்ய கதிரவ னூரா நிற்கும்
ஒருபெருந் தேரை யொத்த தென்றுளத் துவகை பூத்தான்.

459. கண்டகண் ணிருளப் பூத்த காசையாங் கொன்று நிற்ப
அண்டவெண் மதிய மோர்பாற் கிளையடைந் தமையுங் காட்சி
கொண்டவெண் டலையி னேடு குணங்கெழு வடுகப் புத்தேள்
விண்டல மதிக்க நின்ற வியப்பிதா மெனவி யந்தான்.

460. பராரையொன் றுக மேலாற் பணைத்தெழு கிளைமூன் றுக
மராமர மொன்று நிற்குந் தோற்றம்வா னுய்ய நின்ற
புராதன வேக பாத வுருத்திரர் போன்ற தென்று
தராதல முழுது மீன்ற தாதையுள் ளுவந்தா னன்றே.

461. பலபல மாவும் புள்ளு மாவயிற் பயிற னோக்கித்
தலமிதன் விசேடந் தேர்ந்து தடையறத் தவம்பு ரிந்து
நலமுற லுளங்கு றித்து வந்தன நம்போ லென்று
நிலமுத லெவையுந் தந்தோ னினைந்திறும் பூதுற் றுனே.

---

456. அலர் - மலர். செறிதல் - நிறைதல். பிடவு - ஒருவகை மரம். பதுமம் - பஸ்மம் என்றதன் திரிபு; திருநீறு.

457. குடாவடி - காடி. சிவணுதல் - பொருந்துதல், ஓர் கழுகு - இரை நாடி வட்டமிடும் கழுகு. மும்மலர் - மூன்று மலங்களையுடைய சகலர். நம் மலர் - நம்மின் மலர்ந்த.

458. விடபம் - மரக் கொம்பு. தேத்தடை - தேனடை. அடியில் தேனடையும் மேலே மலருந்தளிரும் பொருந்தியதாய் விளங்கும் கொம்பின் தோற்றம், சூரியனது ஒற்றைச் சக்கரத் தேரையொக்கும் என்பது இங்கே கூறப்பட்டது.

459. காசை - காயாமரம். அண்டம் - வானம். வடுகப் புத்தேள் - பைரவக் கடவுள். இவர் பிரமனின் தலையைக் கொய்து அதன் கபாலத்துடன் நின்றவர்! அம்பர் நகரில் இவர் சட்டைநாதர் என்ற பெயருடன் விளங்குகின்றார்.

460. பராரை - பருத்த அடிமரம். ஏகபாதருத்திரர் என்பவர் சிவபிரான் மூர்த்திகளுள் ஒரு மூர்த்தியாவார். தராதலம் - பூமி. தாதை - இங்குப் பிரமன்.

461. ஆவயின் - அங்கு. பயிறல் - பயிலுதல். இறும்பூது - அதிசயம்.

462. மருவிய கரும்புன் ஞுக வனத்ததி சயமிவ் வாறு
பொருவரும் வியப்பிற் றேர்ந்து தவம்புரிந் தாங்கு வைகும்
திருமுனி வரையுங் கண்டு செய்தவம் புரிய வெல்லாம்
தருதிறற் பிரம னம்ம சங்கற்பஞ் செய்து கொண்டான்.

### பிரமன் தவம் புரிதல்

463. வெள்ளிய வரையின் மேலோ ரிலிங்கமாய் விடைமுன் றேன்ற
வள்ளிய வருள்சால் வம்பு வனமலர்க் குழலா ளோர்பால்
நள்ளிய கணேசர் கந்தர் நந்தியா தியருஞ் சூழத்
தெள்ளிய சோமாக் கந்தர் சேகர மதித ரித்தார்.

464. தண்ணிய நடன பாதர் தண்டீச ரீருயுள்ள
புண்ணியர் தங்களோடும் புராதனர் வந்து காட்சி
எண்ணிய கொடுக்குங் கால மெவ்வள வதுவ ரைக்கும்
பண்ணிய முயல்வே னென்று பதுமன்மா தவஞ்செய் தானே.

465. மழைவெயில் பனிமி குந்து வருத்தினும் வருந்தா ஞகிக்
குழைமனத் தமலன் பாதங் கூடுறப் பொருத்தி யுண்டல்
விழைவொழித் தசலம் போல மேவிமா தவம்பு ரிந்தான்
தழைசுர வருட மோர்பா ஞயிரந் தாங்க ழிந்த.

### பிரமன் தவத்தால் நிகழ்ந்தவை

466. சிறையெகி னுருவ மேய திருமல ரவனிவ் வாறு
குறையறு தவஞ்செய் காலைக் கொழுந்தவக் கனல்வி ரைந்து
முறையெழுந் தண்ட கூட முட்டியத் திறனுந் தூமம்
நிறைதர வெங்கு மாகி நிமிர்ந்தது வருத்திற் றன்றே.

### திருமால் முதலியோர் கயிலைக்குச் செல்லல்

467. மலரவன் முயன்று செய்யு மாதவத் தழல்கா றூமம்
உலர்தலின் ருகி யெங்கு முடற்றலா லச்சம் பூண்டே
அலர்துழாய்ப் படலை மார்பத் தண்ணலிந் திரன்முன் ஞய
பலரொடு மடைந்தா னெங்கள் பரம்பரன் கயிலைக் குன்றம்.

---

462. சங்கற்பம்- ஒன்றனைச் செய்யத் தொடங்கும்போது, மந்திரத்தோடு உறுதி பூணும் சடங்கு.

463-4. இரு செய்யுட்களும் ஒரு தொடர். சேகரமதி தரித்தார் - சந்திர சேகரர். நடன பாதர் - நடராஜர். புராதனர் - இறைவர். பண்ணிய - செயவதற்கு.

465. உண்டல் விழைவு - உணவு கொள்ளும் ஆசை. அசலம்- மலை, சுரவருடம் - தேவ வருஷம். ஓர்பாஞயிரம் - ஒரு பதிஞயிரம்.

466. எகின் - அன்னப் பறவை தூமம் - புகை.

467. படலை - படலைமாலை - பச்சிலையோடு மலர்கள் விரவித் தொடுத்த மாலை,

468. மகபதி யாதி யாய வானவர் கணங்க ளோடும்
பகவனுர் கயிலை புக்க பைந்துழாய்ப் படலை மார்பன்
சகமெலாம் புகழு நந்தி தாண்மலர் பணிந்தெ ழுந்து
ககனநா டடைந்த துன்பங் கழறுதற் குற்ருே மென்ருன்.

469. என்றலு நந்திப் புத்தேள் யாருமீங் கிருக்க வென்று
குன்றவிற் பெருமான் முன்னங் குறுகுபு பணிந்தெ ழுந்து
கன்றலின் மாய ஞதிக் கடவுள ரடைந்தா ரென்ருன்
இன்றவர் வருக வென்ரு வெம்பிரான் வாய்ம லர்ந்தான்.

470. நலமலி கருணை பெற்று நஞ்சயி லாதி மீண்டு
குலமலி வானோர் தம்மை வருகெனக் கூவ லோடும்
பொலமலி யாடை யானும் புரந்தர ஞதி யோரும்
வலமலி திருமுன் சென்று வணங்கின ரெழுந்து நின்ருர்.

திருமால் சிவபெருமானிடம் கூறியது

471. நிற்பவர் தம்முண் முந்த நெடியமால் வதன நோக்கிக்
கற்பக நாட ரோடும் வந்ததென் கழறு கென்ன
விற்பயின் மணிசான் மார்பன் மீளவும் பணிந்தெ ழுந்து
சிற்பர கேட்டி யென்று விண்ணப்பஞ் செய்ய லுற்ருன்.

472. மலரவ னன்ன ரூப மரீஇவள மலிபுன் ஞகை
அலர்வன மமர்ந்து செய்யு மருந்தவக் கனலி ஞய
உலர்தலி றூமம் பொங்கி யுலகெலா ம் வருத்தா நிற்கும்
பலர்புகழ் கருணை யானே பாற்றிட வேண்டு மென்ருன்.

சிவபிரான் புன்னுகவனம் வருதல்

473. என்றலுங் கருணை பொங்கி மலரவன் கருத்து மெண்ணி
வென்றவெண் கயிலா யத்தோர் கூற்ரெடும் விடையி னேடும்
நன்றமை யிலிங்க மாகி நாயக முதலோர் சூழக்
கன்றலி லொருபுன் ஞக வனமுற்ருன் கருணை மூர்த்தி.

---

468. மகபதி - இந்திரன். கணம் - கூட்டம். ககனநாடு - வானநாடு.

469. குன்றம் வில் பெருமான் - மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான்.

470. சயிலாதி - சிலாதனுக்குப் புத்திரஞன நந்தி. பொலம் மலி ஆடையான் - பொன்னுடை (பீதாம்பரம்) தரித்த திருமால்.

471. வில் - ஒளி. மணி; இங்குக் கௌத்துப மணி.

472. உலர்தல் இல் தூமம் - குறைதலில்லாத புகை. பாற்றிடல் - நீக்கல்.

473. வென்ற - பிற மலைகளையெல்லாம் தன் பெருமையால் வெற்றி கொண்ட. ஓர்கூறு - ஒரு பகுதி. நாயகம் முதலோர் - தலைமையும் முதன்மையுமுடைய பரிவாரத்தார்.

474. கடவுளர் பலரு மொய்ப்ப நந்திமுற் கணங்கள் சூழக்
கடலுடைந் தென்ன வெல்லா வியங்களுங் கைமிக் கார்ப்பக்
கடமுலை யரம்பை மாதர் காமரு நடனஞ் செய்யக்
கடகரி யுரியான் வந்த தோர்ந்தனன் கண்வி ழித்தே.

### பிரமனின் செயல்

475. எழுந்தன னுவகை பொங்க நோக்கின னிமைக்குந் திங்கள்
கொழுந்தணி சடையான் வந்தான் குறித்தவா றருள்வான் வந்தான்
அழுந்தல்செய் துயர மெல்லா மடியறக் காய்வான் வந்தான்
செழுந்தனி முதல்வன் வந்தான் சிவன்வந்தான் வந்தா னென்று

476. சூழ்ந்தனன் பலகா லாடித் துள்ளினன் படிமேற் றோய
வீழ்ந்தன னெழுந்து நின்று வினையெலா மொருங்கு மாயப்
போழ்ந்தனன் புகரின் றுக வாழ்ந்தனன் புன்மை யேனென்
றாழ்ந்தனன் பேரானந்த வாரியு ளலர்மே லண்ணல்.

477. எண்ணிய வாறே காட்சி யெம்பிரா னருளிச் செய்தான்
புண்ணிய மலியும் பூசை விதிப்படி புரிவ தற்கு
நண்ணிய கரமுன் னுய கருவிநா னடையே னேனும்
அண்ணிய வியன்ற மட்டு மாற்றுவே னெனத்து ணிந்து

478. பரம்பர னெதிர்வ லப்பாற் பைம்புனற் பொய்கை யொன்று
நிரம்புறப் படைத்துக் கங்கை முதனெடுந் தீர்த்த மெல்லாம்
வரம்பற வதிற்று பித்து வளங்கெழப் படிந்தெ ழுந்து
திரம்படு மன்பு வாய்ப்பச் செழுமல ராதி கொண்டு

479. அற்புத விலிங்க பூசை யாற்றியோர் பாக மேய
சிற்பரை தனையும் பூசை செய்துநா யகர்ந டேசர்
பொற்பமர் கணேசர் கந்தர் போற்றுதண் டீச ரீருச்
சொற்பயில் பலர்க்கும் பூசை யாற்றுபு தொழுதெ ழுந்து

---

474. இயங்கள் - வாத்தியங்கள். கை மிக்கு - அளவு கடந்து. கட கரி - மத யானை.

476. புகர் - குற்றம். அலர் மேல் அண்ணல் - மலரவன். இதுவும் இதன் பின் வரும் மூன்று செய்யுட்களும் தொடர்ந்து 480 ஆம் செய்யுளி லுள்ள ‘ துதிப்பான்’ என்பதனோடு முடியும்.

477. கரம் - கை. அண்ணிய – கிட்டியவற்றை.

478. பிரமன் அன்னமாம் பொய்கையைப் படைத்தது கூறப்பெற்றது.

479. சிற்பரை - தேவி,

480. மீளவு மிலிங்க முன்பு மேவுபு பணிந்தெ ழுந்து
நீளவு நினைந்து நெஞ்ச நெக்குநெக் குருகா நிற்ப
வாளமர் கண்ணீர் பாய வடிவத்து மயிர்சி லிர்ப்பத்
தாளலர் கமலத் தோனுத் தழுதழுத் திடத்து திப்பான்.

பிரமன் துதி

481. மறைமுழு துரைத்தாய் போற்றி மறைமுடி யமர்வாய் போற்றி
மறையடிச் சிலம்பாய் போற்றி மறைவயப் பரியாய் போற்றி
மறையடி நிலையாய் போற்றி மறைசெய்கோ வணத்தாய் போற்றி
மறையுறப் புகழ்வாய் போற்றி மறைமுழு துணராய் போற்றி.

482. எங்கணுந் தலையாய் போற்றி யெங்கணுங் கண்ணுய் போற்றி
எங்கணும் வாயாய் போற்றி யெங்கணுஞ் செவியாய் போற்றி
எங்கணும் கையாய் போற்றி யெங்கணுங் காலாய் போற்றி
எங்கணும் வடிவாய் போற்றி யெங்கணு மானுய் போற்றி.

483. விழியமை பால போற்றி வெந்நுனைச் சூல போற்றி
அழிதலில் சீல போற்றி யளப்பில்வி சால போற்றி
பழிதபு கோல போற்றி பரிந்தம ரால போற்றி
மொழியனு கூல போற்றி முரணமன் கால போற்றி.

484. திரிபுரஞ் செற்றுய் போற்றி தெளிமறை சொற்றுய் போற்றி
அரிமல மற்றுய் போற்றி யன்பரு ளுற்றுய் போற்றி
கரியதள் பெற்றுய் போற்றி ககுவமோர் சுற்றுய் போற்றி
புரியருள் வற்றுய் போற்றி பூரண நற்றுய் போற்றி.

485. ஆலமார் கண்ட போற்றி யவிர்பிறைத் துண்ட போற்றி
சீலமார் தண்ட போற்றி செவியமர் வண்ட போற்றி
கோலமா ரண்ட போற்றி குன்றக்கோ தண்ட போற்றி
காலமார் சண்ட போற்றி கனிபவர் தொண்ட போற்றி.

---

480. வாள் - ஒளி. வடிவம் - உடல். கமலத்தோன் நா தழுதழுத்திட எனப் பிரிக்க.

481. வயம் பரி - வெற்றியுடைய குதிரை. அடி நிலை - பாதக் குறடு. உணராய் - உணரப் படாதாய்.

483. பாலம் - நெற்றி. பரிந்து அமர் ஆல - கல்லாலின் அடியில் விரும்பி அமர்ந்திருப்பவனே! நமன் காலன் - நமனுக்குக் காலன்; காலகாலன் என்றபடி.

484. அரி மலம் - அரிக்கும் மலம்; அரியப்படும் மலமும் ஆம். கரி அதள் - யானைத் தோல், ககுவம் - திசை. வற்றுய் - வற்றுதவனே.

485. கண்டன் - கழுத்தையுடையவன். அவிர் - விளங்குகின்ற. தண்டன் - தண்டனையை அளிக்கின்றவன். வண்டு - சங்கு: வண்ட - சங்காலான குண்டலங் தளை உடையவனே!. கோதண்டம் - வில். காலம் ஆர் சண்டன் - பிரளயகாலருத்திரன்

486. எண்ணிய வெண்ணி யாங்கே முடித்தரு ளிறைவ போற்றி
கண்ணிய பகையொன் றில்லாக் கற்பகத் தருவே போற்றி
புண்ணிய மலர்ப்பூங் கொம்பர் வதியொரு புறத்தாய் போற்றி
பண்ணிய தவத்தி னோர்க்கே பயன்படும் பகவ போற்றி.

சிவபிரான் அருளல்

487. என்றுள முருகப் பல்ல துதித் தெதிர் நிற்கின் றானுக்
கொன்றுநம் பெருமான் வேண்டும் வரமெவ னுரைத்தி யென்னத்
தொன்றுசெய் பிழைய னைத்துந் தொலைந்ததென் றுவகை யெய்தி
நன்றுவந் தனையி யற்றி நான்முக னிவைவேண் டுற்றான்.

வேறு

நான்முகன் வேண்டிய வரங்கள்

488. மாறுத தீவினையேன் புரிந்தபிழை
யத்தனையு மறத்தல் வேண்டும்
தேறுத காரணத்தான் மறந்தும்யான்
பிரமமெனச் செலாமை வேண்டும்
பாறுத பெரும்பத்தி நின்னடிக்கே
யெந்நாளும் பண்ணல் வேண்டும்
சீறுத நின்னருளா லிவ்வுருவி
னின்றும்யான் றீர்தல் வேண்டும்.

489. புன்மையேன் புரிபொய்கை யன்னமாம்
பொய்கையெனப் புகலு நாமம்
நன்மைசார்ந் ததிற்படிந்த தெவ்வுயிரா
யினுமியம னுமை நீங்கி
இன்மைசா ராதிகத்து வாழ்ந்துபர
போகங்க ளெல்லா மாழ்ந்து
வன்மைசால் சிவலோக மடைந்துசிவா
னந்தமுற்று வாழ்தல் வேண்டும்.

---

486. மலர்ப்பூங் கொம்பர் - தேவி.

487. வந்தனை இயற்றி - வணங்கி.

488. பாறுத - சிதறுத. இவ்வுரு என்றது, அன்னத்தின் உருவை. தீர்தல் - விடுபடுதல்.

489. இயமன் நாமம் - இயம பயம். இன்மை சாராது இகத்து வாழ்ந்து என்று பிரிக்க.

490. மன்னியவிக் கயிலாய வரையிஞெடு
நந்திமுதல் வாஞே ராய
மின்னியபல் கணத்தொடுமிப் புன்ஞக
வனத்தென்று மேவல் வேண்டும்
துன்னியவிவ் வரைநாமங் கயிலாய
கிரியென்று துதித்துப் போற்றல்
முன்னியவென் பொருட்டுவர லாற்பிரம
கிரியென்று மொழிதல் வேண்டும்.

491. இந்தநகர் யான்செயலாற் பிரமபுரி
யெனும்பெயரொன் றெய்தல் வேண்டும்
சந்தநினக் கும்பிரம புரீசனெனும்
பெயரெவருஞ் சாற்றல் வேண்டும்
சுந்தரநின் பாகத்தாள் கந்தவெழிற்
பூங்கதுப்பிற் ருேன்ற லாலே
அந்தமிலா வம்புவனப் பூங்குழலா
ளெனும்பெயர்பூண் டமர்தல் வேண்டும்.

492. அன்னமாம் பொய்கைநன்னீ ராடிநினைத்
தருச்சித்திங் கமரா நிற்பார்
என்னரா யினுமவரே யிம்மையிற்பல்
போகமுநன் கெய்தி வாழ்ந்து
தன்னமா யினுமிருள்சா ராப்பரபோ
கமுங்களிப்புத் ததையத் துய்த்துப்
பின்னமே வாதொருநீ யமர்சிவலோ
கம்புகுந்து பிறங்கல் வேண்டும்.

வேறு

493. இந்த நல்வரம் யாவுநன் கீகெனச்
சந்த மாமல ரோன்றலை தாழ்த்தலும்
முந்த ஞய முதல்வன் மகிழ்ச்சிகூர்ந்
தந்த ணுவிது கேட்கென் றருளுவான்.

---

491. கந்தம் எழில் பூ கதுப்பு என்பவை வம்பு வனம் பூ குழல் என்பவற்றின் பரியாயப் பெயர்கள். வம்பு - மணம். வனம் – அழகு. கதுப்பு - கூந்தல்.

492, என்னர் ஆயினும் - எத்தகையவராஞலும். தன்னம் - சிறுமை. ததைதல் - நெருங்குதல். பின்னம் மேவாது எனப் பிரிக்க. பிறங்கல் - விளங்கல்.

493. அந்தணன் என்றது பிரமனை.

### சிவபிரான் அருளுதல்

494. ஓதி மப்படி வத்தை யொருவிநீ
ஆதி யிற்படி வத்தை யடைகுதி
நீதி பெற்றமற் றியாவு நினைத்தவா
றேதி கைப்பற வெய்துதி யின்னமும்

495. கும்ப மாத மகத்திற் குலவநாம்
நம்பக் காட்சி கொடுத்தரு ணன்மையால்
இம்ப ரித்தின மெய்திப் பணிபவர்
உம்ப ராவ குறவிழிந் தார்களும்.

### பிரமன் முன்னை உருப் பெற்றமை

496. என்று கூறி யமர்ந்தா னிறையவன்
அன்று மேவிய வன்ன வடிவொரீஇத்
தொன்று மேவுரு வம்பெற்றுத் தோன்றினன்
குன்று நேர்முலை வாணி கொழுநனே.

497. நலம்வி ராயபுன் னுக வனமெனும்
தலம்வி ராய நகரஞ் சமைத்தனன்
குலம்வி ராய குடிகளு மேற்றினன்
பொலம்வி ராய மரைமலர்ப் புங்கவன்.

### பிரமன் தனதிருப்பிடம் சேர்தல்

498. பின்னும் பெட்பிற் பிரமபு ரீசரை
மன்னு மாங்கு வதிந்தனன் பூசித்தான்
பன்னுந் தன்னகர் செல்லப் படர்ந்தனன்
கொன்னு மாரருள் பெற்றுக் குறுகினன்.

499. சென்று வாணி முதலியர் சேர்தரப்
பின்று ருத பிரமபு ரீசர்தாள்
ஒன்று முள்ளத்த னுகி யுவப்புரு
என்றுஞ் செய்தொழி லாற்றி யிருந்தனன்.

---

494. ஓதிமப் படிவம் - அன்ன உருவம். ஒருவுதல் - நீங்குதல். ஆதியிற் படிவம் - முன்வடிவம். நினைத்தவாறே திகைப்பற என்க.

495. சிவபிரான் பிரமனுக்குக் காட்சியருளிய நாள் குறிக்கப்பெற்றது. கும்ப மாதம் - மாசி மாதம்- இங்குக் குறிக்கப்பெற்ற நாள் மாசி மகம். உற - மிகவும்.

496. வாணி - ஸரஸ்வதி.

497. மரைமலர் - தாமரைமலர். பிரமன் நகர் சமைத்ததும் குடிகளை ஏற்றியதும் இங்குக் கூறப்பெற்றன.

498. பெட்பு – அன்பு. வதிந்தனன் வசித்தான்; முற்றெச்சம். தன்நகர் சத்தியலோகத்திலுள்ளது. கொன் - பெருமை.

500. பெற்ற மூரும் பிரமபு ரீசரைக்
கற்ற மாயவன் கைதொழு தேத்துபு
வெற்ற மேய வருளை வியந்துபோய்ப்
பொற்ற வைகுந்தம் புக்குற வாழ்ந்தனன்.

501. பந்த மோவும் பிரமபு ரிப்பரன்
சந்த மார்கழற் றூழ்ந்து வணங்கியே
அந்த வாசவ ளுதியர் யாவரும்
தந்த மாநகர் சார்ந்துற வாழ்ந்தனர்.

502. நாடு மேன்மைப்புன் ஞக வனமருட்
பீடு சாலும் பிரம புரியெனப்
பாடு மேன்மை பகர்ந்தன மம்பரென்
றூடு காரண மும்மறை வாமரோ.

பிரமபுரிப் படலம் முற்றியது.

(இப் படலத்துத் திருவிருத்தம்–80.)

---

500. பெற்றம் - எருது. மாயவன் - திருமால். வெற்றம் - வெற்றி. பொற்ற - பொன்னுலான.

501. சந்தம் - அழகு. வாசவன் - இந்திரன். தம் தம் மாநகர்.

502. அருள் பீடு சாலும் - அருட்பெருமை நிறைந்த. ஆடுதல் - சொல்லுதல். அறைதல் – சொல்லுதல்.

# 9. அம்பர்ப் படலம்.

துருவாசர் பிரமபுரி வருதல்

503. கருந்தடங்கண் மகளுவிற் கடவுளரி முதலியர்க்கா
மருந்தமிடற் றடக்கியகோ மானடிக்கே யன்புடையான்
அருந்தவத்தர் சிகாமணியா யைம்பொறியுஞ் செகுத்தியங்கும்
பெருந்தகைய னிணையில்லான் துருவாச னெனும்பெயரான்.

504. அந்தமுனி வரன்பிரம னருந்தவஞ்செய் தன்னவுருப்
பந்தமொழித் துய்ந்ததலங் கண்டுபணி வதுகுறித்து
நந்தவெழும் விருப்பினனு யாகாய நடைவைகொடு
சந்தமுற வருகின்ருன் றனித்துவரு மக்காலே.

மதலோலை துருவாசரிடம் வந்து வேண்டியது

505. கருமுகிலும் விளர்த்திடச்செய் கருங்குழலாள் வார்கிழித்துப்
பொருமுபெருங் கனதனத்தாள் புடைபரந்த கடிதடத்தாள்
பெருமுனிவர் தவங்குலைக்கும் பிறழ்நெடுங்கண் ணுடையவின்
வருமுகைநேர் மூரலாண் மதலோலை யெனும்பெயராள்.

506. கடியதொழி லசுரர்குலத் துற்பவித்துங் காமருசீர்
வடிவமையு மொருதெய்வ மடமகளே யெனப்பொலிவாள்
முடிவில்வலி மகப்பெறுவான் முன்னியசிந் தையளாகிக்
கொடிநுடங்க லெனமருங்கு னுடங்கவெதிர் குறுகினுள்.

507. தனிமுனிவ னெதிரடைந்து தாமரைக்கை குவித்திறைஞ்சி
வனிதையொரு நானின்று மகப்பெறுகை யதுகருதிக்
கனிவிருப்பி னிணையடைந்தேன் காதலினென் முலைகலந்து
துனியின்மகத் தரல்வேண்டுந் துருவாச வெனச்சொன்னுள்.

---

503. கரு தட கண் மகள் நாவின் கடவுள்; கலைமகளைத் தன் நாவிற் கொண்ட பிரமதேவன். அரி - திருமால்- மருந்தம் - விடம். மருந்தம் மிடறு அடக்கிய கோமான் - சிவபிரான்.

504. உய்தல் - கடைத்தேறுதல், நந்த - மிக, நடவை - வழி

505. விளர்த்தல் - வெளுத்தல். தளவு - முல்லை, மூரலாள் - பற்களை உடையவள்.

506. முடிவு இல் வலி - எல்லையற்ற வலிமையுடைய. முன்னிய - கருதிய. மருங்குல் - இடை.

507. 'ஒரு நான்' என்பது முதல் 'துருவாச' என்பது முடிய மதலோலையின் கூற்று. கனி விருப்பு – முதிர்ந்த ஆசை.

### துருவாசர் கூறியது

508. நாணிலா மங்கையிவ ணல்லதுரைத் திலளென்று
கோணிலா மனத்துமுனி கொதியழலிற் சினங்கொண்டு
பூணிலா முலைமடந்தாய் பூமேலான் பன்னெடுநாள்
வீணிலாத் தவம்புரிந்து புள்ளுருவம் விடுத்ததலம்.

509. பிரமபுரி யெனும்பெயரிற் பிறங்குறுமத் தலமமரும்
பரமரடி சேவிக்கப் பத்தியின்யான் செலும்பொழுது
கிரமமிலிம் மொழிபுகன்ருய் கேட்டைகே டவினையா
தரமருவு மிருமைந்தர் தமையின்னே பெறக்கடவாய்

### துருவாசர் பிரமபுரியடைந்து இறைவரை வழிபடுதல்

510. என்றுநவின் ருங்கொருவி யிரும்பிரம புரியடைந்து
பொன்றுதலி லன்னமாம் பொய்கைநீர் திளைத்தாடி
வென்றுமிளிர் வெண்ணீறு கண்மணிமே தகப்புனைந்து
தன்றுணையின் மனுவாய வெழுத்தைந்துந் தகவெண்ணி

511. விண்ணோங்கு குடுமிவரைப் பிரமகிரி மிசையிவர்ந்து
கண்ணோங்கு நுதலானைக் காரோங்கு களத்தானைப்
பண்ணோங்கு மிசைபோலப் பரந்தோங்கும் பெருமானைப்
பெண்ணோங்கு மொருபாகப் பிரமபுரீ சனைக்கண்டு

512. விழியருவி மழைபொழிய மெய்முழுது மயிர்சிலிர்ப்பக்
கழிசுவையன் பூற்றெடுப்பக் கசிந்துகசிந் துள்ளுருக
மொழிகுளற வாநந்த முழுப்பரவை யலையெறியப்
பழியகல வட்டாங்க பஞ்சாங்கத் தொடும்பணிந்து

---

508, கோண் இலா - மாறுபாடில்லாத (நேர்மையான,) பூண் நிலாம் - நகைகள விளங்குகின்ற. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்,

509. கேட்டை! கேள் - கேடுற்றவளே! கேட்பாயாக. தீவினை ஆதரம் மருவும் என்க.

510. ஒருவுதல் - நீங்குதல். தன் துணை இல் - தனக்கு இணை இல்லாத, மனு - மந்திரம், ஐந்தெழுத்து - பஞ்சாக்ஷரம். இதுமுதல் 514 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர்.

511. குடுமி - உச்சி. கார் - கருமை; விடத்தால் அமைந்தது. களம் - கழுத்து.

512. அட்டாங்க, பஞ்சாங்கத்தொடும் பணிதல் - உடலுறுப்புக்கள் எட்டும் ஐந்தும் தரையிற் படும்படி நமஸ்கரித்தல்.

513. உள்ளிவழுத் துநருள்ளத் தொளியாய வொருமுதலே
தள்ளிமலக் குறும்பொழிக்குந் தத்துவஞா னியர்பொருளே
வள்ளியர்சேர் பிரமபுரி வாழ்வாய பெருவாழ்வே
வெள்ளிவரை மேற்பவள வெற்பேயென் றுறத்துதித்து

514. பொங்குதிரு வருள்பெற்றுப் புறவிடைகொண் டவணீங்கி
மங்குதலி லாவரணம் வாழ்வார்யா ரையுந்தொழுது
பங்குபெறு பெருந்தவத்திற் பரைபாதந் தொழக்கருதி
எங்குநிக முன்னவரைச் சோபான வழியிழிந்தான்.

துருவாசர் தமதிருப்பிடம் மீளல்

515. வம்புவனப் பூங்குழலா டிருமுன்மரு விப்பணிந்து
பம்புதிரு வருள்பெற்றுப் பரவுபெரு மகிழ்ச்சியனாய்
நம்புதவத் துருவாச னலங்கொளுந்தன் னிருக்கைமரீஇ
அம்புவனச் சடையார்த மருள்கருதி வாழ்ந்திருந்தான்.

மதலோலைக்கு மக்கள் தோன்றல்

516. அன்னமுனி வெகுண்டுரைத்த வார்த்தைபழு தாகமே
வன்னமலர்க் கருங்கூந்தன் மதலோலை யென்பவள்பால்
என்னதுய ரமுநமக்கே யெய்துமெனச் சுரர்நடுங்க
முன்னமொரு மகன்பிறந்தான் முருக்குதிறல் வலியமைந்தான்.

517. பம்பரமா முலைத்தாயும் பயங்கொளவா வரணமிலா
அம்பரத்திற் றோன்றியதா லம்பரனென் றொருநாமம்
உம்பரவை நடுநடுங்க வுதித்தவன்பெற் றனனேய
கொம்பரதி சயம்பயப்ப மீட்டுமொரு குழவுயிர்த்தாள்.

518. அந்தவிள மகன்பிறந்த வுடனமுதா னமுதவொலி
எந்தவுல கமும்பரவி யெவ்வுயிர்க்கும் பெருமயக்கம்
தந்ததனா லம்பனெனு மொருபேர்தான் பெற்றனனப்
பந்தமகா ரிருவரொடும் பாவைகுர வனையடைந்தாள்.

---

513. உள்ளி - கருதி. வள்ளியர் - வள்ளன்மையுடையவர்கள்.

514. ஆவரணம் - சுற்று. சோபான வழி - படிக்கட்டு வழியாக.

515. அம்புவனம் சடையார் - கங்கை நீர் அடங்கிய அழகிய சடையையுடைய சிவபெருமான்.

516. சுரர் - தேவர்.

517. ஆவரணம் இலா அம்பரம் - கோட்டை இல்லாத ஆகாயம். உம்பர் அவை - தேவர்களின் சபையிலுள்ளோர். கொம்பர்; இங்கு, மதலோலை.

518, குரவன் - குரு; இங்குச் சுக்கிர பகவான்.

### அவள் தன் குருவினிடம் கூறல்

519. வெள்ளிமல ரடிபோற்றி வெளியியங்கு காற்சிவமே
உள்ளிதவத் துருவாச னுதவவிரு மகவடைந்தேன்
தெள்ளியிவ ருய்யும்விதஞ் செய்யென்ருள் கவலையெலாம்
தள்ளியவ னுளத்துணர்ந்து மேலுறுதி சாற்றுவான்.

### குருவின் கூற்று

520 அம்பரா நின்பகைவ ராயவர்வா ளுடரே
வெம்பரா வினுங்கொடுமை விளைத்திடுவ ரதுதீர
நம்பரா பரன்குறியோர் நற்றலத்துப் போற்றிடினவ்
உம்பரா தியர்வணங்கி யுன்வழிநிற் பார்நாளும்.

521. பன்னுக வணிபூணும் பரமரினி தமர்தானம்
முன்னுக வும்பர்குழா மொய்த்துநா டொறுந்துதிக்கப்
புன்னுக வனமெனும்பேர் பூண்டுவிளங் கியதானம்
பின்னுகப் பிரமபுரி யெனும்பெயர்பெற் றஃதன்றே.

522. அந்தமா தலத்தையடைந் தற்புதமாஞ் சிவலிங்கம்
சந்தமா திகடழுவித் தம்பியொடும் போற்றுதியேல்
நந்தமா திரைநாளா னண்ணியருள் சுரந்திடுவன்
பந்தமா யதுபுரியப் படர்தியென விடைகொடுத்தான்.

### அம்பரன் இயற்றிய பூசை

523. போற்றுகுரு மொழியேற்றுப் புன்னுக வனம்புகுந்து
கீற்றுமதி சடைக்கணிந்த கேடிலாப் பெருமானை
ஏற்றுமிசை வருவானை யெண்ணியது தருவானை
மாற்றுதலி லருளானைப் பிரமபுரி வாழ்வானை

524. அன்புதலைக் கொளநோக்கி யம்பரன்மற் றம்பனொடும்
என்புகரைந் திடப்பெருகி யிருவிழியும் புனலிறைப்ப
முன்புவிளை யாவின்ப முகிழ்த்தெழப்பல் காற்பணிந்து
துன்புதவிர்ந் தனமென்று சொல்லிநனி யுள்ளுவந்தான்.

---

519. வெள்ளி - சுக்கிரன்; அசுரர்களின் குரு.

520, வெம்பு அராவினும். அரா - பாம்பு. குறி - இலிங்கம். உம்பர் ஆதியர்- தேவர் முதலியோர்.

521. பலநாக அணி - நாகாபரணம். பெற்றஃது, விரித்தல் விகாரம்.

522. ஆதிரை நாளான் - சிவபிரான்.

523. கீற்றுமதி - பிறை. ஏறு - இடபம். இச் செய்யுள் அடுத்ததனேடு தொடர்ந்து வினை முடிவு கொள்ளும்.

525. ஆதிமல ரவணமைத்த வன்னமாம் பொய்கையுணர்ந்
தோதிமுடி யாவன்பி னிளவலொடு முவந்தாடிச்
சோதிதிருப் பூசனைக்காந் தூயவுப கரணமெலாம்
நீதியொடு புறஞ்சேர்ந்து நேடியோ ரிடந்தொகுத்து

526. மறுவலுமத் தடம்பொய்கை மாதீர்த்தங் குடைந்தாடிப்
பெறுபலவுந் தூய்தாக்கிப் பிரமபுரீ சரையன்புக்
கிறுதியிலை யெனப்பூசை யினிதியற்றி யவ்வாறே
பொறுமைகிளர் வம்புவனப் பூங்குழலா ளையும்போற்றி

527. மன்னியமத் தாவரண வானவர்யா ரையும்போற்றித்
துன்னியதா னுறைவதற்கோர் சூழல்புறத் துறவமைத்து
முன்னியகா லங்கடொறு முனிவில்பூ சனையியற்றிப்
பன்னியவம் பரனிவ்வா றிளவலொடும் பயிலுநாள்

528. மண்டபமுங் கோபுரமும் வயங்குவிமா னமுமதிலும்
கொண்டறவு ழாவரண வானவர்கு லாந்தளியும்
தொண்டரகங் களிதுளும்பத் தூயவாம் பணிபிறவும்
கண்டவர்கண் கவர்தருநந் தனவனமுங் கண்டனனல்.

529. பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகம் புணர்ந்தபிரான்
விருப்பமிகு திருப்பணிகண் மேதகவிவ் வாறியற்றித்
திருப்பதப்பூ சனைகாலந் தொறுஞ்சிறப்பச் செய்தயன்பேர்ப்
பருப்பதத்தின் வழிபடுமம் பரன்றுதிசெய் திடுவானல்.

530. எண்ணியவை யெண்ணியாங் கினிதளிக்கும் பெருமானே
கண்ணியவா னவரிரப்பக் கடியவிட மெடுத்தயின்ற
புண்ணியனே பூசனைசெய் புண்ணியர்தம் பெருவாழ்வே
பெண்ணியலு மொருபாக பிரமபுரீச் சுரபோற்றி.

---

525. உபகரணம் - சாதனங்கள். நேடி - தேடி. இதுமுதல் 528 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர்.

526. மறுவலும் - மீட்டும்.

527. மன் நியமத்து - மிக்க நியமத்துடன். ஆவரண வானவர் - கோயிற் சுற்றில் எழுந்தருளியுள்ள தேவர்கள். சூழல் - இடம். முன்னிய- முற்பட்ட. முனிவு - சலிப்பு.

528. கொண்டல் தவழ் ஆவாணம் - மேகங்கள் தவழும் சுற்றுமதில். தளி - கோயில். முன்பு பிரமனும் இப்பொழுது அம்பரனும் அக் கோயிலை அமைத்தனர் என்க.

529, பொருப்பு அரையன் மட பாவை - (இமாலய) மலை அரசனின் பெண்ணாகிய பார்வதி. பதப்பூசனை -பாத பூசை. அயன் பேர் பருப்பதம் - பிரமகிரி.

530. அயின்ற - உண்ட.

531. கொற்றமார் திரிபுரமுங் குலைந்தழிய முறுவலித்தாய்
செற்றமார் சிலைமதவே டையாக நுதல்விழித்தாய்
உற்றபேர்ப் பெருங்கால னுருண்டுவிழும் படியுதைத்தாய்
பெற்றமே லெழுந்தருளும் பிரமபுரீச் சுரபோற்றி.

532. துரியமிசை யோகியர்க டொழுதுவப்ப வொளியானாய்
அரியபெருந் தவத்தினர்நன் றுதரிக்க முதலானாய்
கரியகுழ லுமையோடுங் கலந்துயிர்க்கின் பினிதளிப்பாய்
பிரியமிகு பெருங்கருணைப் பிரமபுரீச் சுரபோற்றி

### இறைவர் காட்சியளித்தல்

533. என்றுதுதி புரிவான்மு னெம்பிரா னெழுந்தருளி
நன்றுநமைப் பன்னாளு நயந்துநீ பூசித்தாய்
ஒன்றுமதற் குளமகிழ்ந்தோம் வேண்டியதென் னுரையென்னத்
துன்றுமகி ழம்பரன்முன் றொழுதெழுந்து கூறுவான்.

### அம்பரன் வேண்டுகோள்

534. அருமணிநே ரிந்நகர மம்பரா லயபுரமென்
றொருபெயர்பூண் டிடல்வேண்டு முரைத்தபுரத் தீசனென
வருபெயரு நீபூணல் வேண்டுநினை வழிபடுவார்
திருவமிகப் பெறல்வேண்டுஞ் செப்பியமற் றிவையன்றி

535. மருவியவென் னிளவலொடும் வலியுடைய னியானும்
வெருவுறப்பல் வானவரை வென்றுமிகை பெறல்வேண்டும்
பொருவரிய பலபுவன போகமுநன் குறல்வேண்டும்
தருவனமற் றிவையென்றான் றம்பிரா னிதுபுகல்வான்.

### இறைவர் வரம் ஈதல்

536. அம்பனு மிளவலொடு மம்பரநீ கலந்தமர்நாள்
உம்பரா தியர்பலரு நலிவுசெயா தொழிதருவார்
நம்பநீ யுரைத்தவெலா நாங்கொடுத்தோ மென்றருளி
விம்பமே வினன்பிரம புரிவாழும் வித்தகனே.

---

531. கொற்றம் - வெற்றி. செற்றம் - பகைமை. காலன் - இயமன். பெற்றம் - எருது.

532. துரியம் - யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர்நிலை.

534. உரைத்த புரத்து ஈசன் - அம்பராலயபுரேசர். திருவம் - செல்வம்.

535. வெருவு - அச்சம். மிகை - மேம்பாடு. தம்பிரான் - கடவுள்.

536. விம்பம் - பிம்பம்; இலிங்கம். 'நீ கலந்தமர் நாள் உம்பராதியர் நலிவு செயா தொழிதருவர்' என்று கூறியது, பின் 606 ஆம் செய்யுளிற்காணுமாறு அவர்கள் நலிவு பெறக் காரணமாம்.

### அம்பர் என்னும் பெயருக்குக் காரணம்

537. அன்றுமுதற் பிரமபுரி யம்பரா லயபுரமென்
றொன்றுமொரு பெயர்பூண்ட தருமருவி யம்பரென
நன்றுவழங் கிடுமிந்நா ளுதனுமப் பெயர்புனை ந்தான்
குன்றுபுரை புயத்திருவர் சரிதமேற் கூறுவாம்.

### அவுணர் வரலாறு

538. முன்னமம ருறையுளேயே முழுநகர மாக்குகெனச்
சொன்னபொழு தமரமயன் றொக்கவளத் தொடுசமைக்க
அன்னநகர் நாப்பணம ரத்தாணி யரியணைமேல்
மன்னவிருந் தனன்மகுடம் வாளவுணர் குலங்கவிப்ப

539. பிரியாத தம்பியொடும் பேரவையி னிடைப்பொலிவுற்
றிரியாத மதகளிறு மிவுளியும்வாம் பரித்தேரும்
சரியாத காலாளுஞ் சமைந்துசூழ் தரக்கொடுமை
அரியாத வமைச்சர்முத லனைவருமேத் திடப்பொலிவான்.

540. அகலிடத்து நாற்றிசையு மமைந்தபல தேயத்தும்
இகல்வலிமன் னவர்பாற்போ யறைகூவ வெய்தாமே
தகலமையுந் திறையளப்பத் தான்கொண்டு நகர்புகுந்தான்
உகலமையாப் பெருவிறல்சா லுலம்பொருதோ ளம்பரனே.

541. சம்புமொழித் திறனுணர்ந்து தம்பியொடும் பிரியானுய்
வெம்புமனத் தவன்சினந்து விண்ணவர்வாழ் தலம்புகுந்து
கொம்புமத கரிபரிமுற் குலைகுலையும் படிகலக்கி
நம்புதருக் களைமுறித்து நலிகுறும்பு நனிசெய்தான்.

542. அம்பரநேர் தடநெடுங்க ணயிராணி முலைத்துணைதோய்
அம்பரநா டவன்வெருவி யாண்டளப்பா னொடுமுன்னுள்
அம்பரமர் மொழிப்படியே யனுசனொடு மடைந்தமர்செய்
அம்பரன்றன் செயலெண்ணி யடுத்ததீ தெனப்புரிவான்.

---

538. உறையுள் - தான் தங்கியிருந்த இடத்தை. அமர - பொருந்த. சமைக்க - அமைக்க. அத்தாணி - ஓலக்க மண்டபம். மன்னுதல் - நிலைபெறல். வாள் - கொடுமை. அவுணர் குலம் மகுடம் கவிப்ப என்றியைக்க.

539. இரிதல் - நீங்குதல். இவுளி - குதிரை. வாம் பரி - தாவும் குதிரை. சரித்தல் - சஞ்சரித்தல். கொடுமை அரியாத அமைச்சர் - கொடுமையை நீக்காத மந்திரிகள். ஏத்துதல் - புகழ்தல்.

540. இகல் - பகைமை. தகல் - தகுதி. உகல் - நழுவுதல். உலம் பொரு தோள் - திரண்ட கல்லை ஒத்த தோள்.

541. சம்பு - சிவபிரான். குறும்பு - கொடிய செயல்கள்.

542. அம்பரம் - கடல். அயிராணி - இந்திரன் மனைவி. அம்பர நாடவன் - வான நாட்டுக்குரிய இந்திரன். அனுசன் - தம்பி.

543. மூவர்தொழும் பிரமபுரி முன்னிநெடு நாளாகத்
தேவர்பல ருந்தொழுமா தேவனருச் சனையாற்றிப்
பூவர்தொழில் குலவாங்குப் பொற்பவரம் பெற்றநினை
யாவரெதிர்ப் பவரெண்ணு தெங்களொடும் பொரநினைந்தாய்.

544. என்றுகுழைந் துரைத்திடலு மிடிமுழக்கி னுறநகைத்துக்
குன்றுதெறு புயத்தவுணர் குலங்களைநின் றிறலுணர்வான்
இன்றுபுகுந் தனமுனமே யீதுணர்ந்தாற் புகேமென்று
நன்றுமொழிந் தனன்பெறுவ பெற்றுநடந் தனன்மாதோ.

545. இன்னமும்விண் மிசையுலக மெங்கணுமிவ் வாறடைந்து
தன்னமுன்னே ரலராகாத் தகையுணர்ந்து திறையாகச்
சொன்னமுந்தூ சும்பிறவுந் தொக்ககொண்டு நகர்ப்புகுந்தான்
அன்னமுமே னமுமுணரா னருள்பெற்ற வம்பரனே.

546. ஆயதிறற் றம்பியொடு மம்பரா சுரனென்பான்
நேயமிகு தன்னகர நீண்முடியத் தாணியகம்
மேயவரி யணையமர்கால் மிக்கோனு கியகுரவன்
பாயவிவண் வருகென்று பண்புறுதூ தினைவிடுத்தான்.

547. தூதுமொழி தலுமகிழ்ச்சி துள்ளமழைக் கோளெழுந்து
மோதுவலி யம்பரற்கு முன்குறுக விருக்கையெழீஇப்
போதுபல தூய்ப்பணிந்து பொற்பீடத் திருத்தியிருந்
தோதுதிற முண்டடிகேள் கேட்கவென வுரைத்திடுவான்.

548. அடிகண்மொழி தலைக்கொண்டு பிரமபுரி யடைந்தைந்து
முடியுடையான் றனைப்போற்றி முன்னியயா வையும்பெற்றேன்
கடிமலர்க்கற் பகநாடு முதற்பலவுங் கைக்கொண்டேன்
படியிலொரு குறையுமிலை பஃறிருவு மனுபவிப்பேன்.

---

543. பூவர் – பிரமன். பிரமன் செய்த தொழில்கள் விளங்கும் இடம் என்றபடி.

544. குலம் களை நின் திறல் என்க. பெறுவ திறை முதலியன.

545. தன்ன முன் - தன் முன். நேரலர் ஆகா தகை - பகைவர் ஆகாத தன்மை. சொன்னம்- சொர்ணம் - பொன். தூசு - ஆடை. அன்னமும் ஏனமும் - பிரமனும் திருமாலும் உருக் கொண்ட அன்னப் பறவையும் பன்றியும்.

546. நீள் முடி அத்தாணி - நீண்ட சிகரத்தையுடைய ஓலக்க மண்டபம். அமர் கால் - அமர்ந்திருக்கும்போது. குரவன் - குரு (சுக்கிரன்.) அசுரன் தன் அத்தாணி மண்டபத்திலிருந்துகொண்டு அங்குச் சுக்கிரனை வரவழைத்தான் என்க.

547. மழைக்கோள் - சுக்கிரன். போது - மலர்கள். அடிகேள் - ஐயனே !

548. இச் செய்யுள் அம்பராசுரன் தன் குருவினிடம் தெரிவித்ததைக் கூறும். ஐந்து முடி உடையான் - சிவபிரான்; முடி - தலை. படி - பூமி. பல் திருவும் - பல வகையான செல்வங்களையும்.

549. இணங்குதிற லுடையெனக்கு மெம்பிக்குந் தக்கபடி
மணங்குலவச் செயல்வேண்டுங் கன்னிகையார் மதித்துரைத்தி
உணங்குதலில் புகழோயென் றுரைத்திடலு முறுவலித்து
நிணங்குலவு வாளவுணர் நிருபகேளெனப்புகல்வான்.

550. வாளவுணர் குலம்புரக்கு மன்னவர்க்குக் குலதருமக்
கோளமையும் படியின்ன குலத்துதித்தா ரென்றுளதோ
காளவிழி மடமாதர் கட்கினிய ராயிருந்தால்
நீளமணம் புணர்வதுவே நெறியென்று புகர்மொழிந்தான்.

அசுரனின் தீச்செயல்

551. மறைமொழியிற் குருமொழியே சிறந்ததென மனங்கொண்டு
நிறைபொருளும் பிறவுநனி நிரம்பவுத வினன்போக்கி
முறைமைதப வுலகிடைப்பன் முரணுடையார் தமைச்செலுத்திக்
குறையறமற் றவருதவு மடவார்தோள் கூடுவான்.

552. படிமகளி ரின்றுசுரர் பைங்கொடிபோல் பவர்நாளைக்
கடிதவிலா வியக்கர்குலங் கலந்தமட வார்மறுநாள்
ஒடிவில்வித்தி யாதரர்த மொள்ளிழைமங் கையர்மறுநாள்
தடிதலற வப்பாலுள் வேறுபுணர் தரம்பூண்டான்.

553. நென்னலனு பவித்தவரை யின்றுநீக் கிடுவானின்
றின்னலறப் புணர்ந்தவரை நாளையிரிப் பான்மறுநாள்
அன்னவரைக் கழித்திடுவா னப்பாலு மப்படியே
சொன்னபடி கொணர்வார்க்கே தூசுநிதி யமுஞ்சொரிவான்.

---

549. உணங்குதல் - உலர்தல். நிணம் - மாமிசம். நிருப - மன்னனே!

550. காள விழி - கரிய விழி; விடம் போன்ற விழி என்றும் ஆம். 'இன்ன குலத்தில் மணம் செய்வதென்பது அவுணர்கட்கு இல்லை; அழகாக உள்ள எவரையும் மணம் புரியலாம்' என்று புகர் மொழிந்தான். புகர் - சுக்கிரன். தம் மனத்துக்கினிய பெண்களை வலிதில் கவர்ந்து மணந்துகொள்ளும் முறை ஆசுரம் எனப்படும். இது அசுரருக்கு உரியது.

551. மறை மொழியின் குரு மொழியே சிறந்தது; ஒரு சிறந்த உண்மை. முரண் - வலிமை.

552. படி மகளிர் - நிலவுலக மகளிர். தடிதல் - தடுத்தல். அப்பால் நாள் - அடுத்த நாள்.

553. நென்னல் - நேற்று. இரித்தல் - நீக்குதல். தூசும் நிதியமும் என விரிக்க.

554. இந்தவிதம் விடனொழுக விளையானா மிளையானாய்ப்
பந்தமிகு மத்தொழிலே கைக்கொண்டான் படுபாவி
வந்தபடி செய்வதனை மதித்திறந்தார் சிலமாதர்
சந்தமழி தரக்குலைத்துத் தவ்வெனவே வினர்சிலரே.

555. மண்முதலெவ் வுலகுமிடர் மாறுவதென் றென்பாரும்
பெண்ணுருவங் கொடுபிறத்தல் பெரும்பாவ மென்பாரும்
கண்மருவு பேரழகே கடியவிட மென்பாரும்
என்னுமிள மையிற்கொடிதின் றென்பாரு மாயினார்.

இந்திரன் பிரமனிடம் முறையிடல்

556. இந்தவித மடமாத ரெல்லாரு நிலைகுலைய
முந்தவமர்க் காற்றாத முகிலூர்தி முகம்புலர்ந்து
கந்தமலர்க் கடவுளடி கைதொழுதம் பரன்கொடுமை
வந்தபடி யெடுத்துரைக்க மற்றவனு நனியிரங்கி

557. திருமறுமார் பனைச்சார்ந்து சேவித்தம் பரன்கொடுமை
பெருமவுளத் துணராம லிருப்பதெவன் பேசகென
வருமறையா கமமுழங்கும் பிரமபுரி யமர்தரக்குச்
சருமவுடை யார்க்குரைப்பிற் றவிர்வோமித் துயரென்று

558. கருதியம ரரும்வெளிறு களிறுகைக்கு மிந்திரனும்
சுருதியுணர் நான்முகனுஞ் சூழமா யவனேகிப்
பருதிமதி யழன்முக்கட் பரன்பிரம புரியடைந்து
தருதியற மென்றன்னத் தடப்பெருநீ ரிடைப்படிந்து

திருமால் தேவர்களுடன் பிரமபுரீசரைக் காணல்

559. வெள்ளியநீ றுறத்தரித்து மேதகுகண் மணிபூண்டு
வள்ளியவைந் தெழுத்தெண்ணி நந்திபதம் வணங்கியெழுந்
தொள்ளியகோ யிலைவலம்வந் துட்புகுந்து நேர்கண்டான்
தெள்ளியஞா னப்பிழம்பாஞ் சிவலிங்கப் பெருமானை.

554. விடன் - தூர்த்தன். இளையானாய் - சலிக்காதவனாய். தம் அழகு கெடத் தம்மைச் சிறுமைப் படுத்திக்கொண்டு அவன் தம்மை விரும்பாதவாறு செய்து கொண்டார்கள் என்க. தவ்வெனல்; சுருங்குதற் குறிப்பு. 'தவ்வெனுந் தன்மை யிழந்து' (குறள் 1144).

555. பேரழகே கடிய விடம்; ஓர் உண்மை உரை. என்னும் - என்றும்.

556. முகில் ஊர்தி - இந்திரன். கந்தமலர்க் கடவுள் - பிரமன். இதுமுதல் 569ஆம் செய்யுள் வரை ஒரு தொடர்.

557. திரு மறு மார்பன் - திருமால். தரக்குச் சருமம் - புலித்தோல்.

558. வெளிறு களிறு - வெள்ளை யானை. சூரியன், சந்திரன், நெருப்பு, ஆகிய மூன்றையும் சிவபெருமான் தம் கண்களாகக் கொண்டுள்ளார் என்க.

559. வெள்ளிய நீறு - விபூதி. உற - மிக.

## திருமால் பக்தியும் துதியும்

560. கண்டுவிழி புனலிறைப்பக் கைகுவித்துப் பணிந்தெழுந்து
தண்டுதலில் பேரன்பு தலைக்கொண்டு நெஞ்சுருக
அண்டுபர வசத்தினனா யாநந்தக் கூத்தாடி
விண்டுமொழி தழுதழுப்ப மேவுதுதி யெடுத்துரைப்பான்.

561. எவனுலகுக் காதார மெனப்படுவா னெவ்வுலகும்
எவன்வலியி னாய்நிலைபெற் றிறுதியுறு மெவ்வுயிரும்
எவனருளாற் பந்தமுறு மிரித்தின்ப வீடடையும்
அவனொருநீ நின்னடியே யடைந்தடியேன் றுதிக்கின்றேன்.

562. எவன்வலியாற் பருதிமதி முதலியவெ லாமியங்கும்
எவன்வலியாற் கரைகடவா தெழுபெருவா ரியுமடங்கும்
எவன்வலியாற் பூதங்க ளெஞ்ஞான்று மெழுமடங்கும்
அவனொருநீ நின்னடியே யடைந்தடியேன் றுதிக்கின்றேன்.

563. எவன்மறைநூன் முழுதுரைத்தா னெவன்மறையா லுணர்வரியான்
எவன்மறையே வாம்பரியா விணைத்துவெளி யியக்கினான்
எவன்மறைமே லடிவைத்தா னெவன்மறைநூ புரம்புனைவான்
அவனொருநீ நின்னடியே யடைந்தடியேன் றுதிக்கின்றேன்.

564. எவனுருவ மெட்டுடையா னெவனுருவ மொன்பதுளான்
எவனுருவ மாறுடையா னெவனுருவ மொன்றுமிலான்
எவனுணரு மெண்குணத்தா னெவன்பிறப்போ டிறப்பில்லான்
அவனொருநீ நின்னடியே யடைந்தடியேன் றுதிக்கின்றேன்.

---

561. வலியின் - வலிமையால். ஆய் - உண்டாகி, ஆய், நிலைபெற்று இறுதியுறுதல் என்றதனால், ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற முத்தொழில்களும் கூறப்பெற்றன. பந்தமுறுதல் – கட்டுப்படுதல். இரித்து - (அக் கட்டை) நீக்கி.

562. வாரி - கடல். எழும் அடங்கும் எனப் பிரிக்க.

563. மறையே வாம் பரியா இணைத்து வெளி இயக்கினான்: இது திரிபுர சங்கார காலத்து நிகழ்ந்தது. மறைமேல் அடி வைத்தது : 'பாத பங்கய முபநிடப் பாதுகை சூட' என்ற பரஞ்சோதி திருவிளையாடல். எல்லாம் வல்ல : 6 ஆம் செய்யுளிற் காண்க. நூபுரம் -சதங்கை.

564. உருவம் எட்டுடைமை - அஷ்டமூர்த்தம்: பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமானன் என்பன. ஒன்பது உருவங்கள்: சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், ஈசன், உருத்திரன், மால், அயன் என்பன. ஆறு உருவம்: மந்திரமூர்த்தி, கலாமூர்த்தி, அத்துவாமூர்த்தி, மாத்ருகாமூர்த்தி, மனோன்மணி, மாகேசுவரமூர்த்தி என்பன; வேறு வகையாகவும் கூறுவர்.

565. எவன்புவியி லைந்தானு னெவன்புனலி னான்கானுன்
எவனழலின் மூன்ருனு னெவன்வளியி லிரண்டானுன்
எவன்வெளியி னென்ருனு னெவனிவற்ரு லுணர்வரியான்
அவனொருநீ நின்னடியே யடைந்தடியேன் றுதிக்கினறேன்.

566. எதுபிரமன் புரிதவத்திற் கிரங்கியிறை யொடுமடைந்த
தெதுகயிலை யெனும்பெயர்பூண் டெஞ்ஞான்று மிலங்கிடுவ
தெதுதரிசித் தவர்க்களவா வின்பமருள் பெருவிலங்கல்
அதுபிரம கிரியிஃதீங் கமருநினைத் தொழுகின்றேன்.

567. அம்புவன முழுவதுமோ ரறுகினுனிப் பனியென்னப்
பம்புவனச் சடையமைத்த பரமநினைத் தொழுகின்றேன்
வெம்புவனத் திடையாடும் விமலநினைத் தொழுகின்றேன்
வம்புவனப் பூங்குழல்பால் வரதநினைத் தொழுகின்றேன்.

568. கிரமமுணர்ந் தியங்கிடுவார் கீழ்மையுரு விதமுயர்த்தும்
பரமதயா நிதியாய பகவநினைத் தொழுகின்றேன்
அரமதலைத் தொடைபூணு மமலநினைத் தொழுகின்றேன்
பிரமபுரித் தலையமரும் பெருமநினைத் தொழுகின்றேன்.

சிவபெருமான் காட்சி அருளல்

569. என்றுநெடி யவன்றுதிப்ப விண்டைமலர் மேயானும்
குன்றுகுலை தரவயிரக் கொடும்படைகை விதிர்த்தானும்
துன்றுமம ருமிரங்கித் தனித்தனியே நுதித்தார்கள்
அன்றுகரு ணையிற்பெருமா னவர்காண வெளிநின்று

---

565. புவியில் ஐந்து: சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்ற தன்மாத்திரைகள் ஐந்து. புனலில் நான்கு : முன்னவற்றில் கந்தம் நீங்கிய நான்கு. அழலில் மூன்று : முன் நான்கில் ரசம் நீங்கிய மூன்று : வளியில் இரண்டு : சப்தமும் ஸ்பரிசமும். வெளியின் ஒன்று : சப்தம் மட்டும். இந்தத் தன்மாத்திரைகளை இறைவனுகவே கொண்டு கூறப்பெற்றது.

566. பிரமகிரி - அம்பர் நகரில் இறைவன் கோயில் கொண்டுள்ள மலை. விலங்கல் - மலை

567. அம்பு வனம் - (கங்கை) நீரின் தொகுதி. அறுகு - அறுகம்புல். பம்புதல் - செறிதல். வனம் - அழகு. வெம்பு வனம் - சுடுகாடு.

568, கிரமம் - முறை. அர மதலை - பாம்புக்குட்டி.

569. நெடியவன் - திருமால். இண்டை - தாமரை. வயிரக் கொடும் படை - வச்சிராயுதம். இந்திரன் மலைகளின் சிறகரிந்தமை கூறப்பெற்றது. குன்று... ..., விதிர்த்தான் - இந்திரன்.

### திருமால் கூறியவை

570. மாயவனை முகநோக்கி மலரவனு தியரொடுநீ
மேயதேவ னுரைத்தியென விரைமலர்த்தாள் பணிந்தெழுந்தே
ஆயவலி யம்பரனு மம்பனுஞ்செய் கொடுமையெலாம்
தூயவுளத் துணராய்போ லிருப்பதெவன் சுடர்க்கொழுந்தே.

571. இருவர்தலை யெடுத்தவுண ரிறைவரா யெங்களொடும்
பொருவர்மக ளிரையலைப்பர் புன்றொழிலே தலைநிற்பார்
தருவர்புவிக் கனுரனைத்து மற்றவரைச் சாய்த்திடுவார்
ஒருவரிலை யடியேமா லாகுவது மொன்றிலையால்.

### சிவபிரான் தேவியைக் குறிப்பொடு நோக்கல்

572. ஆலமடர்த் திடவடக்கி யன்றுபுரந் ததுபோலிக்
காலமவர் குறும்படக்கிக் காத்தல்கட னென்றிறுத்தான்
சூலதர னவர்கொடுமைத் தொழிறொலைப்பான் றன்னொருபால்
மூலவழ கியமுதல்வி முகநோக்கி முறுவலித்தான்.

### தேவி காளியை நினைத்தல்

573. புண்ணியநா யகப்பெருமான் புரிமுறுவற் குறிப்புணர்ந்து
தண்ணியபே ரருண்முதல்வி தன்கூற்றின் மாகாளி
நண்ணியவீங் கெனநினைத்தா ணினைத்தவுடன் ஞாலமெலாம்
பண்ணியமா தவமெனவப் பாவையடைந் தடிதொழுதாள்.

### காளிக்கு இட்ட கட்டளையும் அவள் செயலும்

574. அடிதொழுத மாகாளி முகநோக்கி யணங்கேநீ
கொடியபுரி யம்பரனுங் கோணுடையம் பனுமின்றே
முடியநெடி யவனொடுபோய் முடித்திடுகென் றுள்பணிந்து
கடியதிரி தலைச்சூலங் கைக்கொண்டாள் கனன்றெழுந்தாள்.

### காளி இயற்றிய சூழ்ச்சி

575. விதிமுதல்யா வரையுமவர் மேவுமிடம் புகச்செலுத்திக்
கொதிதழற்சூ லக்கரத்தாள் கொண்டல்புரை வண்ணனொடும்
பதிதரமேற் றிசையமர்ந்தம் பரனிளவற் றுணையிழப்ப
மதியமைய வாராய்ந்தோர் மறையவர்கன் னிகையானாள்.

---

571. அனுர் - துன்பம்.

572. இறுத்தான் - கூறினான். சூலதரன்-சூலப்படை தரித்தவன்; சிவபெருமான்.

573. நண்ணிய - வருக; வியங்கோள்.

574. கொடிய புரி - கொடிய செயல்களைப் புரிகின்ற. கோண் - கோணல்.

575. விதி - பிரமன். கொண்டல் புரை வண்ணன் - மேக வண்ணனான திருமால்.

576. எந்தவுல கினுங்குடிகொண் டின்பமுற வீற்றிருந்த
சந்தமுழு வதுந்திரண் டோ ருருக்கொண்ட தன்மையென
முந்தவரு மோகினியிம் மோகவுருத் தொழுத்தையெனக்
கந்தமல ரவன்றொழிலுண் கைக்கொளுமோ ருருக்கொண்டாள்.

திருமால் ஒரு வைதிகக் கிழவன் உருக்கொள்ளல்

577. மறையவர்கன் னிகையென்ன மாகாளி யுருக்கொண்ட
நிறையழகு தெரிந்துமுன் மோகினியாய் நிகழ்மாயோன்
குறையமைய வுருமாறிக் கொண்டதெனப் பன்னூலும்
அறைதிறத்தோர் வைதிகஞ்சால் கிழமறையோ னுயினன்.

வேறு

இருவரும் அசுரர் இருப்பிடம் போதல்

578. பார்ப்பன விருத்த னுய பைந்துழாய்ப் படலை யானும்
சீர்ப்பவோர் பனத்தி யாய திரிதலைச் சூல மாதும்
ஆர்ப்பமை கருங்க ழற்கா லம்பர னம்பன் செல்வம்
போர்ப்பநன் கமரு மாட நோக்கினர் போத லுற்றார்.

579. திருவளர் விபூதி யுங்கண் மணியுமெய்த் தேசு செய்ய
ஒருவறப் புனைச ழங்க லுடையுத்த ரீய மின்னப்
பொருவரும் பூணூன் மார்பிற் பொலிதரத் தண்டொன் றூன்றி
மருவடி பெயர்த்து மெல்ல மறையவன் முன்ன டந்தான்.

580. இளங்கதி ருதய மென்ன மெய்யொளி யெங்கும் போர்ப்பக்
களங்கமின் மதிய மென்னக் காமரு வதனஞ் சீர்ப்ப
விளங்குபொற் சிலம்பு தண்டை மேகலை யாதி யார்ப்பத்
துளங்கலிலணங்கு மெல்லத் தொடர்ந்துபின்னடந்து சென்றாள்.

581. அதிசவுந் தரமின் னுளோ டந்தணன் வருகை கண்ட
மதியில்சில் லவுண ரோடி யிருவர்க்கும் வகுத்துக் கூறப்
பொதிமகிழ்ச் சியரா யன்னர் புதியரே லழைத்து வம்மின்
எதிரென வவரு மோடி யிறைவர்பால் வருக வென்றார்.

---

576. சந்தம் - அழகு. தொழுத்தை - அடிமைப்பெண். கந்த மலரவன் - பிரமன். பிரமன் கைத்தொழில் தாழ்ந்ததால் அது நாண் கொண்டது என்க.

578. படலை - மாலை. பனத்தி - பார்ப்பனத்தி. கருங்கழல் - வலிய வீரக்கழல். மாடம் - அரண்மனை. நோக்கினர், முற்றெச்சம்.

579. சழங்கலுடை உத்தரீயம் - தொங்கி யசையும் மேலாடை.

### அசுரர்கள் கன்னியைக் காணுதல்

582. வருகென வழைத்த லோடு மங்கையு மறைவ லானும்
திருகுறு மனத்தார் முன்பு சென்றனர் நின்ரு ராகப்
பொருவரும் வனப்புந் தேசும் பூத்தபூங் கொடியைக் கண்கள்
இருவரும் விடுத்து மோகந் தலைக்கொள வினிது கண்டார்.

### கன்னியின் சௌந்தரிய வருணனை
### கூந்தல், நெற்றி

583. இனிதமை கல்வி கேள்வி யிலருளத் தினுநீ ருண்ட
பனிமுகி லினுங்கா ரென்று பண்புகொள் கதுப்பின் சீரும்
புனிதனன் கெடுத்த வில்லும் போழிள மதியு நாணும்
கனிதரு வடிவிற் ருய காமரு நுதலின் சீரும்

### புருவம், கண்

584. பொருசிலை யோடு சேமச் சிலையையும் பொற்ப மாரன்
மருவுதண் குடைமேற் சார்த்தி வைத்தன புருவச் சீரும்
ஒருவரும் வலிசா றங்க ளுயிர்கொளற் கிணைந்து வந்த
வெருவரு மியம ரென்ன விளங்கிரு நயனச் சீரும்

### செவி, நாசி

585. களிவளர் தங்க ளுள்ளங் கலந்திடை யருமலாட
ஒளிவளர் செம்பொ னுற்செய் யூசனேர் செவியின் சீரும்
அளிவள ராத தங்க ளாவியா முணவு மாந்த
எளிவளர் காம ருபி யெனமிளிர் நாசிச் சீரும்

---

582. திருகு உறு மனத்தார் - அசுரர் இருவர். இது முதல் 601 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர். இங்குக் கூறப்பெறுவது கேசாதி பாத வருணனை.

583. இருளுக்குக் கல்வி கேள்வி யற்றவர் மனம் உவமை. கதுப்பு - கூந்தல். புனிதன் - சிவபிரான். போழ் மதி - பிறைச் சந்திரன், நுதலுக்கு வில்லும் பிறையும் உவமை.

584. மாரன் - மன்மதன் வைத்த அன - வைத்தது போன்ற. பொரும் சிலை, சேமம்சிலை : போரிடும் வில்லும், பாதுகாவலாக வைத்திருக்கும் வில்லும். வெருவரும் இயமர் - அஞ்சத்தக்க இயமதூதர்கள். இயமதூதர் கண்களுக்கு; இரண்டு கண்களானமையின் பன்மை. நயனம் - கண்.

585. செவிக்கு ஊசல். அளி - கிருபை, மாந்துதல் - பருகுதல். செவி அவர்களின் உள்ளங்களையும், நாசி அவர்களின் உயிர்களையும் ஈர்த்தன என்றனர். காமருபி - பச் சோந்தி; இது நாசிக்கு உவமை (கம்ப. கிட்கிந்தா-771)

### கன்னம், மோவாய்

586. இருவர்தா நனிபோ ராற்றற் கெடுக்கும்வா டீட்டற் காய
பொருவருஞ் சாணே யென்னப் பொலிதரு கபோலச் சீரும்
மருவரும் வனப்பு வாய்ந்து காண்பவர் மனமுங் கண்ணும்
ஒருவறக் கவரா நிற்கு மொள்ளிய சுபுகச் சீரும்

### இதழ், வாய்

587. கவிரொடு தொண்டை கோபங் காட்டகம் பயிலும் வண்ணம்
அவிர்பெரு வனப்பு வாய்ந்த வரக்கவி ரிதழின் சீரும்
புவியகம் பயஞ்சார்ந் தாம்பற் போதிராப் போதே மெல்லச்
செவியவாய் திறக்கும் வண்ணந் திகழ்ந்தசெவ் வாயின் சீரும்

### பல், பேச்சு

588. முத்தெனப் பசிய மஞ்ஞை முருந்தெனத் தளவ ரும்பின்
கொத்தெனப் புலவ ரொப்புக் கூறுவா ணகையின் சீரும்
பத்தெனப் பதினென் றென்னப் பகரினும் பான்முன் னுய
பித்தெனப் பேச லன்றிப் பேசொணுப் பேச்சின் சீரும்

### முகம்

589. முழுமதி யுதய மென்று மொழிதரிற் களங்க முண்டு
பழுதில்செங் கமல மென்று பகர்தரி னிரவிற் சாம்பும்
தழுவுமற் றுவமை யாதொன் றுயினுஞ் சமையா தாக
ஒழுகொளி வனப்பு வாய்ப்புற் றொளிர்திரு முகத்தின் சீரும்

### கழுத்து, தோள்

590. வலம்புரி வடிவோ கந்தி வடிவோமற் றியாதோ வென்று
நலம்புரி யறிஞ ராலு நாடொணுக் கழுத்தின் சீரும்
உலம்புரி தங்கள் வன்றே ளுடைத்திடும் வன்மை சான்று
குலம்புரி மென்மை வாய்ந்து குலவிய தோளின் சீரும்

---

586. கபோலம் - கன்னம். கபோலத்துக்குச் சாணேக்கல். பின்னே அவள் பொருட்டு அவ்விருவரும் அங்குப் பிணங்கப்போவதை இங்கு முன்னே குறித்தார். சுபுகம் - மோவாய்.

587. கவிர் - முண்முருக்கு. தொண்டை - கொவ்வைக் கனி கோபம் – இந்திர கோபம் என்னும் பூச்சி. இவை இதழின் நிறத்துக்கு ஒப்பு. அவிர் - விளங்குகின்ற. அரக்கு அவிர் இதழ் - செந்நிறத்துடன் விளங்கும் உதடுகள். ஆம்பல் போது - ஆம்பல் மலர். செவிய - செவ்விய.

588. முருந்து - இறகின் அடி. தளவு அரும்பு - முல்லை அரும்பு. வாள் நகை-ஒலி பொருந்திய பற்கள். பின் இரண்டடிகளின் பொருள் தெளிவுபடவில்லை.

589. முகம், மதிக்கும் கமலத்துக்கும் உள்ள குற்றங்களின்றி அவற்றைப்போன்று விளங்கிற்று என்க.

590. வலம்புரி - சங்கு. கந்தி - கமுகு. உலம் - திரண்ட கல். சான்று - நிறைந்து. வன்மை நிறைந்து மென்மையும் வாய்ந்த தோள் என்க.

### முழங்கை, அகங்கை

591. தள்ளரு மகதி வீணைத் தண்டெனும் வடிவம் வாய்ப்புற்
றெள்ளரும் வனப்பு மேவி யிலங்குகூர்ப் பரத்தின் சீரும்
கொள்ளருங் காந்த ளானுங் குலாவுசெங் கமல மானும்
விள்ளரு முவமை யாகா விளங்கெழி லகங்கைச் சீரும்

### விரல், நகம்

592. கொடிவிடு பவள மென்று கூறினும் பயனு காது
கடிபடு நரம்பு ரோமங் கழிந்தபல் விரலின் சீரும்
வடிவுடை மதவே ளூரும் வாம்பரி மூக்கின் றேற்றப்
படியென வழகு வாய்ந்து பதிந்தபன் னகத்தின் சீரும்

### கொங்கை

593. குற்றமில் பொன்னிற் செய்த குடங்கொலோ விளநீர் கொல்லோ
பற்றமை தாளங் கொல்லோ பருப்பதப் பண்பு கொல்லோ
வுற்றசக் கரவா கங்கொல் லோவெனக் கருது வார்க்கோர்
வெற்றமொன் றுதவா தாய மேதகு கொங்கைச் சீரும்

### வயிறு, உரோம வொழுக்கம்

594. ஆலிலை யென்ற போது மமைதரு மிதன்வ னப்புப்
போலிலை யென்று பேசப் பொலிதிரு வயிற்றின் சீரும்
நாலிலை யைந்து மில்லை நகுமெனும் பொழுக்கமொன்றே
மேலிலை யெனுமு ரோம வொழுக்கத்தின் வியக்குஞ் சீரும்

### வயிற்று மடிப்பு, உந்தி

595. உற்றநம் பெயருக் காய பொருளிலொன் றுறுவீர் மோகம்
பற்றமுக் காலு மென்று பகருமுன் மடிப்பின் சீரும்
முற்றவும் வலஞ்சூழ் மாண்பால் வலம்புரி யெனமொ ழிந்தார்
கற்றவ ரொன்றற் கென்று கரைதரு முந்திச் சீரும்

---

591. மகதி வீணை - நாரதர் வீணை ; இங்கே பொதுவாக வீணையைக் குறித்தது. கூர்ப்பரம் - முழங்கை. காந்தள் - ஒரு வகை மலர். அகங்கை - உள்ளங்கை.

592. விரலுக்குப் பவளம். நகத்துக்குக் கிளி மூக்கு. மதவேள் - மன்மதன். மன்மதனுக்குக் கிளி வாகனம். பரி - குதிரை ; இங்கே வாகனத்தைக் குறித்தது.

593. பருப்பதம் - மலை. சக்கரவாகம் - ஒரு பறவை. வெற்றம் - வெற்றி. கொங்கைக்கு, பொற்குடம், இளநீர், தாளம், மலை, சக்கரவாகம்.

595. மடிப்பு - வயிற்று மடிப்பு; மடிப்பு என்ற பெயருக்கு ஆயபொருளில் ஒன்று - மோசம்; நாசமும் ஆம். நீவிர் மோகம் பற்றுதலால் மோசம் அல்லது நாசம் உறுவீர் என அம்மடிப்புக்கள் கூறுவது போலுள்ளன. வலம்புரி - ஒரு வகைச் சங்கு. கரைதரு- சொல்லப்படுகிற. ஒன்றற்கு - ஓர் உறுப்பாகிய உந்திக்கு.

## இடை, அல்குல்

596. பெயரலா லுருவுந் தீர்ந்து பேதுறு மெனேமோ கித்தால்
பெயரலா லுருவந் தீர்வீ ரென்றுபே சிடையின் சீரும்
பெயர்வரு மெனேமோ கித்தாற் பேதுற்றுச் சாவீ ரென்று
பெயரராப் படத்திற் பொங்கிப் பிறங்கக லல்குற் சீரும்

## நொடை, முழந்தாள்

597. பச்சிளங் கதலித் தண்டுங் கரபமும் பழிக்கப் பட்ட
நச்சிவைக் குடைந்தென் றோத நகுமிரு குறங்கின் சீரும்
அச்சிரி யாம லென்று மனேபுகு மலவன் கொல்லோ
மெச்சிவைக் கொப்பா மென்னும் வியன்முழந் தாளின் சீரும்

## கணைக்கால், பரடு

598. அருவமே மார னன்ன னம்பருத் தூணிரி மட்டும்
உருவமோ வென்றி யாரு முரைசெயுங் கணைக்காற் சீரும்
சருவரும் பொற்ற ராசுச் சிறியதட் டொத்த லின்றி
வெருவுறச் சுமந்து தேம்ப விளங்கிய பரட்டின் சீரும்

## புறங்கால், விரல்கள்

599. வளனமை மாரன் கீர்த்தி வரைந்தபுத் தகமே யீதென்
றுளனமை வனப்பு வாய்ப்புற் றெளிவிடு புறங்காற் சீரும்
குளனமை நறுநீர் பாய்த்தி யெருப்பெயக் கோதில் பூமிக்
களனமை யரிச னத்துக் கவின்முனை விரலின் சீரும்

---

596. பெயா அலால் உருவம தீர்ந்து. இடை என்ற பெயா மட்டுமே உண்டன்றி, உருவம் இல்லை என்றபடி. பெயர் அலால் உருவம் தீர்வீர் - உங்கள் பெயர் நிற்குமேயன்றி உடல் அழியப்பெறுவீர். அராப் படம் - பாம்புப்படம்.

597. கரபம் - யானை; இங்குத் துதிக்கையைக் குறித்தது. நச்சு இவை - விரும்பத்தக்க இத் தொடைகளுக்கு. பழிக்கப்பட்ட என்று ஓத என வினைகக. அச்சு - அச்சம். இரிதல் - நீங்குதல். அலவன் - நண்டு. அளை - வளை. நண்டு என்றும் அச்சத்துடன் வளையில் புகும் இயல்புடையது; அவ்வலவனே, மெச்சத தக்க முழந்தாளுக்கு ஒப்பாகும் என்று வினவுகின்றார்.

598. சருவு - சரிவு. சருவு அரும் சிறிய பொன் தராசுத் தட்டு - ஒரு பக்கம் சாய்தல் இல்லாததும் பொன்னை நிறுப்பதுமான சிறு தராசின் தட்டு. வெருவுற சுமந்து தேம்புதல் தராசுத் தட்டின் தன்மையாம். பரடு — காற் கரண்டை.

599. மாரன் - மன்மதன். புறங்காலுக்குப் புத்தகம். அரிசனம் - மஞ்சள். கால் - விரலுக்கு மஞ்சள் முனை.

### நகம், குதிகால்

600, மதியினைப் பற்றிப் பத்து வகையுறக் கடைந்து வைத்த
விதியெனப் பொலியும் பத்து விரற்பதி நகத்தின் சீரும்
அதிசயத் தெழும்பொற் பந்தே யாயினி வேறின் றென்று
குதிகுதித் துரைத்தா லுந்த குதிபெருக் குதிகாற் சீரும்

### உள்ளடி, மேனி

601. பிண்டியின் றளிரை மாவிற் பிறங்கிய தளிரைக் கூறின்
மண்டிய தோட மென்று மயங்குமுள் ளடியின் சீரும்
கண்டிக ழருணன் ரேற்றுங் காலத்துக் கதிரும் வெள்க
எண்டிசை யிருளு மாய வெறிகதிர் மேனிச் சீரும்

### அசுரர்கள் இருவரும் அவளைக் கண்டு மோகித்தல்

602. இருவரு மதிமோ கத்திற் றனித்தனி யெய்த நோக்கிப்
பொருவரும் பெருமால் பூண்டார் பொருதிறற் காம வேளும்
வெருவருங் கழைகுழைத்துச் சுருப்புநாண் விரையப் பூட்டி
ஒருவரும் பகழி பல்ல வுடன்றெதிர் தொடுத்தா னன்றே.

603. காமவேள் சரந்து ளைக்கக் கருத்தழிந் தவச மாகி
நாமவம் பரன்மெய் சோர்ந்து நாமிவட் புணரே மாகில்
ஏமமின் மரண மின்றே யெய்திடு மெனவச் சுற்ருன்
ஆமவன் றம்பியாய வம்பனு மனைய ஞனென்.

604. மறையவன் வதன நோக்கி மங்கையை யெனக்கு நல்கின்
நிறைபொரு ளாதி வேட்ட நிரம்பநீ கோடி யென்ருன்
முறைதவி ரம்ப ரப்பேர் மூர்க்கன்மற் றவன்பின் வந்தான்
மிறையற வெனக்கு நல்கி வேட்டவே கோடி யென்ருன்.

---

600. நகத்துக்குச் சந்திரனின் கீற்று. குதிகாலுக்குப் பொற்பந்து. குதிகுதித்து உரைத்தாலும் தகுதி பெரு என்க.

601. கண் திகழ் அருணன். வெள்க - வெட்கமடைய. எட்டுத் திசை இருளும் மாயுமாறு ஒளி வீசும் மேனி என்க.

602. இருவர்; அம்பரன், அம்பன். பொருவு - உவமை. மால் - மயக்கம். கழை - கரும்பு. சுரும்பு நாண் - வண்டுகளாலான கயிறு. ஒருவு அரும் - நீக்க முடி யாத. பகழி - அம்பு. பல்ல - பல. உடலுதல் - மாறுபடுதல்.

603. அவசம் - தன் வசமிழந்த நிலை. ஏமம் - பாதுகாப்பு.

604. வேட்டவை - விரும்பியவை. மிறை - வருத்தம், வேதனை. கோடி - கொள் வாயாக.

### அந்தணன் கூற்று

605. இருவர்தம் மொழியுங்கேட்டே யிணர்த்துழாய் மறைத்து நின்முன்
ஒருமட மயிலை யெவ்வா றிருவர்க்கு முதவா நிற்பேன்
பொருவரு மிருவர் தம்முட் புவியெலா மதிக்கத் தக்க
பெருவிற லொருவற் கேயிப் பெண்ணெனும் பேச்சு விட்டான்.

### இருவரும் போரிடத் துணிதல்

606. மறையவ னறமே சொற்றுன் மற்றிரு வரும்போ ராற்றி
நிறைவலி யடைந்து ளாரே நேரிழைக் குரியா ரென்று
குறையறப் பொருதற் கெண்ணங் கொண்டன ரிறைவன் முன்னுள்
நிறைகரு ணையிற்கொ டுத்த வரமுள நினையா ராஞர்.

### திருமால் கன்னியுடன் புறத்தேகல்

607. இருவரும் பொருது வெற்றி யெய்திய கழற்கால் வீரர்
ஒருவருக் குதவ லுண்மை யொருவர்வென் றெய்துங் காறும்
பருவர லொழிப்பான் கோயிற் பச்சிமத் திருப்பே மென்று
திருமயி லொடுமான் முன்னஞ் செறிந்ததேஞ் சென்ற மர்ந்தான்.

### அசுரர் இருவரும் போரிடல்

608. வேதியன் மடந்தை யோடும் விமலஞர் தளிக்கு மேல்பால்
ஓதிய தானத் துற்ற னுண்மையா னென்று வந்து
சாதியி லவுணர் தாமத் தானத்தின் வடபா லுற்று
மோதினர் செருக்கு மேன்மேன் மூண்டெழ வமர்த்தா ரன்றே.

609. கிட்டின ரொருவர் தம்மை யொருவர்கல் கெழுமுந் திண்டோள்
கொட்டின ருருமே றென்னக் கொதிகொதித் ததிர்த்துப் பொங்கி
முட்டினர் முகவு ரோம முறுக்கினர் சிகையைக் கையால்
எட்டினர் பிடித்தார் செந்தீ யிருவிழி யுதிர நின்றூர்.

---

605. விறல் - வெற்றி. இறைவன் கொடுத்த வரம் : இருவரும் ஒற்றுமை யுடனிருக்கும் வரையில் அவர்களை யாரும் அழித்த லியலாது என்பது. 536-ஆம் பாடல் பார்க்க.

607. பச்சிமம் - மேற்கு. (இப்போதும் பிரமபுரீசர் கோயிலின் மேற்கில் திருமால் கோயில்கொண்டிருந்தல் காணலாம். மயில் - கன்னி. முன்னம் செறிந்த தேம் என்றதனுல் அவ்விடம் திருமாலுக்கு முன்பே உரியது என்ருயிற்று.

609. கல் கெழுமுதல் - கல்லின் தன்மை பொருந்தல். உருமே று - பேரிடி. முக உரோமம் - மீசை.

610. வரைமிசை யிடிவீழ்ந் தென்ன மார்பிடை யறையா நிற்பர்
புரையறப் புவியிற் றள்ளிப் புரட்டுவர் கையி னேந்தி
விரையமே லெறிவர் மண்மேல் வீழ்தலு மிசைக்கொண் டார்ப்பர்
உரைகெழு வீர ராய வொருவரை யொருவ ரம்மா.

611. அடியெடுத் துதைப்பர் தண்ட மங்கையிற் கொடுசு ழற்றி
முடிமிசைப் புடைப்ப ரென்பு முறிதரச் சினந்த டிப்பர்
வெடிபடச் சிரிப்பர் வாளால் வெட்டுவர் பரிசை கொண்டு
கடிதுறத் தகைப்பர் மேன்மேற் கற்களுஞ் சொரியா நிற்பர்.

612. ஒருவர்தங் கழற்கால் பற்றி யொருவர்மண் மிசைப்பு டைப்பர்
ஒருவர்தங் கையைப் பற்றி யொருவர்தாஞ் சுழற்றி வீழ்ப்பர்
ஒருவர்வாய்ச் செந்நீர் சோர வொருவர்வென் னறையா நிற்பர்
ஒருவர்முன் னொருவர் குப்புற் றெய்யெனக் கறித்து நிற்பார்.

## அம்பன் இறத்தல்

613. அடுசம ரிந்த வண்ண மொருதின முழுது மாற்றிப்
படுதிறங் குறித்து மற்றை நாட்பக லிறக்கும் வேலை
உடுபதிக் குடையான் வெம்போர்க் குடையுமம் பரன்சி னந்து
கடுமுர ணம்ப னுவி காற்றிட மடித்தா னன்றே.

614. கன்னிகை யொருத்திக் காகக் கலாங்கொடு சமர்வி ளைத்துத்
தன்னிக ரில்லா வம்பன் றனுயிர் விட்ட காலை
மின்னிகர் மணிப்பூண் மார்பின் விண்ணவர் மிக்கு வந்தார்
எந்நிலத் தவர்க்கும் பாதி யிரிந்தது துயர மென்றே.

615. அடுதிற லம்பன் வெம்போ ராற்றுபு சுடுவன் கான்று
படுநில மதனை யின்னும் படுகள மென்று கூறும்
நடுநிலை யுலக மாங்கு நண்ணவு மச்சம் பூணும
வடுவற வாங்குண் டாகும் வருக்கமு மாறு மன்றே.

---

610. மிசைக்கொண்டு - மேலிட்டு.

611. தண்டம் - தண்டாயுதம். பரிசை - கேடயம். தகைத்தல் - தடுத்தல்.

612. வென் - முதுகு.

613. நாள் இறக்கும் வேலை - மாலை நேரத்தில். உடுபதி குடையான் - சந்திரனைக் குடையாகக் கொண்டவன் : மன்மதன். உடைதல் - நிலைகுலைதல். காற்றிடுதல் - அழிதல். மடித்தல் - மடியச்செய்தல்.

614. கலாம் - கலகம். துயரம் பாதி இரிந்தது என்றிணைக்க.

615. சுடுவன் - இரத்தம். அம்பரில் இன்றும் படுகளம் என்று ஓர் இடம் சுட்டப்படும் ; அங்கு விளைவு ஒன்றும் ஆவதில்லை என்பர். வருக்கம் - தாவரங்கள்.

### அம்பரன் செயல்

616. முன்னவன் மங்கை கொங்கை முயங்குதற் கிடையூ ருய
பின்னவன் றுலைந்தான் வேறு பெறுமிடை யூறென் றின்ருல்
அன்னவள் பாற்போ யின்னே யம்பனை வென்ருற் போலக்
கன்னல்வே டனையும் வெல்வே னெனக்களித் தெழுந்து வந்தான்.

### கன்னிகை பேருருவங் கொள்ளல்

617. வந்தவன் பனத்தி யாய வஞ்சகக் கன்னி முன்போய்ச்
சந்தமென் முலைக ளாரத் தழுவுவான் முயலு முன்னம்
நந்தமை யாளுங் கன்னி நலங்கொளவ் வுருவ மாறிப்
பந்தமி லுருவம் வேறு கொண்டனள் படிவா னஞ்ச.

618. முதிர்சினத் தந்த ஞான்று முளைத்தெழு மாலா லங்கொல்
அதிர்தர வுலக மெல்லா மழன்றெழும் வடவை யேகொல்
பிதிர்விலிவ் வுருவ மென்று பேதுற்றெவ் வுயிரு மஞ்சக்
கதிரவன் றலைச்சூட் டாகக் கன்னிகை யெழுந்து நின்ருள்.

619. விழியெழு கோபத் தீயான் மேதினி மரங்க ளெல்லாம்
ஒழிதரு சாம்ப ராக வும்பரா தியர் நடுங்கிக்
கழிவெரூஉ வடைய நோக்கிக் கன்னிகை யஞ்ச லென்று
பழிதபு கைய மைத்தம் பரன்முக நோக்கி நக்காள்.

620. முறைதபு காமம் பூண்டு மூவுல கத்துஞ் சென்று
நிறைதப வலிந்து பற்றி நேரிழை யாரை யெல்லாம்
குறையறப் புணரு மூட குறித்தவா றென்னை வந்து
மிறையறத் தழுவு கென்ருள் வெடிபட முழங்குஞ் சொல்லாள்.

621. வெடிபட முழங்குஞ் சொல்லும் பிறையென விளங்கும் பல்லும்
முடிமிசை வடவைத் தீயே முளைத்தெனப் பொலிக துப்பும்
வடிவிழி யிறைக்குந் தீயுங் கோரமாம் வடிவு நோக்கிப்
படியினம் முயிர்கொள் கூற்றிப் படிவென வவுணன் றேர்ந்தான்.

---

616. கன்னல் வேள் தனையும் வெல்வேன் எனப் பிரிக்க.

617. பனத்தி - பார்ப்பனத்தி. நந்தமை ஆளும் கன்னி என்றது காளியை. பந்தம் இல் என்றதனுல் அளவில் கட்டுப்படாத பேருருவம் கொண்டமை கூறப் பட்டது. படி வான் - பூமியும் ஆகாயமும்; படிவான் என ஒரு சொல்லாக்கி, தன்னை அணையவருபவன் என்றலும் ஆம்.

618. ஆலாலம் - பாற்கடலிற் பிறந்த விஷம். வடவை - வடவை என்னும் பெருங் கனல் - தலைச்சூட்டு - தலை அணி.

619. உம்பர் ஆதியர் - தேவர் முதலியோர். வெரூஉ - அச்சம் - கையமைத்தது உம்பராதியரை நோக்கி.

621. கதுப்பு - கூந்தல். கூற்று - இயமன்.

## அம்பரன் கொண்ட அச்சம்

622. தழுவுதல் வல்லை யாயிற் றழுவுக தழுவு கென்று
முழுதுல கீன்ற கன்னி மொழிந்தடி பெயர்த்தா ளஞ்சிப்
பழுதுவந் தடைந்த தென்ன பண்ணுவ மென்றுட் கொண்டு
கழுதினு நிலையி லானுய்க் கால்விசைத் தோட வுள்வான்.

623. அடிபெயர்த் திடுத லோடு மழற்கொழுந் தோடி வந்து
முடிகெழு சிகையை மற்றை முகவுரோ மத்தைத் தீத்த
தடியுடல் சற்று நின்றுற் சாம்பராய் விடுமே யென்று
மடிதலற் றுய்வா னெண்ணி வடகிழக் கோடி னுல்.

624. எங்குநீ யோடி யுய்வா யடவென வெங்க ளம்மை
அங்குநின் றவற்று ரத்தி விடாமலைங் கடிகை சென்றுள்
மங்குத லடைந்த தென்று மற்றவன் றிரும்பி நோக்கத்
தங்குமற் றனையான் மரர்பிற் றுளெடுத் துதைத்தா ளன்றே.

## அம்பரன் இறத்தல்

625. உதைபட லோடும் பெம்மா னுதையுண்ட காலன் போலப்
பதைபதைத் தாங்கு வீழ்ந்தான் பாரெலாம் புகழ்மா காளி
சிதைதர வயிறு கீண்டு செறிகுடர் மாலை பூண்டு
புதையுயிர்த் துயரோ டன்னு னுயிரையும் போக்கி னுளே.

626. அம்பர னிறத்த லோடு மவன்றம ராகி மண்ணில்
அம்பரத் தினின்மே வுற்ற வவுணர்யா வரையு மாய்த்தாள்
அம்பரக் கண்ணி னுரோ டனைவரு முவந்தா ரந்த
அம்பரற் செகுத்த தான மம்பர கரப்பேர் மேவும்.

## அம்பரன் சுவர்க்கமடைதல்

627. மும்மையா ருலகு மீன்ற முகிழ்முலை கூற்றிற் றுேன்றும்
அம்மைதாள் படுத லாலே யம்பர நாமம் பூண்ட
செம்மையி லவுணன் முன்னந் தீவினை செய்தா னேனும்
வெம்மையில் சுவர்க்க லோக மேவிவீற் றிருந்தா னன்றே.

---

622. கழுது - பேய்.

623. தடி - மாமிசம். மடிதல் அற்று - சாவில்லாமல்,

624. அவன் துரத்தி - அவனைத் துரத்தி. ஐங்கடிகை - ஐந்து நாழிகை தூரம். தாள் - கால்.

625. பெம்மான் - சிவபிரான்.

626. அம்பரம் - ஆகாயம். அம்பரக் கண்ணினுர் - தேவர்கள். அம்பரகரம் அம்பரன் வதையுண்ட இடம். இது அம்பரிலிருந்து வடகிழக்கே உள்ளது; அம்பரகரத்தூர் என இப்பொழுது வழங்கும்.

628. அயனரி மகவா ஞாதி யமரர்க ளுவகை பூத்தார்
வியன்மலர் மாரி பெய்தார் மிகுபய மெவர்க்கு நல்கும்
இயலுரு விதுதீர்ந் தியாரு மிறைஞ்சிடு முருக்கொ ளென்று
தயன்மல ரடிவீழ்ந் தேத்த வவ்வண்ணஞ் சமைந்தா ளன்றே.

தேவர் முதலியோர் தேவியையும் இறைவரையும் பூசித்தல்

629. அம்பர்மா நகரின் கண்ணு மம்பர கரத்தூர்க் கண்ணும்
உம்பரா தியர்மா காளி பூசனை யுஞற்றி யம்பர்
நம்பர்பா தமுமி றைஞ்சி நல்லருள் பெற்றுப் போனார்
இம்பர்நா டனைத்தும் பூசை யியற்றிவேண் டுவபெற் றுய்யும்.

திருமால் கோயில் கொள்ளல்

630. நம்பர னருளே போற்றிக் கோயின்மேற் றிசைப்பா னண்ணரி
அம்பரன் மடியுங் காறுந் தனியமர் திறத்தான் மாலை
உம்பரன் பளப்பி லாம லோங்கவீற் றிருந்தா னென்பர்
இம்பரன் பருக்கு வேண்டும் வரமளித் திருக்கு மாங்கே.

631. அருள்பொழி திருமா காளி யமருமா லயத்தி னோர்சார்
வெருடரு திகிரி யங்கை வீற்றிருந் தானு மேவும்
இருடபு மிவரை யேத்தி யெம்பிரா னம்ப ரீசன்
பொருள்பெறு பதமுந் தாழ்வா ரெண்ணிய பொருந்தி வாழ்வார்.

வேறு

632. ஒருபிரம புரீசருக்குக் குணதிசையில் யானைமுகத் தொருகோட் டண்ணல்
மருவுவனீ சானதிசைக் கயிலாய நாதரென்று மருவி வாழ்வார்
அருவுருவப் புவனேச ரழற்றிசைமே வுவர்மேல்பா லருச்சு னத்தின்
திருநிழற்கீழ் மாகாளே சுரரிருப்பா ரிவர்திறமேற் செப்பா நிற்பாம்.

---

628. மகவான் - இந்திரன். உரு இது - இக்காளியுருவம். தயல் - தையல்; "தயல் வளர் மேனியன்" (திருக்கோ. 117)

629. மாகாளிக்கு அம்பரிலும் அம்பரகரத்தூரிலும் கோயில்கள் உள்ளமை சுட்டப் பெற்றது.

631. திகிரி அங்கை வீற்றிருந்தான் - திருமால். இருள் தபும் - அஞ்ஞான இருட்டைப் போக்கும். திருமால், கோயிலின் மேற்றிசையில் காளி கோயில்கொண்ட இடத்தில் தாமும் அமர்ந்தார் என்று கூறப்பெற்றது.

632. குணதிசை - கிழக்கு. யானை முகத்து ஒரு கோடு அண்ணல் - விநாயகர். ஈசான திசை - வடகிழக்கு. அழல் திசை - அக்கினி திக்கு; தென் கிழக்கு. அருச்சுனம் - மருதமரம்,

633. தென்றிசையிற் பூரணைபுட் கலையொடம ருவன்சாத்தன்
[சிறப்பா மம்பர்
என்றியம்பும் பெயர்வரலா றெடுத்துரைத்தாம் புவனேசத்
[தெம்மை யாளும்
நன்றியலு மாயவன்றோற் சட்டைபுனைந் தொருவடுக
[நாதன் மேவும்
மின்றிகழும் பெருங்கருணை யனையபிரான் வரவெடுத்து
[விளம்பு வாமால்.

அம்பர்ப் படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம் 131)

---

633. சாத்தன் - ஐயனார்; அவர் தேவியர் பூரணை, புட்கலை என்பார். வடுக நாதன் - வைரவன். வைரவக்கடவுள் மாயவன் தோலைச் சட்டையாகப் புனைந்தமை: திருமால் வாமனவதாரமெடுத்து, மாவலியிடம் மூவடிமண் தானமாகப் பெற்றதும் திரிவிக்கிரமன் என்ற பேருருவங் கொண்டு எல்லாவுலகங்களும் தன் ஈரடியுள் அடங்க அளந்த பின், மிக்க செருக்குற்று, உலகங்களுக்கு இன்னல் விளைக்க, அதுகண்டு அஞ்சிய தேவர்கள் சிவபெருமானையடைந்து முறையிட்டனர். சிவபெருமான் உடனே வைரவரை நோக்கி, நீ சென்று வாமனன் செருக்கையடக்கி நல்வழிப்படுத்துக எனக் கட்டளையிட, வைரவர் சென்று எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் வாமனன் வசப் படாததனால், சினங்கொண்டு அவனை அறைந்து கொன்று அவன் தோலையுரித்துக் கருஞ் சட்டையாக அணிந்தனர் என்பது புராண வரலாறு. இவ்விரண்டு பாடல்களாலும் பிரமபுரீசுவரர் ஆலயத்திற்குள், கிழக்கே விநாயகர், ஈசானதிசையில் கயிலாயநாதர், அக்கினிதிசையில் புவனேசர், மேற்கில் மாகாளேசுவரர், தெற்கில் சாத்தன் ஆகியோர் கோயில் கொண்டுள்ளமையும், புவனேசத்தில் வைரவர் இருத்தலும் கூறப்பெற்றன.

# 10. வைரவப் படலம்

### சங்காரசீலன் தவம்புரிந்தது

634. பழிதபு மா தவத்திற் பன்னெடு நாட்பயின்ருன்
பொழியரு ணணிபடைத்த புலத்திய மாமுனிவன்
வழியவு ணருக்கிறையாய் வந்தவ னுருமேற்றின்
தெழிகுரற் சங்கார சீலனெ னும்பெயரான்.

635. அன்னவ னிமையவரை யடுத்தொரு நூருண்டு
தன்னமு முணவின்றித் தாமரை மலர்மேலான்
முன்னவன் றனைக்குறித்து முயறவம் புரிதரலும்
பொன்னவிர் மென்றூவி யோதிமப் புள்ளேறி

### பிரமன் வரம் ஈந்தது

636. அனையவன் முன்வந்தா னதுதெரிந் துடனெழுந்து
புனைமலர் பலதூவிப் பொன்னடி மிசைவீழ்ந்து
கனைகடற் புவிதந்த காரண வெனத்துதித்தான்
இனைவர நீகுறித்த தியம்பரு ளுதுமென்ருன்.

637. முனைகெழு சமராடி முழுதுல கமும்வென்று
புனைதரு பெருவென்றி பூணவு மமரரொடு
தனைநிகர் மகவானுஞ் சாற்றிடு மற்றையரும்
நினையுமென் வழிச்செலவு நீவரந் தருகென்ருன்.

638. புரிதரு மரியதவம் போற்பிறி துதவுவதோ
விரிமலர் மிசையண்ணல் வேட்டவை முழுதளித்துக்
கரிசறு தன்னுலகம் புக்கனன் களிப்படைந்து
தெரிதிறற் சங்கார சீலனந் நின்றெழுந்தான்.

---

634. தபு - நீங்கிய. அவுணர் - அசுரர். உரும் ஏற்றின் தெழிகுரல் - பேரிடி யோசை ஒத்து முழங்கும் குரல்.

635. தன்னமும் - சிறிதும். தாமரை மலர் மேலான் முன்னவன் - பிரமன். தூவி - உள்இறகு. ஓதிமப் புள் - அன்னப் பறவை. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

636. அனையவன் - நான்முகன். இனை - இன்ன. அருளுதும் - கொடுப்போம்.

637. மகவான் - இந்திரன்.

638. கரிசு - குற்றம்.

### சங்காரசீலன் தேவர்களை எதிர்த்தல்

639. கரிபரி யிரதம்விறற் கழலுடை வயவரொடும்
பரிவகல் சங்கார சீலனெ னும்பதகன்
விரிதிற லமராடி வெல்லுத லுட்குறித்துப்
புரியம ராவதியை வளைத்தனன் போயன்றே.

640. வாய்தொறு மமர்வீரர் வலியழி தரப்புடைத்துப்
பாய்தருக் குலமெல்லாம் பற்றுபு முறித்தமரர்
தோய்தரு மடவாரைத் தொடர்ந்தலைத் தனனின்னும்
ஆய்வதற் கரிதாம்பல் குறும்புக ளாற்றினனால்.

641. விண்ணவ ரதுதெரிந்து வெருக்கொடு வேந்தாய
அண்ணலை யடிவணங்கி யவுணன்வந் திடர்புரியும்
வண்ணமொன் றொழியாமே வகுத்தலுஞ் சினங்கொண்டு
கண்ணக னழலாதிக் கடவுள ரொடுமெழுந்தான்.

642. வெள்ளிய களிறுந்தி வேந்தன்வச் சிரமேந்தி
ஒள்ளிய முடிவானோ ரொடுமமர்க் களமடுத்தான்
துள்ளிய திறலவுண வீரனுஞ் சுடுபடைகை
அள்ளிய தானையொடு மெதிர்த்தன னார்த்தன்றே.

### தேவாசுரப் போர்

643. மழைமுகி லிடிப்பதென வார்முர சங்குளிறக்
கழைசுளி களியானை யாதிய நனிகலிப்ப
விழைபடைக் கலமனைத்தும் வெயிலினும் வில்வீசத்
தழையிரு வகையாருஞ் சார்ந்தன ரமர்புரிவார்.

644. தடிகரங் கொடுசுழற்றித் தலைமிசை மோதிடுவார்
கொடிறுடை தரப்புடைப்பார் குந்தங்கொண் டுரந்துளைப்பார்
படியதிர் தரவதிர்ப்பார் பாசம துறவீசிப்
பிடிபிடி யெனநிற்பார் பெரும்பர செறிதருவார்.

---

639. வயவர் - வீரர்; காலாட்களைக் குறித்தது. பதகன் - பாவி. அமராவதி - இந்திரனுடைய நகரம்.

640. வாய் — இடம். தருக்குலம் - கற்பகம் முதலிய ஐந்தருக்களின் கூட்டம். அரிது ஆம் பல் குறும்புகள் எனப் பிரிக்க.

641. வெருக்கொள்ளல் - அச்சங் கொள்ளுதல். வேந்து - இந்திரன். வகுத்தல்- கூறுதல். அழல் ஆதி கடவுளர் - அக்கினி முதலிய தேவர்கள். எழுந்தவன், இந்திரன்.

642. வெள்ளிய களிறு - ஐராவதம். வேந்தன் - இந்திரன்.

643. குளிறுதல் - ஒலித்தல். கழை - மூங்கிற்கோல். கலித்தல் - முழங்குதல். வில் - ஒளி.

644. கொடிறு - கதுப்பு. குந்தம் - ஓராயுதம். பரசு — கைக்கோடரி.

645. கரியொடு கரிமுட்டக் கலகல வொலிக்குந்தார்ப்
பரியொடு பரிமுட்டப் பாய்பரி யுருள்பூண்ட
கிரியொடு கிரிமுட்டக் கெடலரும் வயவரெனும்
அரியொடு மரிமுட்ட வமர்நடந் ததையன்றே.

646. வாளொடு கரமற்றூர் சிற்சிலர் வலயங்கொள்
தோளொடு தாரற்றூர் சிற்சிலர் துணிவெய்தித்
தாளொடு கழலற்றூர் சிற்சிலர் தமக்கமைந்த
நாளொடு முயிரற்றூர் சிற்சிலர் நலிவுற்றே.

647. முடிதுணி பட்டாரு மொய்வலிப் பட்டிகைசால்
கடிதுணி பட்டாருங் கல்லுறழ் தோளணிபொன்
தொடிதுணி பட்டாருந் தொடுகழல் கிடந்திமைக்கும்
அடிதுணி பட்டாரு மாயின ரிருவருளும்.

648. ஆடின குறைத்தலைக ளாடின பேய்க்கணங்கள்
கூடின பருந்தெருவை கூடின கொடியிகலன்
பாடின பறந்தலையைப் பாடின வமர்த்தொழிலை
ஓடின பெருநெய்த்தோ ரோடின வவுணர்குழாம்.

வேறு

649. விறலுடைத் தனது சேனை வெந்கொடுத் தோடல் கண்டு
திறலுடை யவுண னங்கை மறித்தெழூஉச் சீற்றங் கொண்டு
மறலுடைத் தண்டு போலோர் தண்டுகைக் கொண்டு வானம்
பெறலுடைப் படையுட் புக்குச் சாடினன் பெருங்கூற் றென்ன.

650. சாடுதல் கண்டு சில்லோர் தலைத்தலை மயங்கி நின்றூர்
வீடுத லுற்றூர் போல வீழ்ந்துசில் லோர்கி டந்தார்
ஆடுத லொழிந்து சில்லோ ரவசமே யானூர் சில்லோர்
ஓடுத லுற்று ரன்ன துணர்ந்தன னும்பர் கோமான்.

---

645. உருள் பூண்ட கிரி - தேர். அரி - சிங்கம். நடந்ததை : ஐ சாரியை.

646. வலயம் - தோள்வளை. தார் - மாலை. அமைந்த நாள் - ஆயுள்.

647. துணிபடுதல் - துண்டமாதல். பட்டிகை - அரைக்கச்சை, கடி - இடை.

648. எருவை - கழுகு. கொடி - காக்கை. இகலன் - நரி. பாடியவை பேய் கள். நெய்த்தோர் - இரத்தம்.

649. மறல் - இயமன்.

651. அடுசினங் கொண்டு வேந்த னருகுற நின்ற தீயை
முடுகின னனையான் சென்று முழுவலிச் சூலங் கொண்டு
கடுவலி யவுணர் தம்முட் கழிந்தன ரயுதர் மாயப்
படுசமர் புரிந்தான் றீய பாதக வசுரன் கண்டான்.

652. என்னுடைக் கோபத் தீமு னெதிருமோ வித்தீ யென்று
கொன்னுடைத் தண்டங் கொண்டு குதிகுதித் தோடி வந்து
பொன்னுடைச் சென்னி மேலாற் புடைத்தன னேங்கி யந்தோ
மின்னுடைக் கனலி வீழ்ந்தான் விண்ணவர் வெருக்கொண்
[டாரால்.

653. அதுதெரி மகவான் மற்றை யறுதிசை யரையு மேவக்
கதுமெனக் காற்றெ ழுந்தை யாயிரர் கலங்க மாய்த்து
முதுசினத் தவுணன் றண்டான் மொத்திட மூர்ச்சை யாகி
இதுபடற் காமோ வென்று ளெண்ணின னேட்டங் கொண்டான்.

654. வளமருப் பெருமை யூர்தி வல்லவந் தவுணர் தங்கள்
கிளைபல சவட்டி வீழ்த்துக் கெடலரு மவுணன் சீறி
விளைசெரு நன்ரு லென்று வெவ்விய முசலங் கொண்டு
களைதவ வடிக்கப் பட்டுக் கால்விசைத் தோடி னனே.

655. வலிகெழு வருணன் புக்கு வாளுடை யவுணர் சேனை
மெலிதரச் சிலச வட்ட வெய்யசங் கார சீலன்
ஒலிகழ லார்ப்ப வந்து பரிகத்தா லுடன்று வீசப்
பொலிவழிந் தமருக் காற்றே னெனப்புகன் றோடி னனல்.

656. தனபதி முதலா வுள்ள மற்றையர் சார்ந்து தீயோன்
இனமடிந் தொழியத் தம்மா லேன்றமட் டுஞ்ச வட்டி
அனலெனக் குந்த மேந்தி யவுணன்செய் போருக் காற்றார்
உனல்பிறி தில்லை யென்று வெரிந்கொடுத் தோடி னரே.

---

651. அயுதர் - பதினாயிரவர்.

652. கொன் - அச்சம். கனலி - அக்கினி.

653. அறுதிசையர்; தானும், அக்கினியும் நீங்கிய ஆறு திசையர். காற்று - வாயு.

654. எருமை ஊர்தி - இயமன். முசலம் - ஒரு போர்ப்படை; இருப்புலக்கையுமாம். களை தவ - அழகு கெட.

655. பரிகம் - ஓர் இருப்பாயுதம்; எழுமரமும் ஆம்.

656. தனபதி - குபேரன். குந்தம் - ஓர் ஆயுதம். உனல் - உன்னல்; கருதுதல்,

657. எழுபரித் தேர்க டாம்பன் னிருவரெண் வசுக்கண் மற்றை
முழுவலி வானோ ரியாரு மொய்த்தனர் நெடும்போ ராடிக்
கழுமுண்முற் கரங்குந் தத்தாற் காய்வலி யவுணன் சாடப்
பழுதுவந் துற்ற தென்று பயந்தன ரோடி னரே.

அவுணனும் இந்திரனும் பொருதல்

658. எதிர்த்தவ ரெல்லாம் வெந்நிட் டிரிதலு மிரியா வொள்வாள்
விதிர்த்தவ னாகி வெய்யோன் வேந்தன்முன் மேவ மேன்மேல்
அதிர்த்தமற் றவனும் வெள்ளை யானைமே லிவர்ந்து வெற்புப்
பொதிர்த்தவச் சிரங்கை யேந்திப் போர்பெரி தாற்ற லுற்றான்.

659. மழைமதக் கரிகள் பல்ல வயத்தவாம் பரிகள் பல்ல
தழையொளி யிரதம் பல்ல தவாவலி வயவ ரோடு
குழைதர நூழி லாடிக் கோனுடை யவுணன் சென்னி
புழைபட வயிரங் கொண்டு புடைத்தனன் வான வேந்தன்.

660. மலைமிசை யிடிவீழ்ந் தென்ன வன்சத கோடி வந்து
தலைமிசைத் தாக்க லோடுஞ் சங்கார சீல னென்பான்
நிலைகுலைந் தயர்ந்தி ரண்டு நாழிகை நேர மண்மேல்
புலையுடல் கிடத்திச் சோர்ந்து பொன்றினான் போற்கி டந்தான்.

661. மெலிவடைந் தவுண ரெல்லா மெலிந்தன ரழுது சோர்ந்தார்
பொலிவடைந் தமர ரெல்லாம் புயந்தடித் திடநின் றார்த்தார்
நலியுடல் வருத்தந் தீர்ந்து நான்மருப் பியானை யூர்தி
வலியினை வியந்தெ ழுந்தான் வயங்குசங் கார சீலன்.

இந்திரன் தோற்றல்

662. எழுந்துநின் வீர மெல்லா மின்றறி குவலெலன் றோதி
உழுந்துருண் முன்ன நாற்கோட் டும்பலின் மேற்குப் புற்றுச்
செழுந்துணைக் கரங்க ளோச்சித் தேவர்கோ னிறத்திற் குத்த
விழுந்துமூர்ச் சித்தா னஞ்சி வெள்ளிய களிற்றி னின்றும்.

657. கடாம் - கடாவும் - செலுத்துகிற பன்னிருவர் - சூரியர். கழு, முள், முற்கரம், குந்தம் எனப் பிரிக்க. கழு - சூலம். முள் ; முள்வடிவாகச் செய்த ஒருவகை ஆயுதம். முற்கரம் - முசுண்டி என்னும் ஆயுதம ; பெரிய தடி ; சம்மட்டியுமாம். குந்தம் - எறிவேல் ; வேலும் ஆம்.

658. வெய்யோன் - கொடியவனான அசுரன். வெற்பு பொதிர்த்த வச்சிரம் - மலைகளை முறித்த வச்சிராயுதம்.

659. பல்ல - பல. நூழிலாடுதல் - கொன்று குவித்தல்.

660. சதகோடி -- (நூறுமுனைகளுடைய) வச்சிராயுதம். பொன்றுதல் - சாதல்.

662. உம்பல் - யானை. நிறம் - மார்பு. களிற்றினின்றும் விழுந்து மூர்ச்சித்தான் என்றியைக்க.

663. அறிதிற னின்றிச் சோர்ந்த வண்ணறன் வண்ணங் கண்டு
மறிதலில் வலியோ ஞய மாதலி யோடி வந்து
செறிதர வெடுத்த ணேத்தோர் தேத்தொளித் தனன்வாள் வீசி
எறிவலி யவுணன் சங்க மெடுத்துவாய் வைத்தார்த் தானே.

சங்காரசிலனின் வெற்றி

664. கற்பக நாடு முற்றுங் கைவசப் படுத்திக் கொண்டு
வெற்பக நாணுந் தோளான் விசயமெங் கணுங்கொண் மாண்பால்
பொற்பக மகலாச் சர்வ விசய னென்றொருபேர் பூண்டு
வற்பக லாது வாழ்ந்தான் வானவர் தளர்ந்தா ரன்றே.

இந்திரன் பிரமனிடம் முறையிடல்

665. நிலைதளர் வான வேந்த னேரிழை மடவா ரோடும்
மலைவில்புத் தேளி ரோடு மலரவன் முன்னஞ் சென்று
சிலையென வணங்கித் தாழ்ந்து தேவநின் வரத்தின் மாண்பால்
தலையமை வலியோ ஞய சங்கார சீல னென்பான்

666. வந்துகற் பகநன் ஞட்டை வளைத்தம ராடி வென்று
நந்துமென் றனைத்து ரந்து நலிவிலா திருக்கின் ருன்யான்
எந்துசெய் குவதென் றேங்கி யிருக்குமோ ரிடமுந் தேரேன்
முந்துநின் சரணஞ் சார்ந்தேன் மொழிந்தன ஞுண்மை யென்ருன்.

பிரமன் உபதேசம்

667. மகபதி வார்த்தை யோர்ந்த மலரவ னெடும்போ தாய்ந்து
சகமகி ழம்பர் மேவித் தமரொடுந் தம்பி ரானை
நகமலர் தூவிப் போற்றி நன்கினி தமர்வர் யென்னில்
அகமலி யவுண ஞங்கு மணுகுவ னன்ன காலை

668. மதிமுடிக் கணிந்த பெம்மான் வயிரவப் பிரானைக் கொண்டு
கொதிதிற லவுண ஞவி குலைத்திடு மதற்கு மேலுன்
பதியடைந் தினிது வாழ்வாய் பகலருந் தமரி ஞேடும்
திதியமைந் தென்று கூறித் திசைமுகன் விடுத்தா னன்றே.

---

663. மாதலி - இந்திரனது தேர்ப்பாகன். தேத்து - இடத்தில்.

664. பொற்பு - அழகு. வன்பு அகலாது - வலிமை மாருமல்; வற்பு – வலித்தல் விகாரம்.

665. சிலை யென வணங்குதல்; அழகிய பிரயோகம்.

666. துரந்து - துரத்தி. எந்து செய்வது - என்ன செய்வது.

667. ஆய்ந்து - ஆராய்ந்து. நக - விளங்க. இது அடுத்த செய்யுளோடு இயையும்.

668. பகல் அரும் தமர் - பிரித்தற்கு அரிய சுற்றத்தார். திதி அமைதல் - நிலை பெறல்.

### இந்திரன் அம்பர் சென்று இறைவனைவழிபடல்

669. திசைமுகன் விடுத்த லோடுஞ் செறிபெருந் தமரி னோடும்
இசைகெழு மகவா னம்ப ரெய்தின னூழி நாளும்
அசைவற வமருந் தீர்த்த மன்னமாம் பொய்கை மூழ்கி
நசையொடு பிரம லிங்க நம்பனைப் பணிந்தா னன்றே.

### இந்திரன் பூசை இயற்றல்

670. மண்முழு தீன்ற வம்பு வனமலர்க் குழலா டாளும்
எண்முழு தவாவப் போற்றி யிராப்பக லச்ச மின்றிக்
கண்முழு தியைய மேனிக் கடவுணன் கமர்ந்தா னென்ப
பண்முழு தவாவு மஞ்சொற் சசிமுதற் பல்லா ரோடும்.

### நான்முகன் செய்த சூழ்ச்சி

671. இவணிலை யின்ன தாக விண்டைமா மலர்மேல் வைகும்
அவனுயர் மகதி வீணை யருண்முனி வரனைக் கூவி
எவனம ருலகங் கைக்கொண் டினிதுற வாள்வா னன்னோன்
பவனம ரம்பர் மேவப் பண்ணுதி யின்னே யென்றான்.

### நாரதன் செயல்

672. என்றலு மிருகை கூப்பி யெண்ணிய வாறே செய்வல்
ஒன்றவெம் பெருமா னேயென் றோதிநா ரதன்வி ரைந்து
சென்றனன் றிறற்சங் கார சீலன்றன் முன்னர்ப் புக்கான்
நன்றமைப் பவன்போ லாசி நகைமுகத் தொடுந வின்றான்.

673. இருக்கவென் றனையான் கூற விட்டவா தனத்தி ருந்து
பெருக்கமாய் நின து கீர்த்தி பிறங்கிய தெங்கு மென்றான்
சருக்கரைக் குன்றி னின்ற தேன்மழைத் தாரை யன்ன
திருக்கிளர் வீணைச் செல்வா வதிசயஞ் செப்பு கென்றான்.

---

670. எண் முழுது அவாவ - நினைப்பு முழுமையும் விருப்பத்துடன் பொருந்த. கண் முழுது இயையும் மேனி கடவுள் - இந்திரன். சசி - இந்திராணி.

671. இண்டை மலர் - தாமரை மலர். மகதி வீணை முனி - நாரதன். எவன்... அன்னோன் ; வடமொழி வழக்கு. பவன் - சிவபெருமான். சங்காரசீலன் அம்பரை அடையச் செய்க என்று நான்முகன் நாரதனுக்குக் கூறினான்.

672. நன்று அமைப்பவன் போல் ஆசி நவின்றான் என்க.

673. சருக்கரைக் குன்றின் தேன் மழைத் தாரை அன்ன ; ஒரு பழமொழி.

674. அதிசய முண்டு கூறற் கச்சமு முண்டென் செய்கேன்
அதிர்கழ லண்ண லேயென் றறைதலு நீயஞ் சாதி
மதிகுறை நிறத்தா யுள்ள வாறெலா முரைத்தி யென்ன
மதியிடைக் குய்யம் வைத்த மாமுனி வரனு ரைப்பான்.

675. வானவர் கணங்க ளோடு மங்கையர் கூட்டத் தோடும்
தானமுன் பளித்த வேந்தன் சதுமுக னனேக காலம்
மோனநற் றவமி யற்றி முன்னிய தடைந்த தானம்
ஆனது மண்மே லன்ன தம்பராங் கமர்ந்து வைகி

676. வலிகெழு நின்னை நாளும் வயங்குநின் கிளையை மாய்க்கும்
பொலிவரங் கொள்வான் முன்னிப் புராணனைப் பூசை யாற்றி
மெலிவற வமர்வா னின்னு மிகநினை யவம திப்பான்
கலிபடை யொடுசென் றின்னே கடிதனன் றென்று போனான்.

சங்காரசீலன் அம்பர் அடைதல்

677. முனிவரன் போன பின்பு முனிவுமா னமுமிக் கோங்கப்
பனிமலர்ப் பொழில்சூ ழம்பர்ப் பதியினை வளைந்து வானோர்
புனிதன்செய் விரத மாற்றல் புரியாது புசியே னென்று
தனியொரு விரதம் பூண்டு படையொடுந் தரைவந் துற்றான்.

678. தரையக மருவி யம்பர்த் தனிப்பெரு நகரஞ் சூழ்ந்து
புரையறத் தவஞ்செய் கின்ற பூசுரர் குழாத்தைப் பற்றிக்
கரைதர வலைத்தான் வானோர் கணத்தொடும் புனிதன் றேர்ந்து
பரையொரு பாகன் முன்போய்ப் பணிந்தனன் பழிச்ச லுற்றான்.

இந்திரன் துதி

679. பூரண முதலே போற்றி பூரணா நந்த போற்றி
வாரண வுரியாய் போற்றி வாரணஞ் சடையாய் போற்றி
காரண விமலா போற்றி காரணங் களத்தாய் போற்றி
ஆரணப் பொருளே போற்றி யம்பர்வாழ் பரமா போற்றி.

---

674. நிறம் - ஒளி; இயல்பும் ஆம். மதி குறை நிறத்தாய் - பிறர் மதியைக் குறைக்கும் ஒளியை உடையவனே. மதியிடைக் குய்யம் வைத்தல் - புத்திமதி கூறுவதில் வஞ்சத்தையுட்கொண்டு கூறுதல்.

675. தானம் முன்பு அளித்த வேந்தன் - (உனக்குத் தோற்றுத்) தன் இடத்தை முன்பு அளித்த இந்திரன். சதுமுகன் - பிரமன்.

676. புராணன் - சிவபிரான். நினை - நின்னை. கடிதல் - நீக்குதல்.

677. முனிவு - கோபம். மானம் - தற்பெருமை; இலச்சையும் ஆம். தனியொரு விரதம்; விரதம் - சபதம்.

678. கரைதருதல் - கதறுதல். பரை - தேவி. பழிச்சல் - துதித்தல்.

679. வாரண உரி - யானைத் தோல். வார் அண் அம் சடை - நீர் பொருந்திய அழகிய சடை. வார் - நீர்; நீட்சியும் ஆம். கார் அண் அம் களத்தாய் - கருமை சேர்ந்த அழகிய கண்டத்தை உடையவனே! ஆரணம் - வேதம்.

680. அருந்தவர் முதலே போற்றி யளவிலா நிறைவே போற்றி
மருந்தன மொழியாள் வம்பு வனமலர்க் குழலோர் பாகத்
திருந்தருள் சுரக்க வைத்த விணையிலாப் பரம போற்றி
பெருந்தகைப் பிரானே போற்றி பிரமபு ரீசா போற்றி.

681. திரிபுர முழுது நீருய்ச் சிதைதர நகைத்தா யோலம்
அரிமக னுடலஞ் செந்தீ யுணுக்கொள வமைத்தா யோலம்
பரிவற வந்த காலன் பதைத்திட வுதைத்தா யோலம்
பிரியமிக் கெவருஞ் சாரும் பிரமபு ரீசா வோலம்.

682. தீயவல் லசுர ஞலே சிதைப்புண்டே ஞேல மோலம்
பாயவென் பொருள னைத்தும் பற்றின ஞேல மோலம்
காயமே லடியேன் செல்லுங் கணக்கிலே யோல மோலம்
மாயமன் ஞெழித்த தேத்தும் வளைத்தன ஞேல மோலம்.

683. சற்றுநீ கருணை செய்யா விடினவ ஞெருவன் ருனே
முற்றும்வாய் மடுப்பா ஞேல மூவுல குடையா யோலம்
பற்றுவே றின்றி நின்ருள் பற்றினே ஞேல மோலம்
கற்றுமே தகவுற் ருர்தங் களைகணே யோல மென்ருன்.

கடவுள் கூறல்

684. முறையிடு மோலங் கேட்டு முன்னவன் கருணை பூத்துக்
கறையடி யுகைப்பான் முன்னர்க் காட்சிதந் தருளி யஞ்சேல்
இறையள வவுணன் மாய வெறிவிப்பா மென்று கூறி
அறைகழல் வடுகப் புத்தே ளாவயின் வரல்கு றித்தான்.

வைரவக்கடவுள் தோன்றுதல்

685. நினைத்தலும் வடுகப் புத்தே ளாவயி னேரே தோன்றி
நனைத்தள மலர்ப்பொற் பாத நன்குதாழ்ந் தெழுந்து நின்று
கனைத்தவண் டிமிருங் கொன்றைக் கண்ணியா யடியேன் செய்யும்
வினைத்திற னருளல் வேண்டும் வேண்டுமென் றிரந்து நின்ருன்.

---

681. அரி மகன் - திருமாலின் மகனை மன்மதன்; இங்கு மன்மத தகனம் குறிக்கப் பெற்றது. ஓலம் - அபயம்.

682. பாய - பரந்த. காயம் - ஆகாயம். கணக்கு - வகை. அன்று மாயம் ஒழித்த தேத்தும்; முன்னே பிரமனுடைய மாயையாலான குற்றத்தைப் போக்கிய இவ்விடத்திலும். தேம் - இடம்.

683. களைகண் - பற்றுக்கோடு.

684. கறையடி - யானை; இங்கு ஐராவதம். இறையளவு - கணப் பொழுதில். எறிவிப்பாம்; பிறவினை. வடுகப் புத்தேள் - வைரவக் கடவுள். ஆவயின் - அவ்விடத்து.

685. நனை தளம் மலர்: நனை - தேன். தளம் - இதழ். கனைத்த - நெருங்கின; மிகுந்த எனினும் ஆம்.

## இறைவன் வைரவனுக்கு இட்ட கட்டளை

686. வயிரவ கால வின்னே வானவர் தமைவ ருத்தும்
செயிரமை கொடுஞ்சங் கார சீலனைப் படையி னோடும்
உயிர்குடித் தித்தா னத்தே யுறைந்துகாப் பியற்று கென்றான்
பயிரிடர் தணிக்குங் கொண்மூ வெனப்பணிந் தெழுந்தா னன்றே.

## வைரவக் கடவுள் போரியற்றல்

687. கடவுளர் கூட்டத் தோடுங் கைக்கொண்ட சூலத் தோடும்
தடநெடு வடுகப் புத்தேள் சார்ந்துசங் கார சீலன்
விடநெடும் படையைக் கைக்கண் மேயசூற் படைக்கு நல்கி
உடல்வலி யவுணன் முன்ன முற்றனன் வருதி யென்றே.

## அவுணன் இறந்தல்

688. வரமலி வடுகப் புத்தேள் வரவுணர்ந் தஞ்சா னாகி
உரமலி யசுரன் முன்ன ருற்றன னுறுதல் கண்டு
கரமலி முட்டி செய்து கண்கழன் றோட மார்பில்
தரமலி புடைத்தல் செய்தான் தரைமிசை யலறி வீழ்ந்தான்.

## தேவர்கள் மகிழ்ச்சி

689. என்பெலா முறிந்து சிந்த விரத்தநீர் வாயிற் கான்று
வன்பெலா மொருங்கு தீர்ந்து மாய்ந்தன னவுண னுள்ள
துன்பெலாந் தவிர்ந்தோ மென்று சுரர்கள்பூ மாரி தூர்த்தார்
அன்பெலா மம்ப ரீசர்க் காக்குபு மகிழ்ந்தா ரன்றே.

## வைரவன் செயல்

690. அடுதிற லவுண னைக்கொன் றன்னமாம் பொய்கை மூழ்கி
உடுபதி முடிமேற் றாங்கு முத்தம வம்ப ரீசன்
தொடுகழல் வணங்கி வாழ்த்தித் தோத்திரஞ் செய்து நின்றான்
படுமலர்க் கற்ப நாடு படுந்துய ரனைத்துந் தீர்த்தான்.

---

686. கால வைரவ என்பது வயிரவ கால என மாறிற்று. செயிர் - குற்றம். இத்தானத்தே என்றது அம்பரை. கொண்மூ - மேகம்.

687. விடம் நெடும் படை - விடம் போன்ற பெரிய படையை.

688 உரம் - வலிமை.

689. வன்பு - வலிமை.

690. உடுபதி - சந்திரன். கற்ப நாடு தேவருலகம்.

### இறைவன் கட்டளை

691. துதிபுரிந் தெதிரே நிற்குந் தொடுகழற் காற்புத் தேளை
மதிமுடிப் பெருமா னேக்கி வயிரவ கால வானோர்
பதிமுத லெவர்க்குந் துன்பம் பாற்றினுய் நனிமகிழ்ந்தேம்
திதிபுரிந் திருத்தி யிந்தச் செழுந்தலத் தென்று மென்ருன்.

### வைரவன் புவனேசலிங்கம் தாபித்தல்

692. உரைமரு வடுகப் புத்தே ளுவந்தெழுந் தழலோன் றிக்கில்
புரையற வெழுந்து சென்று பொலிதிருத் தளியொன் ருக்கித்
தரைமுழு துவக்கு மாரோர் தற்பரக் குறிதா பித்துக்
கரைபுவ னேச னென்று கருதொரு நாமங் கூறி

693. சூலங்கொண் டகழ்ந்தோர் தீர்த்த மாவயிற் றுலங்க வாக்கி
ஞாலங்கொண் டாடுஞ் சூலப் புனலென நாமஞ் சாற்றித்
தாலங்கொண் டாடுங் கங்கை யாதிய தழுவச் செய்து
கோலங்கொண் டாடு மீசற் காட்டினு னன்பு கூர்ந்தே.

694. உறுமல ராதி யாய வுபகர ணங்க ளெல்லாம்
பெறுமுறை பெற்றுப் பூசை பிறங்குற முடித்து நானன்
அறுதியில் கருணை வாங்கி யாவயி னமரா நின்ருன்
தெறுதொழி லவுண ராதி தீயவர் பயங்கெ டுத்தே

695. பொலிபெரு நகரா மம்பர்ப் புவனேசத் தமரா நின்ற
வலிகெழு வடுகப் புத்தேண் மலரடி வணங்கப் பெற்ருர்
ஒலிமுரட் பகைமாய்த் தெல்லா விலாபமு மொருங்கு பெற்று
மெலிவறப் போகந் துய்த்து வீடுபே றடைவ ரீற்றில்.

696. குட்டநோய் தொழுநோய் காசங் குன்மநோய் கொடுங்கா மாலை
துட்டநோ யான மற்றுஞ் சூலதீர்த் தத்துண் மூழ்கி
உட்டவா வன்பு பொங்க வுயர்புவ னேச மேவி
இட்டமார் வடுகப் புத்தேள் பதந்தொழ விரியு மன்றே.

---

691. வானோர் பதி - இந்திரன். பாற்றுதல் - நீக்குதல். திதி புரிதல் - பாது காத்தல். என்றும் - எக்காலத்தும்.

692. அழலோன் திக்கு - அக்கினி திசை; தென் கிழக்கு தளி - கோயில. தற்பரம் குறி - இலிங்கம். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

693. அகழ்தல் - தோண்டுதல். தாலம், தலம் என்றது நீண்டது. ஆட்டு தல் - அபிஷேகம் செய்வித்தல்.

694. நானன் - சட்டை நாதர் எனப்படும் வைரவக் கடவுள். நானம் - புழுகு; சட்டை நாதருக்குப் புழுகுச் சட்டம் அணிவித்தல் என்னும் வழக்கம் நினைவுகூர்தற் குரியது.

696. உள் தவா அன்பு எனப் பிரிக்க. இரியும் - நீங்கும். குட்ட நோய் முதலியன இரியும் என்க.

## இந்திரன் இயற்றியவை

697. மன்னிய வடுகப் புத்தேள் வரவிது பலர்க்குந் தீங்கே
முன்னிய வவுண னவி முடிந்தபி னுவப்பு மேவி
மின்னிய மணிப்பூண் மார்பின் விண்ணவர் குழாத்தி னேடும்
துன்னிய நயன மேனித் தோன்றலிந் திரனீ தாற்றும்.

698. அருந்தவர் புகழு மம்ப ராலயத் தெதிரே யோர்பால்
இருந்தட மொன்றுண் டாக்கி யிந்திர தீர்த்த மென்று
பொருந்தவோர் நாமஞ் சாத்திப் புண்ணியக் கங்கை யாதிப்
பெருந்தவத் தீர்த்த மெல்லாம் பிறங்குற வதிற்ற பித்து

699. முறைமையின் முழுகி மொண்டு மொண்டுநா யகனுக் காட்டி
அறையுப கரண மெல்லா மைந்தரு வழங்க வாங்கி
நிறைபெரும் பூசை யாற்றி நேர்நின்று துதித்துப் போற்றிக்
கறைதபுத் துய்ந்தே மென்று களித்திது பின்னுஞ் செய்வான்.

700. மதிநுதன் மங்கை வம்பு வனமலர்க் குழலா ளுக்கும்
துதியமை பூசை யாற்றித் தொழுதுதோத் திரமுஞ் செய்து
நிதிமணி காம தேனு நிகரிலைந் தருமற் றுள்ள
பொதிதரு வளங்க ளெல்லா முடையவன் பொலிந்தா னன்றே.

701. கடவுளர் பலருந் தங்கோ னுற்றிய கரிசி றீர்த்தம்
மடனற மூழ்கி யம்பர் வள்ளலை யவன்பான் மேய
தடநெடுங் கண்ணி னுளைத் தவாதவன் பூற்றெ டுப்பப்
புடவிமுற் றுய்யப் பூசை புரிந்தனர் பொலிந்தா ரன்றே.

## இறைவன் வரமளித்தல்

702. இன்னணம் பூசை யாற்று மிமையவர் தமக்கு மன்னுர்
மன்னவன் றனக்கு முக்கண் வானவன் விடைமேற் றோன்றிக்
கன்னலங் கழனி சூழிக் காமர்பூம் பதியைச் சார்ந்தார்
என்னரே யெனினு மச்ச மிரித்தெலா மெய்து வாரால்.

---

697. நயன மேனித் தோன்றல் - இந்திரன். உடலெங்கும் கண்களைக் கொண்டவன்.

698-99. குளகம். ஐந்தரு. சுவர்க்கலோகத்துக்குரிய அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம் மந்தாரம் என்ற ஐந்து தெய்வ மரங்கள். கறை - குற்றம். தபுத்து - நீக்கி.

701. கரிசு இல் தீர்த்தம் - குற்றமில்லாத தீர்த்தம். முன் செய்யுளில் இந்திரன் பொலிந்தமை கூறி இச் செய்யுளில் கடவுளர் பொலிந்தமை கூறினர்.

702. என்னரே எனினும் - எத்தகையராயினும்.

703. இந்தமா தலத்தைச் சார்ந்த நீவிரு மிகலிற் றீராப்
பந்தமாம் பகைது றந்து பண்டைவாழ் வனைத்தும் பெற்றீர்
உந்தநா டடைந்து வாழ்வீர் வேட்டவை யுரைப்பீ ரென்னத்
தந்தநான் குடைய வேழ நடாத்துவோன் றாழ்ந்து கூறும்.

704. அடியனே னமைத்த தீர்த்தத் தமைதர வெந்நாண் மூழ்கிப்
படியிலியா ரேனு நின்றாட் டரிசனம் பண்ணு வாரேல்
மிடியிலா வாழ்க்கை யெய்தி வேட்டவை யனைத்துந் துய்த்து
முடிவினின் கயிலை சார்ந்து முயங்கியின் புறுதல் வேண்டும்.

705. நின்னடி மறவா வன்பு நிரந்தரம் பொலிய வேண்டும்
இன்னவை தருதி யென்றா னல்கியெம் பிரான்ம றைந்தான்
தன்னமர் மனைவி யோடுஞ் சார்ந்தபல் லிலேக ரோடும்
பொன்னக ரினிது மேவிப் புரந்தர னினிது வாழ்ந்தான்.

706. அடைபவர் பயங்கெ டுக்கு மம்பருட் புவனே சத்து
மிடைவடு கேசர் மேன்மை விரித்தன மனைத்து மாய்க்க
மிடைதரு கற்பத் தாலும் வீக்கொணு வத்தா னத்துத்
தடையற விமலன் சார்ந்து முத்திசார்ந் ததுதெ ரிப்பாம்.

வைரவப் படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம்-75.)

---

703. உந்தம் நாடு அடைந்து என்க. தந்தம் நான்கு உடைய வேழம் - ஐராவதம்.

704. மிடி - வறுமை. வேட்டவை - விரும்பியவை.

705. இலேகர் - தேவர்.

706. மிடை - சேர்ந்துள்ள. மிடைதரு - வருகின்ற. கற்பம் - பிரளயகாலம். வீக்கல் - அழித்தல்.

# 11. விமலன் முத்தியடைந்த படலம்

707. பேசி யாவரும்
நேசி மான்மியக்
காசி மாநகர்
வாசி வேதியன்.

708. அமல் நாதர்தாள்
கமல மேதொழும்
விமல னென்பவன்
முமல நீங்குவான்.

709. மதிசெய் புண்ணிய
வதியென் மங்கையை
விதியின் வேட்டனன்
அதிகு ணத்தினன்.

710. ஏர்த்த பாரியோ
டார்த்த வன்பெழத்
தீர்த்த மாடுதல்
போர்த்த புந்தியான்.

711. கங்கை யேமுதற்
சங்கை யில்லன
அங்கை நெல்லியின்
தங்கை யார்புனல்.

712. நந்து வேட்கையின்
முந்து மூழ்குவான்
வந்து சேர்ந்தனன்
உந்து காவிரி.

713. அங்கு மேவிய
நங்கு தீர்புனல்
எங்கு மூழ்குவான்
தங்கு மேன்மையான்.

714. கரிசி லாதுசொல்
அரிசின் மாநதி
தரிச னஞ்செய்தான்
புரித வத்தினன்.

715. அங்கு மூழ்கிப்பின்
எங்கு மாயசீர்
தங்கு மம்பரில்
பொங்கு கோயிலுள்

716. விருப்ப வார்சிலைப்
பொருப்ப னுநகை
நெருப்பற் போற்றவா
அருப்ப வண்மினன்.

717. அன்ன மாம்பொய்கை
என்ன வோதுநீர்
முன்ன மூழ்கினன்
சொன்ன மாதவன்.

718. பிரம லிங்கராம்
பரம ரைத்தொழூஉச்
சரம நீங்கினன்
கிரம மேவினன்.

---

707. யாவரும் பேசி நேசி மான்மியம் காசி என இயைக்க. வாசி - வசிப்பவன்.

708. மும்மலம் - ஆணவம், மாயை, கன்மம் என்றும் மூன்று மலங்களினின்றும்.

710. ஏர்த்த - அழகுடைய ; ஏர் - அழகு,

711- சங்கையில்லன - கணக்கற்றவை. தங்கு ஐ ஆர் புனல் - நிலைத்த பெருமை நிறைந்த நீர். இஃது அடுத்த செய்யுளோடு முடியும். காவிரி ; இங்குக் காவிரிக்கரை இடங்களைக் குறித்தது,

713. நங்கு தீர் - இழிப்பு இல்லாத.

714. அரிசில் மா நதி - அம்பரை அடுத்த அரிசிலாறு.

716. வார் - நீண்ட. சிலைப் பொருப்பன் - மலையை வில்லாகக் கொண்ட சிவபிரான். நகை நெருப்பன் - சிரிப்பாகிய நெருப்பைக்'கொண்டவன் ; இங்குத் திரிபுர சங்கார வரலாறு குறிக்கப்பெற்றது. அவா - ஆசை. அருப்ப - அரும்ப என்பது வலித்தது. அரும்புதல் - தோன்றுதல்.

718. சரமம் - முடிவு; என்பது அழிவு. கிரமம் மேவினன் - நன் முறைகளை மேற் கொண்டவன்.

719. புவன மீன்றவம்
புவனப் பூங்குழல்
அவமி ருடொழு
தவல மாற்றினன்.

720. சுத்த வேதியன்
அத்த லத்தமர்
பத்த மேவுறச்
சித்தம் வைத்தனன்.

721. வித்த கப்பிரான்
உத்த ரத்திசை
ஒத்த தோரிலம்
புத்த தாக்கினன்.

722. சீல மேவவங்
கேல வைகுபு
காலந் தோறுண
வாலற் போற்றுவான்.

723. ஆய நாளையிற்
பாய விற்பெயர்
நேய மாமதி
மேய தென்பவே.

724. மூன்று காலமு
மான்ற புட்பெயர்
சான்ற பொய்கையுள்
தோன்ற மூழ்குபு

725. உணர்வின் மிக்கவர்
உணருங் கோயிலை
உணவி லாதுநூ
றணவச் சூழுவான்.

726. பரவிச் சூழுங்கால்
உரவிற் சாலுருத்
திரம னுத்தவம்
தரந விற்றுவான்.

வேறு

727. பந்த மில்ப ரம்பரன்
சந்த மாருஞ் சந்நிதி
நந்து மன்பின் மேவியே
ஐந்தெ ழுத்து மெண்ணுவான்.

728. சித்த மாசி லாதுகா
யத்தி ரிப்பெ யர்மனு
பத்தி யிற்செ பித்தனன்
முத்த ருகும் வேதியன்.

---

719. அவம் இல் தாள் - கேடற்ற திருவடி. அவலம் - துன்பம்.

720. பத்தம் - தொடர்பு.

721. உத்தரத் திசை - வடக்குத் திசை. ஒத்தது - தனக்கு ஏற்றது. புத்தது - புதியது.

722. ஏல - பொருந்த. உணவு ஆலன் - விடமாகிய உணவைக் கொண்ட சிவபெருமான்.

723. வில்பெயர் மதி - தனுர்மாதம்.

724. புள்பெயர் பொய்கை - அன்னமாம் பொய்கை.

725. தினந்தோறும் உண்ணு முன்னே கோயிலை நூறு முறை வலம் வந்தானென்பது கூறப்பட்டது.

726. உருத்திர மனு - உருத்திர மந்திரம். தவம் - புண்ணியம்.

729. அருமறைவி திப்படித்
தருமசீல மாரழல்
கருமமுந்த விற்றுவான்
பொருமநீர்ந்த புந்தியான்.

730. ஒன்ற வந்த சிலைமதி
நன்றமைந்த விவ்விதம்
சென்ற தென்ப முற்றவும்
கொன்றவைம்பொ றியவற்கே.

731. மகர மாத முற்றினம்
புகரில் பூசை யாற்றுபு
நிகரில் சோதி நேர்நின்று
பகருவான்பெ ருந்துதி.

வேறு

விமலன் துதி

732, வருதிரிலோ சனபோற்றி மாதேவ வரபோற்றி
ஒருமதனுந் தகபோற்றி யுவமையில்சங் கரபோற்றி
கருநிறவந் தகற்செகுத்த கருங்கழற்காற் பரபோற்றி
பெருமுனிவ ருளங்குடிகொள் பிரமபுரீச் சுரபோற்றி.

733. மண்ணுநீ புனலுநீ வயங்கழனீ மருத்துநீ
விண்ணுநீ பிரணவநீ வியாகிருதி முதலியநீ
எண்ணுநீ யெழுத்துநீ யெல்லைநீ யாணுநீ
பெண்ணுநீ பிரமபுரிப் பெருமநினைத் தொழுகின்றேன்.

734. அருவுநீ யுருவுநீ யருவுருவு நீயுடனீ
மருவுயிர்நீ யுயிர்க்குயிர்நீ மனுதிகளுக் கெட்டாய்நீ
கருவுநீ கண்ணுநீ கண்ணுண்மணி நீயளவாத்
திருவுநீ பிரமபுரிச் செல்வநினைச் சரணடைந்தேன்.

735. வாசகநீ வாச்சியநீ பெயருருவ வகையுநீ
நேசமுறு திரிசியநீ நிரம்பதிரி சியமுநீ
தேசமைய நடிப்பவனீ செலநடிப்பித் திடுபவனீ
பேசரிய பிரமபுரிப் பிரானேநிற் சரணடைந்தேன்.

---

729. அழற் கருமம் - அக்கினி காரியம். நவிற்றுவான் - செய்வான்.
730. சிலை மதி - தனுர்மாதம். முற்றவும் கொன்ற ஐம்பொறியவன் - ஐந்து இந்திரியங்களை முழுதும் கெடுத்தவன். (அடக்கியவன்.)
731. மகர - மாதம் - தை மாதம். முன் தினம் - முதல் நாள்.
732. திரிலோசன - முக்கண்ணனே! தேவ வர - தேவச் சிரேஷ்டனே! மதன அந்தக - மன்மதனை அழித்தவனே! அந்தகன் - இயமன். பரன் - மேலானவன்.
733. அழல் நீ - நெருப்பு நீ. வியாகிருதி - மேலுலகம் ஏழையும் கூறும் மந்திரங்கள்.
734. மன ஆதிகள் - மனம் முதலான அந்தக்கரணங்கள். திரு - செல்வம்.
735. வாச்சியம் - வாசகத்தின் பொருள். திரிசியம் - மாயாகாரியமான சடப் பொருள்; காட்சிக்குப் புலனுவது; இதன் எதிரிடை, அதிரிசியம்; நிரம்பு அதிரிசியமும் நீ எனப் பிரிக்க. தேசு - ஒளி.

736. அரிபிரமர் நனிமுயன்று மளப்பரிய நின்னுருவம்
தெரிதலலாற் பிறவுருவந் தெரியாதென் விழிகளுக்குப்
பரிவமைய நின்னாமம் பகர்ந்திடுவ தல்லாது
பிரியமிலாப் பிறர்நாமம் பேசவரா தென்வாய்க்கே.

737. சுற்றுமதி லித்தலத்தைச் சூழ்தருவ தல்லாது
மற்றுமுள தலஞ்சூழ வாராதென் கால்களுக்குப்
பற்றுநினைத் திடிற்றபுநின் பதம்புனைவ தல்லாமல்
உற்றயலார் பதம்புனைய வாராதென் றொருதலைக்கே.

738. இன்னமுதா நின்புகழை யேற்றிடுவ தல்லாது
பன்னமரர் பிறருறுசீர் பற்றவரா தென்செவிக்கே
மன்னநினை யெஞ்ஞான்று மறவாது நினைப்பதலால்
உன்னயலார் தமைநினைத்த லொல்லாதென் னெஞ்சினுக்கே.

739. என்றுதுதி புரிவிமல னெதிர்விமல னெழுந்தருளி
நன்றுபுரி துதிமகிழ்ந்தே மெண்ணியதென் னவிலுகெனக்
கன்றுதலற் றடிபணிந்து கைகூப்பி யெதிர்நின்று
பொன்றுதலி லாதவரம் வேண்டுவான் புவியுவப்ப

### விமலன் வரம் வேண்டுதல்

740. மன்னியவண் பிரமபுரி வாழ்தேவ மாதேவ
மின்னியநின் றரிசனத்தால் விட்டதெனைத் தொடர்பாசம்
அன்னியமின் முத்தியுமின் றேயடைந்தே னானந்தம்
துன்னியவ னாயினே னானாலுஞ் சொல்லக்கேள்.

741. காசிநக ரகம்வசித்துக் கங்கையிடைத் தினமுழுகும்
வாசியன்யா னவணின்று மருவினனிக் கேத்திரத்தைப்
பேசியவித் தலநின்றும் பிறங்கயலா கியதலமும்
நேசியென நீசொலினு நேசியாத் துணிபடைந்தேன்.

---

737. சூழ்தருவது - வலம் வருதல். நினைத்திடில் பற்றறும் நின் பதம் - தியானித்த வளவில் பற்றுக்களை நீக்கவல்ல நின் திருவடிகள்.

739. கன்றுதல் - நோதல். எனை தொடர் பாசம் நின் தரிசனத்தால் விட்டது என இயைக்க.

740. அன்னியம் இல் முத்தி - உனதருள் பெற்றோர்க்கு வேறு (அடையவியலாதது) அல்லாததான மோட்சம்.

741. வாசியன் - இயல்புடையன். கேத்திரம் - க்ஷேத்திரம்.

742. அரிசினதி யன்னமாம் பொய்கைமுத லாந்தீர்த்தம்
கரிசில்வர நதியினுமான் மியங்கலந்த வாறுலும்
தெரிதருமெய்ப் புகழெனக்கித் திருத்தலத்தி லுண்டாகப்
புரிதலடி களுக்கரிதன் றதுபுகலு வேனடியேன்.

743. மருவியவோர் மூவுலகு மூடுருவி வரநதியிப்
பொருவரிய வன்னமாம் பொய்கையிடை நிற்குமா
றருள்புரிதி மகரமதி யதிற்படிவோ ரெவ்வகைய
திருவமும்பெற் றீற்றிலுயர் முத்தியுஞ்சேர் தரச்செய்தி.

744. இன்னவரந் தருவதலா லெஞ்ஞான்று நினக்கன்பு
மன்னவளர்த் திடுமகவொன் றுறல்வேண்டு மலர்மேலான்
முன்னவனுக் கருள்புரிந்தா யருடியென மொழிந்திறைஞ்சப்
பன்னகபூ டணப்பெருமா னவ்வண்ணம் பரிந்தருள்வான்.

745. பாதலநின் றெழுந்துவர நதிபருவச் சிரத்தூண்போல்
மீதலமுட் டுகவன்ன மாம்பொய்கை நடுவிரைந்தென்
ரேதலுமவ் வாறெழுந்தே வெளிமுகடுற் றதுகடல்சூழ்
பூதலமிக் குவப்புற்ற தினியென்ன புகல்வதுவே.

746. கங்கையெழுந் ததுமூழ்கு கான்முளையா தியபிறவும்
சங்கையறப் பெறுகென்று தம்பிரா னுருக்கரந்தான்
செங்கையம ராமலகத் திறமெனக்கண் டுளங்களித்தில்
மங்கையொடு மதின்மூழ்கி மகிழ்வுற்றான் விமலனே.

747. விண்டடவ வெழுகங்கை விமலன்முழு கியபின்றைப்
பண்டமரும் படியென்னப் பண்பினமர்ந் தஃதடங்கக்
கண்டவர்க ளதிசயித்தா ரின்னும்பா தலகங்கை
அண்டமளிப் பவனுணை யந்நின்றும் பெயராதால்.

---

742. அரிசில் நதி. கரிசு - குற்றம். வரநதி - கங்கை. மான்மியம் - மகிமை.

743. மகர மதி - தை மாதம். திருவம் - செல்வம். புரிதி, செய்தி என்பவை விமலன் இறைவனை வேண்டிக்கொண்டவை.

744. மகவு - மகன்.

745. பரு வச்சிரத்தூண்போல். வெளி - ஆகாயம். முகடு - உச்சி.

746. கான்முளை - மகன். கையமர் ஆமலகத் திறன் - உள்ளங்கை நெல்லிக் கனிபோல். இல்மங்கை - இல்லாள்.

748. தாதேயு மலர்க்கூந்தன் மனைவியொடுந் தகவாழ்நாள்
மாதேவ னென்னுமொரு மகப்பெற்றுப் பிரமவரை
மீதேயும் பெருமானார் மெல்லடிசேர்ந் தனன்விமலன்
சோதேயி லானந்தப் பெருவாழ்க்கை கூடினான்.

749. தந்தையொழு கியபடியே தருமமிகு மாதேவன்
அந்தைதபு பிரமவரை யண்ணலா ரடிக்கன்பு
சிந்தையிடை யருதோங்கச் சேவித்துப் புவனேசத்
தெந்தைபிரான் றிருவடியு மேத்தியிறைஞ் சுவனாளும்.

750. புண்ணியமார் வம்புவனப் பூங்குழலா ளொருபாகத்
தண்ணியநா யகனடிக்கே தலையன்பு செலச்செலுத்தி
நண்ணியமா தவப்பயத்தா னுடுபுகழ் மாதேவன்
எண்ணியவான் சிவலோக மெய்தியமர்ந் தனனீற்றில்.

751. மூவாத புகழ்க்காசி முத்தலத்து வாழ்விமலன்
தாவாத பேரம்பர்த் தலம்புகுந்து தவஞ்செய்தே
ஓவாத வின்பமுத்தி யுற்றதுரைத் தனங்காமன்
மேவாத பெரும்பேறு பெற்றதிறம் விளம்புவாம்.

விமலன் முத்தியடைந்த படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம்-45.)

---

748. தாது - மகரந்தம் : பிரம வரை மீது ஏயும் பெருமான் - பிரமபுரீசுவரர். சோதே இல் ஆனந்தம் பெரு வாழ்க்கை முத்தி வாழ்க்கை.

749. அந்து ஐ தபு - அந்தத்தை நீக்கிய; அதாவது, என்றும் உள்ள.

750. ஒரு பாகத்து அண்ணிய என்றும், ஒருபாக தண்ணிய என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

751. காமன் - மன்மதன்.

# 12. காம னருச்சனைப் படலம்

### விசுவாமித்திரன் தவம் பாழ்பட்டமை

752. முன்ன மாநிலம் புரந்துபின் முனிவர னுனன்
என்ன யாருஞ்சொல் விச்சுவா மித்திர னென்பான்
அன்ன வாகனன் மைந்தனும் வசிட்டன்மே லமைந்த
தன்ன மாயினுங் குறைபடாப் பெரும்பகை தழைய

753. அந்த மாதவ வசிட்டனை வெல்லுமா றமைந்து
சந்த மாதவ முத்தரந் தவிர்திசை மூன்றும்
நந்த வாற்றினன் றிசைதொறு மரம்பையர் நண்ணிப்
பந்த மேவுறப் பண்ணினர் தவஞ்சிதை படுத்தார்.

754. திசையொர் மூன்றினுந் தவஞ்சிதை பட்டது தெரிந்து
வசைவி ராவிய தேயென நனிசின மருவி
அசைவி லாநமை மயக்கிடு தொழில்வல னுனன்
இசைகு லாவிய மாரனே யெனமனத் தெண்ணி

### முனிவன் மாரனுக்கு இட்ட சாபம்

755. அனையன் செய்தொழில் பலித்திடா தொழிகவென் றறைந்து
நினையு முத்தர திசைமரீஇ நெடுந்தவம் புரிந்தான்
புனையு மாதவன் சாபத்தாற் புரிதொழில் சிதைய
வினைவி ளைந்ததென் றெண்ணிய மாரவேள் விரைந்து

### மாரன் நான்முகனிடம் முறையிடல்

756. கஞ்ச மேலவன் றிருமுன மடைந்தனன் கண்டு
தஞ்ச நீயெனப் பணிந்தெழுந் துலகரு டலைவா
அஞ்ச மூர்திறத் தையவாக் காயுதத் தமலா
புஞ்ச மாதவர் முதல்வவென் றுறத்துதி புரிந்து

---

752. விசுவாமித்திரன் அரசனுயிருந்து முனிவனுன வரலாறு சுட்டப்பெற்றது. அன்ன வாகனன் மைந்தன் - பிரம்ம புத்திரன். தன்னம் ஆயினும - சிறிதேனும்.

753, உத்தரம் - வடக்கு. நந்த - தழைக்க. பந்தம் . பற்று.

754. வசை - பழி. மாரனே நமை மயக்கிடு தொழில் வலன் ஆனுன் என்று இயைக்க. இதுமுதல் 757 முடிய ஒரு தொடர்.

755. அனையன், இங்கு மன்மதனைக் குறித்தது. மரீஇ - பொருந்தி. மாரவேள் - மன்மதன்.

756. கஞ்ச மேலவன் பிரமன். உலகு அருள் தலைவன் - உலகங்களைப்படைத்த மேலோன். அஞ்சம் = ஹம்ஸம் - அன்னம். புஞ்ச மா தவர் - திரண்ட பெரிய தவத்தினர்.

757. ஆய விச்சுவா மித்திர னருந்தவம் புரிய
மேய தெய்வமின் ஞர்பெரு விக்கினம் விளைத்தார்
தீய செய்தவன் காமனே யென்றவன் சினந்து
மாய வத்தொழில் பலித்திடா தொழிகென வகுத்தான்.

758. அந்த வெம்மொழி யாற்செயல் பலிப்பிலா தாக
நொந்த சிந்தையின் முகம்புலர்ந் துன்னடி நோக்கி
முந்த வந்தனன் முற்றிய சாபவெந் தீமை
நந்த நல்லருள் புரியென நயந்திரந் தனனே.

நான்முகன் கூற்று

759. பஞ்ச பாணன்வாய் மொழிசெவி யேறலும் பரியா
அஞ்ச மூர்பவ னஞ்சனி யஞ்சமா முருவம்
தஞ்ச மாகவெற் கொழித்தது தாவிலெப் பயமும்
நெஞ்ச முள்ளுமு னீக்கிடு நெடுந்தல மம்பர்.

760. அங்கு மேவிநீ யன்னமாம் பொய்கையுண் முழுகிப்
பங்கு மால்வரை யாள்கொளக் கொடுத்தருள் பரனைப்
பொங்கு பேரருட் பிரமபு ரீசனைப் போற்றின்
தங்கு சாபவெந் தீமைநீ தவிருவை யென்றான்.

மன்மதன் பிரமபுரீசரைத் தரிசித்துப் பூசித்தல்

761. என்ற வார்த்தைதன் றலைக்கொடு மாரவே ளன்பால்
குன்ற நேர்பெரு மாளிகைத் தலைமிசைக் கொண்மூ
நன்ற வாவுபு கண்வள ரம்பரை நாடி
ஒன்ற மேவினன் சாபந்தை யொழித்தவ னுத்தே.

762. இந்த மாத்தலந் திப்பிய தலமென வெண்ணி
முந்த வன்னமாம் பொய்கையம புனலிடை மூழ்கிப்
பந்த மாய்த்திடு நீற்றொடு கண்மணி பரித்து
நந்த வைந்தெழுத் தெணரினன் சிந்தையு ணயந்தே.

---

757. விககினம் - இடையூறு.

758. நந்த - கெட.

759. பஞ்ச பாணன் - மன்மதன். நெஞ்சம் உள்ளும் முன் - மனத்தில் நினைத்த மாத்திரத்தில்.

760. வரையாள் - பார்வதி.

761. கொண்மூ நன்று அவாவுபு கண்வளர் அம்பர் - மேகங்கள் நன்றாக விரும்பி உறங்குதற்கு இடமான அம்பர். ஒன்ற - மனம் பொருந்த.

762. திப்பிய - திவ்ய; தெய்வத்தன்மை பொருந்திய. நீறு - விபூதி. கண்மணி ருத்ராக்ஷம். பரித்தல் - தாங்குதல். நந்த - மேம்பட.

763. தரையெ லாம்புகழ் தண்கயி லாயமாம் பிரம
வரையின் மீதுற விவர்ந்தனன் பிறவிநோய் மாற்றும்
புரையி லாப்பெரு மருந்தினைப் புண்ணிய வாழ்வைக்
கரையி லாதபே ரொளியினைக் கண்களாற் கண்டான்.

764. கண்டு நெஞ்சநெக் குருகிடக் கண்கணீர் துளும்பத்
தண்டு போற்றிரு முனம்பணிந் தெழுந்தனன் றணவா
தண்டு வாருக்கே யருள்புரி யாதியை யன்பு
கொண்டு பூசனை புரிந்தன னிரதிதன் கொழுநன்.

765. முன்ன மோர்மல ரிடுதலு முனிந்தவெம் பெருமான்
பன்ன மாமலர் பற்பல தூவவும் பகையான்
சொன்ன நூல்வழித் தொண்டுபட் டருச்சனை தொடங்கி
மன்ன வன்புசெய் வார்க்கருண் மாறுவ துண்டோ.

766. புவனம் யாவையு மீன்றருள் புண்ணியத் தாய்வம்
புவனப் பூங்குழ லம்மைசந் நிதியினும் புகுந்து
புவனப் பூமுதற் கொண்டுபூ சித்தன னையம்
புவனப் பூவெனக் கழையுறப் பூட்டிடு முரவோன்.

767. ஒருதி னம்புகுந் தரிசிலின் மூழ்குவ னுவப்புற்
றொருதி னந்திற லிந்திர னுறுபுன லாடும்
ஒருதி னந்திகழ் சூலதீர்த் தத்துறத் தோயும்
ஒருதி னந்திக ழன்னமாம் பொய்கையுண் முழுகும்.

768. ஒருதி னம்புவ னேசரை யுவப்புறப் பணிவான்
ஒருதி னந்திறல் வயிரவற் போற்றுத லுறுவான்
ஒருதி னந்திரு வருச்சுன வனம்பணிந் துள்வான்
ஒருதி னம்பிர தக்கண மெல்லைசூ ழுறுவான்.

---

763. இவர்தல் - ஏறுதல்.

764. தண்டு போல் - தண்டாகாரமாக. தணவாது அண்டுவார் - நீங்காமல் நெருங்குபவர். இரதி தன் கொழுநன் - மன்மதன்.

765. பெருமான் பகையான் என்றியைக்க. ஒரு மலரிடுதலும் முனிந்தது மன்மத தகனத்தில். மன்ன - நிலைபெற.

766. புவனம் பூ முதற் கொண்டு - நீர்ப்பூ முதலியவற்றைக் கொண்டு. புவனம் - நீர். வனம் பூ ஐ அம்பு என - அழகிய பூக்களை ஐந்து அம்புகளாகக் கொண்டு. கழை - கரும்பு; இங்கு மன்மதனுடைய கரும்பு வில்லைக் குறித்தது.

767. அத்தலத்திலுள்ள நான்கு தீர்த்தங்களின் பெயர்களும் இங்குக் கூறப் பெற்றன.

768. அம்பரில் உள்ள சந்நிதிகள் குறிக்கப்பெற்றன. அருச்சுன வனம், மருதமரத்தினடியில் பெருமான் எழுந்தருளியுள்ள விடம்.

769. இந்த வண்ணமாய்ப் போற்றிடும் விருப்பின னேனும்
சந்த மாமலர் காலங்க டொறுங்கொடு தப்பா
துந்த வம்பர்நா யகன்கழற் பூசனை யுஞற்றும்
நந்த மற்றவ ளுமமே நாவுற நவிற்றும்.

770. உள்ள நாட்குநாட் குழைதர வுரோமங்கள் சிலிர்ப்ப
வெள்ள மார்புன லிடையறு திருவிழி விடுப்பக்
கள்ள மேதுமில் பூசனைக் கணக்குநா ளுண்டு
கொள்ள வன்புசெய் தாற்றினன் றுதிசெயக் குறித்தான்.

771. சம்பு சங்கர தற்பர வற்புத சைல
வம்பு வார்முலை யொருபுறத் திருத்திய வரத
நம்பு மன்பருக் கெய்ப்பில்வைப் பாகிய நம்ப
வெம்பு மென்றுயர்ச் சாபந்தீர்த் தருள்செயல் வேண்டும்.

772. ஞாலத் தாயொரு பாகத்து நண்ணிய வைத்த
கோலத் தாய்திரு மான்முனோர் குலேகுலேந் தஞ்சும்
சூலத் தாய்சன காதியர்க் குண்மைமுன் சொற்ற
சீலத் தாய்கரக பாலத்தாய் சேவித்தே னின்னை.

773. அண்ட வாணர்த முயிர்கொள வந்தகூற் றடங்கும்
கண்ட நாயக சாபஞ்சா ராப்பனிக் கற்றைத்
துண்ட நாயக பிறவிமுற் றுவந்துவ மனைத்தும்
விண்ட நாயக விமல்நா யகநினை விழைந்தேன்.

774. பொன்செய் மாளிகைப் பிரமபு ரீசநின் பொற்றாள்
என்செய் யம்புய முடிக்கணிந் தெனென விறைஞ்சும்
தென்செய் மாரனுக் கெம்பிரான் றிருவுருந் தோற்றிக்
கொன்செய் கோசிகன் சாபந்தீர்த் தனங்குறிக் கொண்ணி.

---

769. உந்த - (மனத்து விருப்பம) தூண்ட.

770. நாட்கு நாள் உள்ளம் குழைதர என இயைக்க.

771. எய்ப்பில வைப்பு - ஆபத்தில் உதவுமாறு வைத்த சேமிப்பு. துயர்ச்சாபம் - துயரத்தைத் தரும் சாபம்.

772. சனகாதியர்க்கு உண்மை சொற்றது : கல்லால மரத்தின் கீழ் எழுந்தருளியிருந்து சனகர் முதலிய நால்வர்க்கு மெய்ஞ்ஞானம் போதித்த வரலாற்றைச் சுட்டும். கர கபாலத்தாய் - கையில் பிரமனது மண்டையோட்டைத் தாங்குபவனே.

773. கூற்று, இங்கு விடம். கண்ட நாயக - கழுத்தினையுடைய தலைவ. சாபம் - தக்ஷன் இட்ட சாபம். பனிக்கற்றைத் துண்டம் - ஒரு கலையான பிறைச் சந்திரன். பிறவி முன் துவந்துவம் - பிறவி முதலான பிணைப்புக்கள்.

774. தாள் என் செய் அம்புயம் - திருவடியாகிய செந்தாமரை. தென் - இனிமை. கொன் - அச்சம். கோசிகன் - விசுவாமித்திரன்.

775. முன்பு நீசெயுந் தொழில்கடைப் பிடியென மொழியா
அன்பு சாலிடம் புகுந்தன னம்பர்வா ழையன்
துன்பு தீர்ந்தன மென்றுவே டளிவலஞ் சூழ்ந்து
பின்பு தன்பதி யடைந்துவாழ்ந் திருந்தனன் பிறங்க.

776. காம னாரடைந் தருச்சனை புரிந்தது கரைந்தாம்
மாம னார்தகர்த் தலைபெற வழங்கினார் கலர்பால்
தாம னார்கொன்றைத் தாமனார் கருணையான் மாற
நாம னார்பெற்ற பேற்றினை யெடுத்துநா நவில்வாம்.

காமனருச்சனைப் படலம் முற்றியது.

(இப்படலத்துத் திருவிருத்தம்—25.)

---

775. வேள் - மன்மதன். தளி - கோயில். (பி. ம்) தீர்ந்தனவென்று.

776. மாமனார் - தக்கன். தகர்த் தலை - ஆட்டுத்தலை. கலர் பால் தாமனார் - தீயோரிடத்தில் தரம் பொருந்தாதவர். தாமம் - மாலை. மாற நாமனார் - சோமாசி மாறனார்.

# 13. மாற நாயனர் வழிபடு படலம்

### அம்பர் நகரின் சிறப்பு

777. பூமேவு தமிழரும்பும் பொதியவரைக் காலரும்பத்
தேமேவு மாந்தருவிற் செய்யபசுந் தளிரரும்பும்
காமேவு மகத்தூமங் கண்டுமுகி லெழுந்ததெனத்
தாமேவு சிறைமஞ்ஞை நடமாடுந் தனியம்பர்.

### அந்தணர் குடி

778. அந்தவளம் பதிதழைப்ப வற்புதமாங் குடிப்பிறப்பால்
முந்தவறன் முழுகுதலான் முழுநீறு பூசுதலால்
சந்தமறை யோதுதலாற் றவாதபிற வொழுக்கத்தால்
வந்தவொரு குறையுமிலா மறையவர்தங் குடிதழையும்.

### சோமாசி மாறனர் தோற்றம்

779. அனையமறை யவர்குலத்தி லருந்தவத்த ரொருவர்பால்
நினையவினி தமைதருநன் னெறியனைத்து மோருருவம்
புனையவெடுத் துதித்ததெனப் புண்ணியநா யகனருளால்
இனையவரு பிறப்பொழிப்பா னினிதொருவ ரவதரித்தார்.

### அவர் இயல்பு

780. மாறனு ரெனுநாம மருவினர் மூவகைத்தோ
மாறனு ரறிவெனப்பன் மறையுணர்ந்தார் வளவனர்
மாறனர் சேரனர் வழுத்துவார் பிரமபத
மாறனர் தருபதமு மதித்தறியா மதியினர்.

---

777. பூ மேவு தமிழ் - நிலவுலகெங்கும் பொருந்தும் தமிழ். பொதிய வரை தமிழ் அரும்பும் இடமாம். கால் - தென்றற் காற்று. செய்ய - சிவந்த. பசுந் தளிர் - இளங்கொழுந்து. கா - சோலை. மகம் தூமம் - யாகப்புகை. தாம் மேவு சிறை - ஒளி பொருந்திய சிறகையுடைய. தாம் : தாமம் என்பதன் இடைக்குறை.

778. இச் செய்யுளில் அந்தணர் குடிகளின் ஒழுககம் கூறப்பெற்றது. அறல் - நீர். சந்தம் மறை; சந்தம்; ஒரு வேதாங்க நூல்.

779. புண்ணிய நாயகன் - சிவபெருமான். இனைய வரு பிறப்பு - அஞ்சுதற்குரிய பிறப்பு.

780. அவர் திருநாமம் மாறனர் என்பது. மூவகை தோம் - காமம், வெகுளி, மயக்கம் என்பன. தோம் - குற்றம். ஆறனர் - அடக்கினவர். வளவனர், மாறனர், சேரனர் - சோழ, பாண்டிய, சேர மன்னர்கள். அவர்களால் புகழப்படுவார் என்பது. பிரமபதம் - பிரமலோகம். மால் தன் ஆர்தரு பதம் -வைகுந்தம்.

781. வேதமுடிப் பொலிந்தோங்கும் வெள்ளியநீ றணிதலொடு
போதமலி கண்மணியும் பூண்டுவக்கும் வாழ்க்கையினர்
ஏதமற வைந்தெழுத்து மிடையரு தெண்ணுவார்
சீதமதி முடித்தபிரான் றிருவடிக்கே யாளானர்.

782. சிவனடியார் தமைக்காணிற் சிவனென்றே வழிபடுவார்
சிவனமருந் தானமெலாஞ் சென்றுசென்று போற்றுவார்
சிவனருமைப் புராணமே செவியேற்க விடுத்திடுவார்
சிவன்வடிவ மாம்பலவுந் தரிசிக்குஞ் சீலத்தார்.

783. அன்னமாம் பொய்கைநித மடைந்தாடி நீறணிந்து
வன்னமா மோரைந்து மனத்தினுறக் கணித்தெழுந்து
பின்னமாந் திறனமையாப் பிரமபுரீ சரைத்தொழுவார்
தன்னமாஞ் செயல்விடய வாதனைசா ராமனத்தார்.

784. வம்புவனப் பூங்குழலாண் மலர்ப்பாதஞ் சேவித்து
நம்புவிருப் பொடுபுவனே சத்தமரு நம்பரையும்
பம்புதிறல் வடுகரையும் போற்றுவார் பலபிறப்பாம்
வெம்புதுயர் முழுதொழிப்பா னவதரித்த வேதியரே.

785. நீறுபுனைந் தடைவாரை நேர்காணிற் பணிந்தெழுந்து
மாறுதவிர் திருப்பொலிதம் மாளிகையிற் கொடுபுகுந்தே
ஆறுசுவை யமுதூட்டி யன்பினுப சரித்திடுவார்
வேறிதன்மே லில்லையெனு மொருதுணிபு பெரிதுற்றார்.

மாறனார் சுந்தரமூர்த்தி நாயனாரைச் சந்தித்தல்

786. இந்தவித மொழுகுநா ளெம்பிரான் றடுத்தாண்ட
சந்தமலி வன்றொண்டர் தமைத்தரிசித் திடல்கருதி
முந்தவெழூஉத் திருவாரூர் முழுநகரம் புகுந்துநறும்
கந்தமலர்க் குழற்பரவை யார்திருமா ளிகைகலந்தார்.

787. அம்பரமர் மாறனார் தமைக்காண வடைந்ததிறம்
நம்பரரு ளாற்றெரிந்த நாவலூர் நாவலனார்
இம்பர்வரு பரமசிவ மிவரெனவந் தெதிர்கொண்டார்
உம்பரினு முய்ந்தேனென் றுவந்திவரு முடன்கலந்தார்.

---

781. வேத ...... நீறு; ஒப்பு: 'வேதத்தி லுள்ளது நீறு' (திருஞான.தேவாரம்.) ஏதம் அற - குற்றம் நீங்க.

783. வன்னம் ஆம் - எழுத்துக்களாகிய. தன்னம் - சிறுமை.

785. நீறு புனைந்து அடைவார் - விபூதி தரித்து வருவோர்.

786. வன்றொண்டர் - சுந்தரமூர்த்தி நாயனார். பரவையார், சுந்தரமூர்த்தி நாயனாரின் தேவியார்.

788. மறையவருஞ் சிவத்துவிச மறையவரு மிக்குவக்கும்
முறையினெரு வரையொருவர் முன்பணிந்தா ரிவரென்றே
இறையுமய லறியாமே யிறைஞ்சுபுபுற் றிடங்கொண்ட
பிறைமுடியார் தமைத்தொழுது பேருவகை தலைக்கொண்டார்.

789. விண்ணுடு முகங்கவிழ விரிதிரைவா ரிதியுடுத்த
மண்ணுடு தலையெடுப்ப மாதவத்தர் கொண்டாடத்
திண்ணுடு திறத்தடைந்த தியாகரா சப்பெருமான்
தண்ணுடு மலர்ப்பாதந் தரிசித்தா ரிருவோரும்.

மாறனுர் அம்பர் திரும்புதல்

790. இந்தவிதந் திருவாரு ரிறைவர்தரி சனஞ்செய்து
சந்தமலி தார்மார்ப வன்ரெண்டர் தம்மோடும்
அந்தமினம் மாறனுர் சின்னுளங் கமர்ந்தன்பு
நந்தவமர் பிரமபுரி நாயகரைத் தொழல்குறித்தார்.

791. விடைகொண்டு புறம்போந்து விரிமருத வழிநடந்து
பெடைகொண்டு வண்டடையப் பெருஞ்சோலை மிகப்பொழிதேன்
புடைகொண்டு கமழம்பர் புகூஉப்பிரம புரீசர்பதம்
உடைகொண்டு நெஞ்சுருகப் பணிந்துறையு ளுற்றனரே.

792. தடங்கொண்டார் மலர்ப்பொய்கைத் திருவாரூர்த் தளியிடைப்புற்
றிடங்கொண்டார் தோழர்நினைப் பெய்தியபோ தெல்லாமெய்த்
திடங்கொண்டார் திருவாரூர் சென்றுதரி சித்தடைவார்
விடங்கொண்டார் கண்டத்தா ரன்பரெலா மிகமகிழ.

சுந்தரர் அம்பர் வந்து திரும்புதல்

793. அம்பரமர் மாறனு ரடுத்தடுத்து வரல்கண்டு
நம்பரம ரருளென்று நாவலூர் நாவலனுர்
உம்பரம ருலகந்தா மொப்பிலா வம்பரடைந்
திம்பரமர் வார்களிப்ப வெய்தினுர் மறையவரில்.

788. சிவத்துவிச மறையவர் - ஆதிசைவர்; சுந்தரர். இறையும் அயல அறியாமே – சிறிதும் அயலார் அறியாதபடி. புற்றிடம் கொண்டவர் - வனமீக நாதர்; ஆரூரில் உள்ள ஸ்வயம்பு லிங்கத்தின் திருநாமம்.

789. விண்ணுடு முகம் கவிழ ....தலையெடுப்ப: இந்திரனுல் பூஜிக்கப் பெற்ற ஸ்ரீ தியாகராஜர் முசுகுந்த சக்கரவர்த்தியால் ஆருருக்கு வந்த வரலாறு இங்குக் குறிக்கப்பெற்றுள்ளது. திண் ஆடு திறத்து அடைந்த - உறுதியாக ஆடும் தன்மையோடு வந்து சேர்ந்த. தண் நாடு - குளிர்ச்சி பொருந்திய.

790. நந்த - தூண்ட.

791. உறையுள் - இல்லம்.

792. தளி - கோயில். தோழர் - சுந்தரர்.

793. உம்பர் – தேவர். மறையவர் இல் - மாறனுர் வீடு.

794. மறையவரு மெதிர்கொண்டு வந்துபணிந் தழைத்துப்போய்
நிறைகருணைப் பிரமபுரி நிருத்தர்தாள் பணிவித்துக்
குறைவிறிரு மாளிகையுட் கொடுபுகுந்து முகமனெலாம்
நறையொழுகு நறுமலர்த்தார் நம்பியார் பெறப்புரிந்தார்.

795. சின்னாளங் கணமமர்ந்து திருவாரூர் செலநினைந்து
பொன்னுள்பன் மணிப்பூணூர் மாறனூர் தமைப்போற்றிச்
சொன்னாடும் விடைபெற்றுச் சென்றதற்பின் றூமறையோர்
முன்னாடு பணியனைத்து முயன்றுபுரிந் தமர்நாளில்

மாறனூர் யாகம் செய்யக் கருதியது

796. இகமொன்று களிப்படைய வீரிரண்டு சூழநடு
முகமொன்று கொண்டபிரான் மொய்பணிகூர் வான்றடவு
நகமொன்று மங்கையொடு நண்ணியவி யுணக்கொள்ள
மகமொன்று செயல்குறித்தார் மாதவத்து மாறனூர்.

வேறு

மாறனூர் சுந்தரரை உதவி வேண்டல்

797. பாய்புக ழாரூர் சென்று பரவையார் மனையின் கட்புக்
காய்புகழ் நம்பி பொற்றா ளஞ்சலித் திறைஞ்சி யேத்தி
வேய்புகழ் யாக மொன்று நாயினேன் விருப்பிற் செய்கேன்
ஏய்புகழ்த் தியாக ராச ரினிதெழுந் தருளல் வேண்டும்.

798. அருண்மலி தியாக ராச ரம்மையோ டெழுதல் வேட்டுப்
பொருண்மலி திருவ டிக்கு விண்ணப்பம் புரிந்தே னீரும்
தெருண்மலி பெய்த மேவல் செப்பவும் வேண்டுங் கொல்லென்
றிருண்மலி பொழில்சூ ழம்ப ரெய்தினர் மாற னூரே.

---

794. முகமனெலாம புரிந்தார் என இயைக்க, முகமன் – உபசாரம். நம்பியார் – நம்பியாரூரர் - சுந்தரர்.

795. மணிப் பூணூர் - சுந்தரர் முன் நாடு பணி முன்பு தாம் விரும்பிச் செய்து வந்த தொண்டுகள்.

796. இகம் - இவ்வுலகம்; இப்பிறப்பு எனினும் ஆம். ஈரிரண்டு...பிரான் - சிவபிரான். நகம் - மலை. நகம் ஒன்று மங்கை - பார்வதி. நண்ணி - நேரில் வந்து. அவி உணு கொள்ள - (யாக) அவி உணவை நேரில் பெற்று உண்ண; அவி உணு - அவிர்ப்பாகம். மகம் - யாகம். இறைவனும் இறைவியும் நேரில் வந்து அவிர்ப்பாகம் கொள்ளத்தக்க யாகம் ஒன்றினைச் செய்ய மாறனூர் கருதினூர்.

797. ஆய் புகழ் - ஆராயத்தக்க அரிய புகழ். நம்பி சுந்தரர். புகழ் வேய் யாகம் என மாற்றுக.

798. வேட்டு - விரும்பி. தெருள் மலிபு எய்த - தெளிவு மிக்குப் பொருந்த.

### யாகம் இயற்றல்

799. திருவள ரம்பர் மேல்பாற் செழுமகச் சாலை கோலி
வெருவரும் வேதி குண்ட மேகலை யொடுஞ்ச மைத்து
மருவுப கரணம் யாவுங் குறையற வமைத்து வாய்ந்த
பெருமறை யவர்கள் சூழப் பிறங்கெரி வளர்த்தார் நன்னாள்.

### சுந்தரரும் யாகத்துக்கு வருதல்

800. அயனகர் மறையோர் யாரு மடைந்தன ரருள்வன் றொண்டர்
மயறபு தியாக ராசர் மலரடி வணங்கிப் போற்றி
இயலமை யம்பர் முன்ன மெய்தல்வின் ணப்பஞ் செய்து
வியலருள் பெற்றி யாக சாலையுண் மேவி னாரால்.

### இறைவர் அன்பர்கள் வேண்டுகோளை முற்றுவித்தல்

801. தண்ணிய மாற ரெண்ணந் தனைமுடித் திடவன் றொண்டர்
புண்ணியத் தியாக ராசர் வருகையுட் புணர்த்தி மேவ
எண்ணிய வனையார் தோழ ரெண்ணத்தை மறுப்பர் கொல்லோ
கண்ணிய வன்ப ருள்ளக் கருத்தினை முடித்தல் செய்வார்

### இறைவர் புலையுருவங்கொண்டு வருதல்

802. உருவெது கொடுசென் றாலு முணருவ ரன்ப ரென்று
கருகிருண் மேனி தாங்கி யழுக்குடை கடியிற் சூழ்வுற்
றொருமுடைத் தோலொ டாங்கி யூன்சுமை யொடும்வெ றிக்கள்
மருவிய நாற்றத் தோடும் புலையராய் வந்தா ரன்றே.

803. ஈசரே நீச ராகு ரென்றிடம் பிரியா ளாய
வாசமார் குழலா ளும்மை வண்ணமோர் புலைச்சி யாகி
நேசமார் தரப்பின் மேவ நெடுமறை முடிக்கு மெட்டார்
பேசநீ ளன்பர் யாக சாலையுட் பிறங்கப் புக்கார்.

---

799. கோலுதல் - அமைத்தல். வேதி குண்டம் - ஓம குண்டம். மேகலை - குண்டத்தின் விளிம்பமைப்பு அல்லது சுற்றமைப்பு; 'வேதியும் குண்டமும் மேகலை யோடு ... கண்டு' (திருவிளை. திருமணப், 67). உபகரணம் - கருவிகள். நன்னாளில் வளர்த்தார் என்க.

801. உள் புணர்த்தி - மனத்திலே கொண்டு. மேவ - (அம்பர்க்கு) செல்ல. எண்ணிய அனையார் - (இவ்வாறு) எண்ணப்பட்ட தியாகராசர். தோழர் - தோழரான சுந்தரர். கண்ணிய அன்பர் - கருதிய அன்பர் இருவருடையவும்.

802. கடி - அரை. முடை தோல் தோள் தாங்கி - புலால் நாற்றம் வீசும் தோல் ஒன்றைத் தோளிலே இட்டு. ஊன் சுமை - மாமிசப் பொதி. கள் நாற்றத் தோடும் என்க.

803. இடம் - இடப்பக்கம். ஆர்தர - நிரம்ப. அன்பர் - மாறனார்.

804. அருமறை முடிக்கு மெட்டா வையரோர் புலைய ராகித்
திருமறை யவர்தஞ் சாலை புகுதலுஞ் சேய்த்தே கண்ட
பெருமறை யவரெல் லாரும் பெருஞ்சினந் தலைகொண் டங்கை
உருமறைந் தென்னத் தட்டி யோச்சவு மொழியக் காணூர்.

மாறனுர் உண்மை உணர்தல்

805. புலையனீங் கடைவ தென்னே போயது மறையோர் தன்மை
நிலைகுலைந் தெனவெ ழுந்து ஞெரேலெனப் புறத்துப் போனூர்
தலைமறை யவரெல் லாருந் தனிமறை யவரு முள்ளத்
துலைவற வுணர்ந்தா ராகி வன்றொண்டர்க் குரைக்க லுற்றுர்.

806. நம்மையாள் பவரே யிந்த வுருநயந் தடைந்தா ரென்று
செம்மையே தெரிந்தே னீரேன் செப்புகின் றீரென் ருேத
அம்மையோ டடைந்தா ரன்ன ரேயைய மில்லென் ருேதி
எம்மையா ளுடையா ரூரா் ருறநகைத் தீது சொல்வார்.

சுந்தரர் இறைவரிடம் சில கூறுதல்

807. மறைமுதற் கலைக ளெல்லா மாலயற் கரியார் நாதப்
பறையரென் றுரைக்கும் வார்த்தை புதிதுறப் பண்ணி னீரோ
முறைமையிற் கரித்தோ லிந்த முடைத்தோல்செய் தீரோ தெய்வ
நறைகமழ் கழுநீ ருஞ்ச் சுமந்தது நன்று நன்றல்.

808. புழுகுநெய் வாச மெல்லாம் புலைமது வாச மாக்கி
ஒழுகுதன் மிகவு நன்று லுடன்களை யாமை யானே
முழுகிய தழுக்குச் சூழ்ந்த கலையக முதல்வ ரேயிப்
பழுதழ காயிற் றென்று பற்பல பேசி ஞரால்.

---

804. சாலை - யாகசாலை. உரும் அறைந்தென்ன - இடி இடித்தாற்போல. ஓச்ச - ஓட்ட.

805. போனூர் : போனவர் மறையவர் எல்லாரும். தனி மறையவர் - மாறனுர். உள்ளத்து உலைவு அற - மனத்தில் கலக்கம் நீங்க.

806. அம்மை - தேவி. ஆரூரர் - சுந்தரர்.

807. மறை முதல் கலைகளெல்லாம் உரைக்கும் என்க. நாதப் பறையர் - சிவபிரானுக்குரிய பெயர்களுள் ஒன்று. கரித்தோல் - யானைத்தோல். நறை - நறுமணம். கழுநீர் - செங்கழுநீர்ப்பூ ; தியாகருக்குரியது.

808. புலை - புலால். மது - கள். வாசம் - வாசனை. கலைஅகம் - ஆடையினிடம். சூழ்ந்த கலையகம் அழுக்கு முழுகியது என்றியைக்க. இப்பழுது அழகாயிற்று- இக் குறைகள் பிரானுக்கு மேலும் அழகையே கொடுத்தன.

கலிக் கூற்று

809. ஒருமருப் பண்ணல் சாத்தன் முதலீய் ருருவ மாறி
அருகுவந் தந்த ணீரிங் கடைந்தவர் புலேய ரல்லர்
பெருகநன் குணர்வீ ரென்று பேசவுந் தெரியா ரென்றூழ்
கருகிய விருள்கு ருட்டுக் கண்ணிற்குத் தபுத லுண்டோ.

810. ஐயமெள் ளளவு நீங்கா வையரங் ககன்று போகச்
செய்யவன் ஞெண்ட ரோடு திகழ்மகிழ் வடைந்த மாறர்
பையர வல்குற் பாகப் பறையர்தம் பாதம் போற்றி
வெய்யநல் லவிகொ டுத்தார் விண்மலர் மழைபெய் தன்றே.

811. வேண்டுவ தென்னே யென்று வித்தகர் வினவ வென்னே
ஆண்டுகொண் டவரே யிந்த வடிவினீங் கமர்க வென்னப்
பாண்டுநீ றணிவா ரந்தப் படியருள் புரிந்தார் செந்தீத்
தூண்டுநன் மகஞ்செய் மாண்பாற் சோமாசி மாற ரானுர்.

812. கூறுமா ரூரர் பொற்ருள் குறிக்கொடு தொழுதும் மாலிப்
பேறுபெற் றனனு லென்று பேசுபு விடுத்த பின்னர்
நாறுபூம் பொய்கை தோய்ந்து நன்மனே யடைந்து நாதற்
றேறுமா தரவில் வாழ்ந்து சிவலோக மடைந்தா ரீற்றில்.

813. மறைமுதல் வெண்ணே நல்லூர் வைதிக மறையோ ஞகிக்
குறையறத் தடுத்தாட் கொண்டு குற்றேவல் செய்யப் பெற்ற
இறையவர் நாவ லூர ரடியேனென் றிசைக்கப் பெற்ருர்
அறைபெரும் புகழை யாமோ வறிந்தெடுத் திசைக்க வல்லேம்.

814. பெண்மைசா லொருபா லானே யிடையறப் பேணி வாழ்ந்த
வண்மைசால் புகழ்ச்சோ மாசி மாறர்தஞ் சரிதஞ் சொற்ரும்
திண்மைசால் செங்கட் சோழர் திருவவ தாரஞ் செய்தாங்
குண்மைசால் பணிபு ரிந்த சரித்திர முரைப்பா மன்றே.

மாற நாயனுர் வழிபடு படலம் முற்றியது.

(இப்படலதது்த் திருவிருத்தம் 38.)

---

809. ஒரு மருப்பு அண்ணல் - விநாயகர். சாத்தன் - ஹரிஹரபுத்திரனுர். புலேயருருவத்தில் வந்த விநாயகர் சாத்தனுர் முதலியவர்கள் தங்கள் சுய உருவத் தோடு சமீபத்தில் வந்து அந்தணர்களிடம் 'இங்கே வந்தவர் புலேயரல்லர்' என்று கூறினுலும், அஞ்ஞானம் நிறைந்த அவர்கள் அதை உணரமாட்டார்கள் என்றபடி. வெயிலே கருகியதாகத் தோன்றும் இருள் சூழ்ந்த குருடடுக் கண்ணுக்கு, அக் குருட்டுத் தன்மையினின்றும் தப்பும் வகையில்லே என்றது இறுதியில் கூறியது; இது வேற்றுப் பொருள் வைப்பணி.

810. ஐயர் - அந்தணர். வெய்ய - விரும்பததக்க. பெய்தன்று - பெய்தது.

811. வித்தகர் - சிவபெருமான்- பாண்டு - வெள்ளே. சோமாசி - சோமயாஜி - சோமயாகம் செய்தவர்.

813. இறையவர் நாவலூரர் - தலேமையுடையவராகிய சுந்தரர். ஆசிரியர் சுந்தரரிடத்துக் கொண்டுள்ள பகதிச் சிறப்பு இங்கே புலப்படும் அடியேன் என்று கூறப்பெற்றவர் மாறனுர்; கூறியது திருத்தொண்டத் தொகையில்.

# 14. செங்கட் சோழ நாயனர் வழிபடு படலம்

## கயிலாயத்தின் சிறப்பு

815. வானவர் மகவான் மலரணைப் புத்தேண் மதுப்பொழி நறுந்துழாய் மார்பன்
தானவர் சால கடங்கடர் புகழ்க்கா ந் தருவர்கிம் புருடர்மற்றியக்கர்
ஆனவர் முதலோர் சூழ்ந்தினி தேத்த வருவுரு வருவுரு வெனுஞ்சொற்
பானவ ருமையோ டினிதுவீற் றிருக்கும் பண்புடை யதுகயி லாயம்.

## மாலியவானும் புட்பதந்தனும் ஒருவரை ஒருவர் சபித்துக்கொள்ளல்

816. அந்தமால் வரையிற் பெருங்கண நாத ரனேகரு ளொருவன்மா லியவான்
சந்தமார் புட்ப தந்தன்மற் றெருருவன் றவலரு முளச்செருக் காய
பந்தமிக் குடையா ரிருவரு மிவர்நம் பரம்பர னடிப்பணி புரிவார்
கந்தநன் மலரா தியகொடு பூசை சுமழ்தரப் புரிதரு நாளில்.

817. ஒருவரை யொருவ ரிகலுபு முந்தி யுறுபணி யாற்றுபு வருவார்
இருவரு மொருதேத் தெதிர்ந்தன ரழுக்கா றிருத்தலா லெரியெழச்சினந்து
வெருவரும் கரட கடதடக் களிறாய் விடுகெனப் புட்பதந் தனைமுன்
மருவருங் கமைசற் றில்லவ ஞகி மாலிய வான்சபித் தனனே.

818. மாலிய வான்சொல் செவியகம் புகலு மருச்சினம் பூண்டழுக் காறே
கோலிய மனத்துப் புட்பதந் தனுநீ குறிக்கொளாச் சிலம்பியா கென்றான்
ஆலிய செருக்கா லொருவருக் கொருவ ரமைத்தசா பத்தொடக் குண்டு
வாலிய நீற்று மேனியெம் பெருமான் மலரடி தொழுதெழுந் துரைப்பார்.

---

815. மகவான் - இந்திரன். மலரணை புத்தேள் - பிரமன். துழாய் மார்பன் - திருமால். தானவர் - வித்தியாதரர்; அசுரரும் ஆம். சாலகடங்கடர் – அரக்கர்; (சால கடங்கடை என்பாளிடம் தோன்றியவர் ஆதலின்). இயக்கர் - யக்ஷர். அரு, உரு, அருவுரு என மூன்று விதங்களிலும் தம்மைத் தோற்றுவிப்பவர். பானவர்: பனவர் என்பதன் நீட்டல்; பனவர் - இறைவர்; 'திருப்பெருந்துறையுறை பனவன்' (திருவாசகம்)

816. உளச் செருக்காய பந்தம்: பக்தியுடைமையிற் பெரியோம் என்ற செருக்கு; இதுவும் பந்தமாம்.

817. இகலுபு - பகைத்து. தேம் - இடம். கரடம் - யானைக் கவுளினின்றும் மதம் பாயும் துவாரம்; கடதடம் - யானைக் கதுப்பு; கமை பொறுமை.

818. ஆலிய - நச்சுத் தன்மையுடைய. வாலிய நீறு - வெண்ணீறு.

### இருவரும் இறைவரிடம் தம் குறை கூற அவர் அருளல்

819. அடியரே மறிவின் ஞருருவருக் கொருவ
ரமைத்தனஞ் சாபமீ தென்றூர்
நெடியவ னுணரா நின்மலப் பெருமா
னிலாவரும் பெனநகை முகிழ்த்துக்
கடியபா தகந்தீர் சோழநன் ஞட்டிற்
கரைபொரு காவிரி வடபால்
படியவா ஞான கேத்திர மென்றோர்
பண்புசால் பெருந்தலம் விளங்கும்

820. அத்தல நீவி ரிருவருங் குறுகி
யாங்குமிப் படியிகல் பூண்டு
முத்தலம் புகழு நங்குறிப் பூசை
முடித்தொழித் திடுமினிச் சாபம்
நத்தல மருமொண் களத்து மையொடுநா
நயந்துசெய் பேரருண் மாண்பால்
இத்தல மீட்டும் புகுந்தினி தமர்வீ
ரென்றனன் விடைகொடுத் தனனே.

### இரண்டும் ஞானகேத்திரமடைதல்

821. விடைகொடு களிறுஞ் சிலம்பியு மெவற்று
மேம்படும் வளவர்நன் ஞட்டின்
மடையடு கருப்பங் கட்டிகொண் டடைக்கு
மருதத்ப துண்மிகச் சிறப்பாய
நடைகெழு தரங்கக் காவிரி வடபால்
ஞானகேத் திரத்தினை யடையா
உடைதிரைக் கடல்வைப் பேத்துமத் தான
முயர்வளம் வியந்துநோக் கியவால்.

---

819. நெடியவன் - திருமால். படி - பூமி. அவாம் - விரும்புகிற. ஞான கேத்திரம் - திருவானைக்கா.

820. குறி - இலிங்கம். பூசை முடித்து இச்சாபம் ஒழிந்திடுமின் என இயைக்க. நத்து அலமரும் ஒண் களம் - சங்கு வருந்தும்படி அழகு பெற்ற திருக்கழுத்து. இத் தலம் என்றது, கயிலாயத்தை.

821. அடு கருப்பம் கட்டி - காய்ச்சப் பெற்ற வெல்லக்கட்டி. கருப்பங்கட்டி கொண்டு மடை அடைக்கும் என்றியைக்க. தரங்கம் - அலை. அடையா - அடைந்து. கடல் வைப்பு - கடலால் சூழப் பெற்ற உலகம்.

### இரண்டும் இறைவரைப் பூசித்தலில் பிணக்குறுதல்

822. உள்ளிய களிறுஞ் சிலம்பியும்
வேருயுறைந்துபூ சனைசெயத் தொடங்கி
வெள்ளிய நாவற் றருவடி முளைத்த
விமலவற் புதக்குறி கண்டு
தெள்ளிய சிலம்பி யையகோ சருகு
திருமுடி யுதிர்வதோ வென்று
புள்ளிய விமான மாதிய நூலாற்
பொருக்கென விழைத்ததை யன்றே.

823. மழைமதக் களிறு மக்குறி நோக்கி
மகிழ்ச்சியிற் பூசனை புரிவான்
விழைதலுற் றையன் மணிமுடி மேலான்
மிக்கனு சிதமெனு மிந்நூல்
தழைதரப் படர்த றகாதென வழித்துத்
தண்புனன் முழுகுபு நெஞ்சக்
குழைவொடு மலரா தியகொடு பூசை
குயிற்றுபு சென்றதை யன்றே.

824. வழிவருநாளிற் சிலம்பிவந் தந்தோ
மலரவ னுணர்தரா முடிமேல்
இழிசரு கடையா வணம்புரி தருகோ
யிலையழித் திட்டது மன்றிப்
பழிபடு தழைமுற் சுமத்திய தென்ன
பாவமென் றவையெலாம் விலக்கிக்
கழிதர வாய்நூல் கொடுதளி யிழைத்துக்
கருத்துற மகிழ்ந்துசென் றன்றே.

---

822. வெள்ளிய நாவல் தரு - வெண்ணாவல் மரம். விமல அற்புத குறி - மல மற்ற அதிசயிக்கத்தக்க இலிங்கம். ஐயகோ - ஐயோ. புள்ளிய - மதிப்பு மிக்க; புள்ளி - மதிப்பு. சிலம்பி (தன்வாய்) நூலால் விமானம் முதலியவற்றை இழைத்தது என்க.

823. படர்தல் தகாதென.

824. தளி - கோயில்.

### சிலந்தி நடந்தது அறிந்ததும் அதன் செயலும்

825. மற்றைநாண் மழைபோன் மதக்களி றடுத்து
மறுவலும் விமலனார் சடிலக்
கற்றைவார் முடிமே னூலுறல் கண்டு
கைகொடு சுலாய்ப்புனன் முழுகிப்
பற்றையார் பூசை முடித்தினி தேகப்
படர்தரு மற்றைநாட் சிலம்பி
உற்றையார் தளிசெய் தழிப்பது
தெரிவா னொளித்தொரு சாரிருந் தன்றே.

826. அடுத்தநா ளெறும்பி யடுத்துநூற் றளியை
யழித்திடக் கண்டுளம் புழுங்கி
மடுத்தநாம் புரியுஞ் சிவபணிக் கூறு
மருவிட நாடொறு முயன்று
கெடுத்ததைக் கெடுத்த லறமென நினைந்து
கிளர்துதிக் கைப்புழை நுழைந்து
தொடுத்தவெஞ் சினத்தான் மண்டையுட் குடைந்து
துண்ணெனக் கறித்ததை யன்றே.

### இறைவர் இருவர்க்கும் வரமளித்தல்

827. கடித்தலும் பிளிறித் துதிக்கைவாய் வைத்துக்
கறையடி வீழ்ந்துமாய்ந் தன்று
வடித்தநூற் றளிசெய் திடவெளி வருவான்
வழியிலா மையினுழல் சிலம்பி
துடித்ததாய் மடிந்த தெம்பிரா னுங்குத்
தோற்றிட வடிமிசைப் பணிந்து
முடித்தவான் பிறையா யருளென வேண்டு
முறையிரு வோரையு நோக்கி

---

825. மழைபோல் மதம் களிறு எனப் பிரிக்க. மறுவலும் - மீண்டும். சடிலம் கற்றை - சடைத்தொகுதி. சுலாய் - சுழற்றியெடுத்து. பற்றையு ஆர் - பற்று ஆர்; ஐ, சாரியை; அன்புமிக்க. உற்று - வந்தடைந்து. ஐ ஆர் தளி செய்து - அழகு மிக்க கோவிலை அமைத்து. தெரிவான் - தெரிந்து கொள்ளும் பொருட்டு. இருந்தன்று - இருந்தது.

826. எறும்பி - யானை. ஊறு - கேடு. கெடுத்ததைக் கெடுத்தல் ஓர் அறம் என்பது சிலம்பி நினைத்த நீதி. புழை – துவாரம். கறித்தல் - கடித்தல்.

827. கறையடி - யானை. மாய்ந்தன்று - இறந்தது. சிலம்பியும் மடிந்தது.

828. கறையடி யுருவிற் றீர்ந்தவன் முன்போற்
கயிலைமால் வரையினை யடைக
குறைபெறு சிலம்பி யுருவினிற் றீர்ந்தோய்
கொழுங்கதிர் மரபிடைத் தோன்றி
முறையினிப் புவியாள் வளவன்மா தவத்து
முளையெனத் தோன்றுபு நாளில்
நிறைமணி மகுடங் கவித்துல காடி
நெஞ்சுறு குறையற முடித்தே

829. இம்பரேத் தெடுக்கு மித்தலத் தினுமிக்
கேற்றமா கியவொரு தானம்
அம்பரென் றுரைப்ப தத்தலப் பணிசெய்
தமருநா ளாவயிற் றேன்றி
உம்பரும் வியக்கு நங்கணத் தலைமை
யுதவுதும் போதியென் றருளிப்
பம்பரஞ் சமழ்க்கு முலையருச் சித்த
பண்புசால் குறியிடை மறைந்தான்

புட்பதந்தன் சோழர் குடியில் பிறத்தல்

830. மறைமுதன் மறையவரருளிய படியே
வான்பெருஞ் சிதம்பர தலத்து
முறையுளி யரசு புரிசுப தேவன்
முதல்வனை வழிபடு நாளில்
நிறைகுணக் கமல வதிதிரு வயிற்றி
னிகழ்கரு வுற்றன ரெங்கும்
குறையறத் தளிசெய் திடுமொரு கருத்துக்
கொண்டுமுற் சிலம்பியிற் றீர்ந்தார்.

---

828. குறைபெறு சிலம்பி என்றது, முன் செய்யுளில் வடித்த நூல் தளிசெய்திட வெளி வருவான் வழியில்லாமையால் ... மடிந்தது' என்று கூறியதில் சுட்டப்பெற்ற குறையைக் குறித்தது. கதிர் மரபு - சூரிய வமிசம். வளவன் - சோழன். முளை - குருத்து; குலக்கொழுந்து.

829. இத்தலம் - ஆனைக்கா. ஆவயின் - அங்கே. சமழ்த்தல் - ஒத்தல். அம்பிகை இறைவனை அருச்சித்தனள் என்பது அத்தல ஐதிகம். குறி - இலிங்கம்.

830. மறை முதல்-இறைவர். சுபதேவன்; சோழ மன்னன். கமலவதி, அவன் பத்தினி. சிலம்பியின் தீர்ந்தார் - புட்பதந்தன்.

831. மதியொரு பானு நிரம்புறக் கமல
வதிவயி றுளைதரு காலை
அதிமதிக் கணித நூலின ரரசை
யடைந்தொரு முகுர்த்த நாழிகைதீர்ந்
துதிதிற மருவி னுலகெலாம் புரக்கு
மொருமக வென்றனர் கேட்டு
விதியுளி செங்கோல் செலுத்துவோன் மனையாள்
விழைந்துணர்ந் திடுதிறம் விடுத்தான்.

832. வருமக வாக்கங் கேட்டலுங் கமல
வதியொரு முகுர்த்தந்தீர் காறும்
இருபதங் கயிற்றிற் பிணித்துமேற் றூக்கி
யிறக்குநல் லோரையி லென்ன
மருமலர்க் குழலார் தலைகிழக் காக
மலர்ப்பத மேக்குறத் தூக்கிப்
பொருவரு மோரை வந்தபோ திறக்கப்
பூங்குழன் மங்கையுண் மகிழ்ந்து

### செங்கணான் பிறப்பும் வளர்ச்சியும்

833. வலம்புரி யொருமுத் தீன்றெனக் கடல்சூழ்
மலர்தலை யுலகெலாந் தழைய
நலம்புரி தரும நனிதலை யெடுப்ப
நன்மக வுயிர்த்தனள் பிறக்கும்
புலம்புரி காலந் தாழ்த்தலிற் சேந்து
பொலியிரு கண்களு நோக்கிக்
குலம்புரி மடந்தை செய்யகண் ணானே
குலவவீங் குதித்தவ னென்றாள்.

---

831. மதி - மாதம். ஒருபான - பத்து. உளைதருதல் - வேதனையுறுதல். கணித நூலினர் - சோதிடர். உதி திறம் மருவின் - பிறக்கும் தன்மை நேர்ந்தால். உணர்ந்திடு திறம் - உணருமாறு.

832. இரு பதம் - இரண்டு கால்களையும். 'நல் ஓரையில் இறக்கும்' என்பது கமலவதியின கட்டளை. கிழக்காக - கீழாக. 'கிழக்காம் தலை' (குறள்). பொருவ அரும் - இணை அற்ற. ஓரை - லக்கினம்.

833. சேந்து - சிவந்து. செய்ய கண்ணான் - செங்கணான்.

834. காவலன் மகிழ்ச்சி தலைக்கொளச் சாத
கன்மமுற் பலவுநன் கியற்றி
மேவலன் பகலா மறையவ ராதி
விழைபவ ரியாவர்க்குஞ் செம்பொன்
ஓவலன் பொழிந்து சிவபிரா னருளே
யுளங்குறித் திருந்தனன் கொடிமேல்
சேவல னென்ன நாட்குநாள் வளர்ந்தார்
சிவாலயப் பணிசெய வந்தார்.

அரசுரிமை பெறுதல்

835. பிறையென வளரு மைந்தனுர் மறைமுற்
பெருங்கலை யாகிய பலவும்
நிறைதரவுணர்ந்தார் மூவகைக் கரிசு
நீக்கிமற் றஃதிறை யுணர்ந்து
குறைவறு மகிழ்ச்சி யனுய்ப்பதி ஞறுங்
குலவக வையினுல குவப்ப
நறைமல ரலங்கன் மணிமுடி கவித்து
நல்லர சுரிமையுங் கொடுத்தான்.

36. மறையவர் வாழ்த்த மன்னவ ரிறைஞ்ச
மற்றையர் பணிதலை நிற்ப
நிறைமதிப் புலவர் நிலாங்கவி தொடுப்ப
நிகழமைச் சாதியர் சூழ
கறையகன் மதியின் வெண்குடை நிழற்றக்
காமரு சாமரை யிரட்ட
முறையுளி செங்கோல் செலுத்துவா ராஞர்
முதிரருட் டிருப்பெரு வளவர்.

---

834. மேவல் அன்பு அகலா மறையவர் எனப் பிரிக்க. கொடிமேல் சேவலன் - முருகன். மூவகைக் கரிசு : ஐயம், திரிபு, அறியாமை என்பன.

835. பதினாும் அகவை - பதினாறும் பிராயம். கொடுத்தான் : கொடுத்தவன், சுபதேவன்.

836. நிலாம் - நிலாவும். நிகழ் அமைச்சு ஆதியர் எனப் பிரிக்க.

### கோச்செங்கனுர் யானை நுழைக்கமுடியாத சினகரம் கட்டத் துணிதல்

837. கறைதபுத் தரசு புரியுநன் ளுளிற்
கங்கைவார் சடையவ ரருளால்
அறையுமுற் பவத்து நிகழ்ச்சியு முணர்ந்தா
ராதலிற் கறையடி சிதைக்கக்
குறைசின கரத்தைச் சிதைதரா வண்ணங்
குயிற்றுவான் கருத்தினு ளமைத்து
நிறைதிரு வானைக் காவகத் தடைந்தார்
நேரியர் குலப்பெருஞ் செல்வர்.

838. வெள்ளிய நாவ லடியினீர்த் திரளாய்
வீற்றினி திருப்பவர்க் களவா
வொள்ளிய செம்பொ ஞற்றளி யமைப்பா
னுன்னின ரிறையவர் மறுக்கத்
தெள்ளிய வடபாற் கெண்டகை யாய
சிலைகொடு களிற்றுவெம் பகையைத்
தள்ளிய கோயி லழகுறப் புரிந்து
தாழ்ந்தனர் திருவருள் பெற்ருர்.

839. புண்ணிய வளவ ரானைக்கா வகத்துப்
பொற்பமர் தளியமைத் தாங்கு

---

837. கறை தபுத்து - குறைகளை நீக்கி. முன் பவம் - முன் பிறப்பு. **கறையடி** - யானை. சினகரம் - கோயில். குயிற்றுதல் - இயற்றுதல். நேரியர் - சோழர்.

838. வெள்ளிய ... இருப்பவர். ஆனைக்காவில் இறைவன் நீர்த்திரளாக எழுந்தருளியுள்ளமை கூறப்பெற்றது; இதனை அப்புலிங்கம் என்பர். இறையவர் மறுத்தது, சோழன் செம்பொன்னால் தமக்குத் தளியமைப்பதை. கெண்டகை ஆய சிலை கொடு, ... கோயில் புரிந்து தாழ்ந்தனர்: கெண்டகை என்பது வட திசையிலுள்ள ஒரு மலையையும் அதனை அடுத்த அப்பெயருடைய ஓர் ஆற்றையும் குறிக்கும். சிலை, இங்கு விமானத்தைக் குறிக்கும். கெண்டகையில் முன்னொருகால் தெய்வத் தச்சன் நிருமித்து ஆற்றினுள் வைத்திருந்த ஒரு விமானத்தை இறைவனருளால் கோச் செங்கணன் பொன்னியாற்றில் வரச் செய்து, அதனைக் கொண்டு அமுதலிங்கேச ருக்குக் கோயிலமைத்தானென்பது திருவானைக்காப் புராணத்திற் கண்ட வரலாறு. களிற்று வெம்பகையைத் தள்ளிய கோயில் - யானை உள்ளே புகாதபடி அமைத்த கோயில்; சந்நிதியில் ஒன்பது துவாரங்களைக் கொண்ட ஒரு சாளரத்தை அமைத்து, தெற்கே யானை புகக் கூடாததும் பிறர் தரிசனத்துக்குச் செல்லக் கூடியதுமான ஒரு சிறிய வாயிலோடு கோயிலமைத்தானென்பதும் அடி புராணம். கெண்டகை இக் காலத்துக் கண்டகி என வழங்குவது போலும். இவ்வாற்றில், **சாளக்கிராமங்கள் நிறைய வுண்டென்பர்.**

நண்ணிய நல்லூர் வலிவல மாவூர்
நலமலி சிக்கல்கீழ் வேளூர்
கண்ணிய வாறை வடதளி தலைச்சங்
காடுமா வலம்புரம் யாரும்
எண்ணிய செம்பொன் பள்ளிநன் மருக
லிவைமுதற் பஃறளி சமைத்தார்.

அரசர் அம்பரை அடைந்து கோயிலமைத்தல்

840. நலமலி தலம்பற் பலசமைத் தம்பர்
நன்னக ரருளினு லடைந்து
வலமலி பிரம புரீசரை வம்பு
வனமலர்க் குழலியை வணங்கிக்
குலமலி தளிநன் கமைத்திடக் கருதிக்
கோதிலா வமைச்சரோ டாய்ந்து
புலமலி தபதி முதலியர்க் கூவிப்
பொருள்பல வீசினர் மன்னே.

841. தருபொரு ளேற்ருர் கற்றடிந் திடுவா
தடிந்தகற் பண்டியேற் றிடுவார்
பெருநில னெளியக்கொண்டுவந் திறக்கிப்
பினுங்கொடு வரற்கியக் கிடுவார்
வெருவறத் தண்டின் வடம்பிணித் தேற்றி
வீங்கிய தோள்கொடு சுமப்பார்
மருவுற நிறுத்தத் தக்கவை நிறுத்தி
வயங்கவேற் றிடுவவேற் றிடுவார்.

842. நிலம்பிளந் திடுவார் மணல்சொரிந் திடுவார்
நிறைதரத் துறுசிலை படுப்பார்
வலம்படு குற்றி கொண்டிடித் திடுவார்
மற்றதில் வரிக்கலேற் றிடுவார்
அலம்பட வளவி லிட்டிகை யறுப்பா
ரறுத்தவை யனைத்தையுஞ் சுடுவார்
உலம்பலுண் டாக நூறிடித் திடுவா
ருறுசுவைக் குளங்கரைத் திடுவார்.

---

839. நல்லூர், வலிவலம், ஆவூர், சிக்கல், கீழ்வேளூர், ஆறை, வடதளி, தலைச்சங்காடு, வலம்புரம், செம்பொன்பள்ளி, திருமருகல், ஆகிய தலங்களின் கோயில்கள் செங்கணான் அமைத்தவை என்பது இச் செய்யுளில் கூறப்பெறுகிறது.

840. தபதி - ஸ்தபதி; ஆகம முறைப்படி ஆலயங்கள் அமைத்தற்குரிய சிற்பி.

841. பண்டி - வண்டி. நிறுத்தல், ஏற்றல் முதலியன கற்களைச் செய்யும் காரியங்கள்.

842. துறுதல் - நெருங்குதல். குற்றி - மரக்கட்டை. வரிக்கல் - நீளமாக அடித்துத் திருத்திய கல். அலம் - அமைப்பு. இட்டிகை - செங்கல். உலம்பல் - ஆரவாரம். நூறு - சுண்ணும்பு. குளம் - வெல்லம். கட்டடம் அமைத்தற்கு ஆகும் தொழில் முறைகள் இங்குச் சுட்டப் பெற்றமை காண்க.

843. தளர்வற விந்த விதந்தொழில் புரிந்து
தடமதில் கோபுரஞ் செம்பொன்
வளர்கருக் கிரகமுத்தமண் டபமா
மண்டப நிருத்தமண் டபம்வான்
உளர்தரு குடுமி விழாக்கொண்மண் டபந்தீ
யொழிவறப் பயின்மடைப் பள்ளி
கிளர்மகச் சாலை யுமைமுதற் பலருங்
கெழுமுவான் சினகரம் பிறவும்

844. பொலிதர வமைத்தார் வளவனு ரமைச்சர்
புரோகிதர் முதலியர் சூழ
மெலிவற வமைந்த திருப்பணி யனைத்து
மேவிநோக் குபுமகிழ் கூர்ந்து
நலிவினன் னுளிற் கும்பநீ ராட்டி
நலங்கெழு நித்திய மாதி
ஒலிகெழு பூசை காலங்க டோறு
முறநனி நடத்துபு தொழுவார்

வேறு

இறைவர் அருள்புரிதல்

845. இந்த வண்ணம்பன் னுள்வழி பாடுசெய் திருக்கச
சந்த மேவிய பிரமபு ரீசருட் டழைய
வந்த வான்பெரு மகிழ்ச்சியான் மற்றவர்க் கருள்வான
முந்த நாவலி னடியரு ளியமொழிப் படியே.

846. ஓங்கு தங்குறிக் குத்தர பாகத்தி லும்பர்த்
தாங்கு நாவலி னடியமர் தருதிறங் காட்டப்
பாங்கு மேவிய வளனூர் பரிந்தது நோக்கித்
தீங்கு தீரநன் கருளினா ரெனமகிழ் நினைத்தார்.

847. முழுது மாகிய பிரமபு ரீசர்மொய் யன்பின்
தொழுக திர்க்குல மன்னவர் காணநேர் தோன்றி
எழுது சீர்த்தியாய் பெருங்கணத் தலைமைநிற் கீந்தாம்
பழுது தீர்தர வாழ்கெனப் பணித்தனர் மறைந்தார்.

---

843. கருக் கிரகம் - கர்ப்பக் கிரகம்; மூலக்கடவுள் எழுந்தருளும அறை. அந்த மண்டபம்: கர்ப்பக் கிரகத்துக்கு முன்னுள்ள சிறிய மண்டபம். குடுமி - உச்சி. மகச்சாலை - யாகசாலை. இது அடுத்த செய்யுளுடன் தொடரும்.

844. கும்பநீர் ஆட்டி - கும்பாபிஷேகம் செய்து.

846. உத்தரபாகம் - வடக்குப்பக்கம்.

847. கதிர்க்குலம் - சூரியகுலம். எழுது சீர்த்தியாய், என்றது மன்னனை.

848. அண்ண லாரரு ளியபடி கஞதிப ராகி
எண்ண லேதுமின் றுய்ச்சிவ லோகத்தை யெய்தி
விண்ண லார்கரங் கூப்பிட மேதக வுற்ருர்
கண்ண லார்புகழ் நிரப்பிய கோச்செய்ய கண்ஞர்.

849. பரவ வம்பரை மருவிய ஞானசம் பந்தர்
இரவ கற்றிய வளவரைப் புகழ்ந்தன ரென்னின்
குரவ வார்குழல் பாகருக் கன்பிஞற் குலாய
புரவர் சீர்த்தியை யாங்கொலோ விற்றெனப் புகல்வேம்.

850. அம்பர் மாநகர்த் தம்பிரா னுத்தரத் தமரும்
நம்ப ரானைக்கா வமுதலிங் கேசரை நயப்பார்
இம்பர் வாழ்பவ ராயினு மிந்திர ஞதி
உம்ப ரார்தொழ வுயர்ந்துவான் சிவபுரத் துறைவார்.

851. செங்கட் சோழஞ ரம்பரிற் றிருப்பணி செய்த
அங்கட் சீர்த்தியை யாசைகொண் டொருவிதத் தறைந்தாம்
திங்கட் செஞ்சடை யெம்பிரா னடிக்கன்பு செய்யும்
வெங்கட் போதக நந்தன்செய் பணியினை விரிப்பாம்.

செங்கட் சோழ நாயஞர் வழிபடு படலம் முற்றியது.

(இப் படலத்துத் திருவிருத்தம்-37.)

---

848. விண்நலார் - தேவர்கள். கண்ணல் - கருதுதல்.

849. குரவம் - ஒருவகை மலர். புரவர் - அரசர்.

850. உத்தரம் - வடக்கு.

851. போதகம் - யானை.

# 15. நந்தன் வழிபடு படலம்

## நந்தன் இயல்பு

852. கந்த வார்பொழிற் காம்போச தேயத்தான்
நந்த மாருயிர் நானிலத் தாருயிர்
எந்த நாளு மெனக்கரு நுங்குணச்
சந்த நந்த னெனும்பெயர் தாங்கினான்.

853. மாற்ற லார்புறங் காணும் வலியினான்
ஆற்ற லான்மண் ணனைத்தும் புரப்பவன்
போற்ற லானுயர்த் தான்கழற் பூச்செவி
ஏற்ற லன்னா னியம்பிய வார்த்தையே.

854. ஐய மாதிமுத் தோமு மகற்றுபு
செய்ய நூல்க ளனைத்துந் தெரிந்தவன்
பைய ராவணி பண்ணவன் வேடமே
மெய்ய தாய பொருளென மேவினான்.

855 நீறு கண்டிகை யோம்பு நியதியான்
ஏறு மஞ்செழுத் தெண்ணும் விரதத்தான்
சீறு மும்மலச் சேறு கழுவற்கோர்
ஆறு தாங்கி யருட்புனல் வேண்டுவான்.

856. மறையி னான்முகத் தோனவண் காவல்செய்
முறையி னேமி முகுந்தனை நீதிநூல்
துறையின் வாய்ந்த மனுவைத் துகளிலாப்
பொறையி னீர்சூழ் புடவியை வென்றவன்.

---

852. சந்தம் - அழகு. 'எந்த நாளும நமதம் ஆருயிர் நானிலத்து ஆருயிர்' என்பது நந்தன் கருத்து.

853. மாற்றலார் - பகைவர். போற்றல் ஆன் உயர்த்தான கழல் பூ என்க. கழற்பூ - திருவடி மலர். அன்னான் - இறைவன். இயம்பிய வார்த்தை - வேதம்.

854. தோம் - குற்றம். முக்குற்றம - ஐயம். திரிபு, அறியாமை. செய்ய - செம்மையான. பை அரா அணி பண்ணவன் - படத்தையுடைய பாம்புகளை அணியாகக்கொண்ட சிவபிரான்.

855. ஏறும் - ஏற்றமுடைய. ஆறு தாங்கி - சிவபிரான். மும்மலங்களாகிய சேற்றைக் கழுவுதற்கு இறைவன் அருளாகிய புனலை வேண்டுவான்.

856. நேமி - சக்கரம். பொறை - பொறுமை. புடவி - பூமி.

857. அளியன் வான்புக ழாய வளவிலா
ஒளியன் றங்குறை யோதவுற் றார்விழிக்
கெளியன் மாமுகி லீகைய னின்சொலாம்
நளியன் மேனி நலத்தின் மதனனே.

858. கோடி வண்டு குடைந்துகு டைந்துபண்
பாடி யாடப் பரிசென வின்னறா
நாடி நல்கு நலங்கிளர் மாலிகை
கூடி வீங்குங் குலவரைத் தோளினான்.

859. பகையி ரித்துத் தடற்றிற் புறப்படாப்
பகையு டம்பு பகிர்ந்துநெய்த் தோருண்டு
மிகையெ னாது தடிமுன் விழுங்கியும்
தகைவி ராம்பசி தாங்கரும் வாளினான்.

860. எண்ணி லாதக டாத்தவெ றும்பியும்
எண்ணி லாதவ யப்பரி யீட்டமும்
எண்ணி லாத விரதமும் வெற்றிமிக்
கெண்ணி லாத வயவரு மேய்ந்துளான்.

861. மதிய மைச்சர் வயங்குபு ரோகிதர்
பதிய மைந்த படைத்தலை வீரர்கள்
துதிசெய் மற்றுள தூயருஞ் சூழ்தர
நிதிய மன்ன னிறையுல காளுநாள்.

### நந்தன் வேட்டை மேற் செல்லல்

862. நெடிய வேட்டை வினைநிரப் பாமையால்
கொடிய மாவின் குலங்கள் பெருகுபு
முடிய ஊறு முயன்று புரியுமென்
றடிய வாய்ப்பணிந் தாங்கறைந் தார்சிலர்.

---

857. அளியன் - இரக்கமுடையவன். முகிலை ஒத்த ஈகையன். நளியன் - குளிர்ச்சியுடையவன். மதனன் - மன்மதன்.

858. நறா - தேன். மாலிகை - மாலை. வரை - மலை.

859. தடறு - வாளுறை. புறப்படா புறப்பட்டு. நெய்த்தோர் - இரத்தம். தடி - ஊன். தகைதல் - வாட்டுதல். விராவும் என்பது விராம் என ஆயிற்று.

860. எறும்பி - யானை. ஏய்ந்துளான் - பொருந்தியுள்ளவன்.

861. பதி - பதிதல். துதிசெய் தூயர் - சூதர், மாகதர் ஆகியோர்.

862. மாவின் குலங்கள் - விலங்குக் கூட்டங்கள். ஊறு - துன்பம். அடி அவாய் பணிந்து - அவன் திருவடியை விரும்பி வணங்கி.

863. என்ற வார்த்தை யிருசெவி யேறலும்
வென்ற வீரர்கள் யாரும்வி ரைந்தெழீஇ
ஒன்ற வேட்டைக் கொருப்பட் டெழுகெனக்
குன்ற நேர்புயக் கொற்றவன் கூறியே

864. ஓங்கு மாளிகை யுட்புகுந் தேவலர்
பாங்கு மேவ வமைத்த பசும்புனல்
வீங்கு தோளின னுடிவெண் ணீறிடா
வாங்கு நூலிடை பாகனை வாழ்த்தியே

865. மறுவ றப்பொற் கலத்து வயக்கிய
அறுசு வைத்திறத் தாயவு ணுச்சுரர்
நறுமு றுப்பக்கை தொட்டுநன் காம்விரை
பெறுமென் பாகடை பெட்புற மென்றபின்

866. அரையிற் கால்வழி யாச்செலுத் தோருடை
விரையப் பூட்டி விசித்தொரு பட்டிகை
உரையிற் சீர்த்த வுடைவா ணடுவுறத்
தரைமுற் றீயுங்கைக் கோதைக டாங்கியே

867. வன்மை சான்ற வயிரக் கவசமூ
றின்மை யாகமெய்க் கிட்டுத யக்கதிர்த்
தன்மை யாகத் தலைச்சாத் தணிந்தபின்
வின்மை யார்கழன் மென்பதஞ் சேர்த்தினன்.

868. ஆன்ற வேதிய ராக்கங் கரைந்திடச்
சான்ற மங்கல வாழ்த்துத் ததைதரத்
தோன்ற வந்தியர் முன்னந் துதைதர
மான்ற சிந்தையின் மன்னன் வெளிவந்தான்.

---

864. வாங்கு - துவள்கின்ற. நூல் இடை பாகன் - நூல போன்ற மெல்லிய இடையையுடைய உமா தேவியைப் பாகத்திற் கொண்ட சிவபிரானை.

865. வயக்குதல் - பரிமாறல். சுரர் நறுமுறுப்ப - தேவர்களும் பொருமை கொள்ள. பாகு அடை - பாக்கும் வெற்றிலையும்.

866. அரையில் கால் வழியாச் செலுத்து ஓர் உடை - காற்சட்டை. விசித்தல் கட்டுதல். பட்டிகை - அரைக்கச்சு. உரை - புகழ். தரை முற்று ஈயும் கை என்றதனால் அவன் ஈகைத் தன்மை கூறப் பெற்றது. கோதை - கையில பூணும் தோலுறை.

867. ஊறு - புண் முதலிய கேடு. உதயக் கதிர் - உதயசூரியன். தலைச்சாத்து தலைப்பாகை. வின்மை — ஒளியுடைமை. கழல் - வீரக் கழல்.

868. ஆன்ற - கல்வியில் மேம்பட்ட. ஆக்கம் கரைதல் - வாழ்த்துக் கூறல். ததைதல் - நெருங்குதல். வந்தியர் - மங்கலப பாடகர். துதைதல் - மிகுதல். மான்ற — பெருமிதங் கொண்ட.

869. வாரி யேழு மதிக்குமுன் வாவிடும்
மூரி வாம்பரி பண்ணுபு முன்கொணர்ந்
தாரி யாவென் றடியினி றைஞ்சினன்
சாரி யாதி தழைப்பிக்கும் வாதுவன்.

870. கரியி வர்ந்து வயிரங்கை யேந்துபு
சரிய வெற்புத் தகர்த்தவ ஞானுற
அரியி வர்ந்ததென் றியாரு மறைதரப்
பரியி வர்ந்தனன் பார்த்திவ னென்பவே.

871. எண்ணில் வீர ரிறுக்கிய கச்சையர்
கண்ணில் வெய்ய புலிங்கங் கழற்றுவார்
மண்ணி லொப்ப ரெவரெனு மாண்பினர்
புண்ணி லாவுவை வாளொடு போந்தனர்.

வேறு

872. கலையெ டுத்து ரைக்கு நீதி கண்டு பாரி னுயிரெலாம்
தலையெ டுத்து மகிழு மாறு தாங்கு மேந்த லைச்சுலாய்ச்
சிலையெ டுத்து வீர வீர ரெண்ணி லார்கள் சென்றிட
வலையெ டுத்து வார்சு மந்து சென்று ளார்பன் மாக்களே.

873. மருண்ட சிந்தை யாளர் தம்ம திக்குநேரெ னச்சொலச்
சுருண்ட வாலி ரும்ப னைம டற்க ருக்கெ னத்துதைந்
திருண்ட தாம்வி ளிம்பு வாயி ரங்கி நீரொ ழுக்குநா
வெருண்ட பார்வை ஞாளி பற்றி மேவி னர்கள் சிலவரே.

---

869. மூரி - வலிமை பரி பண்ணுதல் - குதிரைக்குச் சேணம் முதலியன பூட்டுதல். மதிக்கும் முன் எழு வாரி வாவிடும் என்க. மதித்தல் - நினைத்தல். வாரி - கடல். வாவுதல் - தாவுதல். ஆரியா ; விளி. சாரி - வட்டமாய் ஓடுகை வாதுவன் - குதிரைப் பாகன்.

870. வயிரம் - வச்சிராயுதம், வெற்பு சரிய தகர்த்தவன் - இந்திரன். அரி - சிங்கம்.

871. புலிங்கம் - நெருப்புப் பொறி. புண் நிலாவு வை வாள் எனப் பிரிக்க. வை - கூர்மை.

872. கலை - சாத்திரம். ஏந்தல் - அரசன். சுலாய் - சூழ்ந்து.

873. ஞாளி - நாய். நாய் வாலின் சுருளுக்கு, மருண்ட சிந்தையாளர் மதி. அதன் வாய்க்குப் பனை மடற் கருக்கு. துதைதல் - செறிதல். இரங்குதல் - ஒலித்தல். நாயின் நா எப்போதும் நீரொழுக்கும் தன்மை உடையது.

874. பணையெ ழுந்துமுகிலி னங்கள்பதற மண்டி யொலிசெயா
அணைய வெங்கு மறவர் துன்றி யடிவ ணங்கி யேகவே
துணைய மைந்த புயம டங்க நுரக முந்தி மிருகமார்
இணையி லாவ னம்பு குந்த தேற்கு மாறு பற்றியே.

875. துடிமு ழங்கு படையி னோடு துட்ட மாக்க ளைத்தெற
அடிமு ழங்கு வீர கண்டை யண்ணல் காடு புகுதலும்
ஒடியெ றிந்து வாரொ ழுக்கியு ழியொர் காவ தப்படக்
கடிசெய் தாய பின்பு மாக்கள் கலைத ரக்க லைத்தனர்.

876. துங்க மேய பம்பை கொம்பு துடிமு னுவி யம்பலும்
சிங்கம் யாளி வல்லி யஞ்சி னத்த கேழல் வெய்யமா
தங்கம் வன்கு டாவடிததைந்த மான்பெ ரும்மரை
அங்க முட்பொ திந்த வன்றி யாதி மாவெ ழுந்தவே.

(வேறு)

877. பாயுஞ்சில தொடருஞ்சில படருஞ்சில விடறிக்
காயுஞ்சில வதிர்க்குஞ்சில கதிக்குஞ்சில சினத்தீ
ஏயுஞ்சில வெறியுஞ்சில விஃதென்னெனப் பதைத்து
மாயுஞ்சில வெருளுஞ்சில மருளுஞ்சில மாக்கள்.

878. எய்வார்சில ரெறிவார்சில ரெதிர்மாவிருஞ் சென்னி
கொய்வார்சிலர் கொதிப்பார்சிலர் குறுகிச்சுரி கைப்போர்
செய்வார்சிலர் தெழிப்பார்சிலர் தெறுமாச்சிதை வுணர்ந்து
மொய்வார்முர சறைவார்சிலர் முதுவெஞ்சமர் வயவர்.

---

874. பணை - முரசு. பதறுதல் - கலங்குதல். முரசொலியால் மேகங்கள் கலங்கின என்றவாறு. மறவர் - வீரர். துன்றுதல் - நெருங்குதல். துணை அமைந்த. புயம் - இரண்டு புயங்கள். மடங்கல் - சிங்கம். துரகம் உந்தி - குதிரையைச் செலுத்தி. நந்தனுக்குச் சிங்கம்; முன் 870 ஐக் காண்க.

875. துட்ட மாக்களை - கொடிய விலங்குகளை. தெறுதல் - கொல்லுதல். வீர கண்டை - வீரக் குறியாக அணியும் மணி கட்டிய கழல். ஒடி எறிதல் – காட்டுப்புதல்களை வெட்டி எறிதல். வார் ஒழுக்குதல் - கயிறு கட்டல். ஓர் காவதம் - ஒரு காத அளவுள்ள இடத்தை. கடி செய்தல் - காவற்படுத்தல். மா கலைத்தல் - விலங்குகளை அவற்றின் பதுக்கிடங்களினின்று எழுப்புதல்.

876. துங்கம் - வெற்றி. பம்பை, கொம்பு, துடி - வாத்திய வகைகள். முனு - முன்னுக. இயம்புதல் - ஒலித்தல். வல்லியம் - புலி. கேழல் - பன்றி. மாதங்கம் - யானை. குடாவடி - கரடி. மரை; ஒருவகைமான. வன்றி - பன்றி.

877. அதிர்த்தல் - பேரிரைச்சலுண்டாக்குதல். கதித்தல் - விரைதல். மாக்கள் - விலங்குகள்.

878. சுரிகை - உடைவாள். வயவர் - வீரர்.

879. சிலமாக்களை யடிபற்றுபு சிலர்மண்மிசை யறைந்தார்
சிலமாக்களை வாள்வீசுபு சிலர்வெட்டுபு சிதைத்தார்
சிலமாக்களை யடுவாளியிற் சிலரெய்யெனச் செய்தார்
சிலமாக்களை யுடைவாள்கொடு சிலர்குத்துபு வீழ்த்தார்.

880. வாலற்றன சிலமாவுடல் வலியற்றன சிலமா
காலற்றன சிலமாவெழு கதியற்றன சிலமா
தோலற்றன சிலமாவடு துடிப்பற்றன சிலமா
பாலற்றன சிலமாவழல் பண்பற்றன சிலமா.

881. மிருகக்குல மிவ்வாறல மருமேல்வைவெஞ் சினமே
பெருகக்குய வரியாளிபி றங்குந்திண்ம டங்கல்
அருகக்கன மதநீர்பொழி யானைத்திர ளாதி
முருகத்திற லினர்மேற்செல முதல்வன்னது கண்டான்.

(வேறு)

882. அடுபுலிப் போத்துப் போலு மண்ணல்வாம் பரியு கைத்துக்
கொடுவரி சிலைகைக் கொண்டு கூர்ங்கணை பலசெ லுத்த
நெடுவலி மாக்க ளெல்லாம் ஞெரேலெனப் பதைப தைத்துக்
கடுமுர ணிழந்து சாய்ந்து கதறின வனம டங்க.

883. கலிகருங் கழற்கால் வேந்தன் கைச்சிலை செலுத்து மேவோர்
புலிமுகந் துளைத்துப் பின்பு போகிமண் புடையா நிற்கும்
மெலிவறு தோகைக் கீழால் விளங்குற வதுதெ ரிந்தோர்
வலிகெழு வாலி ரண்டு வாய்த்தது வியப்பே யென்பார்.

884. ஆகத்தின் மறுவு ருத நெடியமா லடுவி லுய்க்கும்
மோகத்தி னழல்கால் வாளி மும்மதம் பொழியா நிற்கும்
நாகத்தி னுடம்பு முற்று நண்ணுபு கரக்குங் காட்சி
மேகத்தி னுழைந்து மாயு மின்னலை யொத்த வன்றே.

---

879. எய்யெனச் செய்தல் - வருத்துதல்.

881. குயவரி - புலி. மடங்கல் - சிங்கம். முருக - அழிய.

883. கருங்கழல் – வலிய கழல். ஏ - அம்பு. வேந்தன் விட்ட அம்பு புலியின் முகத்தைத் துளைத்து, உடலை உருவிப் பின்பு போயிற்று. அந்நிலையில் புலி விழுந்து தன் வாலைத் தரையில் அடித்தது. அதன்பின் நின்ற அம்பு அதன் இரண்டாவது வாலாகத் தோன்றிற்று என்பது கூறப்பெற்றது. தோகை - வால். புலி தன் தோகையால் மண் புடைத்தல். 'தோகை மண் புடைக்குங் காய்புலி' (கல்லா. 6) அம்பு விலங்கின் முகத்தில் பாய்ந்து உடலை ஊடுருவிச் செல்லல்: 'முன்பு விட்டவெவ் வாளி கேழன்முகம் பிளந்து பினுருவ' (வில்லிபா. அருச்சுனன்றவ. 93).

884. ஆகத்தின் மறு உருத நெடியமால் - நந்தன்; அரசன் திருமாலின் அமிச மாதலின் இவ்வாறு கூறினார். மறுஉற்றவர் திருமால். ஆகம் - மார்பு. மறு - சீவற்ச மென்னும் மச்சம். மோகத்தின் வாளி - மோகனாஸ்திரம்.

885. பொதிதர வுடம்பு முற்றும் புண்டரீ கக்க ணெய்தாத்
திதிபுரி மகவா னங்கைச் சிலீமுகம் விரைந் து சென்று
கொதிதழற் சினம டங்கல் குறிக்கொடு தொடருங் காட்சி
மதியினைத் தொடர்ந்து செல்லும் வாளரா வொத்த வன்றே.

886. மருடபக் கலைக டேர்ந்த மன்னவன் செலுத் தும் பல்லம்
அருடபக் கொலையே மேற்கொண் டடல்புரி கரிய கேழல்
வெருடபப் பொலிய மேனி கிழித்துமிக் கேறுங் காட்சி
இருடபக் கிழித்துச் செல்லுங் கொள்ளியொத் திருந் த வன்றே.

887. அயல்வளர் தேமாஞ் சோலை யளிநருக் கனிகள் சிந்தக்
கயலெழு தடஞ்சு லாய காம்போசத் திறைவ னோரே
இயல்வலி மடங்க லியானை யெறுழ்ப்புலி மூன்றுங் கொன்று
வியலமை புரமூன் றட்ட கணையென விளங்கிற் றன்றே.

888. முன்வரு கணையைக் கேழன் முனிவொடு கறிக்குங் காலைப்
பின்வரு கணையு டம்பு பிளந்ததென் னினமே வுற்றல்
என்வரு மென்று வாயாற் கறித்ததெ ன் னியம்பு கென்று
கொன்வரு கோபச் செந்தீக் கொண்டுடன் பிளப்ப தொத்தே.

889. நடைதளர் குழவைக் கொல்லான் சூலுடைப் பிணவை நாடான்
அடைமழ வுணமு லைப்பா லருத்திடு மாவை மாயான்
உடைவெயில் வெப்பத் தானீ ருண்டிடு மவையுஞ் சாயான்
மிடைவலி யுடனெ திர்க்கும் வெய்யமாத் தொலைக்கும் வேந்தன்.

890. இன்னணம் வேட்ட மாடு மேல்வையிற் சினந்தெ ழுந்தோர்
கொன்னவில் புலிப்போத் தொன்று குரகதத் தெதிரே பாய
அன்னது கண்ட வேந்த னொகணை யொன்று விட்டான்
மின்னகு மதனைக் கண்டு வெம்புலி பிழைத்தோ டிற்றே.

---

885. இச்செய்யுளில் நந்தனை இந்திரனைக் கூறுகின்றார்; இந்திரன் உடம்பு முற்றும் கண் எய்தினவன்; நந்தன் அவ்வாறு எய்தாதவன். புண்டரீகம் - தாமரை. சிலீமுகம் - அம்பு. மடங்கல் - சிங்கம். வாள் – கொடுமை.

886. மருள்தப - அறியாமை நீங்க. பல்லம் - அம்பு. கேழல் - பன்றி.

887. தடம் - குளம். சுலாய - சூழ்ந்த. காம்போசத்து இறைவன் - நந்தன். ஓர் ஏ - ஓர் அம்பு. எறுழ் - வலிமை. வியல் - பெருமை.

888. கறித்தல் - கடித்தல். 'என் இனம் ... இயம்புக' என்றது பின்வந்த கணையின் கூற்று. கொன் - அச்சம்.

889. இச்செய்யுள் வேட்டையாடுபவர்களாலும் கொல்லத் தகாதவை இவை என்பதைக் கூறுகிறது. குழ, மழ என்பன இளமை யென்னும் பொருளுடையன; இங்கே ஆகுபெயராய் அத்தன்மையுடையவற்றைக் குறித்தன. பிணவு - பெண்விலங்கு. மா - விலங்கு. சாய்த்தல் - கொல்லல்.

890. எல்வை - பொழுது. போத்து - ஆண்விலங்கு. குரகதம் - குதிரை. மின்நகு - மின்னலைப் பழிக்கும்.

891. ஓடுவ தெங்கு நீயென் றுடன்றுவாம் பரியு கைத்தே
நாடுகா வலன்பின் சென்று னயந்தது புகுந்த தேத்துக்
கூடுவான் புலித்தோன் மூடிக் குறிகொள்பிங்கலாக்க னென்பான்
நீடுமா தவமேற் கொண்டு நிட்டையி னிருந்தா னன்றே.

மன்னன் விடுத்த அம்பினு லடிபட்டு முனிவன் இறத்தல்

892. பொறிவழி மனம்போக் காது புந்தியிற் பரனை யெண்ணித்
தறியென வசைவி லாம லிருக்குமா தவத்தோன் மேனி
செறிபுலித் தோலாற் புக்க புலியெனச் சிந்தை செய்து
மறிவரும் பகழி யொன்று வல்லையில் விடுத்தா னன்றே.

893. தலைவிரி யரம்பை யீன்ற தாற்றிருங் கனியுட் சூசி
மலைவறப் புகுவ தொப்ப மாமுனி மேனி யுள்ளால்
கொலைபுரி பகழி மேவக் குலைகுலைந் தெழுந்து வீழ்ந்து
மலைமக டவன்ற ளுள்ளி வல்லையி னுடல நீத்தான்.

894. முனிவர னிறத்த லோர்ந்து வினைவந்து முற்றிற் றென்று
நனிமனம் பதைக்கும் வேந்த னடவுவாம் பரியி ழிந்து
கனிவொடு மருகு போந்து கண்டுமூர்ச் சித்து வீழ்ந்தான்
இனியெவன் செயவல் லேனென் றிரக்கமுற் றழுதா னன்றே.

பிரமகத்தி நந்தனைப் பிடித்தல்

895. அழுதழு திரங்கும் வேந்தை யமைச்சரா தியர்கள் சூழ்ந்து
பழுதுவந் தடைந்த தென்ன பண்ணுவா மென்று தேற்ற
எழுதுசித் திரம்போல் வாளா விருந்தன னவன்கண் காணக்
கழுதுமுள் ளஞ்சுங் கோரத் தெழுந்தது பிரம கத்தி.

896. கொலைபுரி கயவா நின்னைக் கொன்றன்றி யொழியே னென்று
மலையினுந் திண்மை வாய்ந்த மார்பமங் கையாற் றட்டும்
உலைவற முகரோ மங்கண் முறுக்கிடு முடன்று சீறும்
அலைவுசெய் ததிர்க்குந் துள்ளு மழலென வாயங் காக்கும்.

---

891. உடன்று - கோபித்து. உகைத்தல் - செலுத்துதல். புலி சென்ற வழியில் பிங்கலாக்கன் என்றமுனிவன் புலித்தோலால் தன்னை மூடிக்கொண்டு நிட்டையில் இருந்தான்.

892. புந்தி - புத்தி. தறி - தூண். புக்க - (அங்கு) வந்த. (பி - ம்.) 4. மறி வரும் பாண மொன்று.

893. அரம்பை - வாழை. தாறு - வாழைக் குலை. சூசி - ஊசி. மலைமகள் தவன் - சிவபெருமான்.

894. நடவு - நடத்துகிற.

895. (பி - ம்) 2. என்று கூற. கழுது - பேய். கோரம் - கொடிய தோற்றம்.

897. நெருப்பினு மழன்று மேவு நிற்பினு மொறுக்கு மன்றி
இருப்பினும் புடைக்கும் வீழ்ந்து கிடப்பினு மிதிக்கு மேற்றப்
பொருப்பினு முயர்ந்த திண்டோ டட்டும்போர் செய்வாவென்னும்
கருப்பினுஞ் சுவையுண் டாகக் கறித்துயிர் குடிப்பே னென்னும்.

அரசன் நலயாத்திரை செய்யத் துணிதல்

898. கொடியவப் பிரம கத்தி குறுகலு நந்த னஞ்சி
நெடியதன் சேனை முற்று நேரேலென நகர்க்குப் போக்கி
முடியநன் குறும மைச்சர் முதலி யோ ரையும்வேண் டாணுய்ப்
படியமை தலங்க ளெல்லாம் பணிவதற் குள்ளங் கொண்டான்.

899. கற்றவவ் வரசன் முக்கட் கடவுளைப் பூசை யாற்றும்
நற்றவ முடையா னந்த நற்றவப் பயன்வீண் போமோ
சொற்றவக் காட்டி னுள்ளாற் சுடுசினப் பிரமகத்தி
உற்றவப் போதும் பெம்மான் றலந்தொழு முணர்ச்சி நீங்கான்.

காசி

900. மோனந்த வாத சீவன் முத்தரார்ந் திறைஞ்சா நிற்கும்
ஆனந்த வனமாங் காசி யடைந்திருங் கங்கை யாடித்
தானந்த மில்லா முக்கட் சயம்புவைத் தொழுது பின்னும்
ஈனந்த வாமை கண்டா னெலாந்தொழு மாசை மிக்கான்.

திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்)

901. திருப்பத நெடியோ னன்று தேடியுங் கண்டி லான்கைப்
பொருப்பதள் போர்த்த மேனிப் பூரண னினிது மேய
பருப்பத மடுத்துப் போற்றிப் பழியுடன் சூழச் சூழ்ந்து
விருப்பதங் கருது மேவ மேவினன் வேந்தர் வேந்தன்.

திருக்காளத்தி

902. நீளத்தி கிரிப்பொ ருப்பு நிறையுயி ருய்யு மாகார்
கோளத்தி யுடுத்த மைந்த குவலய மோலி யாகி
வாளத்தி யணிவா னென்றும் வைகுறப் பெறற தாஞ்சி
காளத்தி யெனுநா மத்தென் கயிலையை வணங்கிப் போற்றி

897. (பி – ம்) 4. குடிப்பலென்னும்.

900. ஈனம் - தனக்கு வந்த தாழ்வு. தவாமை - கெடாமை.

901. நெடியோன் - திருமால். கைப் பொருப்பு - யானை அதள் - தோல். பருப்பதம் - திருப்பருப்பதம்; ஸ்ரீசைலம். மேவினன - போனன்.

902. திகிரிப் பொருப்பு - சக்கரவாளகிரி. கார் கோள் அத்தி - மேகங்களால் நீர் கொள்ளப்படும் கடல். குவலய மோலி - நிலவுலகின் முடி; காளத்தியைக் கூறியது. அத்தி – எலும்பு. காளத்தியைத் தென் கயிலை என்பர்.

## காஞ்சீபுரம்

903. தருக்காஞ்சிம் முதலோ ரைந்துஞ் சாற்றுவாஞ் சரணத் தன்பு
சுருக்காஞ்சின் மயமா வாமென் பவர்க்கருள் சுரந்து காட்சி
குருக்காஞ்சி யிடையா ளோடுங் கொடுப்பவ ரினிது மேய
திருக்காஞ்சி யொருமா மூலஞ் சென்றுசே வித்தா னன்றே.

## திருவாலங்காடு

904. பொருவாலங் காட்டு வெய்ய புலியத ளுடுத்தோ னெங்கும்
மருவாலங் காட்டு வேணி வைத்தவன் வானோ ரஞ்சி
வெருவாலங் காட்டு கண்ட வித்தகன் மேய தெய்வத்
திருவாலங் காட்டுட் புக்குத் திருநடஞ் சேவித் தானால்.

## திருவொற்றியூர்

905. வெற்றியூ ரொருமூன் றட்ட விமலனைக் கமலத் துள்ளான்
பற்றியூர் கலுழப் புள்ளான் பறந்திடந் தினுங்கா ணானைச்
சுற்றியூர் கோள்வ ளூந்த மதிநிகர் சோலை சூழ்ந்த
ஒற்றியூர் புகுந்து போற்றி யுவணின் றுமெழுந்தா னன்றே.

## திருமயிலை

906. எயிலையன் றட்ட மூர்த்தி யெல்லாமா மட்ட மூர்த்தி
அயிலையங் கையிற் கொண்டா னைங்கையான் றந்தை மேய
கயிலையென் றெடுத்துப் பேசும் புன்னையங் கானல் சூழும்
மயிலையம் பதியுட் புக்கு வள்ளலை வணங்கிப் போற்றி

---

903. தருக்காம் - பெருமிதம் கொள்ளோம். சி முதல் ஓர் ஐந்து - 'சிவாய நம' என்ற ஐந்தெழுத்து. சுருக்காம் - குறையச் செய்யோம். சின்மயம் - ஞானமயம். என்பவர், ஞானிகள். காட்சியை இடையாளோடு கொடுப்பவர் என்க. குரு - ஒளி. காஞ்சி - ஓர் இடை அணி. ஒரு மாமூலம் - ஒற்றை மாவின் அடி.

904. பொரு வால் அங்கு ஆட்டு புலி : அங்கு : அசை. எங்கும் மருவு ஆலம் : ஆலம் - நீர்; இங்கே கங்கை நீரைக் குறிக்கும், வெருவு ஆலம் - அஞ்சுவதற்குக் காரணமான விடம்.

905. கமலத்துள்ளான் - பிரமன். ஊர்தல் - ஏறிச் செலுத்துதல். இடந்து - தோண்டி. ஊர்கோள் - பரிவேடம்.

906. அட்டமூர்த்தி : I அழித்த மூர்த்தி II அஷ்டமூர்த்தி - எட்டு மூர்த்தியான வன். அயிலை அம் கையில் கொண்டான் - முருகன்; ஐங்கையான் - விநாயகன். புன்னையங்கானல் சூழும் மயிலை : 'மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை' (திருஞான. தேவார.)

வான்மியூர், வெண்பாக்கம், திருமாற்பேறு, கச்சூர், இடைச்சுரம்.

907. மருந்துகொண் டமர ராட்டும் வான்மியூர் வயல்க டோறும்
திருந்துசெங் கரும்பாக் கஞ்செய் வெண்பாக்கந் திருமாற் பேறு
முருந்துவெண் ணகையா ராடன் முழவரு வரங்க மேலால்
பொருந்துவா னச்சூர் கச்சூ ரிடைச்சுரம் புகுந்து போற்றி

திருக்கழுக்குன்றம், திருவண்ணாமலை.

908. ஒருகழு கும்ப ரேகி யுழன்றுங்கா ணரியான் பாதம்
இருகழு கென்றுங் காணூஉ விறைஞ்சொரு வரையும் போற்றி
அருண்மய மகலா தாக வழன்மய மாகி னன்செம்
பொருண்மய மவனே யென்னப் பொலிதிரு வரையும் போற்றி

அறையணி நல்லூர், விருத்தாசலம்

909. சூலத்தந் தகனை யேற்றார் தொன்னகர் கொடிய தாய
ஆலத்தந் தமிலார் வைகு மறையணி நல்லூர் வேத
சீலத்தந் தணன்முன் னோனோர் சேவிக்க விருத்த நாமக்
கோலத்தந் தையர்நீங் காத குலவரை யனைத்தும் போற்றி

திருவதிகை, பாதிரிப்புலியூர்

910. பரிபுரம் புலம்பு மென்றாட் பாவைவிற் பிடிக்கக் கண்டு
திரிபுரங் குலையு மாறு சிலீமுக மொன்று தொட்டு
விரிபுரந் தரன்முன் னோரை வாழ்வித்தார் விரும்பூ ருங்கை
யெரிபுரந் தவர்வா ழும்பா திரிப்புலி யூரு மேத்தி

907. மருந்து - அமிர்தம். செங்கரும்பு ஆக்கம் செய் - நல்ல கரும்பு வளர்கின்ற. முருந்து - இறகின் அடி. முழவு - மத்தளம். அரங்க மேலால் பொருந்துவான் - நடராஜமூர்த்தி. நயக்க விரும்புகின்ற: நச்சு ஊராகிய கச்சூர் என்க. மருந்து கொண்டு அமரர் ஆட்டும் வான்மியூர்: இச்செய்தியைப் பின்வரும் திருவொற்றியூர்ப் புராணப் பாடலில் காண்க:— "இந்நலந்தனது தக்கணந்தினி லிருக்குமப்புரியில் வானுளோர், நந்நமெந்துதிரு மாயவன்கமல நான்முகன் கடல்க டைந்தபோ, தொத்தெழுந்தவமு தத்தினந்நமை யுவப்பொடாட்டிமகிழ் பூசையே, மெந்தவேபுரிய நாமவர்க்கருள் வினைத்துவந்தவ னிருந்தனம்"

908. கழுகு - பறவைப் பொதுப் பெயர். ஒரு வரை - வேதகிரி; ஒருவரையும் - வேதகிரீசரையும். இரு பொருள்படும் நயம் காண்க. அழன்மயமாகினன் திருவரை - திருவண்ணாமலை. செம் பொருள் - பரமபொருள்.

909. ஏற்றார், அந்தமிலார் வைகும் தொன்னகர் அறையணி நல்லூர் எனக் கூட்டுக. அந்தணன் முன்னோனோர் - பிரமன் முதலியோர். விருத்த நாம கோலம் தந்தையர் - பழமலை நாதர் — சிவபெருமான்.

910. பரிபுரம் - சதங்கை. பாவை வில் பிடிக்க - என்றது சிவபெருமான் இடக் கையால் வில்லைப் பிடித்தமையால். சிலீமுகம் - அம்பு. புரந்தரன் முன்னோரை - இந்திரன் முதலிய தேவர்களை. விரும்பு ஊர - திருவதிகை. கை எரி புரந்தவர் - கையில் அக்கினியை வைத்துக் காப்போர்; அந்தணர்.

சிதம்பரம்

911. வாடுகின் றாரா யின்னு மலர்மிசை யோனு மாலும்
தேடுகின் றராய் நிற்பச் சிதம்பரத் தங்கை சென்னி
சூடுகின் றாராய்த் தொண்டர் துதித்தர கரவென் றார்ப்ப
ஆடுகின் றார்பொற் பாத மஞ்சலி செய்து போற்றி

காழி, புள்ளிருக்கு வேளூர், புன்கூர். திருவெண்காடு, கடவூர்

912. ஆழிசூழ் காழி போற்றி யமைந்தபுள் ளிருக்கு வேளூர்
வாழிசென் றிறைஞ்சிப் புன்கூர் வளமலி திருவெண் காடு
பாழிசேர் கடவூ ராங்கட் பயிறலம் பலவும் போற்றிச்
சூழிமால் யானை வேந்தன் றுனைந்துமா யூரஞ் சார்ந்தான்.

மாயூரம்

913. காவிரி யிடப தீர்த்தங் கண்ணுற்றுக் கமழ்நீ ராடித்
தாவிரி நீறு பூசித் தம்பிரான் றளியுட் புக்கு
நாவிரி புகழான் மிக்க வள்ளலை நயந்து போற்றிப்
பூவிரி யலங்கன் மார்பன் பச்சிமம் பொருந்தச் செல்வான்.

மூவலூர், துருத்தி, அழுந்தூர், ஆவடுதுறை

914. அன்னமார் பொய்கை சூழு மணிதிகழ் மூவ லூரும்
சொன்னவா றறிவார் மேய துருத்தியுந் தொழுதா ரென்றும்
இன்னறீ ரழுந்தூர் மாடக் கோயிலு மிலஞ்சி தோறும்
நன்னமா மலர்சா லெங்க ளாவடு துறையும் போற்றி.

---

912. காழி - சீகாழி. புள்ளிருக்குவேளூர் வைத்தீசுவரன்கோயில். புன்கூர் - திருப்புன்கூர். பாழி - முனிவர் இருப்பிடம், திருக்கடவூர் மயானம் என்றும் பெயருண்டு. துனைதல் - விரைதல்.

913. இடப தீர்த்தம் - மாயூரத்தி லுள்ள காவிரித் துறை. தாவு இரி நீறு - குற்றத்தைப் போக்கும் திருநீறு. தளி - கோயில்; வள்ளலார் கோயில் மாயூரத்தில் உண்மை காண்க. பச்சிமம் - மேற்கு.

914. அன்னம் ஆர் பொய்கை - அன்னப் பறவைகள் மிகுந்துள்ள குளங்கள். துருத்தி - குற்றாலம் என்பது. இலஞ்சி - நீர்நிலை. ஆவடுதுறையை ஆசிரியர் 'எங்களாவடுதுறை' என்று சிறப்பித்தல் காண்க.

திருக்கோடிகா, கஞ்சனூர், மங்கலக்குடி, குறுக்கை, திருவிடைமருதூர், திருநாகேசுவரம், கும்பகோணம்

915. பாடிகா வலேமே வாதார் பண்பினன் கிறைஞ்சிப் போற்றும்
கோடிகா கஞ்ச னூர்மங் கலக்குடி குறுக்கை மூதூர்
நாடிவா னவர்க ளேத்து மிடைமரு தூர்நா கேசம்
நீடிமா முனிவர் போற்று நிறைவளக் கும்ப கோணம்

திருவலஞ்சுழி, பட்டீச்சுரம், திருச்சத்திமுற்றம், நல்லூர், ஆவூர். கருகாவூர், திருவையாறு, நெய்த்தானம், ஆனைக்கா

916. திருவலஞ் சுழிபட் டீசந் திருச்சத்தி முற்ற நாளும்
பொருவரு நல்லூ ராவூர் புண்ணியக் கருகா வூர்சீர்
தருவளத் திருவை யாறு தாயெனப் பொலிநெய்த் தானம்
இருவினை தபுமா னைக்கா விவையெலா மிறைஞ்சிப் போற்றி

சிராமலை, எறும்பியூர், நெடுங்களம், திருக்காட்டுப்பள்ளி, திருப்பூந்துருத்தி, கண்டியூர்

917. தராதலம் புகழா நிற்குந் தந்தையே தாயாய் மேவும்
சிராமலை தொழுதெ றும்பி யூர்நெடுங் களஞ்சே வித்துப்
பரா வுறு காட்டுப் பள்ளி பாடல்சால் பூந்து ருத்தி
அராவணை யண்ணல் போற்றுங் கண்டியூ ரனைத்தும் போற்றி

சோற்றுத்துறை, வேதிகுடி, பாலைத்துறை, வழுவூர்

918. தொழுபவர் வினைதீர் சோற்றுத் துறைவேதி குடியும் போற்றிச்
செழுமலர்ப் பொய்கைப் பாலைத் துறையகஞ் சென்று தாழ்ந்து
பழுதறு வழியி னுள்ள பஃறல மெல்லாங் கண்டு
வழுவற முனிவர் போற்றும் வழுவூர்வீ ரட்டம் புக்கான்.

---

915. திருக்கோடிகா, கஞ்சனூர், மங்கலக்குடி, குறுக்கை., திருவிடைமருதூர். திருநாகேச்சுரம், கும்பகோணம் என்ற திருத்தலங்கள் இங்குக் கூறப்பெற்றுள்ளன. பாடிகாவல் - வழக்கு விசாரிப்போர் ஒப்ப நாடிச் செய்யும் ஒரு தண்டம்; 'பாடிகாவலில் பட்டுக் கழிதிரே' என்பது தேவாரம். : பாடிகாவல மேவுவார் பெருங்குற்றம் செய்தவர் என்பதாயிற்று.

917. தராதலம் - பூமி. அராவணை அண்ணல் - திருமால்.

918. பஃறலம் – பலதலம். வழுவூர் வீரட்டம் - தன்னை எதிர்த்த யானையை இறைவன் கொன்று அதன் உரியைப் போர்த்த தலம்.

## திருப்பாம்புரம், திருவீழிமிழலை

919. கரியுரி போர்த்த மேனிக் கண்ணுதற் பரனைப் போற்றி
அரிபுகழ் பாம்பு ரத்தை யடைந்துநெஞ் சுருகித் தாழ்ந்து
தரிசனஞ் செய்யு மன்பர் தவாதபே ரின்பந் துய்க்கத்
திரிமல வாற்றன் மாற்றுஞ் திருவீழி மிழலை புக்கான்.

920. விண்ணிழி விமான மேய விமலவா னந்த வாழ்வைக்
கண்ணிழி யருவி பொங்கக் கையிணை சென்னி யேற
எண்ணிழி வினைத்து நீங்க விறைஞ்சுபு வெளியே வந்து
புண்ணிழி வேல்போ னெஞ்சுட் பொருதுயர் வருத்தச் சோர்வான்.

## நந்தன் வருந்துதல்

921. இத்தனை தலங்க ளெல்லா மிறைஞ்சியு மந்தோ கெட்டேன்
முத்தனை முனிவர் கோனை முருக்கிய பழிதான் செய்யும்
அத்தனை துயருட் சற்று மகன்றில தினியென் செய்கேன்
பித்தனை யொத்தே னென்று பிதற்றுபு குணபாற் செல்வான்.

## நந்தன் அம்பர் எல்லையை அடைதல்

922. குணதிசை விருப்பிற் செல்லுங் கோமகன் முற்ப வத்தின்
அணவுபுண் ணியமுன் னீர்க்க வலர்ந்தெழு மூக்கத் தோடும்
குணமுற நடந்து சென்று கொண்டல்கண் படுக்க வோங்கி
மணமலி பொழில்சூ ழம்பர் மாநக ரெல்லை யுற்றான்.

## அம்பரெல்லையில் பிரமகத்தி நீங்குதல்

923. அம்பர்மா நகரத் தெல்லை யடைதலும் விடாது பற்றி
உம்பரு மருளச் சீறி யுடற்றிடும் பிரம கத்தி
இம்பரென் செய்கு வாமென் றிரிந்துபின் றொடரக் கண்டான்
நம்பர்த மருளே யென்று நயந்தன னந்த மன்னன்.

---

920. திருவீழி மிழலையி லுள்ளது விண்ணிழி விமானம் எனப்படும். விமல ஆனந்த வாழ்வு - சிவபிரான்.

921. குணபால் - கிழக்குத்திக்கு.

922. பவம் - பிறப்பு. அணவுதல் - சேர்தல்.

923. 'இம்பர் என் செய்குவாம்' என்றது பிரமகத்தியின் கூற்று.

924. நிழலென விடாது பற்றித் தொடர்தரு நெடிய பாவம்
கழலுபு மெல்ல மெல்லத் தொடர்வது கண்ட மன்னன்
அழலவிர் விழியான் மேய வற்புதத் தலமீ தென்று
சுழலுத றவிர்ந்த நெஞ்சிற் சூழுபு நடக்க லுற்றான்.

கோயிலின் முன் மன்னன் சில முனிவர்களைக் காணல்

925. புறநகர் கடந்தப் பாலா மிடைநகர் கடந்து போய்மேல்
உறமிளிர் வளத்தா லான்ற வுண்ணகர் கடந்து சென்று
மறமலி சூலத் தண்ணல் வளர்பெருங் கொயில் கண்டத்
திறமலி தளிமுன் னாகத் திகழ்முனி வரையுங் கண்டான்.

926. தாயினைக் கண்டு வாட்டந் தவிர்தரத் தழைந்து செல்லும்
சேயினைப் பொருவ மன்னன் செம்முனி வரரைக் கண்டு
வீயினைப் பொருமன் னார்தம் பாதத்து விரைந்து தாழ்ந்து
நோயினைத் தவிர்ந்தே னென்று நுவன்றெதிர் கிடந்தா னன்றே.

முனிவர் அரசனை விசாரித்தல்

927. எழுகவென் றுசி கூறி யெழுந்தபின் னரச னென்று
செழுமுனி வரர்க டேர்ந்தெத் தேயநீ நாம மியாது
பழுதெவ னுற்ற தெம்மா லாவதென் பகர்தி யென்னத்
தொழுதெழுந் தரசன் மீட்டுந் துதித்திது சொல்ல லுற்றான்.

மன்னன் முனிவரிடம் கூறினவை

928. மேயகாம் போச மன்னன் விளம்புபேர் நந்த னென்பேன்
ஆயகான் வேட்ட மேற்சென் றடுபுலிப் போத்தென் றெண்ணி
மாயமில் பிங்க லாக்கன் வன்றரக் கதண்மேற் போர்த்து
நேயமோ டிருந்த தேரே னெடுஞ்சரந் தூண்டி னேனால்.

929. அன்னவ னிறந்தா னாக வடர்ந்தெழு பிரம கத்தி
தன்னமு மிரக்க மின்றிச் சாடுத லுற்ற காலை
என்னசெய் குதுமா லென்று வெண்ணருந் தலங்க ளெல்லாம்
பொன்னவிர் சடில மோலிப் புராணனைப் போற்றி னேனால்.

924. அழல் அவிர் விழியான் - சிவபிரான். சுழலுதல் - கலங்குதல். சூழுபு - கருதி.

926. வீ - மலர். முனிவரின் பாதத்துக்குத் தாமரை மலர். (பி - ம்.) 3. விரைந்து வீழ்ந்து.

927. பழுது எவன் உற்றது - உனக்கு உண்டான கேடு யாது?

928. (பி - ம்) (2) வேட்டை மேற். தரக்கு அதள் - புலித்தோல்.

929. தன்னமும் - சிறிதும்.

930. தலமெலாஞ் சென்று சென்று தாழவுந் தாழா தாயென்
நலமெலாங் குலைத்த திந்தத் தலத்தக நண்ண வேதன்
வலமெலா மொடுங்கி நீங்கி யணித்தன் றி மருவிற் ருலென்
குலமெலா முய்ய நீவிர் குறித்துணர்த் திடுவீ ரென்ருன்.

முனிவரர் கூற்று

931. ஈதொரு பொருளோ விந்த விருந்தலத் தினுக்கிங் குள்ள
மாதொரு பாகர் செய்யு மாப்பெருங் கருணை யாலே
தீதொருங் கொழியு மின்னே திருப்பெருங் கோயில் புக்குப்
போதொருங் கியலக் கொண்டு போற்றுகென் றேவி ஞரால்.

நந்தன் செயல்

932. அடியனே னுய்ந்த னேனென் றஞ்சலி கூப்பி மன்னன்
முடிவிலா வின்ப வாழ்க்கை முனிவர்பால் விடைகொண் டேகிப்
பொடியணி மேனிப் பெம்மான் புரிந்தமர் கோயில் புக்குக்
கடிமலர் நிறையப் பூத்த வன்னமாம் பொய்கை கண்டான்.

933. நீருரு வெனினும் பாவக் காட்டைநீ ருக்குஞ் சோதிப்
பேருரு வாய வன்னப் பெரும்பெயர்ப் பொய்கை மூழ்கிச்
சீருரு வாய நீறுந் திருந்துகண் மணியுந் தாங்கிக்
காருரு வாய கண்டக் கடவுண்முன் குறுகி ஞைல்.

நந்தன் பிரமபுரிசரைப் பூசித்தல்

934. வரைமிசை முளைத்த தெய்வ மருந்தையன் புடையார்க் கெய்ப்பில்
விரைநர வுதவும் வைப்பை விரைமலர்ப் பிரமன் போற்றக்
கரையகல் வரங்கொ டுத்துக் காத்தகற் பகத்தைக் கண்டு
புரையற வுய்ந்தே னென்று போற்றுபு பணிந்து வீழ்ந்தான்.

935. பலதரம் பணிந்து வீழும் பலதர மஞ்ச லிக்கும்
பலதரந் துதிமு ழக்கும் பலதர மங்கை கொட்டும்
பலதர நடனஞ் செய்யும் பலதர மாவா வென்னும்
பலதர முள்ளத் துள்ளும் பலதரந் தழுவற் கெண்ணும்.

---

931. இந்தத் தலத்துக்கு ஈது ஒரு பொருளோ என்று மாற்றுக. போது - மலர்கள்.

932. முடிவிலா இன்ப வாழ்க்கை - பேரானந்தப் பெருவாழ்வு.

934. எய்ப்பில் வைப்பு - ஆபத்துக்காலத்து உதவுவதற்காக வைக்கப்பெற்ற சேமிப்பு.

936. உரைசெயுந் தரமி லன்பே யுருவமாய்ப் பொலியு நந்தன்
வரைசெயு மொருபி னாகம் வாங்கிமுப் புரம்பொ டித்தும்
திரையுறுங் கடனஞ் சுண்டுந் தேவரைப் புரந்த பெம்மான்
புரைசெயும் பதமிவ் வண்ணம் போற்றுபு வெளியே வந்து

937. புண்ணிய மலிந்த தாய்வம் புவனப்பூங் குழலாள் கோயில்
நண்ணிய விருப்பிற் புக்கு நயங்கெழத் தொழுது போற்றிப்
பண்ணிய வருளிற் றாழா வரணதே வரையும் போற்றித்
தண்ணிய குணத்தான் மிக்க தராதிபன் வெளிவந் தானால்.

அரசனை விட்டுப் பிரமகத்தி முற்றும் நீங்கியது

938. பிரமனுக் கருளிச் செய்த பிரமபு ரீச ராய
பரமரைக் காலந் தோறும் பத்தியின் வணங்கிப் போற்றும்
கிரமமிக் கவனாய் நின்ற மன்னற்குக் கிளக்கு மன்னார்
வரமலி யருளான் முற்று மாய்ந்தது பிரம கத்தி.

939. அயலமர் தோற்ற முந்தீர்ந் தந்தணற் கொன்ற பாவம்
மயலறத் தீர்ந்து மாய்ந்த வண்ணங்கண் டாடிப் பாடிப்
புயலமர் தடக்கை மன்னன் புண்ணிய முனிவர் பாற்போய்
வியலமர் பாதம் போற்றி விண்ணப்பஞ் செய்தா னன்றே.

முனிவர் கூற்று

940. அனையவர் மகிழ்ந்து மன்னா வம்பரென் றுரைக்கு மிந்தப்
புனைவளத் தலத்திற் கீதோர் பொருள்கொலோ நினைத்த போது
நினைவரும் பாவ மெல்லா நெருப்பிடைத் துய்யா மெண்ணில்
வினைதபுத் திகமுன் மூன்று மேதக வளிக்கு மன்றே.

முனிவர்கள் நந்தனுக்குச் சில பணித்தல்

941. என்றனர் மீட்டு நண்ணி யிறைஞ்சியிங் கடியேன் செய்யும்
நன்றமை பணியா நீவிர் நயந்தருள் செய்க வென்னக்
குன்றவிற் குழைத்தா ரன்ப ராங்குல முனிவர் சேர்ந்து
வென்றதிண் புயத்தாய் கேட்டி யெனவிவை விளம்ப லுற்றார்.

---

936. பினாகம் - சிவபிரானுக்குரிய வில். பொடித்தல் - நீருக்கல். திரை உறும் கடல் நஞ்சு எனப் பிரிக்க. புரை - பெருமை. பதம் - பாதம்.

937. ஆவரணதேவர் - கோயிற் சுற்றில் அமைந்த தேவர்கள்.

938. கிரமம் - ஒழுங்கு. கிளக்கும் அனார் - சொல்லப்பட்ட பிரமபுரீசர்.

939. அயல் அமர் தோற்றம் - தன் பக்கத்தில் (நெருக்கமின்றி) இருக்கும் தோற்றம். மயல் - மயக்கம்.

940. துய் - பஞ்சு. வினை தபுத்து - வினைகளைக் கெடுத்து. இகம் முன் மூன்றும் - இம்மை, மறுமை, வீடு என்ற மூன்றும்.

941. பணி யா - பணிகள் யாவை?

942\. பரசிவ தருமமேலாப் பகருமெத் தருமத் திற்கும்
வரமுறு மதனு லிங்கண் வயங்கவா லயம்பு துக்கி
விரவுபல் வளஞ்சால் பூசை விழாமுதற் சிறப்புச் செய்து
கரவிலந் தணர்முன் ஞேர்க்குக் கனிந்தன மூட்டு வாயால்.

### மன்னன் நன் நாடு திரும்பியது

943\. சிறந்தவித் தலத்தி னின்னுஞ் சிவலிங்கப் பதிட்டை செய்தி
மறந்தபு புராணங் கேட்டி மற்றுநன் கமைத்தி யென்று
நிறந்தழை முந்நூன் மார்பர் நிகழ்த்தலுந் தலைமேற் கொண்டு
புறந்தர வில்லா வாண்மைப் புரவல னெழுந்து போனுன்.

944\. போனமன் னவன்வ ளக்காம் போசதே யத்து நாப்பண்
ஆனதன் னகரை யுற்ற னமைச்சரே யாதி யாய
மானவர் பலருஞ் சூழ மகிழ்ந்தள வளாவி யுற்ற
ஈனமெவ் விடத்தி லெவ்வா றிரித்தனை யென்றூர்க் கோதும்.

### மன்னன் அம்பரின் பெருமைகளைப் புகன்றது

945\. எண்ணருந் தலங்க ளெல்லா மெய்துபு பணிந்துந் தீரா
நண்ணரும் பிரம கத்தி நயந்தகா விரிக்குத் தென்பால்
விண்ணரும் பரவா ரூர்க்கு மேவிய வடபா னுப்பண்
கண்ணரும் வளத்திற் ரேன்றுங் கரிசிலோர் தெய்வத் தானம்.

946\. அரிசிலென் ருெருபே ராறு மன்னமாம் பொய்கை யென்னும்
கரிசிலோர் தடமு மாங்குக் கலப்புறு மெந்த ஞான்றும்
துரிசிலா முனிவர் சூழ்வர் சுருதியான் முதலோர்க் கின்பம்
பரிசிலாக் கொடுத்த தம்பர்ப் படர்தரக் கழிந்த நம்மா.

947\. அம்பரென் றுரைக்க மந்தத் தலத்தனு தினமுந் தீரா
தும்பர்வந் திறைஞ்சா நிற்ப ருத்தமத் துந்த மங்காஸ்
இம்பர்மற் றதற்கு நேரா மொருதல மில்லை யில்லை
நம்பருற் றவர்க்கெஞ் ஞான்று நல்லருள் சுரவா நிற்பர்.

---

942\. வரம் உறும் - மேன்மையாகும். முன்னேர் - முதலியோர். கனிந்து அன்னம் ஊட்டுவாய் என்க.

943\. பதிட்டை - பிரதிஷ்டை. மறம் - பாவம். மற்றும் - இன்னும். நிறம் - மார்பு. புறந்தரல் இல்லா ஆண்மை - (பகைவர்க்குப்) புறங்கொடாத வீரத்தையுடைய.

944\. மானவர் - பெருமை பொருந்திய அரசுச் சுற்றத்தார். ஈனம் - இங்குப் பிரமகத்தியால் வந்த கேடு. இரித்தல் - நீக்குதல்.

945\. விண்ணர் - விண்ணவர்; தேவர். கரிசு இல் - குற்றமற்ற.

946\. தடம் - குளம். துரிசு - குற்றம். சுருதியான் - பிரமன். படர்தரல் - செல்லுதல். கழிந்தது - நீங்கிற்று.

947\. நம்பர் - சிவபிரான்.

948. ஆங்குநா னடையு முன்ன ரகன்றது பிரம கத்தி
வீங்குபே ருவப்புற் றுங்கு மேவிய முனிவர் பாலென்
தீங்குகூ றினனன் ஞருஞ் சிந்தையி னிரக்க மேவிப்
பாங்குசேர் பரனைப் போற்றப் பண்ணினர் பணிந்தேன் சின்னாள்.

நந்நன் மீண்டும் அம்பரிலேயே வந்து தங்குதல்

949. தன்னமு மில்லா வண்ணஞ் சாய்ந்ததென் றீமை யெல்லாம்
அன்னமும் வராக முந்தே ருதவர் சேவைக் காக
இன்னமு மாங்குச் சேறற் கெண்ணினே னென்றே ரைந்து
வன்னமு மகலா நாவின் மன்னவ னிதனைச் செய்தான்.

950. உத்தம னெனுந்தன் மைந்த னொருவனுக் கபிடே கஞ்செய்
தெத்தம னியநன் மோலி யிணையெனு மோலி சூட்டிச்
சுத்தம ஞகி யாடி கமைநின தென்று தீர்த்து
வித்தம னேகங் கொண்டு மேவின னம்பர் மீட்டும்.

951. பெருமுனி வரரைத் தாழ்ந்து பிறங்குமந் நகரி னோர்சார்
வருபரி சனருந் தானும் வைகுதற் குறையு ளாக்கி
உருவர ணகழி சூழ வுறுத்தியெவ் வளனு மல்கும
திருவநன் கமையச் செய்து சிறப்பவாங் கிருந்து கொண்டு

அரரன் ஆலயம் புதுப்பித்தல்

952 மழைதவழ் கோபுரங்கள் மண்டபம் விமானம் யாரும்
விழைமடைப் பள்ளி யாக சாலைவே திகைசோ பானம்
தழைதர வியற்றித் தீர்த்தந் தடந்துறை புதுக்கிச் சூழ்ந்த
பிழைதபு மதில்க ளெல்லாம் பிறங்குற வியற்றி னுனல்.

---

948. போற்றப் பண்ணினர் - போற்றுமாறு என்னை ஆக்கினர்.

949. வன்னம்; வர்ணம் - எழுத்து. ஐந்து வன்னமும் அகலா நாவின் மன்னவன் - பஞ்சாக்ஷரத்தை எப்பொழுதும் ஜபித்துவரும் நாக்கையுடைய அரசன்.

950. தமனியம் - பொன். எந்த மோலி இதற்கு இணை என்று சொல்லும்படியான மோலி என்க. சுத்தமன் ஆகி - தூய அரசத்தன்மை பொருந்தி. ஆன்+தி - ஆடி. வித்தம் - பொருள்; பொன்னும் ஆம்.

951 உறையுள் - இருப்பிடம். உறுத்தல் - செய்தல்.

952. சோபானம் - படிக்கட்டு. பிறங்குற - விளங்க

### ஆலயத்துக்கு ஆவன பிறவற்றையும் அளித்தல்

953. குடைகொடி யால வட்டங் கோணிய தண்ட மாதி
மிடைபல விருது மியானை விலாழிமா விரதம் வெள்ளே
றடையிவை யாதி யாய வூர்தியு மவிர்செம் பட்டும்
கடைமணிக் கலிங்க மும்பொற் கலிங்கமு முதலாந் தூசும்

954. மணிமுடி சன்ன வீரம் வண்குழை யொளிர்கே யூரம்
அணிமணிக் கடக மாழி யாரமொண் மதாணி யாதிக்
கணிதமில் பணியுஞ் செம்பு கஞ்சம்பித் தளைவெண் செம்பொன்
திணிதர விவற்றிற் செய்பாத் திரங்களு மாக்கி னுனல்.

### திருவிழாக்கள்

955. தினவிழாப் பக்க மேய திருவிழாத் திங்கட் சாறு
கனமிகு மாட்டைச் சாறு பவித்திரங் காமர் கோடை
எனநவில் சாறு சீத வாவியி னியங்குஞ் சாறு
மனனவிர் மற்று முள்ள சாறெலாம் வயங்கச் செய்தான்.

### பிற அறங்கள்

956. அன்னசத் திரமுந் தெண்ணீ ரமைந்தபந் தருமி யற்றிப்
பன்னமென் றளிர்பூ மல்கப் பரந்தநந் தனமுங் கண்டு
சொன்னமுன் பிறவும் வாரிச் சோதிபா லன்ப ராய
முன்னவர் முதலியா வோர்க்கு முனிவற வீசி னுனே.

957. அன்னமாம் பொய்கை தோய்ந்து மரிசினீர் படிந்தும் வேட்ட
என்னவு மெளிதி னல்கு மிந்திரப் புனல் படிந்தும்
பன்னரும் வரைமே லேறிப் பரமரைச் சேவை செய்தும்
கன்னலங் குதலை யம்மை கான்மலர் பணிதல் செய்தும்

---

953. மிடை - செறிந்த. விலாழி - குதிரையின் வாய் நுரை. இரதம் - தேர். ஏறு - இடபம். கடை மணி கலிங்கம் - கடைந்தெடுத்த மணிகள் பதிக்கப்பெற்ற ஆடை. இச் செய்யுளில் ஆலயத்துக்குரிய விருதுகள், வாகனங்கள், ஆடைகள் ஆகியவை கூறப்பட்டுள்ளன. தூசு - வஸ்திரம்.

954. சன்னவீரம் - ஒருவகை வெற்றிமாலை. கேயூரம் - தோள்வளை. கணிதமில் - கணக்கற்ற.

955. பக்கம் மேய திருவிழா - பக்ஷ உற்சவம். மனன் அவர் - மனம் மலர்தற்குரிய

956. பன்னம் - பர்ணம்; இலை. நந்தனம் - நந்தவனம். சொன்னம்முன் - பொன் முதலிய. சாறு - விழா. சோதி - கடவுள்.

957. என்னவும் - எதுவும். வரை - இறைவன் கோயில் நிற்கும் மாடம். கன்னல் - கரும்பு. கால் மலர் - திருவடிமலர்.

958. மேயவட் டாங்க மாக விதித்தபஞ் சாங்க மாக
நாயக னெதிர்ப ணிந்து நகுமணிக் கோயில் சூழ்ந்தும்
தூயவன் புடையார் மாட்டுத் துன்னியும் புராணங் கேட்டும்
மாயமி லன்பு மேன்மேல் வளர்ந்தெழ வளர்ப்பா னந்தன்.

## வேறொரு கோயில் அமைத்தல்

959. அந்தமா நகரி னேர்சா ராலய மொன்று கண்டு
முந்தமா தவத்தான் மிக்க முனிவரர் புகன்ற வாறே
கந்தமார் கொன்றை மௌலிக் கயிலாய நாத ரென்னும்
சந்தமார் நாமஞ் சொற்றோர் சிவலிங்கந் தாபித் தானே.

960. தளைதவிர் பிரம லிங்கத தம்பிரான் றனக்குஞ் செம்பொன்
வளையவிர் முன்கை வம்பு வனமலர்க் குழலி னட்கும்
களைகொணித் தியமுன் மூன்றுங் கவின்பெற நடக்கு மாறே
விளை நிலந் துடவை யாதி மிதப்பமேன் மேலு நல்கி

961. காரணங் கடந்தா ராய கயிலாய நாத ருக்கும்
பூரணப் பொருளா யுள்ள புவனேசப் பெருமா னார்க்கும்
நாரண வமையும் பூசை விழாமுத னடக்கு மாறும்
தாரணி வியவா நிற்கு மூதியம் பலசமைத்தான்.

962. ஆய்ந்தசீர் நந்த னென்பா னன்பினிவ் வாறே பன்னாள்
ஏய்ந்தபே ரறம்வ ழாம லியற்றுபு மகிழ்ச்சி மேவப்
பாய்ந்தநீர்க் கடல்சூழ் வைப்பிற் பற்பல வுயிருஞ் சாம்ப
வாய்ந்தகோ ணிலைதி ரிந்து மழைபெயன் மாறிற் றன்றே.

## வேறு

## பஞ்ச நிலை

963. மழைபெயன் மாறலும் வற்க டங்கிளர்ந்
துழைநிரப் புற்றதா லுறு நிரப்புற
விழைதரு புவியிடை மேய யாவரும்
குழைதரு பெரும்பசிக் கோட்பட் டாரரோ.

---

958. அட்டாங்க, பஞ்சாங்க நமஸ்காரங்கள் : இறைவனைப் பணியும் முறைகள். அன்பு - இங்குப் பக்தி.

960. தளை - பாசம். நித்திய முன் மூன்று - நித்தியபூசை; விசேட நாட்பூசை; திருவிழாக்கள். துடவை - தோட்டம் மிதப்ப - நிரம்ப.

961. நார் அணை - அன்பு பொருந்த.

962. கடல் சூழ் வைப்பு - பூமி. கோள் நிலை - கிரக நிலை.

963. வற்கடம் - பஞ்சம். உழை - பக்கங்களில். நிரப்பு - வறுமை, பஞ்சம் நாடெங்கும் பரவியது என்க. குழைவு - மெலிவு. கோட்படுதல் - பீடிக்கப்படுதல்.

964. உண்ணுநீர் வறந்தன ருடம்பு மாசற
மண்ணுநீ ரெவ்வயிற் பெறுவர் மாநிலத்
தண்ணு நீர்மையிற்றிரு வமைந்த யாவரும்
எண்ணுநீர் மையர்நனி யிரங்கி னாரரோ.

965. செழுமழை யொழியவே ளாளர் செய்தொறும்
உழுதொழி லொழிந்தன ரொழிய மற்றது
வழுவற வியக்கிடு மற்றை மூவரும்
கெழுமுதந் தொழிலொரீஇக் கிடந்து ளாரரோ.

966. மறையவர் பசித்தனர் மனுவென் றேதுநூல்
துறையவர் பசித்தனர் தூக்கு கோலுடை
நிறையவர் பசித்தனர் நிலமெ லாமுழும்
முறையவர் பசித்தனர் மொழிவ தென்னினி.

967. மாறுவேண் டினரலர் மள்ளர் மாதவப்
பேறுவேண் டினரலர் பெரிய ராடுதற்
காறுவேண் டினரல ரந்த ணாளருண்
சோறுவேண் டினர்பல துறையு ளார்களும்.

968. பொருசிலை மாரவேள் போரி னீங்கினன்
வெருவரும் விடரெலாம் விரத்தர் போன்றனர்
பெருகொளிக் கொழுநரைப் பிழைக்கு மாதரும்
ஒருவரு மருந்ததி யொத்து வைகினர்.

---

964. மண்ணுதல் - கழுவுதல்; குளித்தல். அண்ணும் நீர்மையில் திரு அமைந்த - (இரவலர்) நெருங்குதற்கு உரியவாறு செல்வம் படைத்த. எண்ணும் நீர்மையர் - (யாது செய்வதென்று) ஆலோசிக்கும் நிலைமை யுடையவராய்.

965. செய்தொறும் - வயல்தோறும். மூவரும் - அந்தணர், அரசர், வணிகர் என்போர். கெழுமு - பொருந்திய. ஒருவுதல் - நீங்குதல்.

966. மனு... துறையவர் - நீதிநெறியில் ஆளும் அரசர். தூக்கு கோலுடை நிறையவர் - வணிகர். உழும் முறையவர் - வேளாளர்.

967. மள்ளர் - படைத்தலை வீரர். மாறு - பகைமை. பெரியர் - முனிவர்.

968. மாரவேள் - மன்மதன். விடர் - காமுகர். விரத்தர் - விரக்தர்; ஆசையற்றவர். கொழுநரைப் பிழைத்தல் - கணவருக்குத் தீங்கிழைத்தல். ஒருவு அரும் - (கற்பு) நீங்கவில்லாத. பஞ்சத்தால் நன்மையும் விளைவதாக நகைச்சுவைபடக் கூறுகின்றார்.

969. கரவுளெண் ணார்களுங் கரவு செய்தனர்
விரவுபல் பொருளிலு மேவ வஞ்சிக்கும்
உரவறி யார்களு முறப்பு ரிந்தனர்
தரமகல் சிறுபொருண் மாட்டுஞ் சாரவே.

970. ஒருவருண் டிடுபொழு தொருவ ரீர்ப்பர்மற்
றிருவரு மீர்ப்பர்மிக் கிவர்க லாய்த்திட
மருவரு மயலுளார் வந்து பற்றுவார்
பெருகுவற் கடம்புரி பெற்றி யென்சொல்கேன்.

971. வள்ளவா யமுதுண வளர்ந்த கிள்ளைகள்
தள்ளரும் பசிதலைக் கொண்டு சாய்ந்தன
நள்ளரு மவைக்குறு நலிவு சொல்வதென்
விள்ளரு மெறும்பிற்கு மிசைவின் றுமெனில்.

பஞ்சக் காலத்தில் நந்தன் செய்தது

972. இன்னணம் வற்கட மெய்துங் காலையில்
பன்னரு வேனிலிற் பரந்த மாநதி
என்னரு முயன்றுநீ ரேற்க நல்கல்போல்
தன்னரும் பொருள்சில நாட வாதுய்த்தான்.

நந்தன் பிரமபுரிசரிடம் முறையிடல்

973. உளபொருள் வறத்தலு முள்ள வாகிய
அளவறு பூணெலா மழித்து நல்கினன்
வளரொளி யவைகளு மாண்ட பின்னுளம்
தளர்வுற வண்ணலார் கோயில் சார்ந்தனன்.

---

969. கரவு - கள்ளம். உரவு - நச்சுத்தன்மை. தரம் அகல் சிறு பொருள் - அற்பப் பொருள்கள்.

970. கலாய்த்திடுதல் - கலகஞ்செய்தல். பெற்றி - தன்மை.

971. வள்ளம் வாய் அமுது - கிண்ணங்களில் வைத்த சோறு. கிள்ளை - கிளி. நள் அரும் அவைக்கு - (மக்களால்) விரும்பப்படும் அருமையான அவைகளுக்கு. மிசைவு - உணவு.

972. இச் செய்யுள் 'ஆற்றுப் பெருக்கற் றடிசுடு மந்நாளும்' என்ற நல்வழிச் செய்யுளை நினைப்பூட்டுகின்றது. என்னரும் - எத்தகையவரும். இறுதி யடியில் குறிக்கப்பெற்றது நந்தன் செயல்; அவன் தன் அரிய பொருள்களைச் செலவிட்டுச் சிலநாள் பாதுகாத்தான் என்றபடி. சில நாள் தவாது உய்த்தான் எனப் பிரித்துப் பொருள் காண்க.

973. வறத்தல் - வற்றிப்போதல். (பி.ம்) 1. தளர்வற

### நந்தன் துதி

974. அண்ணலார் கோயிலை யடைந்து தாழ்ந்தெழீஇ
நண்ணலார் புரந்தப நகைத்த நம்பனே
ஒண்ணலா ரரசொரு புறத்து றுத்தினுய்
கண்ணலார் வற்கடங் கலக்கத் தேம்பினேன்.

975. பெரும்பசி யுலகெலாம் பிணிக்க வெந்துயர்
அரும்பிய ததுதப வடிய னேனுள
இரும்பொருண் முழுவது மெடுத்து வீசினேன்
விரும்புத வுதற்கினி வேறு கண்டிலேன்.

976. மன்பதை படுபசி வருத்தங் காண்கிலேன்
அன்பருக் கெய்ப்பில்வைப் பாய வண்ணலே
மின்பொலி சடைமதி மிலைந்த செம்மலே
என்புருச் சுமக்கிலே னிரங்கு ருயெனில்.

### நந்தன் தன்னுயிரை மாய்த்துக்கொள்ளத் துணிதல்

977. என்றுநைந் துருகின னிருகண் ணீருக
நின்றுநெட் டுயிர்த்தன னிலவு பேரருள்
குன்றுவிற் குழைந்தவர் கொடுத்தி லாரெனில்
ஒன்றுயிர்ப் பொறையுட லொழித்த லுன்னினன்.

### கடவுள் நந்தன்முன் தோன்றிக் கூறுதல்

978. நந்தனுட் டுணிபுணர் நந்த நாயகர்
அந்தமி லன்பின ரியாவ ராயினும்
கந்தமற் றவர்துயர் காண வல்லரோ
சுந்தரத் தவனெதிர் தோன்றிச் சொல்லுவார்.

979. நந்தநீ வருந்துறே னலியும் வற்கடம்
சிந்தவித் தளியிலைந் திருக்கை யானைமுன்
உந்தநா டோறுங்கா சொன்று வைக்கின்ரும்
முந்தநீ பெறிற்பசி முருங்கும் யாவர்க்கும்.

---

974. நண்ணலார் - பகைவர்; இங்குத் திரிபுரர். ஒள்நலார் அரசு - தேவி. கண்ணல் ஆர் - கருதுதல் மிக்க.

975. அது தப - அத்துயர் நீங்க.

977. குன்றை வில்லாக வளைத்தவர் என்க. குழைந்தவர் பேரருள் கொடுத்திலார் எனில் என்றியைக்க.

978. உள் துணிபு - உள்ளத்திற் கொண்ட கொள்கையை. நம் தம் நாயகர் - இறைவர். கந்த - கேடுற. மற்று: அசை. கந்தம் அற்று எனப் பிரித்து, கருணையற்று என்றலும் ஆம்.

979. நலிதல் - வருத்துதல். சிந்த - ஒழிய. தளி - கோயில். ஐந்து திருக்கை யானை - விநாயகர். உந்துதல் - வெளிப்படல். முருங்குதல் - நீங்குதல்.

980. சிலரடை யினும்பலர் செறிந்த போதினும்
அலர்பசி தவிர்க்கும்பொன் ஞய காசுகாண்
உலர்தலில் வற்கட மொழியுங் காலையில்
இலகிய காசுமாங் கில்லை யாகுமால்.

படிக்காசு விநாயகர் என்ற பெயர்க்குக் காரணம்

981. கண்டுநீ கொளப்படிக் காசு நல்கலால்
அண்டுமைங் கரமுளாற் கதுமுற் சார்பெயர்
விண்டுக வலைமகிழ் மேவென் ரேதுபு
தொண்டுகொண் டருள்பவர் தோற்ற மாற்றினர்.

அரசன் படிக்காசு பெற்றமை

982. அதிர்கழற் காலினு னகம கிழ்ந்தனன்
முதிரொளி விநாயகர் முன்னர்ச் சென்றனன்
பிதிர்தலில் வற்கடம் பெயர்ந்து நீங்குறக்
கதிருதித் தனையபொற் காசு கண்டனன்.

983. கண்டனன் மகிழ்ந்திரு கைகு வித்தனன்
விண்டனன் கவலைநோய் விரைந்து தாழ்ந்துகைக்
கொண்டன னுடினன் குலவப் பாடினன்
அண்டனன் கருளிய வருளி தென்னென்பான்.

984. தளிவலங் கொண்டுதன் னுறையுள் சார்ந்தனன்
ஒளிகிளர் செம்பொற்கா சொன்ற னுலன்று
களிதப வருகுநர் பசிக ளைந்தனன்
வெளியகத் தினும்பசி வினவி மாய்த்தனன்.

யாவரும் உணவு பெறுதல்

985. மறுதினத் தினுமந்த வண்ணங் கொண்டுகுத்
தறுதியுற் றிடவெங்கு மவாவி வீசினன்
இறுதியி லியாவரு மெய்தி யெய்திமிக்
குறுதியுற் றிடவுணு வுண்டு வாழ்ந்தனர்.

980. உலர்தல் - அழிதல்.

981. நீ கண்டு கொள என மாற்றுக. அது முன் சார் பெயர். படிக்காசு என்பது முன்னே சாரும் பெயராம்; அதாவது படிக்காசு விநாயகர் என்பதாம். கவலை விண்டு மகிழ் மேவு என்று மாற்றுக. தொண்டு கொண்டு - நந்தனின் தொண்டினை ஏற்று. தோற்றம் மாற்றல் - மறைதல்.

982. கதிர் - சூரியன்.

984. வெளியகம் - வெளியிடங்கள், பசி மாய்த்தனன் என்க.

985. குத் - க்ஷுத் - பசி. குத் அறுதியுற்றிட - பசி முற்றும் நீங்க. அவாவி - விரும்பி.

986. பொருவரு மன்புசால் புரவ லன்கொளும்
பெருநிதி யாயவோர் காசு பேணுபு
வருகுநர் தமக்கெலா மருது நல்குபு
தருமுல வாக்கிழித் தன்மை போன்றதே.

987. இவ்விதம் வற்கட வெல்லை காறுமச்
செவ்விய குணத்தினன் செம்பொற் காசினால்
வெவ்விய பசிதப வீட்டி வைகினன்
அவ்விய முயர்ந்தவ ரகற்றி னாலென.

பஞ்சம் நீங்கி வளம் சுரந்தமை

988. மிடிதுயர் முதற்பல விளைக்கும் வற்கடம்
ஒடிதலுங் காசுரு தொழிந்த தப்பொழு
திடிமுழக் கெழீஇமழை யெங்கும் பெய்தன
கடிபுனற் றடமுதற் கரைபு ரண்டன.

989. உழவொலி யெழுந்தன வுறுசெய் யெங்கணும்
முழவொலி யெழுந்தன மொய்த்த வில்லெலாம்
மழவொலி யெழுந்தன வானு நாணுற
விழவொலி யெழுந்தன மேய கோயிலே.

990. விரும்புகண் மலர்நிலம் விளைந்த சாலிகள்
கரும்புக ளெழுந்தன காக்கும் வேலியாய்
அரும்புக ளரும்பின வாவி வாய்க்கருஞ்
சுரும்புக ளெழுந்தன விளரி தூங்கவே.

991. கனிபல துவன்றின காவிற் கூலங்கள்
நனிபல துவன்றின நாடுந் தேமெலாம்
வனிபல துவன்றின வென்னும் வண்ணம்போய்ப்
பனிபல துவன்றின பாரி லெங்குமே,

---

986. நல்குபு தரும் - படைத்துத் தருகின்ற; வளர்த்துத் தருகின்ற. உலவா கிழி - எடுக்க வெடுக்கக் குறைபடாத பொன் முடிப்பு.

987. உயர்ந்தவர் அவ்வியம் அகற்றினதுபோல. அவ்வியம் - மனக்கோட்டம்; வஞ்சனை.

988. மிடி - வறுமை. தடம் குளம்.

989. முழவு - மத்தளம். மழவு - இளங்குழந்தை. எங்கணும் என்பதை இடைநிலைத் தீபமாக வைத்து, உறுசெய் எங்கணும் உழவொலி யெழுந்தன என்றும், எங்கணும் முழவொலி யெழுந்தன என்றும் கூட்டுக.

990. விரும்பு கண் மலர் நிலம் - விரும்பிநோக்கும் கண்கள் (மகிழ்ச்சியால்) மலர்தற்கு இடமான வயல்களில்; நிலம் சாலிகள் விளைந்த; காக்கும் வேலியாய்க் கரும்புகள் எழுந்தன என்க. விளைந்த : முற்று. சாலி - உயர்ந்தவகை நெற்பயிர். ஆவிவாய் - குளங்களில். விளரி - ஒருவகைப் பண்.

991. துவன்றுதல் - நிறைதல். கா - சோலை. கூலம் - தானியம். வனி - நோய்.

992. விள்ளுந ரியார்மழை வளத்தின் மேதக
வுள்ளுந ரியார்கொடை யொருங்கு மேவலால்
கொள்ளுந ரியார்நனி குவிவ ளங்களை
அள்ளுந ரியாரென வறம லிந்ததே.

மன்னன் மகிழ்தல்

993. இன்னண முலகெலாஞ் செழித்தின் பெய்துதல்
மன்னவ னேக்கியுண் மகிழ்ச்சி பூத்தனன்
நன்னலப் பிரமபு ரீசர் நாண்மலர்
வன்னமென் பதந்தொழூஉ மரபி னின்றனன்.

நந்தன் இறைவனடி சார்தல்

994. பலபகல் பத்திசெய் பண்பின் மேவிய
நலமலி தொண்டுசா னந்த னென்பவன்
வலமழு வுயரிய வள்ள லாரருள்
நிலவுறப் பெற்றடி நீழல் வைகினன்.

அத்தலத்தில் இன்னும் பலர் பேறு பெற்றமை

995. இனையமன் னவனென வெண்ணி லாரவண்
முனைவறப் பூசித்து முத்தி வைகினர்
வனையுமத் தலப்பெரு மான்மி யத்தினை
நினைதர வளப்பவர் நிலத்தி லியாவரே.

நைமிசாரணிய முனிவர் புராணம் கேட்டு மகிழ்தல்

996. என்றுநை மிசத்தவ ரியாரு மின்புறந்
தொன்றுணர் பெருந்தவச் சூத னேகினன்
கன்றுத லில்லவர் கருத்து முற்றுற
நன்றுணர்ந் தனமென நவின்று போற்றினர்.

---

992. விள்ளுதல் - சொல்லுதல். உள்ளுதல் - கருதுதல். மழை வளத்தின் மேதகவு உள்ளுநர் யார்? விள்ளுநர் யார்? என்க. மழை விள்ளுநர் யார்; வளத்தின் மேதகவு உள்ளுநர் யார் என்று தனித்தனி கூட்டுதலும் ஆம். அறம் மலிந்தது.

993. வன்னம் - பொன்.

994. நிலவுற - நிலையாக.

995. இனைய மன்னவன் என - இந்த மன்னவனைப் போல. முனைவு - வெறுப்பு. அளப்பவர் - அளந்து சொல்பவர்.

## முனிவர்கள் அம்பர் வருதல்

997. சூதமா தவநெடுந் தொல்லை நைமிசத்
தேதமின் முனிவர ரியாரு மம்பரில்
தீதற வடைந்தனர் செங்கை கூப்பினர்
போதமா ரன்னமாம் பொய்கை மூழ்கினர்.

998. வெள்ளிய நீறுகண் மணிவி ளங்குற
ஒள்ளிய வைந்தெழுத் தோதித் தாங்கினர்
நள்ளிய வன்புள நகக்கை கூப்புபு
தெள்ளிய வண்ணலார் திருமுன் சார்ந்தனர்

999. கற்பக நிகர்படிக் காசு வேழத்தை
அற்புறப் போற்றின ரார்வ மிக்கெழப்
பற்பல வாயசோ பான மேறிப்போய்த்
தற்பர நாயகன் முன்பு சார்ந்தனர்.

1000. அரியயன் காணொ வமல மூர்த்தியைத்
தரிசனஞ் செய்தனர் தவாது கண்பொழி
விரிபுனல் வார்தரப் புளக மேவினர்
பிரியமா ரானந்தப் பேறு பெற்றனர்.

1001. புண்ணிய சொருபவம் புவனப் பூங்குழல்
எண்ணிய பதமல ரிறைஞ்சிப் போற்றினர்
அண்ணிய வானவர் மற்றை யாரையும்
கண்ணிய பிரியத்திற் கலந்தி றைஞ்சியே

## முனிவர்கள் மீண்டு நைமிசம் அடைந்து வாழ்தல்

1002. நகுபுவ னேசங்கை லாய நாதமும்
தகுமுறை மையிற்சென்று தாழ்ந்து சூதனோ
டுகுவினை முனிவரரொருங்கு நைமிசம்
புகுதிற மருவினர் பொலிந்து வாழ்ந்தனர்.

---

999. படிக்காசு வேழம் - அப்பெயர்கொண்ட விநாயகர். அன்பு+உற - அற்புற. சோபானம் - படி.

1002. புவனேசம், கைலாயநாதம் - அம்பரிலுள்ள புறக்கோயில்கள்.

### வேறு

### நூற்பயன்

1003. இந்தமா புராண முற்று மெழுதுவோ ரெழுது விப்போர்
சந்தமார் தரப்ப டிப்போர் படிப்பிப்போர் தகைமுத் தோமு
நந்தவான் பொருள்வி ரிப்போர் நகுபெரு விருப்பிற் கேட்போர்
முந்தவா தரத்திற் பூசை முறைபுரிந் திறைஞ்சா நிற்போர்

1004. இவரெழின் மனைவி மக்க ளியைபெருஞ் செல்வத் தோடும்
உவர்வளை புவியில் வாழ்வுற் றும்பர்த முலகத் தெய்திக்
கவர்பெரும் போக மெல்லாங் கைக்கொண்டு வாழ்ந்து பின்னர்
தவருறு சிலையாக் கொண்ட தம்பிரா னுலகஞ் சார்வார்.

1005. பொருள்படு வளஞ்சா லம்பர்ப் புராணத்தை யெழுதிப் போற்றி
அருளுற வைத்த வில்லத் தலகையா திகள்வந் தெய்தா
மருள்செயும் வறுமை நோய்க ளுழைதரா மாற்றா ரேவும்
இருடரு மேவ லாதி யெய்துறா வென்ப மாதோ.

1006. பத்தியுங் கொடுக்கும் விண்ணோர் பற்பல ரிடத்துந் துய்க்கும்
புத்தியுங் கொடுக்கும் பந்தம் போக்குபு நிற்கு மேலாம்
முத்தியுங் கொடுக்கு மென்று மொழிதுவ தென்னை யெவ்வெச்
சித்தியுங் கொடுக்கு மம்பர்த் திருநகர்ப் புராண மாதோ.

### வாழ்த்து

1007. சீர்பூத்த வம்பர்நகர் வாழ்கவருட் சைவர்குழாஞ் செழித்து வாழ்க
வார்பூத்த பொம்மன்முலை யம்புவனப் பூங்குழலாள் வாழ்க கொன்றை
தார்பூத்த தடநெடுந்தோட் பிரமபுரீ சுரர்வாழ்க தாவா வன்னோர்
ஏர்பூத்த மன்றுணடஞ் செயவெடுத்த குஞ்சிதத்தா ளென்றும் வாழ்க.

நந்தன் வழிபடு படலம் முற்றியது.

(இப் படலத்துத் திருவிருத்தம். 156.)

திரு அம்பர்ப் புராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

1003. முத்தோம் - முக்குற்றம். குன்றக்கூறல் முதலியன.

1004. உவர் - கடல்; ஆகுபெயர். கவர் - பலவகையான; மனங்கவரும் எனவும் ஆம். தவர் - வில். சிலை - கல், மலை. வில்லாகப் பெரிய மலையைக் கொண்ட.

1005. அலகை - பேய். ஏவல - சூனியம் போன்றவை.

1007. நூல் முடியுமிடத்தும் பாட்டின் முதலில் சீர்பூத்த என்னும் தொடரை மங்கலமாக அமைத்துள்ளார். குஞ்சிதம் தாள் - வளைந்த திருவடி; தூக்கிய திருவடி. ஆசிரியருக்கு நடராசமூர்த்தியிடம் மிக்க ஈடுபாடுண்மை யிற்றடியால் விளங்கும்.

# செய்யுள் முதற்குறிப் பகராதி

# அநுபந்தம்

நைமிசாரணியப் படலத்தில் உள்ள சித்திரகவிகளுள்
சிலவற்றிற்கு உரிய சித்திரங்கள்.

### கோமூத்திரி

276. ஆய வாழை குராவத வாருவ
நேய மாழை மராநித மோருவ
பாய காஞ்சி பலவு நிரம்புவ
தூய தாஞ்சுப மேவு பரம்புவ.







### முரசபந்தம்

278. சார்ந்த தாம்ப ருமரை
நேர்ந்த தாம்ப ருமரை
சார்ந்த தாம்ப ருமரை
நேர்ந்த தாம்ப ருமரை.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சா | ர் | ந் | த | தா | ம் | ப | ரு | ம | ரை |
| நே | ர் | ந் | த | தா | ம் | ப | ரு | ம | ரை |
| சா | ர் | ந் | த | தா | ம் | ப | ரு | ம | ரை |
| நே | ர் | ந் | த | தா | ம் | ப | ரு | ம | ரை |

## சுழிகுளம்

281. தவமகலார் சேர
வருதிரமா வார்சே
மதியிவரு மேவார்
கரவர்கரு மாலா.



## சருப்பதோபத்திரம்

282. மாவாயாவீ வீயாவாமா
வாயாவோவா வாவோயாவா
யாவோவாமா மாவாவோயா
வீவாமாமே மேமாவாவீ.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | வா | யா | வீ | வீ | யா | வா | மா |
| வா | யா | வோ | வா | வா | வோ | யா | வா |
| யா | வோ | வா | மா | மா | வா | வோ | யா |
| வீ | வா | மா | மே | மே | மா | வா | வீ |
| வீ | வா | மா | மே | மே | மா | வா | வீ |
| யா | வோ | வா | மா | மா | வா | வோ | யா |
| வா | யா | வோ | வா | வா | வோ | யா | வா |
| மா | வா | யா | வீ | வீ | யா | வா | மா |

## இரட்டை நாகபந்தம்

290. பரவ சோகுதண் பாடல ராசியும்
விரவி யுங்கு மிடைகர வீரமுங்
குரவ மாமல கங்குளி ரத்தியு
முரம னைபட வோங்கு குணத்தவே.

291. புனைவண் டாடு மருத மரவம்பூ
நனைவம் பேய்தொடை பொங்கரா ஞடியே
நினைகண் ஞேகண்டா னீதம தாகுவ
தனைவ ராத தரமொய்ம ருதவே.

## அட்ட நாகபந்தம்

292\. சூத மேயவந் தீந்தழை துன்றுவ
சீத மாமலர் சீர்துற்ற மாண்பின
வேத மென்றதொன் றின்றுண்டு தீவிய
போத நாறலின் மாறடும் பொங்கரே.



293. ஒருவரு மாவின் கனிவானத் தாருண வேதமுரு
முருகலர் பூங்கொம்பர் தாமுத வேது முதலுணர்த்தார்
திருவள வாத வவரென வேவந்து சேருமண்மீ
தருண்மெய்யை யாய்ந்தொழி யாவழி யாத வளத்ததுவே.



## கமல பந்தம்

294. மாதவாத தாதரூத சூதமோத கீதவேத
வேதமோவு சூழலாய வாழைசே பலாமுஞய
போதமேய தீயவாய சாரொஞத தானமாய
தோதவாய மேன்மைசால்வ தோகைகூர்வ தாயதே.



நான்காரைச் சக்கரம்

295. தேய மாதர மேயதே
தேய மேதக வேயதே
தேய வேமிக வாயதே
தேய வாவின மாயதே.



ஆருரைச் சக்கரம்

296. பொற்பமர் வானுயர் கொம்பரெ லாம்பசும் பூச்சொரிவ
பற்பல வாய வருக்கைப் பழம்பல கவியுதிர்ப்ப
வற்பமர் புன்னை யரும்பரெ லாமகன் மண்மறைப்ப
பொற்றுணி பற்றிய வண்கனி வண்டப்பப் பூப்பற்றுமே.



எட்டாரைச் சக்கரம்

297. துறுமலர் பூப்பன துணர்விரி புன்னை
திகழ்கருங் காரன சிரத்தி லாங்கலி
வளர்சந் தான மான்வழை தளிர்ப்பன
விரிபண் பயில்வன மேவிய வண்டினம்
வியன்சினை நறுவிலி மிடைவன வேபழம்
வழிமது விழித்திருன் மௌவ றருமே.



# நூல் நிலைய வெளியீடுகள்

| பெயர் | பக்கம் | விலை ரூ. | பை. |
|---|---|---|---|
| பாரதசேனாபதீயம் | 72 | 1 | 25 |
| அபிநயதர்ப்பணம்—படங்களுடன் | 164 | 5 | 00 |
| மகாபாரத சூடாமணி—பகுதி I | 417 | 10 | 00 |
| மகாபாரத சூடாமணி—பகுதி II | 226 | 5 | 62 |
| திருக்குற்றாலக் குறவஞ்சி | 32 | 1 | 25 |
| கும்பேசர் குறவஞ்சி | 106 | 1 | 50 |
| நவநீதப் பாட்டியல்—மூலமும் உரையும் | 108 | 2 | 00 |
| திருவாசக வியாக்கியான —அநுபூதி உரை | 1014 | 13 | 00 |
| கமலாலயச் சிறப்பு என்னும் திருவாரூர்ப் புராணம் | 457 | 5 | 00 |
| சூளாமணி—குறிப்புரையுடன் | 938 | 12 | 00 |
| கம்பராமாயணம்—பாலகாண்டம்—குறிப்புரையுடன் | 546 | 6 | 50 |
| ,, அயோத்யாகாண்டம் ஷை | 519 | 6 | 50 |
| ,, ஆரணியகாண்டம்—விளக்கவுரையுடன் | 1157 | 12 | 00 |
| ,, கிட்கிந்தாகாண்டம் ஷை | 1056 | 12 | 00 |
| ,, சுந்தரகாண்டம் ஷை | 1084 | 12 | 00 |
| ,, யுத்தகாண்டம்—பகுதி I ஷை | 1232 | 12 | 00 |
| ,, பகுதி II ஷை | 1200 | 12 | 00 |
| ,, பகுதி III ஷை | 1195 | 12 | 00 |
| ,, பகுதி IV ஷை | 1116 | 12 | 00 |
| திருக்குற்றால நாதருலா | 156 | 2 | 25 |
| மூவருலா—பழைய உரையுடன் | 363 | 5 | 00 |
| தக்கயாகப்பரணி | 568 | 6 | 50 |
| கப்பற்கோவை—குறிப்புரையுடன் | 246 | 3 | 00 |
| நளவெண்பா—விளக்க உரையுடன் | 376 | 5 | 00 |
| திருக்குறள்—ஒரு பழைய உரையுடன் | 460 | 4 | 00 |
| அகிலாண்டநாயகி மாலை—குறிப்புரையுடன் | 67 | 0 | 50 |
| தமிழ்ப்பா மஞ்சரி—ஸ்ரீ ஐயரவர்களின் சாகித்தியங்கள் —பகுதி I | 90 | 1 | 50 |
| —பகுதி II | 172 | 2 | 50 |
| சேக்கிழார் பிள்ளைத்தமிழ் | 132 | 1 | 50 |
| மநுவிஞ்ஞானேசுவரீயம் | 274 | 4 | 00 |
| சுவடிகளின் நாமாவளி | 88 | 0 | 37 |
| சுவடிகளின் விளக்கம்—பகுதி I | 402 | 10 | 00 |
| ,, —பகுதி II | 668 | 10 | 00 |
| ,, —பகுதி III | 476 | 10 | 00 |
| ,, —பகுதி IV | 500 | 10 | 00 |
| ஸ்ரீ ஐயரவர்களின் வாழ்க்கை வாலாற்றுச் சுருக்கம் | | 0 | 10 |
| மகாவித்வான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்—சரித்திரச் சுருக்கம் பகுதி I | 188 | 3 | 00 |
| பகுதி II | 126 | 2 | 25 |